352

# தடம் பதித்த மாமனிதன்
# ரசிகமணி டி.கே.சி.

188

தி. சுபாஷிணி
பேசி : 9952912985

மித்ரஸ் பதிப்பகம்
ஸ்ரீனிவாசா என்க்ளேவ், புதிய எண் : 10, பழைய எண் : 18,
வாசன் தெரு, தி.நகர் - 17

## நூல் விவரம்


| | |
|---|---|
| நூல் தலைப்பு | தடம் பதித்த மாமனிதன் ரசிகமணி டி.கே.சி |
| ஆசிரியர் | தி. சுபாஷிணி |
| வகை | இலக்கியம் |
| பதிப்பு | முதற்பதிப்பு டிசம்பர் 2012 |
| உரிமை | ஆசிரியருக்கு |
| நூலின் அளவு | டெம்மி |
| பக்கங்கள் | 400 |
| வெளியீடு | **மித்ரஸ் பதிப்பகம்**<br>ஸ்ரீனிவாசா என்க்ளேவ்<br>புதிய எண் : 10,<br>பழைய எண் : 18,<br>வாசன் தெரு, தி.நகர் - 17 |
| அட்டை வடிவமைப்பு | சத்யன் லே அவுட், www.satyanlayout.com<br>சென்னை - 600 005 |
| நூல் வடிவமைப்பு | திரு. விஜயகுமார் |
| அச்சிட்டோர் | ஜெம் ஆப்செட், ராயப்பேட்டை,<br>சென்னை - 600 014 |
| விலை | ரூ. 250/- |



வழக்கறிஞர் டி.கே.சி



பிச்சம்மாள் அண்ணியுடன் டி.கே.சி குற்றாலம்
எட்டறை வீட்டின் முன்



எனது தந்தையும் ரசிகமணியின் ரசிகனும் காந்திய வாதியுமான திரு.T.D. திருமலை

# அணிந்துரை

வித்வான்
சண்முகசுந்தரம் மேலகரம்
வழி, தென்காசி.

தி, சுபாஷிணி என்னும் இளம் எழுத்தாளர் எழுதுகிற எழுத்தைப் பார்த்தால் பழுத்த பழமாக இருக்கிறது. அனுபவத்தால் முற்றிவிளைந்த பக்குவமும் தெரிகிறது அதில்.

ரசிகமணி, டி.கே.சியைப் பற்றி வரலாற்று நூலாக எழுதி இருக்கிறார் ஆசிரியர். தடம் பதித்தமாமனிதன் ரசிகமணி, டி.கே.சி. என்று பெயர் சூட்டி இருக்கிறார் நூலுக்கு.

தடம் பதித்த மாமனிதன் என்னும் அடைமொழியே ஒரு புதுமையாக இருக்கிறது. புதுமை மட்டுமல்ல அதில் புரட்சிகரமான துணிச்சல் மிக்க பார்வை என்பதையே சுட்டிக் காட்டுகிறது.

வரலாறு என்றாலும் கதைபோல், படிக்கப் படிக்கச் சுவையாக இருக்கிறது. விஷயம் உணர்ச்சி, தமிழ்முன் நடை என்றால் ஆசிரியர் மட்டும் தனியாக நடந்துபோகிற நடை அல்ல. வாசகர் கையைப் பற்றியபடியே சேர்த்து அழைத்துப் போகும் நடைதான் டி.கே.சி.யைப் பற்றிய வரலாற்றில் ஒவ்வொரு அம்சத்தை வைத்தபடியே.

ரசிகமணி, டி.கே.சி.யின் வாழ்க்கை என்றால் கலைவாழ்க்கைதான். ஞான வாழ்க்கைதான் பண்பாட்டு வாழ்க்கைதான். அதில் அங்காங்கே பிரமிக்கத் தக்க வியந்து அதிசயப்படவைக்கிற அம்சங்கள் வரும். அந்த இடங்களில் எல்லாம் கொஞ்சம் திகைத்து நிற்கும். அது முடிந்ததும் ஒரு பாய்ச்சல் வரும். அப்படியே பம்மவும் செய்யும். உடனே சரேல்எனத் துள்ளியும் பாயும் அப்படி வித்விதமாய் நவரசமாய் போகிறது நடை. ஓட்டமும் நடையும் என்று சொல்வார்களே அதை இந்த வரலாற்று நூலில் பார்க்கலாம். வாசகர்களுக்கு ........ அறுசுவை விருந்துதான் தடம் பதித்த மாமனிதன் ரசிகமணி. டி.கே.சி.என்னும் நூல்.

நூலாசிரியர் சுபாஷிணி சென்னையில் உள்ள செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் பணியாற்றுகிறார். ரசிகமணி, டி.கே.சி. பற்றி இப்படி ஒரு உயரிய நூல் எழுதுவது! ஒரு காரணம் ஆகுமா என்ன? ஆகாது. நிச்சயம் அதுவல்ல காரணம்.

ரசிகமணியின் பரமபக்தரும், காந்திய நெறியில் முழு நம்பிக்கை உள்ளவரும், வாழ்க்கையையே காந்தியத்துக்காக தத்தம் செய்த அரசியல் தியாகசீலருமான உயர்திரு டி.டி.திருமலை அவர்களின் தவப்புதல்வி நூலாசிரியர் சுபாஷிணி.

எப்பொழுதும் திருமலையைச் சுற்றி ஒரு கூட்டம், ரசிகர்களிடம் இருக்கும். பண்பட்டநயமான அரசியல் கூட்டம் அது. அதில் இருபத்துநாலு மணி நேரமும் காந்தியைப் பற்றியும், வினோபாஜிபற்றியும், டி.கே.சி. பற்றியுந்தான் சொல்லிக் கொண்டிருப்பார் திருமலை.. எது பற்றிய பேச்சுவந்தாலும் சரி, அதில் மேலே குறிப்பிட்டவரை வைத்தே நடுநாயகமாக வைத்தே பேச்சு நடக்கும்.

இளம் வயதில் இருந்தே அதைக் கேட்டுக் கேட்டு அனுபவித்தவர் சுபாஷிணி. அதில் அப்படியே சொக்கி மயங்கி இருக்கிறார். தந்தை விவரிக்கும் ஒவ்வொன்றையும் காதால் கேட்டாலும் கண் கொண்டு பார்த்திருக்கிறார். உணர்ச்சி வசப்பட்டு ஒவ்வொரு அற்புதங்களும் ஒன்றித் திளைத்திருக்கிறார். பிறகு பக்குவப்படாமல் என்ன செய்யும்! மனம். பக்குவப்பட்டு, பதம் பட்டுவிட்டால் சும்மா இருக்காது மனம். புதிதாக ஒன்றைச் சிருஷ்டிக்கவே செய்யும். சிருஷ்டிபண்ணிக் கொண்டே இருக்கும்.

உணர்ச்சிமயமான இதயப் பாங்கிலிருந்து சிருஷ்டியாக வந்ததுதான் ரசிகமணி, டி.கே.சி. பற்றிய நூல்.

புத்தகம் எழுத வேண்டும் என்றால் யார் வேண்டுமானாலும் எழுதிவிடலாம். அதற்கென்று தகுதி ஒன்றும் இல்லைதான். எழுத்தாளர் என்று பெயர் வைத்துக் கொண்டால் போதும். எது பற்றியும் அவர் எழுதிவிடுவார். எப்படி வேண்டுமானாலும் எழுதிவிடுவார். இருக்கிறகாரியங்களிலேயே லகுவான காரியம் அதுதான். ஆனால் படிக்கிறவர் உள்ளத்தில் உணர்ச்சியில் தான் விஷயம் உண்மை, பாஷை மூன்றும் நிலையாய் நிற்கும்படி எழுவது என்பது அப்படி ஒன்றும் லேசுப்பட்ட காரியம் இல்லை.

எல்லோராலும் முடியாது எப்படி எழுத ஒன்றிரண்டு பேரால் தான் முடியும். நூலாசிரியர் சுபாஷிணி கடந்த ஒன்றிரண்டு பேரில் ஒருவர் என்று தெரிகிறது. நூலைப் படிக்கிற ஒவ்வொருவருக்கும் அது தெரியவே செய்யும்.

இனி டி.கே.சி.யைப் பற்றி பார்ப்போம். டி.கே.சி. என்றால் பத்தோடு பதினொன்று, அத்தோடு அது ஒன்று என்று கையை உதறி முடிக்கிற சாதாரண மனிதப்பிறவி அல்ல.

அவர் ஒரு ஞானி உள்ளது உள்ள படியே சொல்வதென்றால் அதுவும் அடக்க ஒடுக்கமாகச் சொல்வதென்றால் ஞானிகளுக்கெல்லாம் வழி காட்டும் பரம ஞானி அவர். அதனால்தான் ரசிகமணி என்று நாடே போற்றிப் பாராட்டியது டி.கே.சி.யை

சிதம்பரநாதன் முதலியார் என்பது தான் பெயர். சொந்தப் பெயர் அதுதான். ஆனால் அன்பர்களிடத்தும் ரசிகர்களிடத்தும் ஒரு மந்திரமாக உருவெடுத்தது அந்தப் பெயர் அப்படி எடுத்தது மனசில் நிற்க வேண்டுமே நிலைத்து நிற்க வேண்டுமே உள்ளத்தில் அதற்காக தியானப் பொருளாகவே உருவெடுத்துவிட்டது அது.

டி.கே.சி. என்னும் மந்திர ஒலி அறிஞர் சான்றோர், கலைஞர் என்று பல திறப்பட்டவர்களையும் ஒரு கலக்குக் கலக்கியது. ஒரு புது ஒளியையே, புதிய பார்வை ஒன்றையே அவர்கள் உணர்ச்சிக் குளிர்பாய்ச்சியது. அது, வாடிக்கையில், கலையில், யோசனையில், பார்வையில் அத்தனையிலும் ஒரு புரட்சியையே உண்டாக்கிவிட்டது, அது. மாபெரும் புரட்சி என்றுதான் சொல்ல வேண்டும் அதை.

இனி, ரசிகமணி என்றும் சொல்லுக்கு உணமையான பொருள் உண்டென்றால் டி.கே.சி. என்பதுதான் அந்தப் பொருள். இனி, டி.கே.சி. என்னும் சொல்லை எடுத்துக் கொள்வோம். அதற்கு ஒரு உண்மையான உண்டுதானே. அது தான் அந்த உண்மைப் பொருள்தான் டி.கே.சி. அப்படி நெருங்கி ஒன்றாகிவிட்டன இரண்டும். டி.கே.சி.யை விட்டால் வேறு நாதி இல்லை. ரசிக மணி என்னும் சொல்லுக்கு. அப்படியே ரசிகமணி என்பதை விட்டு விட்டால் டி.கே.சியைச் சுட்டிகாட்ட வேறு துணை இல்லை, டி.கே.சி.க்கு.

பாரத ரத்னா போன்றவை உயரிய பெரும்பட்டமாக இருக்கலாம். தடபுடலான பட்டமாகக் கூட இருக்கலாம். ஆனால் டி.கே.சி.யிடம் உள்ள கலைஞனைத்தை, பண்பட்டநயமான பண்பாட்டை பக்தியை, மெய்யுணர்வை, தெய்வாம்சம் என்று போற்றத் தக்க தெளிவை, உறுதியை இவ்வளவையும் கையில் எடுத்துக் காட்டுகிற மாதிரி காட்டுவது ரசிகமணி என்னும் சொல்தான்.

இனி, டி.கே.சி. என்றால் ஒரு தனிமனிதன் இல்லை. அவர் ஒரு சமுதாயம். மனித சமுதாயத்தின் மொத்தம் அவர். அவரை ஒரு தத்துவம் என்றோ, ஒரு சகாப்தம் என்றோ, தான் சொல்ல வேண்டும்.

எங்கும் எப்பொழுதும் அவர் உண்மையாகவே இருப்பார். உணர்ச்சிமயமாகவே இருப்பார். புஷ்பமானது பூத்து மலர்ந்து மணம்கமழ்வது போல் திறந்த மனத்தோடு மலர்ந்த முகத்தோடு உற்சாகமாகவே இருக்கிறவர் டி.கே.சி.

தெரிந்தவர்களோ, தெரியாதவர்களோ யார் பார்த்தாலும் சரி, அவர்களுக்கு ஆனந்தத்துவத்தின் அவதார புருஷராக தெரிவார் ரசிகமணி டி.கே.சி.

இந்த ஆனந்தம் எங்கிருந்து வந்தது? டி.கே.சி.க்கு வானத்திலிருந்து குதித்தா வந்தது இல்லை. டி.கே.சி.யிடம் இருந்துதான் பொங்கி எழுந்து வந்தது ஆனந்தம்.

டி.கே.சி. என்றால் மாசற்ற தூய அன்பில் அவதாரம். வெறுப்போ, எரிச்சலோ, வேற்றுமை உணர்ச்சியோ கடுகளவு கூட இல்லாதவர் டி.கே.சி. வெறுப்புக்குப் பதில் கருணை, எரிச்சலுக்கு மாற்றாகப் பரிவு, வேற்றுமைக்குப் பதிலாக சகோதரத்துவம் (ஒற்றுமை) இப்படி அருங்குணங்களால் ஆன புண்ணிய ஆத்மா அவர். அந்த அருங்குணங்களுக்கெல்லாம் ஊற்றுக்கண் அன்பு. அந்த சார்பிலிரிந்து ஊறிப் பெருகுவதுதான் அவரது, ஆனந்தபரவசம்.

அந்த ஆனந்தந்தான் டி.கே.சி.க்கு கண்ணாக, கன்னம் ஆக, மூக்காக, வாயாக, நாவாக, வாய் இதழாக, நெற்றியாக, குரலாக பாடும் பாட்டாக கொடுக்கும் விளக்கமாக எழுதும் எழுத்தாக பார்க்கும் பார்வையாகவோ யோசிக்கும் யோசனையாக அவரிடம் இருந்து எழுந்துவந்தன. அன்றலர்ந்த தாமரைப் புஷ்பங்களாகவே எழுந்துவந்தன அத்தனையும், எப்பொழுதும் அவர் முகம் சிரித்தமுகமாகவே இருக்கும். அப்படியே கண்ணும் காதும், வாயும், இதழும், மூக்கும், நெற்றியும் பார்வையும் பேச்சும் ஏன் டி.கே.சி.யின் மீசையுமே சிரித்துக் கொண்டே இருக்கும். கண்ணும் காதும் சிரிக்கின்றன சுயமாக. டி.கே.சி. சிரிக்கிறார். சிரித்துக் கொண்டே இருக்கிறார் அந்தச் சிரிப்பின் பிரதி பலிப்புத்தான் கண், காது, மூக்கு அவ்வளவிலும்.

சிரிப்பென்றால் வெறும் கேலிச்சிரிப்பல்ல, கிண்டலடிக்கிற சிரிப்பும் அல்ல.நையாண்டி சிரிப்போ, கோமாளி சிரிப்போ அல்ல. ஞானச்சிரிப்பு மெய்ஞ்ஞானத்தின் ஆனந்த பரவசச் சிரிப்பு அது.

உலகில் உள்ள பொய், பித்தலாட்டம், அறியாமை, கோமாளித்தனம், அவ்வளவையும் பார்த்துப் பார்த்து வருந்தி நொந்து துடித்து, பக்குவமாய் அவற்றை ஒதுக்கிதள்ளிவிட்டு உண்மையை, அழகை, நேர்மையை உலகுக்குக் காட்டும் கருணைச் சிரிப்புத்தான் அது.

அதற்கு எத்தனை பொறுமை வேண்டும். எப்பேர்பட்ட தியாக சீலம் வேண்டும். அவ்வளவும் சேர்ந்து அமைந்திருந்தன. டி.கே.சி.யிடம். அந்தக் கருணை அல்லவா சிரிப்பாய் புன்முறுவலாய் நகைச்சுவையாய் எழுந்து வந்தன, டி.கே.சி.யிடம் இருந்து.

ஆலகால விஷத்தை அள்ளி சிவபெருமான் வாயில் போட்டுக் கொண்டார். அது வயிற்றுக்குள் போகாதபடி அதைத் தொண்டைக்குழியிலேயே நிறுத்தி வைத்துக் கொண்டார் என்றால் அதனால் பொருள் என்ன. அறியாமையாலும், உண்மை உணர்ச்சி இன்மையாலும் உலகில் எத்தனையோ தவறுகள், கொடுமைகள் அவ்வளவையும் பொறுமையோடு ஏற்று, பக்குவப்படுத்த வேண்டும். தீயதை ஒதுக்க வேண்டும். தீயதை ஒதுக்கித்தள்ள வேண்டுமே தவிர, தீயவை உண்டான இடத்தை அழித்துவிடக்கூடாது. மாறாக, நல்லது வளர ஆசீர்வதிக்க வேண்டும்.

கடவுள்த் தத்துவம் அப்படித்தான் பிரபஞ்சம் முழுவதையும் சீராட்டிப் பாராட்டி வளர்க்கிறது வளர்த்துக் கொண்டே வருகிறது. குழந்தையைத் தாய் வளர்க்கிற மாதிரி வளர்த்து வருகிறது.

உடனுக்குடன் அழித்து ஒழித்துவிட்டார். உலகு இருக்குமா? உயிர் இருக்குமா? இந்த உண்மையை உணர்த்த வந்ததுதான் சிவபெருமான் நஞ்சை ஏற்று அதை அடக்கிவைத்த கதை.

அப்படிப்பட்ட பொறுமையும்,கருணையும் இருந்ததனால்தானே இருபத்து நான்கு மணிநேரமும் ஊழி ஊழி காலமாக சிரித்துக் கொண்டே நடனம் ஆட முடிகிறது அவரால். சாதாரண நடனமா அது. ஆனந்தத் தாண்டவம் அல்லவா அது.

அன்புடைய தாய் என்றால், அந்தத்தாய் சதா (இடுப்பில்) தூக்கி வைத்துச் சுமந்து கொண்டிருக்கும் கைக்குழந்தை பச்சிளம் குழந்தை தான் பொறையுடைமை. கருணையின் கைக் குழந்தை அல்லவா அது. (பொறுமை) அது பற்றிப் பார்க்கலாம்.

அறுபத்து ஐந்து வருஷத்துக்குமுன் குற்றாலத்துக்கு ஒரு இளைஞர் வந்தார். அருவியில்க் குளிக்கவந்தாரா இல்லை. டி.கே.

சியைப் பார்க்க வந்தாரா. இல்லை இரண்டுக்கும் சேர்த்துத் தான் வந்தாரா என்பது இதுவரை யாருக்கும் விடுபடாதபுதிர். தமிழ்ப்பண்டிதராக இருந்து கடை வைத்து நடத்துகிறவர். கவிஞரும் கூட அவர். அவர் ஒரு முரட்டு ஆசாமி. இங்கிதம் படு மட்டுமான போக்கு அவர் போக்கு. மரியாதைக்கும் அவருக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அவருடைய பேச்சு, பார்வை, நடத்தை எல்லாமே தடித்தனந்தான்.

அவர், டி.கே.சி. வீட்டுக்கே வந்து விட்டார். வந்து மட்டுமா டி.கே.சி.கூடவே நான்கு நாட்கள் தங்கிவிட்டார். நான்கு நாட்களும் டி.கே.சி.யை அவர் படுத்திய பாடு அப்படி இப்படி என்று சொல்ல முடியாது.

அவ்வளவையும் எப்படிப் பொறுக்கமுடிந்தது ஒரு மனிதனால். டி.கே.சி. என்னும் மனிதனால்தான். பொறுத்தது மட்டுமா? அவரை உபசரித்து, பாராட்டி கருணைகாட்டவும் முடிந்ததே அது எப்படி?

அவர் வந்து போனதை எப்படி அனுபவித்து, அதையும் ஆனந்த பரவசத்தோடு கடிதம் எழுதுகிறாரே ரசிகமணி டி.கே.சி. அவரை எப்படிச் சொல்ல. ஞானியர்களுக்கெல்லாம் ஞானி என்று சொல்லாமல் வேறு என்ன சொல்ல.

இனி, அந்தக் கடிதத்தைப் பார்க்கலாம்.

திருக்குற்றாலம்
8.10.45.

“அருமைச் சோமுவுக்கு

உன்னுடைய அழகான கடிதம் கிடைத்தது. இரவில் படுக்கையில் படுத்திருக்கும்போதுதான் வாசித்தேன். ஒரே சிரிப்பாய்ப் போய்விட்டது. ஸ்பிரிங் கட்டிலாய் இருந்திருந்தால்க் கீழேயே தூக்கிப் போட்டிருக்கும்.

சமீபத்தில் ஒரு சாக்ஷாத் கவிஞரே இங்கு வந்துவிட்டார். மூன்று நாள் தங்கினார். போதும் போதும் என்று ஆய்விட்டது. பாடாய்ப்படுத்திவிட்டார். அவர் பாடிய பாடல்களைக் கொட்டிக் கொண்டே இருந்தார். தூங்கவே விடமாட்டார். நேமத்தான் பட்டியிலிருந்தும் நண்பர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் பாடும் பெரும் பாடாய்த்தான் போய்விட்டது. என்னையும் வேண்டிய மட்டும் விளாசினார். தெரியாத் தனமாக தேசிக விநாயகம் பிள்ளை தேசிகவிநாயகம் பிள்ளை என்று சொல்லிக் கொண்டிருக்கும் நீர் அக்ஷரகுக்ஷி (சத்ருமுடன்) நான் என்பது அவரது ஆய்ந்து தெளிந்த

அபிப்ராயம். அதனால் அவருக்குக் கோபம். கோபத்தைவிட இகழ்ச்சி எல்லாவற்றையும் சரளமாய் என்னிடமே காட்டிவிடுவார்.

நாலைந்து வருஷத்துக்கு முன் வித்வான் ஆனவர். வித்வான் ஆன உடனே தமிழ்ப் பண்டிதராக இரண்டு வருஷம் இருந்தாராம். பள்ளிக்கூடமும் மாணவர்களும் செய்த பூர்வ புண்ணியத்தால் ஆசிரியர் வேலையைத் துறந்து வியாபாரத்துறையில் இறங்கியிருக்கிறார்.

ஆயிரம் வருஷத்துக்கொரு தடவை கவிஞன் பிறக்கிறான் என்று அடிக்கடி நான் சொல்லுவேன் அல்லவா. அப்படிப் பிறந்தவர்தான் தான் என்று எண்ணிக் கொள்கிறார். அவர் இப்போது வியாபாரம் செய்து வருகிறார். என்ன வியாபாரம் செய்கிறாரோ தெரியாது. சொல்லவும் இல்லை. லஷ்மிகடாட்சம் கிடைக்க வேண்டும். சரஸ்வதி தப்பட்டுமே."

கருணை என்பது கண் கொண்டு பார்க்க முடியாததுதான். பொறுமையும் அப்படித்தான். ஆனாலும் அந்த இரண்டும் நம் கண்முன்வந்துநிற்கின்றன. கையால் தொட்டும் பிடிக்கும் ..... வந்து நிற்கின்றன. தகதக என்று ஜொலித்தபடியே நிற்கின்றன. அப்படிக் கொண்டு வந்து இரண்டையும் நிறுத்துகிறது கடிதம்.

கடிதமா கொண்டு வந்து நிறுத்துகிறது. டி.கே.சி. அல்லவா கொண்டு வந்து நிறுத்துகிறார். எல்லையற்ற அவருடைய தூய அன்பு, மாசறுகாட்சி என்பார்களே அந்த மெய்யுணர்வு இந்த இரண்டும் சேர்ந்தெடுத்த அவதாரந்தான் ரசிகமணி, டி.கே.சி.

டி.கே.சியை அவருடைய அருங்குணங்களை வாசகர்கள் கண்டுகளிக்கும்படி எளிமையாய், இனிமையாய் எழுத்தில் வடித்துக் காட்டுகிறார் ஆசிரியர் சுபாஷிணி.

டி.கே.சி.யைப் பற்றி எழுத வேண்டும் என்று நினைத்தால் போதும். நினைக்கிறவருக்கு ஒன்றும் தேவை இல்லை. உணர்ச்சி மட்டும் தேவை. உண்மையாக இருக்க வேண்டும் உணர்ச்சி அது இருந்தால் டி.கே.சி.யை நினைத்துப் பார்த்தாலேபோதும். அவருடைய கல்யாண குணங்கள் ஒவ்வொன்றும் படலம் படலமாகப் புறப்பட்டு வரும். அப்படியே வந்துவிடும் எழுத்து கதை கதையாகவே வந்துவிடும். பெரிய காவியம் போலவே வந்துவிடும் புத்தகம்.

ராமனுக்கு நாளை பட்டாபிஷேகம் சென்று முரசறைந்து அயோத்தி முழுவதுக்கும் தெரிவித்தார்கள். அவ்வளவுதான் நம்மராமனுக்கா பட்டாபிஷேகம் என்று ஆண், பெண் குழந்தை பெரியவர் அத்தனை பேரும் யோசித்தார்கள். ராமனுடைய கல்யாண குணம் ஒவ்வொன்றையும் நினைத்து நினைத்து அனுபவித்தார்கள். அனுபவிக்க அனுபவிக்க அவர்கள் அனுபவம் கலை உருவமே பெற்றுவிடுகிறது. பாட வேண்டும் என்றுவிரும்பினால் பாடலாகவே வந்துவிடும் அவர்களிடமிருந்து அனுபவம்.

பட்டாபிஷேகம் என்ற சொல் காதில்தான் விழுந்தது. காது மட்டுமா,

188



.....பரவசப்படுகிறது. தேவாமிர்தம்போல நாவுக்கும் அவன் கல்யாண குணங்கள் தெய்வாம்சம் என்றால் வேறென்ன, மனுஷனுடைய அரிய பண்பாடு கல்யாண குணம்தான்.

கவி அமை கீர்த்தி அக்
    காளை நாளையே
புவி அமை மணிமுடி
    புனையும் என்ற சொல்
செவி அமை நுகர்ச்சிய
    எனினும் தேவர்தம்
அவி அமு (து) அனைய அந்
    நகரு ளார்க்கெலாம்.

ராமனுடைய கீர்த்திதான் ரசிகமணி டி.கே.சியின் அரிய பண்பாடு. நூலாசிரியர் சுபாஷிணி அந்தப் பண்பாட்டை உணர்ச்சியோடு பார்க்கிறார். உண்மையான பக்தி உணர்ச்சியோடேயே பார்க்கிறார். அவ்வளவுதான் அவர் காரியம். காட்சி முழுவதையும் தமிழே வடித்தெடுத்து நூலாக்கிவிடுகிறது. தடம்பதித்த மாமனிதன் ரசிகமணி, டி.கே.சி. என்னும் நூலாகவே கொடுத்து விடுகிறது.

வாசகர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

இப்படிக்கு
ல.சண்முகசுந்தரம்

# மகிழ்ச்சி உரை

ஒரு மரக்கண்றை நட்டு வைத்து, நீர்பாய்ச்சி பின்பு அது வளர்ந்து கிளைவிட்டு, துளிர்த்து பூ பூக்க ஆரம்பித்ததும் நமது உள்ளம் எப்படி இருக்கும்?

அது மகிழ்ச்சி என்று மட்டும் சொல்லிவிட முடியாது. மகிழ்ச்சியையும் கடந்த ஒரு நிலை, நிறைவு பெற்ற மன நிலை.

ஸ்ரீ T.D. திருமலை என்ற பெரியவர் தமிழ் ரசனைக்கோர் ஆதர்சமானவராய் வாழ்ந்தவர். அன்பைப் போற்றி, நட்பை வளர்த்து காந்தியத்துக்கும், தமிழுக்கும், டிகேசியத்துக்கும் எவ்வளவோ செய்தவர். பலருக்கும் வழிகாட்டிய பெருமகன் T.D. திருமலை அவர்கள்.

அவரை நினைத்து விட்டாலே உள்ளம் குளிர்ந்து விடும். மனம் விரிந்து விடும், அமைதி வந்து விடும். அன்பை தரிசித்து விடலாம்.

அந்தத் திருமலை அவர்களால் ஊட்டி, சீராட்டி, பாராட்ட வளர்க்கப் பட்ட செல்லக் குழந்தை தான் சகோதரி சுபாஷிணி அவர்கள். அவர் வீட்டுப் பூங்கன்று.

"தடம் பதித்த மாமணிதன் ரசிகமணி டி.கே.சி" என்ற பனுவலை உருவாக்கி நமக்கு அளித்தன் மூலம் பூப்பூத்தது மாதிரியான ஒரு மகிழ்ச்சியைத் தருகிறார் சுபாஷிணி.

அதனால் பிறந்ததுதான் இந்த "மகிழ்ச்சி உரை"

பூந்தோட்டத்தில் நேற்று வந்த போது கண்ணுக்குத் தட்டுப்படாது இருந்த ஒரு மலர் இன்று திடீரென்று நம்மைத் திரும்பிப் பார்க்க வைப்பது போன்று சகோதரி சுபாஷிணி இலக்கியத்தில் புதிய வரவாய் மலர்ந்திருக்கிறார்.

எனக்கு - எனக்கு என்று சொல்ல நான் யார்? - டி.கே.சி. அன்பர்களுக்கு டி.கே.சியை தமிழுலுகம் கண்டு கொள்ள வில்லையே என்னும் ஆதங்கம் எப்போதும் இருந்து கொண்டே இருக்கின்றது.

சுபாஷிணியின் புத்தகம் அந்தக் குறையை வெகுவாக நீக்கிவிட வழிவகுக்கும் என்று நம்புகிறேன்.

---

கவிதைக்கு உருவமும் பாவமும் தான் பிரதானம் என்பதை முதன் முதலில் எடுத்துச் சொன்னவர் ரசிகமணி டி.கே.சி, தான்.

"தமிழனுக்குத் தமிழே துணை!" என்பதை உறுதியுடன் நம்பியவர் டி.கே.சி. அது மட்டுமல்ல "தமிழ்தான் உலகமொழிகளில் எல்லாம் சிறந்த மொழி, உலகத்திலேயே சிறந்த கவிஞர் கம்பரே" என்று தீர்மானமாகத் தெளிந்து சாசனம் செய்தவரும் ரசிகமணி தான்.

டி.கே.சி. ஒரு தலைசிறந்த இலக்கிய கர்த்தா, ரசிகர், பண்பாளர் என்னும் பல பெருமைகளை உடையவர். அவற்றை எல்லாம் தாண்டி, அவற்றுக்கும் மேலாக ஒரு மகானாக வாழ்ந்தவர். வழிகாட்டியாய் விளங்குபவர்.

"ராமன் கம்பனுக்குள் வந்தார் -
கம்பன் டி.கே.சி.க்குள் வந்தார்"

என்று சொன்னவர் மூதறிஞர் ராஜாஜி அவர்கள். மேலும் ராஜாஜிஅவர்கள்.

"தமிழ் உரைநடை உயிரோட்டமுள்ள -
தாயும், உணர்ச்சியை வெளிப்படுத் -
துவதுமாக அமைவதற்கு டி.கே.சி.

தான் வழி காட்டினார்" என்பதையும் தமிழ் மக்களிடம் எடுத்துச் சொல்கிறார். ராஜாஜி வாக்குக்கு மேல் அப்பீல் ஒன்று உண்டுமா என்ன?

"அவர்களுக்கெல்லாம் கம்பராமாயணம் வாசித்தேன்" என்று ஒரு கடிதத்தில் ரசிகமணி டி.கே.சி. குறிப்பிடுகிறார். "வாசித்தேன்" என்றால் புத்தகத்தை எடுத்து பக்கம் பக்கமாக படித்துக் காட்டுவதல்ல. கம்பர் பாடல்களைப் பாடி விளக்கமளிப்பது தான். கம்பரை அனுபவிக்கும்படி செய்தேன் என்பதுதான் "வாசித்தேன்" என்ற சொல்லுக்கு உள்ளார்ந்த அர்த்தம்.

டி.கே.சி. அவர்களின் எழுத்திலும், எண்ணங்களிலும் இது போல வித்தியாசமான, புதுமையான, தனித்துவமான பிரயோகங்களும், சொல்ச் சேர்க்கைகளும் பிறந்து வந்து தமிழுக்கு அணியாக அழகு சேர்ப்பதை நாம் பார்க்க முடியும்,

அப்படிப் பார்க்க வேண்டுமென்றால் நம்மிடம் ஒரு ஆழமான ஈடுபாடும், நம்பிக்கையும் டி.கே.சி. யிடம் இருக்க வேண்டும், கொஞ்சம் பிரயாசையும் நம்மிடம் இருக்க வேண்டும்.

ரசிகமணி டி.கே.சி. தமிழுக்காகவும், கம்பருக்காகவும், கவிதை அனுபவத்திற்காகவும் தம் வாழ்வை அர்ப்பணித்தவர் என்பது எல்லாருக்கும் தெரிந்த உண்மை.

எண்பதாண்டுகளுக்கு முன்பு ஆங்கில மோகம் பிடித்து நம்மவரை எல்லாம் ஆட்டிக் கொண்டிருந்தது. அத்தகைய மோகவசப் பட்டவர்களில் பலரை தமிழ் பற்றாளர்களாக மாறும்படி செய்த பெருமைக்குரியவர்களுள் டி.கே.சி. முன்னிலையில் நின்றவர்.

ஆழமாக தமிழ் இலக்கியத்தைப் பயின்றவர்கள் இந்த உண்மையினை ஒப்புக் கொள்வார்கள்.

அப்படி இருந்த போதிலும் டி.கே.சி. ஆங்கில இலக்கியத்தை பெரிதும் மதித்தவர் என்பதை நாம் நினைத்துப் பார்க்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

ரசிகமணி டி.கே.சி. யின் ஆங்கிலப் புலமை ஒரு போதும் தமிழார்வத்துக்குத் தடையாய் இருந்ததில்லை. அவரது ஆங்கிலப் புலமையின் ஆழத்தையும் வீச்சையும் டி.கே.சி. யின் சொற்களின் மூலமாகவே பார்த்து விடுவோம் இப்போதும்.

“பாஷா ஞானம் என்பது ரொம்பவும்
அபூர்வமான காரியமே. இது
விஷயமாக மேல் நாட்டாரும்
ரொம்ப ரொம்பத் திண்டாடி
இருக்கிறார்கள்.
ஆங்கில பாஷை இன்னது என்று தெரிய
ஜான்ஸனுக்கு அநேக வருஷம் ஆயிற்று.
பல வருஷங்கள் கழித்துத்தான்
ஆங்கில, பாஷையின் உண்மையான
பாவம் அடிசன் எழுதிய கட்டுரைகளில்
இருக்கிறது என்று தெரிய வந்தது. முன்னாலே
போகிறவன் அடிபிசகிக் கீழே
விழுந்தால் பின்னால்
போகிறவனுக்கு தீவர்த்தி பிடித்த
கணக்கு என்று சொல்லுவார்கள்.
ஆனால் - ஆங்கில பாதை சம்பந்தமாக
அப்படிச் சொல்ல இடமில்லை.
ஏனென்றால் பின்னால் வந்த
ரஸ்கினும் அடிபிசகி விழுந்தார்.

செடி, கொடி, களிமண் எல்லா -
வற்றையும் வாரிப் போட்டுக்
கொண்டு தன்னை இன்னார் என்று
காட்ட முன் வந்தார். கடைசியில்
இதெல்லாம் தவறு பேசுகிற
பாஷையில் "எழுத வேண்டும்,
பாஷையின் நயம் பாவம் எல்லாம்
அப்போது தான் கைவரும்"
என்று அழுத்தமாய்ச் 'சொல்லி விட்டார்!
இப்படியாக ஜான்ஸனும் ரஸ்கினும்
வாக்கு மூலங்கள் கொடுத்தும்
ஆங்கிலேயருக்கு அவ்வளவாகப்
பிரயோசனம் இல்லாமல்த் தான்
போயிற்று! பத்து வருஷமாகத்தான்
பேச்சு முறையிலே எழுத வேண்டும்
என்று எழுந்தாளர் எல்லாலும்
சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள்.
என்றாலும் யுனிவெர்ச்சிடிகளில்
பழைய சொக்கனே சொக்கன்,தான்
என்று பெர்னார்டுஷா சொல்லுகிறார்.

ஆகவே பாஷையின் நயத்தை,
பாவத்தை எல்லாம் சரியான
முறையில்ப் பார்த்து அனுபவிப்பவர்கள்
ரொம்ப சொற்பம்
மேல் நாட்டில்: இங்கே அதைப்
பற்றிக் கேட்கவே வேண்டாம்.
தமிழ் பாஷையைப் பற்றி யாராவது
பேசும் போது எனக்குப் படுவது,
அடடா இவர்களுக்குத் தமிழை
அனுபவித்த பழக்கமே இல்லாமல்ப்
போய்விட்டதே என்று தான்.
"தமிழ்ப் பாஷையானது அதைச் செய்து
விடும், இதைச் செய்து விடும்!
என்றெல்லாம் விண்ணுக்கேற்றிப்
புகழ்வார்கள். ஆனால் தமிழை

அனுபவித்ததாகச் சொல்ல
மாட்டார்கள் படே படே கைகள்
சம்பந்தமாகவும் இப்படித்தான்
சொல்ல வேண்டியிருக்கிறது.
அவர்களுக்கு கெல்லாம் பாஷையின்
உணர்ச்சியில்லைதான்" 03-02-1941

ரசிகமணி டி.கே.சி. அவர்களின் கோட்பாடுகளில், வழிகாட்டுதல்களில் முக்கியமானது தமிழ்நடை எளிமையாக இருக்க வேண்டும், எல்லாருக்கும் புரியும் படியும் அனுபவித்து உணரத்தக்கவாறும் இருக்க வேண்டும் என்பது தான். அதற்கு அவர்களால் எழுதப்பட்ட எழுத்தே சான்றாக இருக்கின்றது.

இலக்கியத் தமிழ் வேறு பேச்சுத் தமிழ் வேறு என்னும் பாகுபாட்டை உடைத்தெறிந்து தமிழர்களுக்கும், தமிழுக்கும் புத்துயிர் தந்தவர் ரசிகமணி டி.கே.சி.யே ஆவார்.

இந்தக் கோட்பாட்டுக்கு ஆதரவாக மேலே கண்ட மேற்கோளில் ஆங்கில மொழியில் ரஸ்கின் என்ற அறிஞர் எடுத்த முடிவுகளை சுட்டிக்காட்டியிருக்கிறார்.

டி.கே.சி.யின் தனித்தன்மைகள் எவ்வளவோ இருக்கின்றன. அவைகளை எல்லாம் இந்தக் கட்டுரையில் சொல்லிவிடவா முடியும்? முடியாது.

சகோதரி சுபாஷிணி அவர்களின் கடினமான உழைப்பு, டி.கே.சி.யோடு தம்மை முழுமையாக ஆட்படுத்திக் கொண்டது, ஒருவித வேகத்தோடும் ஆழ்ந்த ஈடுபாட்டோடும் இந்த அரிய நூலை எழுத நினைத்தது, அனைத்தும் "தடம் பதித்த மாமனிதன் ரசிகமணி டி.கே.சி." யை தமிழர்களுக்கு கொண்டு வந்து சேர்த்திருக்கின்றன.

சுபாஷிணி அவர்களின் ஆர்வத்தையும், ஆசையையும் கண்டு வியக்காமல் இருக்க முடியாது. டி.கே.சி. பற்றிய பலப்பல விஷயங்களும், உண்மைக்கு விருந்தாக அமையும். அவர்களை ஒரு புதிய கோணத்தில் சிந்திக்கவும் செய்து விடும் என்று நம்புகிறேன்.

நூலைப் படிக்கும் வாசகரை "நண்பரே" என்றழைத்து அவரிடம் நெருங்கி உறவாடி பேசுவது என்பது இவருடைய புதிய பாணியாக இருக்கின்றது. வாசகரை தம் எழுத்தோடும்

தம்மோடும் இணைத்துக் கொள்ளும் முறை நல்லதோர் உத்தியாகப் படுகிறது. இவர் சொல்லும் கருத்து வாசக இதயத்தில் நன்கு பதிந்து விடும் நிச்சயமாக.

உரைநடை (வசனம்) என்ற அத்தியாயத்தில் டி.கே.சி.யின் முக்கியமான கோட்பாட்டை அவரது எழுத்துக்களை மேற்கோள் காட்டியே விளக்கமளித்து விடுகிறார் நூலாசிரியர்.

பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக மக்களது நாவில் பேச்சாக வெளிப்பட்ட உரையாடல்களே உண்மையான உரைநடை என்னும் டி.கே.சி.யின் அரிய கோட்பாட்டை சகோதரி சுபாஷிணி மிகச்சரியாகக் கோடிட்டுக் காண்பித்து விட்டார்.

இந்த நூலில் மிகச்சிறந்த இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டது உரைநடை (வசனம்) என்ற அத்தியாயம் என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை.

“தடம்பதித்த மாமனிதன் ரசிகமணி டி.கே.சி.” தமிழ் இலக்கிய உலகின் நல்ல வரவேற்பை பெற்று விடும். தமிழுக்கு ஒரு சிறந்த பரிசு இந்த நூல் என்று சொல்லலாம்.

தீப. நடராஜன்<br>“பஞ்சவடி”

# புழுதியைத் தோண்டினேன்_ பூசணி பூத்தது!

பேரா. கே.ஆர். சீனிவாசஐயங்கார், பேரா. அ. சீனிவாச ராகவன், பேரா. அ.ச. ஞானசம்பந்தம், பேரா. தெ.பொ. மீனாட்சி சுந்தரம், நீதிபதி. ஜஸ்டிஸ் எஸ். மகாராஜன், டாக்டர். மு. வரதராசனார், திரு. கி.வா. ஜகன்னாதன் போன்ற சான்றோர்களுக்கிடையில், காந்தி, வினோபா, ஜே. கிருஷ்ணமூர்த்தி, டி.கே.சி. ஆகிய தத்துவங்களின் அடிப்படையில் எங்களை வளர்த்தவர் என் தந்தையும், டி.கே.சி. மூலம் காந்தியையும் வினோபாவையும் அறிந்து கொண்டதாகக் கூறும் காந்தியவாதியான டி.டி. திருமலை. காலதேச வர்த்தமான காரணங்களாலும், இல்லறக்கடமைகளாலும் என் வாழ்வில் பாதி முடிந்துவிட்ட தருணம். மைசூர் எனக்கு ஒரு வசந்தத்தை அளித்தது. ஆம். அப்போது செம்மொழித் தமிழ் உயராய்வு நடுவண் நிறுவனத்தின் இயக்குநராய் இருந்த (தற்போது பொறுப்பு அலுவலர், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் சென்னை) பேரா. க. இராமசாமி அவர்கள், தன் நிறுவனத்தில் வேலைவாய்ப்பை எனக்கு அளித்தார். அதன் மூலம் தமிழ் கூறும் நல்லுலகத்தின் சாளரத்தைத் திறந்து விட்டு, தமிழ்த் தென்றலை அனுபவிக்கும் பேற்றினை நல்கி விட்டார். அத்தென்றலில் முதல் ஆசீர்வாதம் உலகத்தமிழ்கல்வி இயக்கத்தின் மதிப்புறு இயக்குநர் பேரா. ச. வே. சுப்ரமணியம் அவர்களால் கிடைக்கப் பெற்றேன். நான் எழுதிய முதல் கிறுக்கலைத் தன் மகளின் தமிழ் ஓவியமாய்க் கருதித்தான் தம்மூரில் நடத்தும் கருத்தரங்கத்தில் வெளியிட்டார். பின் நானும் எனது தோழியர் இருவரும் இணைந்து எழுதிய “ஐக்கூ வடிவில் திருக்குறள் கருத்துகள்“ என்னும் நூலின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டு எங்களை மேலும் ஆசீர்வதித்தார். தன் நூல் ஒன்றின் முதல் பிரதியை எனக்கு அளித்து என்னை கௌரவித்தார். இதோ! இப்பொழுது “ரசிகமணியின் ஆனந்தத்தை அனுபவிக்கும்“ பெரும் பேற்றினை

நல்கி இருக்கிறார். இது, டி.கே.சி. என்னும் உணர்வால், அவருடன் அப்போது இருந்தவர்களின் உணர்வையும் கலந்து தொடுத்துக் கொடுத்திருக்கும் ஆனந்த மாலை. இஃது ஒரு ஆனந்தத்தின் பகிர்தலேயன்றி பிறிதொன்றுமில்லை.

எனக்கு இந்நூல் எழுத ரசிகமணியின் பேரன்களாகிய திரு. தீப. நடராஜன். திரு. தீப. குற்றாலலிங்கம் அவர்களும், திரு. தீத்தாரப்பன், (ராஜபாளையம்), அவர்களும் வேண்டும் அளவுத் தகவல்களையும் அளித்து, டி.கே.சி. அவர்களின் நூல்களையும் கொடுத்து, டி.கே.சி. அவர்களின் விருந்தோம்பலுக்கு இம்மியளவு குறைவுபடாது, என் தந்தையே வந்ததாக எண்ணி பாவித்து, எனக்கு அமுதளித்து உபசரித்தார்கள். இதெல்லாம் டி.கே.சியின் பண்பாடு தந்த காரியம். வேறென்ன சொல்ல முடியும்! திரு. வித். ல. சண்முகசுந்தரம், திரு. ஜெயபால், திரு. பலராம் ராஜா, திரு. தீட்சிதர் ஆகிய அனைவரும் டி.கே.சியுடன் களித்த அனுபவத்தை என்னையும் மதித்துப் பகிர்ந்து கொண்டதை நான் பாராட்டாது இருக்க இயலாது. ஸ்ரீவி.ப. ராஜாராம் அவர்கள் இத்தரவுகளைச் சேகரிக்க வந்ததிலிருந்து நான் சென்னை திரும்பும் வரை என்னுடனேயே இருந்தார். முதலில் என்னை சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாளின் தரிசனத்தைக் காட்டி, ஆண்டாளின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொடுத்தார். பின், அவர்கள் வீட்டில் விருந்துபசாரம். அவரது பெற்றோர்களும், தங்கையும் என்னிடம் காட்டிய அன்பிற்கு ஈடு அன்பேதான் என்று சொல்ல வேண்டும். ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து ராஜபாளையம், தென்காசி என, என்னுடன் வந்து டி.கே.சியின் தரிசனத்திற்கும் வழிவகுத்தார். அவருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் என்றென்றும் கடமைப்பட்டவளாகிறேன். இவற்றைத் தாண்டி, 'ரசிகமணி' யைப் பற்றி எழுதப் போகிறேன் என்றதும், டி.டி. திருமலைக் குடும்பத்தின் அங்கமாக விளங்கும் காந்திகல்வி நிறுவன இயக்குநர் திரு. அண்ணாமலை ஒருங்கிணைப்பாளர் திருமதி. டாக்டர். பிரேமா, தலைவர் கி. மோகன், நிறுவனத்துத் தொடர்புடைய மதிப்புறு பேரா. தேவதத்தா, எனது சகோதரன் திரு. டி. விப்ர நாராயணன், திரு. சந்திரசேகரன், திரு. சரவணன், திரு. நித்யானந்தம் ஆகியோர் தங்கள் அளவுகடந்த மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டார்கள். இந்த அன்புப் பகிர்தல் எனக்குப் பலமாய் இருந்தது.

எங்கள் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன ஆய்வறிஞரும், எங்களுக்கு வழிகாட்டியுமாய் உள்ள பேரா. அன்னி தாமசு,

பேரா. அரிமளம் சு.பத்மநாபன், பேரா. கு. சிவமணி, பேரா. ப.மருதநாயகம் ஆகிய ஆய்வறிஞர்கள், அங்குள்ள எனது தோழிகள் முனைவர். தேவி, முனைவர். யு.அருணா என்னை மிகவும் உற்சாகப் படுத்தினார்கள். மேலும் எந்த ஆய்வுக்கட்டுரை எழுதினாலும் அதற்குறியத் தரவுகளைப் பற்றியத் தகவல்களைத் தந்து உதவிய ஆய்வாளர்கள் முனைவர். சதீஷ், முனைவர் வெங்கடேசன், முனைவர். கரும்பாயிரம், முனைவர். சரவணன் ஆகியோரின் உதவியை நான் மறக்க இயலாது.

என்னை எழுத்தாளராக்கிய என் பிரியமான தோழி. பத்மா, என் எழுத்தை மதிக்கும் என் நண்பரும் மலையாள மனோரமாவின் முதன்மை உதவி ஆசிரியருமான திரு. இராமன், என்னை உற்சாகப்படுத்தி என் எழுத்தை வெளியிடும் இணையதள இதழ் வல்லமை.காம்இன் ஆசிரியரும் நண்பருமான திரு. அண்ணா கண்ணன், திருமதி. பவள சங்கரி, “கற்பனயாவும் இனி அமையும்“ என என்னை ஆசிர்வதித்த என் மதிப்புறு நண்பரும் எழுத்தாளருமான திரு. நாஞ்சில் நாடன், “நீங்கள் அனைத்தையும் கூர்ந்து கவனிக்கிறீர்கள். ‘பத்தி’ எழுதுங்கள்“ என என்னை எழுதத் தூண்டிய, எங்கள் குடும்பத்திற்குப் பிரியமான அன்பையே வண்ணமாக்கும் எழுத்தாளர் திரு. வண்ணதாசன், காலம் சிறிதே ஆயினும், நெடுநாள் நட்புபோல் என் எழுத்தை இணையத்தில் பதிவு செய்து கொண்டிருக்கும் என் மதிப்புறு நண்பர் எஸ்.ஐ. சுல்தான், “நீங்கள் நன்கு செய்வீர்கள்“ என ஆசீர்வதித்த திரு. கோவை ஞானி, பேரா. அ.அ. மணவாளன் திரு. தி.க.சி, என் கட்டுரையை வெளியிட்டு மேலும் எழுதத்தூண்டிய கவிஞர். எழுத்தாளர் திருமதி. மதுமிதா, சந்தியா பதிப்பகம் நடராஜன், ஆகியோரின் உற்சாக ஊக்குவிப்பும், ஆசீர்வாதத்தால்தான் என்னால் இச்செயலைச் செய்ய முடிந்தது என்பதை மிகவும் பணிவாய்த் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கும் அண்ணல் காந்தியடிகளுக்கும் ஒரு ஒற்றுமை உண்டு. என்ன வியக்கிறீர்களா? ஆம். அவர் கையெழுத்தைப் போலவே என் கையெழுத்தும் இருக்கும். அதனைப் புரிந்து கொண்டு, என் வசதிக்கு ஏற்ற வகையில், காலத்தே தட்டச்சு செய்து உதவிய “சத்யன் லே அவுட்“க்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இம்முயற்சிக்கு எனக்குத் தரவுகள் சேகரிக்க, அன்புடன் உதவிய ஆட்டோ ஓட்டுநர் திரு. சீனிவாசன் (சென்னை) திரு.

தேவசாகாயம் (தென்காசி) ஆகிய இருவருக்கும் நான் நன்றியை நெஞ்சாரக் கூறுகின்றேன்.

அனைத்திற்கும் மேலாக என்குடும்பம் எனக்கு இதற்கான எல்லா உதவிகளையும் செய்து, கொடுத்தமைக்கும், என்னை நேர்மையாய் இயல்பாய் இயங்க வைத்துக் கொண்டிருக்கும் மூத்த பத்திரிக்கையாளரும் 'ஓ' பக்க 'ஞாநி' எனப்போற்றப்படும் நாடக இயக்குநருமான என். வி. சங்கரனின் (ஞாநி) நல்நட்பிற்க்கும் பெருமிதம் கொள்கின்றேன்.

சந்தோஷம்.

என்றென்றும் அன்புடன்

தி. சுபாஷிணி

## ஆனந்தத்தின் தரிசனம்

இருமங்கும் பசுமையான வயல்கள் பச்சை விரிப்பாய் விரிந்திருக்க, உள்ளத்தையும் உடலையும் இதமாய் மெலிதான காற்று வருடுகிறது. சாரலை வான் தூவுகிறது. வயல் தாண்டிய தென்னந்தோப்புகளும், மாஞ்சோலைகளும் வெகுதூரமாய் இருந்தாலும், அழகாய்த் திகழ்கின்றது. விண்ணின்று இறங்கும் பஞ்சுப் பொதியான வெண் மேகங்கள் முன்சென்று என்னை வழி நடத்துகின்றது. பாதைமுடிந்து, அடுத்தப்பாதை தொடங்கும் இடத்தில் வலது பக்கத்தில் ஒரு சிறிய கட்டிடம். நினைவு மண்டபம் போல் நிலவொளியில் தெரிகின்றது. அதன் வாயிலில் - ஒரு நிமிடம் இருங்கள் நண்பரே! ...... அம்மாடி! என்ன பொலிவு! என்ன பொலிவு!! கண்கள் கூசும் வண்ணம் தங்கமாய் பளபளக்கும் மேனி! கருணையைப் பொழியும் கண்கள்: அமைதியும் ஆனந்தமும் இரண்டறக் கலந்த முகம். ஞானம் பகரும் அகன்ற நெற்றி. அதற்கு அழகு சேர்க்கும் வண்ணமாய் நீண்டு அடர்ந்த புருவம். இதற்கு எடுப்பான நாசி. இந்த அழகின் விரிவாக்கம் தான் அந்த மீசையோ என எண்ணும் வகையில் மிகவும் மென்மையாய் நிறைந்த வெண்மை மீசை. இந்த முகத்தின் அழகை இந்த மீசைதான் தீர்மானிக்கிறதோ என்பது போல் ஒரு எடுப்பான தோற்றம், மிடுக்கு அதற்கு. 'முகம் காண்போர் முகமே காண்பார்' என்பது திண்ணம். அவரை ஒரு பத்து அடித் தள்ளி நின்று பார்க்கின்றேன்.

அவருடைய உயரம், அவருக்கு கம்பீரத்தைத் தருகின்றது. அவரது தோளினின்று நழுவும் கைகள் அவரது முழங்கால் வரை நீள்கின்றது. சிறிதும் குறையில்லா, செதுக்கிய சிலையாய் நேரான உடம்பு. அவரது மேனியழகு, அவருக்கும் எனக்குமான இடைவெளியைக் குறைத்தது. 'அம்மா! இங்கே வாயேன்' என அவர் என்னை அழைத்தக் குரல், அன்பாய் அமிர்தமாய் என்னை

உருக்கி கரைத்தது. என்னையறியாவது அவரிடம் சென்றேன் நான். அன்பின் அழகின் அருகில் நான். அந்த ஒளி, அந்த கண்களின் சிரிப்பு, ..... இருங்கள்! நண்பரே! ஒருவர் மீசைகூட சிரிக்குமா நண்பரே! அவரது மீசை சிரிக்கின்றது. அந்த சிரிப்பு எனக்கு அவரை இனம் காட்டியது. ஆஹா! இவர் கலைமகள் உறையும் இடமல்லவா!

என்னை உடையாள்
கலை மடந்தை எவ் உயிர்க்கும்
அன்னை அனையாள்
அடித்தளிர்கள் இன்அருள்சேர்
மென்மனத்தே தங்கும்
என உரைப்பர் மெய்இலா
வன்மனத்தே தங்கமோ வந்து! (பழம் பாடல்)

“ஐயா! தாங்கள் யார்! உங்கள் ஒளியில் என் கண்கள் கூசுகின்றன” என்கின்றேன்.

“அப்படியா! ‘பேஷ்! பேஷ்!’. நானா? என்னைத் தெரியவில்லையா உனக்கு? நான் உன்னுடன் இருக்கும் அன்பும் ஆனந்தமும் உண்மையும் தான். பிறிதொன்றுமில்லை. என்னை நன்கு பார்த்தால், நீயே புரிந்து கொள்ளப்போகிறாய். மிகவும் களைப்பாய் இருக்கிறாய். முதலில் பசியாறு” என வட்ட வட்டமான தோசைகளையும் பொடியையும் வைத்துக்கொடுத்தார். வானின்று இறங்கிய நிலாவா என தோசை வெண்மையாய் இருந்தது.

“ம்.ம். எனக்கு இரு தோசைகள் போதும் அய்யா. உங்களுக்கு?“ என்கின்றேன் நான்.

ஹா ஹா! இது தோசையா! ஹா ஹா! இல்லையம்மா இல்லை. எங்கள் பக்கத்து “ஸ்டாண்ட் இட்டிலி”, என்றார்.

“பேஷ்! பேஷ், இவ்வளவு மிருதுவாய் உங்கள் அன்பான உபசரிப்பாய் இருக்கிறதே“ என்கின்றேன்.

‘அப்படியா! அழகாகக் கூறினாய்! உன்னால்தான் இந்தப்பாடலையும் ரசிக்க முடியும். வா. இப்படி உட்கார்“ என்றார். நானும் அவரும் அந்த மண்டபத்தின் படியில் அமர்ந்தோம்.

அம்மா! அன்று நானும் நண்பர்களும் குற்றால மலையிலுள்ள சண்பக அருவியைப் பார்த்து, தரிசித்து, அதன் நடனத்தில், அந்த

தாளகதியில் எங்களைக் கலந்து ஆனந்தித்து, அனுபவித்து விட்டு வந்து கொண்டிருந்தோம். அப்போது அந்திப் பொழுது; ஒரு வளைவினின்று திரும்பினோம். 'கும்' என்று காட்டு மல்லிகையின் வாசனை. எங்களை அப்படியே கிறங்கடித்து விட்டது. அந்த மல்லிகை மணம் ஒரு பாடலைத் தேடிக் கொண்டு வந்தது. இது ஒரு பழைய பாட்டுதான். அம்மாடி!. பாட்டு என்பதெல்லாம் இப்படியல்லவா வரவேண்டும். பாட்டு உருவத்தை நம்மிடம் கொணர்ந்து விடவேண்டும். "மௌவல்" என்றால் காட்டு மல்லிகைக்குப் பெயர். முருகன் குன்றத்தில்தான் அந்த மல்லிகை வாசனை குடிகொண்டு இருக்கின்றது. நினைத்த மாத்திரத்திலேயே நம்மிடம் குடிகொள்ள வந்துவிடும். குமரன் குன்றம் எப்படி இருக்கிறது என்று கூறுகிறது பாட்டு.

"மாலை மணம் கமழ
மௌவல் முகை விரியும்
எந்தை குன்றம்!

"மாலையில் மல்லிகையின் மொட்டவிழ்ந்து மணம்பரப்பும் குன்றில் அல்லவா இந்த முருகன் இருக்கிறார்" என்கின்ற வியப்பு பாவம் நம்மை ஆட்கொள்கிறதல்லவா. 'இன்னும்பார்' என்று பாடலைத் தொடர்கின்றார்.

காலை மணிக்குவளை,
காதலர்போல் கண்விழிக்கும்
எந்தை குன்றம்

காதலர் ஒருவரை மற்றவர் விழுங்குகிற மாதிரி அப்படியே பார்ப்பார்கள். அப்படிப் பார்க்கிறதாம் காலையில் மலரும் குவளை மலர்கள். வானின்று இறங்கி மேகக்குஞ்சு ஒன்று, காற்றில் ஆடும் மூங்கில் அருகே நின்று கொண்டிருக்கின்றது. அந்த எழிலையும் கொண்டது நாங்கள் இருக்கும் மலை.

ஆடு தழைகிழிக்கும்
அந்தண் புயலிற்றே
எந்தை குன்றம்!

மாலை மணி ஆறு ஆயிற்று. நிலவு தோன்றும் நேரம் ஆயிற்று. நேரம் ஆக ஆக, நிலா உச்சிக்குச் செல்கிறது. அப்போது எங்கள் மலை எப்படி இருக்கும் தெரியுமா!

நீடு கனவு மேல்
நிலா மதியம் நிற்குமே
எந்தை குன்றம்.

அந்த மூங்கில்களின் உச்சியில் நிலவு நின்று கொண்டு, பேரெழிலைப் பரப்பும் எங்கள் மலை என்கிறது அந்தப்பாடல். உடனே என்னை அறியாது நான்,

மாலை மணங்கமழ
மௌவல் முகைவிரியும்
எந்தை குன்றம்!
காலை மணிக்குவளை
காதலர் போல் கண்விழிக்கும்
எந்தை குன்றம்!

ஆடு தழைகிழிக்கும்
அந்தண் புயலிற்றே
எந்தை குன்றம்!

நீடு தழை மேல்
நிலாமதியம் நிற்குமே
எந்தை குன்றம்!

என்று கூறிவிட்டேன். ஆம். என் கண்முன் மல்லிகை விரிந்து மணம் கமழுவதும், குவளையின் பார்வையும், மூங்கிலிடை தென்பட்ட முகில் ஒன்றும், அதன் உச்சியை அலங்கரித்த நிலவையும் பார்த்து பரவசம் ஆனேன்.

"ஆஹா! ஆஹா! உனக்கு அந்தக்கவியின் உருவம் தென்பட்டதா? அற்புத பாவத்தைக் காட்டுகிறது உன்முகம். இது தான் கவி" என்று பரவசப்பட்டுப் போனார்கள்.

அப்படியானால் நீங்கள் தானே அவர் ... என் தந்தைக்குத் தமிழை, கம்பரசத்தை, அதன் ஆனந்தத்தை, அந்த மொழி செய்யும்

ஜாலத்தைக் காணக் கற்றுக் கொடுத்தவர் நீங்கள் தானே! நீங்கள் தானே அவர் ...... ஆஹா! ஆஹா!

நான் கண்டு கொண்டேன் உங்களை! நண்பர்களே! நான் அவரைக் கண்டு கொண்டேன்! உங்களுக்கு நான் அவர் யாரென்று சொல்கின்றேன்! வாருங்கள்! என்னுடன் பயணியுங்கள். நீங்களும் அவரைக் கண்டுப் பேரானந்தம் கொள்வீர்கள்! வாருங்கள்! சரியாக ஒரு நூற்றுமுப்பது ஆண்டுகளுக்கு முன் உங்களை அழைத்துச் செல்லப் போகிறேன். தயார்ராகுங்கள் நண்பர்களே! பொதிகை விரைவு இரயிலில் புறப்பட்டு உடனே வாருங்கள்!

ஒரு நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்னே .............. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நீர்வளமும், நிலவளமும் நிறைந்த ஊர்தான் தென்காசி. அங்கு மனங்குளிர்ந்த தென்றல் காற்றையும், குற்றாலமலையின் சாரலின் இன்பத்தையும் நாம் அனுபவிக்கலாம். அது உள்ளத்துக்கும் உடலுக்கும் புத்துயிர் அளிக்கும். குற்றாலக்குறவஞ்சி என்னும் நாடகக்கவிகளை இயற்றிய திரிகூட இராசப்பக்கவிராயர் பிறந்து வளர்ந்த மேலகரம், இந்த தென்காசியின் அருகேதான் உள்ளது. சிற்றாறு என்னும் பேராறு எனப்போற்றப்படும் ஆற்றின் இக்கரை மேலகரம் என்றால் அக்கரை தென்காசி. ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம பாண்டியன் என்னும் அரசன், தென்காசியில் இருந்து ஆண்டு, வானளாவிய கோபுரத்தோடு பிரம்மாண்டமான கோவிலைக் கட்டினான். (உலக நாயகி ஆலயம்). இந்த திருக்கோயில் பக்தி, பண்பாடு, ஞானம் மூன்றும் ஒன்று சேர்ந்து உலகிற்கே தன்னை இனங்காட்ட எழுந்து நிற்பது போல் கம்பீரமாக நிற்கின்றது. குற்றாலத்தில் குற்றால நாதர் கோவில், கூத்தபிரான் சன்னிதி, பைம்பொழில் முருகன் திருக்கோவில் எனப் பண்பாட்டுமயமாய், தென்காசி பொங்கித் ததும்புகிறது.

கோவிலும், கோபுரமும், தேரும், திருவிழாவும், கவியும், இசையும், பரத நாட்டியமும், ஓவியமும், சிற்பமும், எல்லாமும் சேர்ந்து மேள தாள முழக்கத்தோடு. கலைப்பண்பாட்டுக்கு நாயகமாய் விளங்குகிறது தென்காசி நகரம். இந்த தென்காசி நகரிலே, ஆற்றங்கரையிலே, வானளாவியத்தருக்களும், செடிகொடிகளும் நிறைந்த தோப்பினால் சூழப்பட்டு இயற்கையின் எழிலாய் வீதியொன்று இருக்கின்றது. அது தான் சம்பாத் தெரு ஆகும். இச்சம்பாத் தெருவிலே, கடந்த இரு தலைமுறையாக 'கிளங்காடு' என்னும் சிற்றூரைச் சார்ந்தவர்கள் வசித்து வருகின்றனர்.

ஆழ்வார்களில் முதன்மையான, தலைமையான பெரியாழ்வார் பிறந்து வளர்ந்து எல்லையிலா பக்தியும், குற்றமற்ற அன்பும் கண்ணன்பால் கொண்டு தெய்வப்பாசுரங்களைப் பாடி, தெய்வீக மணமாக்கினார் ஸ்ரீவில்லிபுத்துரை. அவருக்கு அவ்வூரில் கிடைக்கப் பெற்றவள்தான் ஆண்டாள். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியானாள். கண்ணனைக் காதலனாய், கணவனாய் வரித்துக் கொண்டாள். திருமாலுக்கு இருக்கும் பெருமாள் கோவில் போல, திருமால் மேல் பக்திப் பரவசமாய்ப் பாடி நின்ற ஆண்டாளுக்கும் தனிக்கோவில் ஸ்ரீவில்லிபுத்தூரில் இருக்கிறது. வழிபாடு, தேர்த்திருவிழா, மார்கழி உற்சவம், திருக்கல்யாணம் என்று ஆண்டாளுக்கும் நடக்கின்றன. இது தமிழையும், தமிழ்ப் பாடல்களையும் மதித்து வழிபடுகிற பண்பாட்டுச் சின்னமாகத் திகழ்கின்றது. இது பக்தியும் ஞானமும் பூத்துக்குலுங்குவதோடு நீர்வளம், நிலவளம் மிக்க செழிப்பான ஊர். நெல், கரும்பு, வாழை, பருத்தி முதலிய பொருள்களுக்கு ஒரு களஞ்சியமாக விளங்குகிறது இவ்வூர். வாழ்க்கைக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் அழகாகவும் கலைநயத்தோடும் செய்து கொடுக்கும் தொழிலாளிக்கும், வாழ்க்கைக்கு வேண்டி இன்றியமையாத பொருள்களை நேர்த்தியாக உற்பத்தி செய்து வழங்கும் மக்கள் நிறைந்த ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர். விவசாயம், தொழில், கல்வி, கலை, பக்தி, எல்லாவற்றிலும் சிறந்து விளங்கும் இப்பூமி, இசை, நடனம், நாடகம், பக்தி உபன்னியாசம் முதலிய துறைகளையும் வளர்க்கும் இடமாகவும் அமைகிறது.

இத்தகைய ஸ்ரீவில்லிபுத்தூரில், செல்வம், கல்வி, பண்பாடு, செல்வாக்கு எல்லாவற்றிலும் பெரிய குடும்பத்தில் ஜமீன் பரம்பரையில், பத்து சகோதரர்கள் மத்தியில், அரிய ரத்தினமாய் மீனம்மாள் அண்ணி பிறந்தாள். மிகச்சிறந்த அருங்குணவதியாய் வளர்ந்தாள். இவர்களை தென்காசியில் இருதலைமுறையாக வாழ்ந்து கொண்டிருக்கும் திரு. தீத்தாரப்ப முதலியாருக்கு மணம் செய்து வைத்தார்கள். எனவே திரு.தீத்தாரப்ப முதலியாருக்கும், மீனம்மாள் அண்ணிக்கும், குற்றாலிங்கம், கோதையென இருகுழந்தைகள் பிறக்கின்றன. பின் மூன்றாவதாக, செல்லக்குட்டியாக, ஸ்ரீவில்லிபுத்தூரில், தாய் வழிப்பாட்டனார் வீட்டில் பத்து மாமன்மார்கள் சூழ, தமக்கையும் தனயரும் பரவசப்படும்படி, கண்ணபெருமாளின் திரு நட்சத்திரமாகிய ரோகிணி நட்சத்திரத்தன்று, (ஸ்ரீஜெயந்தி என்பர்) 1881 ஆம் ஆண்டு, ஆகஸ்ட் 18ஆம் நாள், (தமிழ் 1057 ஆவணி 1ஆம் நாள்) அழகிய

ஆண் குழந்தையை மீனம்மாள் அண்ணிப் பெற்றெடுக்கிறார். வாழ்விற்கு ஒளி கொடுக்கப் பிறந்திருக்கும் குழந்தை இது. உண்மைக்கும், நேர்மைக்கும், அன்பிற்கும், ஆனந்தத்திற்கும் அடையாளமாய், அதற்கு வடிவமாய் பிறந்த குழந்தை. அதனால் தான், கண்ணன் பிறந்த நாளில், கோதை பிறந்து, கோவிந்தன் வாழும் சோதிமணிமாடம் தோன்றி, நான்மறைகள் ஓதிய, நீதியாய் நல்ல பக்தர்களுடைய வேதத்தின் அரசாகவிளங்கும் ஸ்ரீவில்லிபுத்தூரில் தோன்றியிருக்கின்ற குழந்தை பிறந்து 16ஆம் நாளில் உற்சாகமும், மகிழ்ச்சியுமாய் குலுங்கிய பெயர்சூட்டு விழாவில் "சிதம்பரநாதன்" எனப் பெயரிட்டு மகிழ்ந்தனர். குழந்தையின் மூன்றாம் மாதம், மீனம்மாள் அண்ணி அவர்கள், தென்காசிக்கு சிதம்பரநாதனுடன் வந்து சேர்ந்தார்.

சிதம்பரநாதனின் தந்தையாருக்கு உடன் பிறந்தவர்கள் யாருமில்லை. அதனால் அவருக்கு பெரியபாட்டனார், சிறியபாட்டனார் என்று உண்டு. மீனம்மாள் அண்ணி திருமணத்திற்குப்பின், அண்ணியின் உடன் பிறந்தவர்களுடன், தீத்தாரப்ப முதலியாரின் குடும்பம் திருமண உறவுகளை ஏற்படுத்திக் கொண்டனர். தென்காசியில் இவர்கள் குடும்பம் நன்செய், புன்செய், தோப்பு, பால், நெய், தங்கம், வெள்ளி ஆபரணங்கள், கல்வி, சுற்றம், நட்பு, பணியாளர், செல்வாக்கு ஆகிய அனைத்தும் நிறைந்து இருந்தன. சிதம்பர நாதனின் குடும்ப நிர்வாகத்தை அவரது தமையனார் திறம்பட நிர்வகித்தார். உயர்ந்த குடிப்பிறப்பு, செல்வம், அதிகாரம் ஆகியவற்றோடு நேர்மையும் ஒழுங்கும் ஊக்கமும் சேர்ந்து இருந்ததால், மக்களுக்கு இவர்கள் மேல் ஒரு தனி மரியாதை ஏற்பட்டு பக்தியே வந்து விடுகிறது. தென்காசியைச் சுற்றி நடக்கும் பொது நிகழ்ச்சிகள், விழாக்கள் நடைபெறும் இடங்களில் சிதம்பரநாதன் குடும்பத்தாருக்கு முதல் மரியாதையும், தனித்த வரவேற்பும் தொடர்ந்து இருக்கின்றது.

## ...............மனிதனாய்

- இளமைப் படிப்பு
- உயர்க்கல்வி
- கல்லூரி வாழ்க்கை
- திருமணம்
- விதியை வென்ற மலேரியா

# இளமைப் படிப்பு

அந்தக் காலத்தில், திண்ணைப் பள்ளிக்கூடம் தான் இருந்தது. கூரைவேய்ந்தக் குடிசையில் தான் படிப்பு கற்றுக் கொடுக்கப்பட்டது. தரையில் மணல்பரப்பி இருக்கும். அதில் தான் ஆசிரியரும் மாணவரும் அமர்ந்திருப்பர். மாணவர்களுக்குப் பாடம் தமிழ்ப்பாடல்களும், கணக்கும் ஆக இரண்டு தான் கற்றுக் கொடுக்கப்பட்டது. ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், நீதிநெறி விளக்கம் முதலிய நீதிப்பாடல்களை ஆசிரியர் பாடுவார். மாணவர்களும் அவர் சொல்லச் சொல்ல இவர்கள் திருப்பிச் சொல்வார்கள். பின் ஆசிரியருடன் சேர்ந்து பாடுவர்கள். பின் அவர் இந்தப் பாடலுக்கு விளக்கம் கூறுவார். கூறிய செய்தி ஒருவாறு விளங்கும். அவ்வாறு விளங்காவிட்டாலும், ஆசிரியர் பாடுகிற மெட்டு, சந்தம், எல்லாம் மனதில் அப்படி அப்படியே நின்றுவிடும். பாட்டு மனப்பாடம் ஆகிவிடும். கணக்கும் அப்படியே தான். கூட்டல், வகுத்தல், பெருக்கல், குழிப்பெருக்கம், ஈவு ஆகிய கணிதக்கூறுகள் ஒவ்வொன்றையும் ஒரு குறிப்பிட்ட ராகத்தில் சந்தத்தோடேயே ஆசிரியர் பாடிக்காட்டுவார். பிள்ளைகளும் பாடுவார்கள். கணிதத்திலுள்ள வாய்ப்பாடுகள் எல்லாம் மாணவர்கள் மனதில் அப்படி அப்படியே நிற்கும். பண்டு ஏடும் எழுத்தாணியுமே உண்டு. முதலில் மணலில் எழுதிப்பழகவேண்டும். திண்ணைப் பள்ளிக்கூடம் என்றால் இது இப்படித்தான். தமிழகம் முழுவதும் இப்படித்தான் நடந்து வந்தது.

[என்ன நண்பர்களே! சற்று நம் காலத்திற்கு வருவோம்! நம் குழந்தைகள் சுமக்கும் 30 கிலோ எடையுள்ள பையை நினைத்துப் பாருங்கள். சீருடை, காற்றுப்புகா காலணிகள் தேவைப்படவில்லை அவர்களுக்கு. படிக்கும் வீரியம் தான் முதன்மையாகப்பட்டது அக்காலத்தில்]

இப்படிப்பட்ட ஒரு திண்ணைப் பள்ளிகூடத்தில் தான், தென்காசியில் நம் சிதம்பரநாதன், தன் அழகிய அஞ்சாவது வயதில் சேர்க்கப்படுகிறான். ஆனால் நம் சிதம்பரநாதனுக்கோ, தன் அம்மாவின் அன்பிலிருந்து விலகி வர விருப்பம் இல்லை. அவருடனேயே இருக்க விருப்பப்பட்டார். மாலை நேரங்களில் அவரது அன்னையார் படிக்கும் பாரதம், திருவிளையாடல் புராணம், வசன நூல்களைக் கேட்க மிகவும் விருப்பம். அப்போது பக்கத்து வீட்டுப் பெண்ணுகளும் கதை கேட்க வருவார்கள். தான் அனுபவித்ததை அதே நயத்தோடு அவர்களுடன் பகிர்ந்து கொள்வார். அப்போது நம் சிதம்பரநாதன் அக்கதையின் போக்கோடு பயணித்து, அவ்விஷயங்கள், சம்பவம், உணர்ச்சிகள் எல்லாமே அவரது மனத்தினில் காட்சியாய் அப்படி அப்படியே நிற்கும். படித்து ஆழ்ந்து அனுபவிப்பதைப் பிறரிடம் பகிர்ந்து கொள்ளுதல், இவருக்குத் த்ன் அன்னையிடமிருந்து வந்திருக்கலாம். கதை கேட்கும் நேரம் தவிர சிறு சிறு வேலைகள் செய்வதில் சந்தோஷம் அவனுக்கு. ஆனால் குருட்டுமனப்பாடம் செய்யச்சொல்லும் இந்தப் பள்ளிக்கூடம் பிடிக்கவில்லை. மாலையில் ஆங்கிலம் கற்பிக்க ஒருவாத்தியார் வருவார். அவர் தனக்குத் தெரிந்த வார்த்தைகளையெல்லாம் கொட்டி விட்டுச் செல்வார். இவர் எப்போது போவார் என்று காத்திருந்து திண்ணைப் பள்ளிக்கூட வாத்தியார் வந்து அமர்ந்துவிடுவார்.

சிதம்பரநாதனுக்கு மாலையில் விளையாடுவது என்றால் மிகவும் பிடிக்கும். ஆனால் இவரது அப்பா தீர்த்தாரப்ப முதலியார், "விளையாட்டு எங்கும் ஓடிவிடாது. படிக்க உட்கார்" என்று வாத்தியாரிடம் அனுப்பி விடுவார். திண்ணைப்பள்ளிக்கூட வாத்தியாருக்கு அதிகமாக வேறு சம்பளம் கொடுத்து விடுவார். பள்ளிக்கூடத்திலிருந்து சிதம்பரநாதனைத் தூக்கிக் கொண்டு வரச்சொல்லி மற்ற மாணவர்களைப் பணித்துவிடுவார். அது அவருக்கு மிகவும் மனவேதனையாக இருந்தது. வேண்டாம் என்றால் மாலையில் படிக்கும் போது கோபித்துக் கொள்வார். எல்லாம் அதிக சம்பளம் படுத்தும் பாடு என்பார்.

இதையும் மீறி விளையாட்டில் ஈடுபாடு சிதம்பர நாதனுக்கு இருக்கத்தான் செய்தது. அவனுக்கு குற்றாலத்திற்கு நடந்தே போய், தடாகத்தில் குளிப்பது, அருவி அருவியாய் மாறி மாறி குளிப்பது, எல்லாம் ஒரே ஆனந்தம் தான். விளையாட்டிலும் ஆனந்தம். வேலையிலும் ஆனந்தம். தன் தாயாரிடமும் மற்ற பெரியோர்கள் சொல்கின்ற நிகழ்ச்சிகள், கதைகள் ஆகியவற்றை கேட்பதிலும் அவனுக்கு ஆர்வம் இருந்தது. அவன் பத்து வ்யதுச்சிறுவனாக இருந்த போது, சொந்தக்காரார் குடும்பங்களில்

நடக்கும் திருமணங்களுக்கு அவனையும் அழைத்து செல்வார்கள். அந்தக்காலத்தில் 3,4,5 நாட்கள் திருமணச்சடங்குகள் நடக்கும். மாப்பிள்ளை அழைப்பு, பெண்ணழைப்பு, பட்டினப் பிரவேசம், நாதசுரம், வாணவேடிக்கை, நலுங்கு, ஊஞ்சல், விருந்து, வரவேற்பு, உபசரிப்பு இவை நடந்த வண்ணமாக இருக்கும். ஒரு வார காலத்துக்குக் கல்யாண வீடு கோலாகலமாக இருக்கும். வீடு நிறைய விருந்தினர்கள் கூட்டமாய் கூடி இருப்பார்கள். கதாகாலட்சேபமும், பரதநாட்டியமும், நிச்சயமாக இருக்கும். இதனாலேயே கல்யாண மாதங்கள் எப்போது பிறக்கும் என்று காத்திருப்பான் சிதம்பரநாதன்.

சிதம்பரநாதனின் தந்தை அவனை அடிக்கடித் திருமண வீடுகளுக்கு அழைத்துச் செல்வார். அது மிகவும் அவருக்கு பயனுள்ளதாக அமைந்தது. அவர் பார்த்த அதிசயங்கள் திருமண வீடுகளில் தான் என்கிறார். அவருக்கு அதுதான் உண்மையான படிப்பு என்கிறார். திருமண வீடுகளில் ஓடியாடி வேலை செய்வது அவனுக்கு மிகவும் பிடித்து இருந்தது. பந்திக்கு இலை போடுவது, தண்ணீர் வைப்பது, பரிமாறுவது, இதுபோன்ற பல சின்னஞ்சிறு வேலைகள் செய்வது அவனுக்கு ஆனந்தமாய் இருந்தது. "வேலைக்கு வேலை; சுவைக்கு சுவை" என்று மனதோடு ஒட்டி செய்வதால் திருமண காரியங்களுக்குப் போவதை மிகவும் விரும்பினார்.

"பாகவதர்கள் கதையை எடுத்தாள்கிற முறையும், கதையை விளக்குகிற நயமும், இடை இடையே கதைக்கு உயிர் கொடுப்பதற்காகப் . பாடுகிற பாடல்களும், பாடல்களை இசையோடும், அபிநயத்தோடும் பாடிக்காட்டுகிற பாங்கும், இழுத்த இழுப்பிற்கு எல்லாம் தமிழானது வளைந்து நெளிந்து வருகிற சுகமும் என்னைப் பரவசப்படுத்தின. எனக்கு அதுதான் உண்மையான படிப்பாக இருந்தது. நல்லபடிப்பாக இருந்தது. விளங்குகிற படிப்பாகவும் இருந்தது. பரத நாட்டியமும் அப்படியே அழகாக விளங்கியது. நன்றாக இருந்தது. உண்மையில் அனுபவிக்க முடிந்தது. கல்யாண வீட்டு வேலை, பரதநாட்டியம், கதாகாலட்சேபம் இவற்றை அனுபவித்தது ஒன்றைக்கூட வேறெங்கும் நான் அனுபவித்தது இல்லை."

இவை சிதம்பரநாதனின் வார்த்தைகள். அவருடன் பிற்காலத்தில் இருந்த வித்வான் ல.சண்முக சுந்தரம் கூறியவை.

திண்ணைப்பள்ளிக்கூடத்தில் 5ஆம் வகுப்புவரைப் படித்த சிதம்பரநாதன், தென்காசியிலேயே ஒரு நடுநிலைப்பள்ளியில் 6,7,8 ஆம் வகுப்புகளை படித்து முடித்தார்.

## உயர்கல்வி படிப்பு திருச்சி

1895ஆம் ஆண்டு, சிதம்பரநாதன் எட்டாம் வகுப்பை படித்து முடித்துவிட்டான். அப்போது அவனுக்கு வயது 14. அடுத்து உயர்நிலைப் பள்ளியில் பயிலவேண்டும். இவனது சகோதரன் 5ஆம் வகுப்போடுத் தன் படிப்பை முடித்துக் கொண்டுவிட்டார். திருகுத்தாலிங்க முதலியாருக்கு, சிதம்பரநாதனை உயர்நிலைப் பள்ளியில் சேர்த்து மெட்ரிக்குலேஷன்வரைப் படிக்க வைக்க வேண்டும் என விருப்பம் இருந்தது. ஆனால் அப்போது திருநெல்வேலி மாவட்டத்திலேயே உயர்நிலைப்பள்ளி இல்லை. மேற்கே போனால் திருவாங்கூர் கொச்சி சமஸ்தானத்தின் தலைநகராகிய திருவனந்தபுரம் போய்ப்படிக்க வேண்டும். வடக்கே போவதென்றால், திருச்சிராப்பள்ளிப் போக வேண்டும். வேறு ஒன்றிரண்டு இடங்களில் இருக்கலாம். ஆனால் அதில் வெளியூரிலிருந்து வந்து தங்கிப் படிக்கும் வசதி இல்லை. அப்போது தமிழகத்தில் மொத்தம் 20 பள்ளிகள் இருந்தாலே அதிகம். அதிலும் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் நடத்துவது தான் அதிகம் இருந்தன. இந்நிலையில் திருச்சியில் ஒரு உயர்நிலைப்பள்ளி இருப்பது அவர்களுக்குத் தெரியவந்தது. அது இந்தியர்களால் நடத்தப்படும் ஒரு பள்ளியென்றும், இந்து மதத்தவரால் நடத்தப்பட்டு வருகிறது என்பதுவும் வெளியூரிலிருந்து வந்து தங்கிப் படிக்க அங்கு ஓரிரு இடங்கள் இருக்கிறது என்பதுவும் ஆகிய செய்திகள் தெரியவரலாயின. இது சிதம்பரநாதனுடைய தமையனாருக்கு பெரிய சந்தோஷமான விஷயமாக இருந்தது. சிதம்பரநாதனும் ஆனந்தத்தில் பறந்து கொண்டிருந்தான். இவ்விஷயம் அவனுடைய சுற்றத்தார்களிடையே ஒரு பெரிய ஆச்சர்யத்தையும் அதிசயத்தையும் உண்டு பண்ணியது. எல்லோரும் இதனால் ஆனந்தத்தில் திளைத்தனர் என்றால் மிகையாகாது.

1895ஆம் வருடம், சிதம்பரநாதன் திருச்சி தேசிய உயர்நிலைப்பள்ளியில் 9ஆம் வகுப்பில் சேர்க்கப்பட்டான். அவனுக்குத் தங்க இடமும், உணவும் பாப்பம்மாள் வீட்டில் ஏற்பாடாகியிருந்தது.

சிதம்பரநாதனின் நிலை எவ்வாறு இருந்தது என்று பார்க்கலாம்!. உயர்நிலைப்படிப்பிலும் அவனுக்கு உற்சாகம் இல்லை. உற்றார் உறவினர், அண்ணன், அக்கா என அனைவரையும் விட்டு விட்டு வந்தது, அவனால் இயல்பாக இருக்க முடியவில்லை. இது முற்றிலும் அன்னியமான இடம். வீட்டு வேலைகள் என்று ஒன்றும் இல்லை. உறவினர் வீட்டுத்திருமணம், சடங்கு, தேர்த்திருவிழா என்று எங்கேயும் செல்லவும் வாய்ப்பில்லை. பள்ளியில் கற்றுக் கொடுக்கும் பாடம் ஆங்கிலத்தில் தான் இருந்தது. தமிழ்நாட்டிலுள்ள சிறு பையன்கள் ஆங்கிலக்கவிதைகளைப் படிக்க வேண்டும்; புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அது எப்படி இயலும் என்பது சிதம்பரநாதனின் தீராத கேள்வி. புவியியலும், வரலாறும், சற்றும் நமக்குத் தொடர்பில்லாதவை. அவையும் ஆங்கிலத்தில் தான் நடக்கும். ஓரளவிற்கு சிதம்பரநாதனுக்கு ஆங்கிலம் புரிபடத்தான் செய்தது எனினும் அவனுடன் விஷயங்கள் ஒட்டவில்லை. எனவே இந்த உயர்நிலைப் படிப்பும் சிதம்பரநாதனின் பிஞ்சு உள்ளத்தை வாடச் செய்து விட்டது. அவன் உணர்வுகளையும் கனிய விடாமல் வைத்து விட்டது. ஆனால் இந்த 3 வருட உயர்நிலைப் படிப்பிலும் உற்சாகம் கொடுத்தவை, உடன் பயின்ற மாணவர்களுடன் தினந்தோறும் விளையாடிய விளையாட்டும், அவர்களுடன் பழகிய நட்பும் தான் எனலாம். மேலும் பாப்பம்மாள் வீட்டில் தங்கி, அவர்களுடைய அன்பும், பண்பும், பக்தியும் தான் சிதம்பரநாதனுக்கு ஆறுதல் அளித்தது. அது தன் தாய் தன்னோடு இருந்து தன்னைப் பரிவோடு பாதுகாப்பது போன்ற உணர்வை அளித்தது. அவரது பரிவும் அதிலிருந்த ஆவேசமும் வேகமும் பாாக்கப் பார்க்கப் பரவசப்படுத்தும்.

பாப்பம்மாள் காலை 4 மணிக்கே எழுந்துவிடுவாள். வீடு கழுவி, முற்றம் தெளித்துக் கோலம் போட்டு, துலக்கி வைத்தப் பாத்திரங்களைப் பார்த்தால், முகம் பார்க்கலாம் போல் இருக்கும். அன்றைக்கு வேண்டிய தண்ணீர் பிடித்துக் கொண்டே, அன்றைக்கு சமையலுக்குத் தேவையான காய், கீரை, தண்டு, கிழங்கு முதலியன வாங்கப்படும். அடுப்பைப் பற்ற வைப்பாள். மாணவர்கள் காலையில் எழுந்து அவர்கள் காலைக்கடன்களை

முடித்துவிட்டு வருதற்குள் 'கமகம' என்று உணவு தயாராகிவிடும். அன்றைக்குத் தயிரில் வெண்ணெய் எடுத்து நெய் உருக்குவாள். சாம்பார், ரசம், மோர், அவியல், பொறியல், அப்பளம் என்று இப்படித்தான் பிரமாதமாக இருக்கும் சாப்பாடு. மாலையில் இரவுக்கு எனத் தனிச் சமையல் செய்யப்படும். இது தவிர அவள் இரண்டு கறவை மாடுகளை வேறு பராமரிக்க வேண்டும். மாணவர்களுக்கு உடல் நலிவுற்றால் அதற்கானப் பத்தியச் சாப்பாடு தயாராகும். மேலும் மாணவர்களின் உற்றார், உறவினர்கள் வந்தால், அவர்களையும் தன் விருந்தினராய் உபசரிப்பாள்.

"எப்பேர்ப்பட்ட புண்ணியவதி பாப்பம்மாள்? அவளுடைய ஒழுக்கமும், பண்பாடும், அருளும் மலைக்கோட்டையில் உள்ள மனிதர்களை எல்லாம் அவள் மேல் பக்தி கொள்ளும்படி செய்துவிட்டது.

மாணவர்களாகிய நாங்கள் சிறுவர்கள்தாம். ஆனால் நாங்கள் பாப்பம்மாவின் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் போகும் போது எங்களைப் பார்த்தவர்கள் பக்தியோடு "எழுந்து நிற்பார்கள். மரியாதையோடு பார்ப்பார்கள். எங்களிடமே ஊர் மக்களுக்கு அடக்கமும் பணிவும் என்றால், பாப்பம்மாளிடம் அவர்களுக்கு எவ்வளவு பக்தியும் மரியாதையும் இருக்கவேண்டும்!

பெற்ற தாயைவிட எங்களை அருளோடு பாதுகாத்த பாப்பம்மாளுக்கு மாதா மாதம் நாங்கள் ஒவ்வொருவரும் கொடுத்த ரூபாய் நான்குதான். இந்த ரூபாயில் மூன்று வேளையும் எங்கட்கு ருசியான சாப்பாடு, தங்க இடம், உபசரிப்பு, கவனிப்பு, பணம் தேவையானபோது எங்களுக்குக் கொடுத்து உதவுவது, இவ்வளவும் போக தன் கணவனையும் அந்தப் பணத்தைக் கொண்டும் பேணி உபசரித்தாள். பாப்பம்மாள் ஒரு இதிகாசப்பாத்திரம் மட்டும் அல்ல. ஒரு இதிகாசமே தான்" என்று பின்னாளில் டி.கே.சிதம்பரநாதன் அவர்கள் கூற, தன் நூலில் (சாகித்ய அகாதெமி வெளியிட்ட ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் என்னும் நூலில்) வித்வான் ல.சண்முக சுந்தரம் பதிவு செய்திருக்கிறார்.

சிதம்பரநாதனுக்கு, உயர்நிலைப்படிப்பில் பல விஷயங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. ஆனால் அத்தனையும் பாடமாகத்தான் கற்பிக்கப்பட்டது. மத்திய அமெரிக்காவில் உள்ள மக்களின் வாழ்க்கை, வட துருவ&தென் துருவங்கள் சீதோஷ்ண நிலை, ஆஸ்திரேலியாவிலிருந்து ஏற்றுமதியாகும்

ஆட்டுரோமத்தின் மதிப்பு, அமேஸான் நதியின் நீளம், கிரேக்க&உரோமானியர்களின் போர்க்கலையும், அவர்கள் பயன்படுத்திய படைக்கலங்களும், மத்தியதரைக்கடல் நிலப்பகுதியில் வளரும் தாவரங்கள், இப்படி எத்தனையோ விஷயங்கள் கற்பிக்கப்பட்டன. அவ்வளவும் சிதம்பரநாதனுக்கு விளங்கியதா என்றே புரியவில்லை. படித்துத் தேர்வில் தேறியாகி விட்டது தான் அதன் பயன்.

ஆனால், பிற்காலத்திலும் இது ஒன்றைத்தான் மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டிருந்தார். படிக்கும் இக்காலத்தில், உண்மையான கல்வியை அவர், நண்பர்களுடன் பழகியதும், விளையாடியதும், பாப்பம்மாளின் பரிவும் பண்பாடும் தான் கொடுத்தன என்று.

இதற்கு அணி சேர்ப்பது போல் என் நண்பர் எழுத்தாளர் திரு.களந்தை பீர் முகம்மது ஒரு குறுஞ்செய்தி ஒன்று எனக்கு அனுப்பியிருந்தார். எனக்கு மிகவும் வியப்பாகப் போய்விட்டது.

“எனக்குப் பின்னே வராதே. நான் வழி அல்ல! எனக்கு முன்னே போகாதே, நான் பின்பற்றுபவன் அல்ல! என்னோடு நட, எனக்கு நண்பனாயிரு” & ஆல்பர்ட் காம்யு.

“நட்பு என்பது பள்ளிக்கூடத்தில் கற்பது. நட்பின் அர்த்தம் புரியவில்லையென்றால், பள்ளிக்கூடத்தில் நீ ஒன்றுமே கற்றுக்கொள்ளவில்லை என்று அர்த்தம்.

- முகம்மது அலி (குத்துச்சண்டை வீரர்)

“இந்த உலகில் நட்பைவிட விலைமதிக்க முடியாதது ஒன்றுமில்லை“.

- தாமஸ் அக்வினாய்.

இது தற்செயலாக நிகழ்ந்த ஒன்று. ஆனால் சரியான நேரத்தில் எனக்கு கிடைத்திருக்கின்றது.

திருச்சியில் உயர்நிலைப்பள்ளிப்படிப்பு, சிதம்பரநாதனுக்கு 1900ஆம் வருடத்தோடு முடிவடைந்து விட்டது.

# கல்லூரிப்படிப்பு

உயர்நிலைப் பள்ளிப்பிற்குப்பின், திருச்சி St.Joserh கல்லூரியில் FA வகுப்பு முடித்து 1900 ஆம் வருடம் சென்னை கிறிஸ்துவ கல்லூரியில் சிதம்பரநாதன் சேர்ந்து படித்தார்கள். அப்போது சென்னை உயர் நீதிமன்றக் கட்டிடத்தையொட்டி ஒரு கட்டிடத்தில் தான் கிறிஸ்துவக் கல்லூரி இருந்தது. எனவே அவர் அதனருகில் உள்ளக் கட்டிடத்தில் ஒரு மாடியில் உள்ள ஒரு அறையை வாடகைக்கு அமர்த்தி அதில் தங்கி இருந்து படித்து வந்தார். சிதம்பரநாதன் கல்லூரி வரை வந்துவிட்டதால், இனி அவரை. டி.கே.சிதம்பரநாதன் என்னும் பெயரில் அல்லாமல் டி.கே.சி. என்று சுருக்கி அழைக்கலாம் என எண்ணுகிறேன்.

திருச்சியில் டி.கே.சி.க்கு உயர்நிலைப்பாடங்களில் ஈடுபாடு அதிகம் இல்லையெனினும் தமிழ்ப்பாடல்களில் ஈடுபாடு இருந்தது. காஞ் சிப்புராணம், திருவிளையாடல் புராணம், தேவாரம், திருவாசகம், திருக்குறள், கந்தபுராணம், நைடதம், இப்படிச் சில நூல்களுடன் பழக்கம். இந்நூல்கள் முழுவதும் அறியாவிட்டாலும் கதாகாலட்சேபம், பெரியவர்கள் கூறும் போதும் கேட்டு, அந்நூல்களிலுள்ள கதையும் போக்கும் ஒரளவு அவருக்குத் தெரிந்திருந்தது. அவரைப் பொறுத்தவரையில் தமிழ்ப்பாடல்கள் என்றால்& அது சாதாரணப் பாட்டாக இருந்தாலும் அதன் அற்புதமான யாப்பு முறை அவரைக் கிறங்க அடித்தது. அடிக்கடிப் பாடித் தமிழ் பாடல்களை அனுபவித்தார்கள். அதோடு நின்றுவிடாது, தான் அனுபவித்ததை அவ்வின்பத்தைத் தன்னுடன் இருக்கும் சகமாணவர்களிடம் சொல்லிச் சொல்லி மகிழ்வார்கள். அதனால் மாணவரிடையே டி.கே.சி.க்கு ஒரு தனி மரியாதையும் அன்பான உறவும் நிலைகொள்ளத் தொடங்கிவிட்டது. இது, கல்லூரித் தமிழ்ப் பேரவைக்குத் தலைவராக்கி, இலக்கிய மன்றத்தின் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தது. டி.கே.சி. பல சான்றோர்களை அழைத்து வந்து சொற்பொழிவுகளை நிகழ்த்த ஏற்பாடு செய்தார். பலசமயங்களில் இலக்கிய மன்றத்தில் டி.கே.சி.யே தமிழ்ப்பாடல்களை விளக்கிக் கூறி எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தியிருக்கிறார். அவரது பேச்சில் தெளிவும், நிச்சயமும், எளிமையும், அழகும் ஒளி விட்டு

வீசியது. அழகாகப் புரியும் வண்ணம் சுருக்கமாகக் கூறி விளங்க வைத்தார். அதனால் மாணவர்கள் டி.கே.சியை அடிக்கடி பேசும்படி வற்புறுத்தினார்கள்.

"மதுரைத் தமிழ்ச் சங்க ஸ்தாபகரும், வள்ளலும், தமிழறிஞரும் ஆகிய ஜமீன்தார் ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவர் அவர்களுக்கு, கிறிஸ்துவக் கல்லூரி தமிழ்ப் பேரவையில் ஒரு சமயம் வரவேற்புக் கொடுத்தார்கள். இது 1903 ஆம் வருஷம் நடந்தது. வழக்கறிஞர்கள், நீதிபதிகள், பேராசிரியர்கள், உயர் அதிகாரிகள், பிரபுக்கள், புலவர் பெருமக்கள், பிரமுகர்கள், தாய்மார்கள், ஆயிரக்கணக்கில் வந்து மொய்த்து விட்டார்கள். கூட்டத்தை மண்டபத்தால் தாங்க முடியவில்லை.

மகா மகா உபாத்யாயர் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் (சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்) அவர்களும், வெள்ளகால் வி.பி. சுப்பிரமணிய முதலியார் அவர்களும் வள்ளல் பாண்டித்துரையோடு கூட்டத்திற்கு வந்து அமர்ந்தார்கள்.

டி.கே. சிதம்பரநாதன் இவ்வளவு பெரிய சபையில் மேடை ஏறி வள்ளலுக்கு வரவேற்புரை நிகழ்த்தினார். வரவேற்றுப் பேசிய பேச்சில் விஷயமும் உணர்ச்சியும் உருண்டு புரண்டு விளையாடின. வார்த்தைக்கு வார்த்தை நொடிப்பும், கும்மாளியும், வந்து வந்து சபையைக் குலுங்க வைத்து விட்டன.

பாண்டித் துரைத் தேவர் அவர்களின் வள்ளன்மையையும் புலமையையும் கையில் எடுத்து ஒவ்வொரு அம்சமாக உதறி உதறி உல்லாசமாக விளக்கிய விளக்கம் சபையோர்களுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

"தமிழில் இப்படி எல்லாம் எடுத்துச் சொல்ல முடியும் என்பது இன்று தான் எங்களுக்குத் தெரிகிறது" என்று பலரும் பாராட்டினார்கள்.

பாண்டித்துரைத் தேவரும், சாமிநாத ஐயரும் மாணவன் சிதம்பரநாதனை அன்று பலபடப் புகழ்ந்து பாராட்டினார்கள். வெள்ளகால் முதலியார் அவர்கள், "சிதம்பரநாதன் என் சொந்தக்காரன், உற்ற உறவினன். அவனுடைய தமிழ்ப் புலமையும் பேச்சு நயமும் எனக்குப் பெருமை தருகின்றன" என்று பாராட்டினார்கள்.

கிறிஸ்துவக் கல்லூரிப் பிரின்ஸ்பாலுக்கு அன்று அளவிட முடியாத ஆனந்தம். பேராசிரியர்களின் ஆனந்தத்திற்கோ சொல்ல வேண்டியதில்லை. மாணவர்கள் சிதம்பரநாதனைத் தங்கள் வழிகாட்டியாகவே மதித்தார்கள்.

டி.கே.சியுடன் கிறிஸ்துவக் கல்லூரியில் படித்த மாணவர்களில் சிலர் மிக்க புகழுடன் வாழ்ந்தார்கள். அவர்களில் சிலர், (1) ஜஸ்டிஸ் கே. சந்திரசேகர ஐயார் (முன்னாள் சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ், (2) ஜான் மத்தாய் (இந்திய அரசின் முன்னாள் நிதி அமைச்சர், (3) டாக்டர் ஏ.ராமசாமி முதலியார் (வைஸ்ராயின் முன்னாள் நிர்வாக சபை உறுப்பினர்), (4) டாக்டர் ஏ. லட்சுமண சாமி முதலியார் (முன்னாள் சென்னை

சர்வகசாலை துணைவேந்தர்) (5) திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளை (நெல்லையில் பிரபல வழக்கறிஞர்), (6) கடையம் திரு. சங்கராயர் (7) டாக்டர் நாயுடு ஆகியோர் ஆவர்.

தமிழிலும், தமிழ்ப் பாடல்களிலும் சிதம்பரநாதனுக்கு மிக்க ஈடுபாடு இருந்ததால், வெண்பா, விருத்தம், கட்டளைக் கலித்துறை ஆகிய பாவினங்களில் சுயமாகப் பல பாடல்களைப் பாடினார்கள். கல்லூரியில் படிக்கும் போதே அரிய பாடல்கள் பலவற்றை டி.கே.சி. பாடினார்கள்."

(ரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார், வித்.ல.சண்முகசுந்தரம், சாகித்திய அக்காதெமி வெளியீடு, முதற்பதிப்பு 1987, பக்கம் 60, 61)

மகாகவி பாரதியார், கிறித்துவக்கல்லூரியில் படிக்கும் ஒரு மாணவன் தமிழில் தெளிவு பெற்றுத் திகழ்கிறான் என நம் டி.கே.சியைப் பற்றிக் கேள்விப்பட்டு, அடிக்கடி டி.கே.சியைப் பார்க்க வருவார். அவர் பாடிய பாடல்களைப் பாடிக்காட்டுவார். டி.கே.சியும் மனம் திறந்து பாராட்டுவார். சில சமயங்களில் "இந்த சொல்லுக்கு இப்படிப் போட்டிருந்தாலும் மேலும் அழகாய் இருக்கும் என்று டி.கே.சி., பாரதியிடம் கூறுமிடத்து, பாரதியும் அதைப் பாராட்டி அங்கீகரித்து இருந்திருக்கிறார்.

சிதம்பரநாதன் படித்த காலத்தில், கல்லூரி ஆசிரியர்கள் எல்லோரும் அன்னிய நாட்டினர் தாம். தமிழாசிரியராக இருந்த மறைமலை அடிகள்(ஒருவர்) தவிர, எல்லோரும் ஐரோப்பியர்கள்தாம்.

பேராசிரியர்கள் எல்லோரும் அவரவர் துறையில் மகா நிபுணர்கள், அவர்களில் வாய் ஹெண்டர்சன். ஸ்கின்னர் இரண்டு பேராசிரியர்களின் அன்பைப் பற்றியும், பரிவைப் பற்றியும் டி.கே.சி மறந்ததே இல்லை. அடிக்கடி அவர்களைப் பற்றிப் பாராட்டிப் பேசுவார்கள்.

"ஸ்கின்னருடைய அன்பும் எளிமையும் எனக்கு உற்ற துணையாக இருந்தன. ஒவ்வொரு செடி கொடிகளைப் பற்றியும் அவற்றை வைத்துக் கொண்டே பாடம் நடத்துவார். இரவு நேரத்தில் செடி கொடிகள் என்ன செய்கின்றன. எப்படி இருக்கின்றன என்பதைக் கூட எங்களுக்கு நேரடியாக விளக்குவார். அரிக்கேன் விளக்கைப் பொருத்தி கையில் பிடித்துக் கொண்டு எங்களைக் காட்டுப்பக்கம் அழைத்துப்போவார். செடி கொடிகளைக் காட்டி விளக்குவார். அவருடைய போதனை எனக்கு ஊக்கம் கொடுத்தது. அந்த ஊக்கம் காரணமாகவே தாவரஇயல், பிராணிஇயல், உயரியல், ரசாயன இயல் சம்பந்தமாக, பல நிபுணர்கள் எழுதிய நூல்களை நான் ஆர்வத்தோடு படித்தேன். பாடப் புத்தகங்கள் எனக்கு இன்பம் தரவில்லை. அறிஞர்கள் எழுதிய புத்தகங்களை நூல் நிலையங்களில் போய் படிப்பதில் தான் நான் இன்பம் கண்டேன். கல்லூரிப் படிப்பில் எனக்கு ஆனந்தம் தந்தது நானாகப் பல நூல்களைத் தேடிப் படித்தது தான். அதற்குக் காரணம் பேராசிரியர் ஸ்கின்னருடைய போதனையில் இருந்த நயமும்

தெளிவுந்தான்" என்று டி.கே.சி. பாராட்டுவார்கள். (ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் வித்.ல.சண்முகசுந்தரம் சாகித்திய அக்காதெமி வெளியீடு, முதற்பதிப்பு 1987 பக்கம் 62).

சிதம்பரநாதனுக்கு இங்கிலீஷ் பாஷை நன்றாக வந்தது. ஆனாலும் இங்கிலீஷ் பாடல்கள் படிப்பது ருசியாக இல்லை. அதுவும் இங்கிலீஷ் கவிகளைப் படிப்பதும், அனுபவிப்பதும் ரம்மியமாக இல்லை. இதுபற்றியும் ஸ்கின்னர் அடிக்கடி சொல்வாராம். "ஷேக்ஸ்பியர் போன்ற கவிஞர்களின் பாடல்கள் ஆங்கிலேயர்களுக்கே தெளிவாக விளங்குவதில்லை. அப்படி இருக்க, தமிழ்நாட்டு இளைஞர்களுக்கு அவை எப்படி விளங்கும். தமிழ்ப் பாடல்களைத் தான் படிக்கச் சொல்ல வேண்டும். இங்கிலீஷ் பாடல்களைப் படி என்பது கொடுமை" என்று வருந்துவாராம்.

கல்லூரிப் படிப்பில் சிதம்பரநாதனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது, ஒன்று, தமிழ்ப் பேரவை, இரண்டு, ஸ்கின்னர், ஹெண்டர்சன் முதலிய பேராசிரியர்களின் இனிய போதனை; மூன்று, அறிஞர்கள் எழுதிய விஞ்ஞான நூல்களை ஆர்வத்தோடு படித்தல்; நான்கு , சுப்பிரமணிய பாரதியார் போன்ற கலைஞர்களின் உறவு ஆகியவை தான்.

இவைகளுடன் இன்னொன்றும் உண்டு. சிதம்பரநாதனுடன் படித்த மாணவர்களில் ஒருவர் ஆந்திர நாட்டைச் சேர்ந்த ஜமீன்தாரின் புதல்வர். அவர் திடாத்திரமான சரீரம் படைத்தவர். வீரதீரச் செயல்கள் செய்வதில் ஆர்வம் உள்ளவர். அஞ்சாத நெஞ்சினர். அவர் தலைமுடி வளர்த்துக் கொண்டை போட்டிருந்தார். கைகளில் கனமான தங்கக் காப்புகள் அணிந்திருந்தார். கழுத்தில் பட்டை போன்ற கருப்புக் கட்டி இருந்தார். அதில் ஒரு தங்க உருண்டையைக் கோத்துக் தொங்க விட்டிருந்தார். நெற்றியில் அகலமான பொட்டு வைத்துக்கொள்வார். காட்டுக்குள் சுடுவதில் வல்லவர். பிச்சுவாள் போன்ற கூர்மையான கத்தியை இடுப்பில் சொருகி இருப்பார்.

ஒரு சமயம் அவர் மலைச்சரிவில் காடுகளுக்குள் வேட்டையாடப் போனார். வழியில் புலி ஒன்று எதையோ உற்று நோக்கிக் கொண்டிருந்தது.

பூனை போல மெதுவாகப் பம்மிப் பம்மி புலியின் பின் பக்கமாகப் போனார் ஜமீன்தார். போய் என்ன செய்தார் புலியின் முதுகில் ஒரு தட்டே தட்டிவிட்டாராம். அவ்வளவு தான், புலியானது பதறிக் கலைந்து ஓடியே போய்விட்டதாம்.

விடுமுறைக்காலம் என்றால் ஜமீன்தாருக்கு ஒரே கொண்டாட்டம். வேட்டையாடுவதிலும், ஆறுகளில் குதித்து எதிர் நீச்சல் அடித்து விளையாடுவதிலும் அவருக்கு உற்சாகம்.

கோதாவரி, கிருஷ்ணா நதிகளைப் பார்த்தால் அப்படியே ஆற்றுக்குள் பாய்ந்துவிடுவாராம் ஜமீன்தார். ஒரு சமயம் கிருஷ்ணா நதியில் குதித்தார். அதில் முதலைகள் அதிகம். முதலைகளை வேட்டையாடுவதில் ஜமீன்தாருக்குக் கொண்டாட்டம்.

"ஆற்றில் குதித்த ஜமீன்தார் முங்கி முக்குளித்து நெடுந்தூரம் போனார். முதலை இருக்கும் இடத்திற்கே போய்விட்டார். முதலையின் அடியில் முங்கியே போய், கத்தியை எடுத்தார். முதலையின் வயிற்றில் வைத்து ரோடு கிழிப்பது போல் ஒரே கீறாகக் கீறிவிட்டார். தண்ணீர் ரத்தக்காடு."

ஜமீன்தாரின் வீரதீர விளையாட்டுகள் இன்னும் எத்தனை எத்தனையே உண்டு. அறுபது வருடங்கள் கழித்து அந்த ஜமீன்தார் மாணவரின் ஊக்கத்தையும் அஞ்சாமையையும் மறக்காமல் புகழ்ந்து சொல்வார்கள் டி.கே.சி.

டி.கே. சிக்கு கல்லூரிப் படிப்புக் காலத்தில் சந்தோஷம் கொடுத்தவைகளில் ஆந்திர தேசத்து ஜமீன் மாணவரின் வீரதீரச் செயல்களும் ஒன்றாகும்.

# திருமணம் : இறைவன் கொடுத்த வரம்

பாரிஸ்டருக்கு டி.கே.சியைப் படிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணம் தமையனார் குத்தாலிங்க முதலியார் நினைத்தார். அந்த எண்ணம் நிறைவேற ஏதோ தடை ஏற்பட்டுவிட்டது. டி.கே.சி.யின் பத்தாவது வயதில் தந்தையை இழந்தார். தாயாரும் நீண்டநாள் இல்லை. தமையனாரின் பராமரிப்பில் வாழ்ந்தார்.

டி.கே.சி.யின் தாய்மாமன்கள் பத்துப்பேர் என ஏற்கனவே கூறினேன் அல்லவா! அம்மாமன்மார்களில் கடைக்குட்டி அம்மான் தீத்தாரப்ப முதலியார். அவர்களுக்கும், அவரது மனைவியான சுப்பம்மாள் அண்ணிக்கும் அருந்தவப்புதல்வியாகப் பிறந்தவர் பிச்சம்மாள் அண்ணி. இவருடன் பிறந்தவர்கள் ஏழு சகோதரர்கள், ஒரு சகோதரி என மாபெரும் குடும்பத்தைச் சார்ந்தவர். அவர் அன்பும் அருளும் நிறைந்தவர். இவர், அடக்கமும், எளிமையும், பிறருக்குக் கொடுக்கும் இயல்பும், உறுதியும் உடைய உத்தமியாகத் திகழ்ந்தார்.

மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்தவரம் என்றாற்போல், டி.கே.சிக்கு பிச்சம்மாள் அண்ணி மனைவியாக அமைந்தார். 1908ஆம் ஆண்டு டி.கே.சிக்கும் பிச்சம்மாள் அண்ணிக்கும் திருமணம் கோலாகலமாக நிறைவேறியது. டி.கே.சி. தன் திருமணத்திற்குக் கச்சேரி வேண்டாம், பரதநாட்டியமும் கதாகாலட்சேபமும் தான் வேண்டும் என்று கூறிவிட்டார். கச்சேரி என்றால் பாகவதர்கள் புரியாத மொழியில் பாடுவார்கள். விளங்காததைக் கட்டிக் கொண்டு அழ அவருக்குச் சம்மதம் இல்லை. இந்தத் தெளிவும் துணிச்சலும் இவர் வாழ்நாள் முழுவதும் இவருடன் இருந்து கொண்டே இருந்தது. உற்றார், உறவினர்களின் இல்லங்களில் இவருக்குக் கொடுத்த உபசரிப்புகளும், விருந்துகளும் மிகவும் பிரமாதமாக இருந்தன. ஒருவருக்கொருவர் அன்பில் சளைத்தவர்கள் இல்லை என்று காட்டினர்.

1908ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சென்னையில் உள்ள சட்டக்கல்லூரியில் பி.எல். படிப்பதற்காகச் சென்னை வந்தார். இங்கு ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தங்கினார். இவர்களது இல்லறத்தின் இன்பமாக ஒரு ஆண் குழந்தை பிறந்தது. 1909ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பிறந்தது. தீத்தாரப்பன் எனப் பெயரிட்டு அழைத்து மகிழ்ந்தனர். பின் சட்டப் படிப்பில் டி.கே.சி தேறவில்லை எனவே அவர் சென்னையிலிருந்து தென்காசிக்கு வந்துவிட்டார். பிறகு டி.கே.சி திருவனந்தபுரத்திற்குச் சென்று சட்டப்படிப்பிற்கானத் தேர்வு எழுதினார். 1915ஆம் ஆண்டு சட்டப்படிப்பில் வெற்றி பெற்றார். டி.கே.சிதம்பரநாதமுதலியார், அட்வகேட் எனும் பட்டத்துடன் திருநெல்வேலியில் உள்ள வண்ணாரப்பேட்டை என்னும் இடத்தில் முதலில் ஒரு வீட்டில் வாடகைக்கு இருந்தார். பின்பு இரண்டு வீடுகளை விலைக்கு வாங்கி, 1915லிருந்து 1928 வரை பதினான்கு வருடங்கள் டி.கே.சி திருநெல்வேலியில் இருந்தார்கள்.

டி.கே.சிக்கு மனைவி இறைவன் அளித்த வரம் என்றால் புதல்வன் அதைவிட அதிக வரம் என்றுதான் சொல்லவேண்டும். இவர் கலைஞானமும் பண்பாடும் ஒருங்கே அமைந்தவராகத் திகழ்ந்தார். இவருக்கு உறுதுணையாக, டி.கே.சியின் சகோதரியின் மகன் டி.கே சண்முக சுந்தர முதலியார் உத்தமராகத் திகழ்ந்தார். மனைவி, மகன், சகோதரியின் மகன்கள் என்றுமில்லாது டி.கே. சியின் பேரன்கள், பேத்திகள், சகோதர சகோதரிகளின் பேரன் பேத்திகள் என அந்தப் பரம்பரையே அன்புக்கும் பண்புக்கும் நிலைக்களமாக விளங்கியது. எத்துணை அடக்கம்! எத்துணை எளிமை!! எத்துணை மரியாதை!! என அனைவரும் வியக்கும் வண்ணம், இந்த இருபதாம் நூற்றாண்டில் இப்படியொரு அதிசயமானக் குடும்பமாகத் திகழ்ந்தது. எல்லாம் பண்பாட்டின் பயன் தவிரப் பிறிதொன்றுமில்லை.

# மாப்பிள்ளை உபசாரத்தின் பண்பும் பயனும்

1935&ஆம் வருடம் திரு.தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான் விளாத்திகுளத்திற்கு டிப்டி தாசில்தாராகப் போனார்கள். விளாத்திகுளம் ஒரு ஒதுக்குப்புறமான ஊர். அதுபற்றி டி.கே.சிக்குக் கடிதம் எழுதினார்கள்.

டி.கே.சியின் பதில் பழைய சம்பவங்களை கட்டிப்பிடித்து எப்படி விளையாடுகிறது பாருங்கள்.

“விளாத்திகுளம் ஒரு அந்தமான் தீவு என்று உத்தியோகஸ்தர்கள் சொல்வதுண்டு. ஆனால் எனக்கு அந்த ஊரினிடத்தில் ஒரு பிரியம். எனக்குக் கல்யாணமான 1908&ஆம் வருஷம் ஒரு மாதகாலம், பலவிதமான உபசாரங்களுக்கெல்லாம் உள்ளாகி வசித்த இடம் அது. என்னுடைய அம்மான், தாங்கள் பார்க்கும் டிப்டி தாசில்தார் வேலையை அப்போது பார்த்து வந்தார்கள். ஏதோ கிடையாத மாப்பிள்ளை கிடைத்துவிட்டதுபோல் எண்ணி இல்லாத மாப்பிள்ளை உபசாரமெல்லாம் செய்து புரட்டி எடுத்துவிட்டார்கள் என்னை. அதை எப்படி மறக்க முடியும்?

மேலும், மாப்பிள்ளை ஏதோ தீவாந்தரத்துக்குள் அகப்பட்டுவிட்டதாக எண்ண ஆரம்பித்து விடக் கூடாதென்று எண்ணி அங்குள்ள புஸ்தகசாலையை அநேகமாக என்வசமே ஒப்புவித்துவிட்டார்கள் என்று சொல்லலாம். சாப்பிடுகிற நேரம் போக காலை எட்டு மணி முதல் சாயங்காலம் காப்பி சாப்பிடுகிற நாலரை மணி வரையும் புஸ்தகசாலையிலே இருந்துகொண்டு ஆங்கில ஆசிரியர்கள் தமிழ் ஆசிரியர்களோடு அளவளாவிக்கொண்டேயிருந்தேன். அவைகளில் பிற்காலத்திலும் நின்று உதவும்படி படித்த புஸ்தகங்கள் இரண்டு. பாஸ்வல் எழுதிய ஜான்ஸன் வரலாறு ஒன்று. ஆற

அமர இரண்டு காண்டங்களையும் படித்தேன். அதிலிருந்து ஆங்கில இலக்கியங்களைக் கருத்தூன்றிப் படிக்கும்படியான முறை ஏற்பட்டது. மற்றப் புஸ்தகம் & எது என்றால் அது தண்டியலங்காரம். விளாத்திகுளத்தில் தண்டியலங்காரம் இருந்தது. 1908&ஆம் வருஷத்தில் என்றால், வியப்பாய் இருக்கும். தண்டியலங்காரத்தைப்பற்றித் தமிழ் ஆசிரியர்கள் பலவாகப் பேசியதைக் கேட்டதுண்டு. ஆனால் புஸ்தகத்தைப் பார்த்ததில்லை. அங்கேதான் முதன்முதலாகப் பார்த்தேன். அப்போதே மூலத்தில் விஷயம் இல்லை. ஆகவே மேற்கோள் செய்யுள்களை மட்டும் படித்தேன். தமிழ் இன்னது என்று தெரியவந்தது. தமிழ் பாஷையின் அழகையும், தூய்மையையும், வளத்தையும் கண்டபோது பாணதீர்த்தத்திற்குப் போயிருந்தபோது தெள்ளத் தெளிந்த தண்ணீர்ப் பெருக்கு பாறைகளுக்கிடையே தாவியும் வட்டமிட்டும் வலசாரி இடசாரி பாய்ந்தும் போகிற அழகெல்லாம் மனசுக்கு முன்வந்தது. இருபது முப்பது கவிகளை அப்போதே மனப்பாடம் பண்ணிக்கொண்டேன். தமிழ்க் கவியை உய்த்துணர்வதற்கு அந்தக் கவிகள் இன்றைக்கும் உபயோகப்படுகின்றன. அடிக்கடி மேற்கோள் செய்யுள்களை வாசித்து அனுபவிப்பதுண்டு.

தாதளவி வண்டு
    தடுமாறும் தாமரைகொல்
மாதர் விழி யுலவு
    வான் முகங் கொல் - யாதென்(று)
இருபாற் கவருற்(று)
    இடையூசல் ஆடி
ஒருபாற் படாதென்
    உளம்

என்ற .பாட்டு அவைகளில் ஒன்று. நான் வாசித்து அனுபவித்த புஸ்தகசாலையில் இன்னும் இருக்கும் என்று நம்புகிறேன். பிறகு ஒரு புஸ்தகம் எனக்கு வாங்கினேன். அது எப்படியோ எங்கேயோ போய்விட்டது. தொலைப்பதற்குக் காரணம் நானாகவே இருந்திருக்க வேண்டும். யாருக்காவது ஒன்றிரண்டு செய்யுள்களை வாசித்துக் காட்டியிருப்பேன். அவர் புஸ்தகத்தைப் படிக்க வாங்கிக்கொண்டு போயிருப்பார்.

அவ்வளவுதான், அதற்குச் சிறகு முளைத்திருக்கும். புஸ்தகம் வேறொன்று விலைக்கு வாங்க வேண்டும் என்று எண்ணியது பல தடவை. ஆனால் காலம் கடந்து கொண்டே வந்தது. கடைசியாக இரண்டு மாதத்திற்குமுன் இங்கே வந்திருந்தபோது மனசைத் திடப்படுத்திக்கொண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்குப் போய் ரூ.1-14-0க்கு தண்டியலங்காரம் ஒன்றை வாங்கிவிட்டேன். மேற்கோள் செய்யுள்களை அடிக்கடி படித்துக் கொண்டிருக்கிறேன். படிக்கும்போதெல்லாம், விளாத்திகுளம் புஸ்தகசாலை, தெரு, வேப்பமரம், மணல் வளம் பொருந்திய ஆறு, ஒரு கரையிலிருந்து எதிர்க்கரைக்கு பெரிய பருத்தி மாற்றுக்கட்டு ஒன்றை உருட்டிக்கொண்டே வந்த சண்டமாருதம் எல்லாம் கண்முன் வந்து நிற்கிறது. ஆகவே விளாத்திகுளத்தினிடம் எனக்கு ஒரு பிரியம் உண்டென்பது விளங்குகிறதல்லவா“ என்பதுதான் டி.கே.சி.யின் பழைய நினைவு.

# விதியை வென்ற மலேரியா

முதலில் டி.கே.சி வீட்டுக்கதவை விருந்தாளியாகத்தான் மலேரியாக் காய்ச்சல் தட்டியது. விருந்தும் மருந்தும் மூன்று நாட்கள் தானே. ஆனால் டி.கே.சி பால் உள்ள அன்பினால் ஒரேயடியாக இருபத்தைந்து நாட்கள் தங்கி அவர்களை ஒருவழியாக ஆக்கிவிட்டுச் சென்றது. சரி. அப்பாடா! என்று நிம்மதிப் பெருமூச்சு விடும் போது, மீண்டும் அழையாய் விருந்தாளியாய் வீட்டுக்குள் வந்து அமர்ந்துவிட்டது. பின் என்ன செய்வது! பன்னிரெண்டு ஆண்டு காலம் டி.கே.சியை 'உண்டு இல்லை'யென துவம்சந்தான், அதற்கு குஷிதான். டி.கே.சியிடமிருந்து ஜரிகைத் தலைப்பாகை, கோர்ட்டு, கேஸ் கட்டு எல்லாவற்றையும் பெற்றுக் கொண்டு விட்டது. பச்சைக் கம்பளியையும்கம்பராமாயணத்தையும்கையில்கொடுத்துவிட்டது. வீட்டின் தலைவாசலில் 'வழக்கறிஞர்' என்னும் விலாசப் பலகை மட்டும் இருந்தது.

இந்த மலேரியா காய்ச்சல் ஒரு தடவை வந்தாலே போதும், ஆளை உருக்குலைத்து விடும். ஊனை உருக்கி இரத்த ஓட்டத்தையே உறிஞ்சிக்குடித்துவிடும். இரண்டு மூன்று முறையெனத் தாக்கி விட்டால் அவ்வளவு தான் நண்பரே! மலையளவு பலசாலியும் பலவீனமாகி மணலாகிப் போய் விடுவான். எழுந்திருக்க முடியாது. உட்கார முடியாது, நடக்க முடியாது, கால்பின்னி, கைகள் நடுங்கும். உடம்பைத் தோய்த்து கொடியில் உலர்த்தி விட்டாற்போல் ஆகிவிடும். ஆனால் அதிசயம் நிகழ்ந்தது. இந்தப் பன்னிரெண்டு வருட உறவில், மலேரியாக்காய்ச்சலை எப்படிக் கையாள்வது என்று கற்று வைத்திருந்தார் டி.கே.சி. டி.கே.சிக்கு காய்ச்சல் வந்ததும் முற்றத்தில் உட்கார்ந்து விடுவார். குடம் குடமாகத் தண்ணீரை அவர்மேல் விடச் சொல்வார். சூடு தணிந்தவுடன் தலைதுவட்டிப் படுத்துவிடுவார். குளிரும்

நடுக்கமும் ஓடிவிடும். முதலில் வீட்டில் உள்ளோர் அஞ் சினர். பின்னர் இதன் உண்மை அறிந்தவுடன் டி.கே.சியின் சொற்படி நடந்தனர். எளிமையானத் தெளிவு தான். முழுக்கக் காய்ச்சிய இரும்பைக் குளிர வைக்க உடனே தண்ணீரில் மூழ்க வைக்கிறோம். இரும்பு உடனே உறுதியாகிறது. அது போல் தான் இது. இவ்வைத்தியத்தில் அவரது மேனி உறுதியாகத்தான் இருந்தது.

# மாமனிதனாய்

- கம்பன் செய்த மாயம்
- அருளாளர் டி.கே.சி
- கம்பனைக் காப்பாற்றிய டி.கே.சி
- வட்டத்தொட்டி
- வகித்தபதவிகளின் பண்பும் பயனும்
- எப்பாரும் போற்றும் இசைத்தமிழ்ச் செல்வா! என் அப்பா அழகியச் செல்லையா!

# கம்பன் செய்த மாயம்

ஒருநாள் திருநெல்வேலியில் வழக்கறிஞராய் இருந்த திரு. சுப்பையா முதலியார், அவர்கள் டி.கே.சியிடம் வந்து, கம்ப இராமாயணம் புத்தகத்தைக் கொடுத்து டி.கே.சியைப் படிக்கச் சொன்னார்கள் டி.கே.சியும் உடனே படிக்கத் தொடங்கி விட்டார். அதன் ஒவ்வொரு பாடலும் டி.கே.சியை வேறு ஒரு உலகத்திற்கே அழைத்துச் சென்று விட்டது.

ஆனால் இவரது இயல்பையே ஒரு புத்தகம் மாற்றி விட்டது. அது கம்பராமாயணம் பாடல்களைப் பார்க்கப் பார்க்கப், படிக்கப் படிக்க, அனுபவிக்க அனுபவிக்க, டி.கே.சி. ஒரு புதிய பிறவியே எடுத்துவிட்டார். எங்கும் அற்புதங்களாய்த் தெரிந்தன. பாடல்கள் முழுவதும் தெய்வீகமாகத்தான் காணப்பட்டன. காவியங்களிலுள்ள விஷயங்கள் நம் வாழ்வினை ஒட்டியேதான் பொதிந்து கிடந்தது. உணர்ச்சிமயமாய் உருவெடுத்து வரும் பொழுது, அதன் தோற்றமும், நடையும், பார்வையும் எங்கிருந்தோ வந்ததுபோல் தோற்றம் அளித்தாலும், அவை உண்மை அனுபவத்தை வரிக்குவரி, வார்த்தைக்கு வார்த்தை உள்ளத்தின் பாவத்தைத்தான் ஒரு தனித்த நடன கதியுடன், நாதத்தின் துணையால் பேசுகிறது. உணர்ச்சிகள் ஆயிரமாயிரம் உயிர்த்தெடுத்தாலும், அவற்றிற்கென்றுத் தனித்தனியான நடையை, இயல்பை, உருவத்தை, வண்ணமாய்க் கம்பன் படைத்திருந்தார். இதனைக் கண்டு அனுபவித்த டி.கே.சி. அவர்கள் அந்த ஆனந்தத்தில் தன்மயமாகி புதுப்பிறவியே எடுத்துவிட்டார்.

## அருளாளர் டி.கே.சி

டி.கே.சியின் குடும்பம் சிறியது தான் (மனைவி, மகன், டி.கே.சி ஆகிய மூவர்தான்) ஆனால் அவருடன் மைத்துனர் மற்றும் தமக்கையின் புதல்வர்கள் இப்படிப் பலர் இருந்து பழகியதால் டி.கே.சியின் இல்லம் எப்போதும் கலகலப்பாக இருந்தது. எவ்வளவு தான் உறவுக்காரர் என்றாலும் விருந்தும் மருந்தும் மூன்று நாட்கள் என்பார்கள். ஆனால் பல வருடங்கள் உறவினர்வீட்டுக் குழந்தைகளைத் தம்மோடு வைத்து உபசரித்து கல்வி பயில உதவினார் என்னில் அது மகத்தான செயல்தான், இச்செயற்கரிய செயல் டி.கே.சி செயல்தான் என்னில் அது தமிழும், தமிழ்ப்பண்பாடும் டி.கே.சியைச் செய்யத் தூண்டியது எனக் கூறலாம்.

டி.கே.சியின் பத்தாவது வயதில் தந்தையை இழந்தார். தாயாரும் நீண்ட நாள் இல்லை. தமையனாரின் பராமரிப்பில் வாழ்ந்தார். 1916ல் அந்தச் சகோதரரும் இறந்துவிட்டார். குடும்பப் பொறுப்பு முழுவதையும் டி.கே.சியே தாங்க வேண்டி இருந்தது. தாய், தந்தை, தமையன் மூவரையும் இழந்து நின்றபோது, டி.கே.சிக்கு அவரது தமக்கையார் ஆதரவாய் இருந்தார். அவரது வேலைகள் அவர் சென்ற கூட்டங்கள், அதன் சிறப்பு, பாராட்டுக்கள் எல்லாவற்றையும் அவருடன் பகிர்ந்து கொண்டார். 1926ம்ஆண்டு அவரது குடும்பத்தாரையும் அழைத்துக் கொண்டு தமிழ்நாடு முழுவதும் சுற்றிக் காண்பித்தார்கள். அது பெரிய தல யாத்திரையாகவும், வழிபாட்டு யாத்திரையாகவும், அமைந்தது. அந்தந்த இடத்தின் வரலாற்றுச் சிறப்பினையும் கலை, ஓவியம் போன்ற சிறப்புக்களையும் விளக்கிக் காட்டினார். டி.கே.சி. தன் தமக்கையார் அவரது கணவரின் மூத்த சகோதரரின் ஆடம்பர வாழ்க்கையால் பொருளாதார நலிவுற்ற போது, டி.கே.சி. தன் நிலங்களிலிருந்து நன்செய் நிலங்களையும் வீடும் அளித்து அவரது

புதல்வர்களை தம்முடன் வைத்துக் கொண்டார். அதுபோல் பிச்சம்மாள் அண்ணியின் தாய்மாமனின் மனைவி தன் இரண்டாவது பிரசவத்தின் போது இறந்துவிட்டார். ஏற்கனவே 5 வயதில் பெண் குழந்தை உண்டு. அவர் மனைவியில்லாது பெண்குழந்தையை எப்படி வளர்க்கமுடியும் என்று அந்தப் பெண்குழந்தையைத் தம் குழந்தையாக வளர்க்க முடிவு செய்தார் டி.கே.சி. அது போல் தம் பெண்ணைப் போல் வளர்த்து நிலம், வீடு, நகைகள், பாத்திரங்கள் என எல்லாம் கொடுத்து திருமணம் செய்துவைத்தார்.

இதுபோல் வண்ணாரப்பேட்டையில் இருக்கும்போது டி.கே.சி. வீட்டுக்குப் பக்கத்து வீட்டில், ஒருமுதலியார் குடியிருந்தார். அந்த வீட்டுப் பெண் இவர்களது வளர்ப்புப் பெண்ணுடன் எப்போதும் பேசிக்கொண்டிருப்பார். இருவரையும் எப்போதும் ஒன்றாகப் பார்க்கலாம். அப்போது டி.கே.சி. வீட்டில் இருக்கும் போது அப்பெண் வயதுக்கு வந்துவிட்டாள். இதையறிந்தவுடன் பிச்சம்மாள் அண்ணியும், டி.கே.சியும், தங்கள் பெண்ணுக்குச் சடங்கு செய்வது போல் தங்கள் வீட்டிலேயே பெரிய சடங்கு விழாவே நடத்தி விட்டனர்.

டி.கே.சி. வீட்டுக்கு எதிர்புறத்தில் இரண்டு வீடு தள்ளிக் குமாஸ்தா ஒருவர் இருந்தார். அவர் அடிக்கடி டி.கே.சி. வீட்டுக்கு வந்து போவார். சிற்சில சமயங்கள் சில உதவிகளும் பெறுவார். அவ்வாறு டி.கே.சி. வீட்டுக்கு வந்திருந்த போது, தன் தம்பிக்குத் தேர்வு எழுதப் பேனா இல்லாது கஷ்டப்படுவதை டி.கே.சி அறிந்தார். உடனே அவரது தம்பியை அழைத்துத் தன் விலையுயர்ந்த பார்க்கர் பேனாவைக் கொடுத்தார். தேர்வு முடிந்ததும் கொடுத்தால் போதும் என்று கூறினார். அவனும் மகிழ்ச்சியில் தேர்வு எழுதப் போனான். ஆனால் தேர்வு எழுதி முடித்து விட்டு வரும் வழியில் பேனா தொலைந்து விட்டது. அவனுக்கோ அச்சம், வெட்கம், கவலை எல்லாம் ஒருசேர வந்து வீட்டில் மயங்கி மூலையில் அமர்ந்துவிட்டான். டி.கே.சிக்கு விவரம் தெரிந்துவிட்டது. உடனே வேகமாகப் புறப்பட்டு வந்து, “என்னப்பா! பேனா என்றால் தொலைப்பதற்குத் தானே இருக்கிறது. சரி. போனது போகட்டும். நாளைத் தேர்விற்கு இந்தப் பேனாவை வைத்து எழுது” என்று இன்னொரு பார்க்கர் பேனாவைக் கொடுத்தார்.

டி.கே.சி. அவர்களுக்கு ஒரு பழக்கம் இருந்தது. அவர் எந்தப் புத்தகம் வாங்கினாலும் 5 பிரதிகள் வாங்குவார். புத்தகத்தை

வாங்கியவுடன் அதைப் படித்து, அதன் நயங்களை அனுபவிப்பார். உடனே அதை தன் நண்பர்களிடம் பகிர்ந்து கொள்வார். அதைக் கேட்டுவிட்டு "அப்படியா அப்படியா!" என அவர்களும் ஆனந்தத்தில் திளைப்பார்கள். தம்மிடம் இருக்கும் பிரதிகளைக் கொடுப்பார்கள். படித்துவிட்டுத் திருப்பிக் கொடுப்பர் சிலர். தங்களிடமே வைத்துக் கொள்பவர் பலர். அது பற்றி அவருக்குக் கவலையில்லை. நல்ல நூலை நாலு பேர்களைப் படிக்கச் செய்து, அனுபவிக்கச் செய்து விட்ட ஆனந்தம் தான் டி.கே.சிக்கு. அதில் அவருக்குப் பெருமிதம் என்றே கூறலாம். இதைக் கவனித்த நண்பர் ஒருவர், "ஏன் இப்படிக் காசைக் கரியாக்குகிறீர்கள். வந்தவர் போனவர்களுக்கெல்லாம் கொடுக்கத்தான் வேண்டுமா! என்ன?" எனவினவினார். அதற்கு, டி.கே.சி. அழகாய்ப் பதில் கூறினார்கள், "ஒருவருடையப் பசியை எளிதில் ஆற்றிவிடலாம். திருமணம் செய்து கூட வைத்து விடலாம். ஆனால் ஒருவரைப்படிக்க வைப்பது அவ்வளவு எளிதான செயல் அல்ல. அது இங்கு இப்போது நடந்து வருகிறதே. அது என்னால் செய்து விட முடிகிறதே, கடையில் மட்டும் புத்தகம் இருந்தால் இது நடைபெறுகிற செயலா? படிக்க ஆள் கிடைத்து விட்டால், வாங்கி வாங்கிக் கொடுக்க வேண்டியதுதானே! அதைவிட வேறு என்னத்திற்கு இருக்கிறது புத்தகம்?"& இது தான் டி.கே.சி.

வீட்டில் மைத்துனர்கள் மூவர், தமைக்கையர் புதல்வர் இருவர் எல்லோரும் டி.கே.சியின் வீட்டில் இருந்து தீத்தாரப்பனோடு படித்துக் கொண்டிருப்பார்கள். அதே வண்ணாரப்பேட்டையைச் சேர்ந்த காந்திமதிநாதன் என்னும் இளைஞர் அவர்களின் பள்ளித் தோழராய் இருந்தார். தோழர்களைப் பார்க்க அடிக்கடி டி.கே.சி. வீட்டுக்கு காந்திமதிநாதன் வருவார். இவ்வாறு வந்து போவதில், டி.கே.சியின் அன்புக்குப் பாத்திரமாகி விட்டார் அவர். தன் மகன், மைத்துனர், மருமக்கள்மார்களுக்குத் துணிமணி எடுப்பதோடு, காந்திமதிநாதனுக்கும் சேர்த்து தான் டி.கே.சி. எடுப்பார்கள். பேனா, பென்சில், நோட்டு, புத்தகம் எல்லாம் அப்படி அப்படியே காந்திமதிநாதனுக்கும் உண்டு. டிபன், காபி, சாப்பாடு கூட அனேகமாக டி.கே.சி. வீட்டில்தான் இருக்கும். இப்படித்தான் காந்திமதிநாதன் பி.ஏ. வரைப்படித்து தேறி, சென்னையில் அரசுப்பணியில் சேர்ந்தார்.

டி.கே.சியும் எம்.எல்.சியாகி அதன்பின் அறநிலையத்துறை ஆணையராகி ஆகிச் சென்னையில் குடி இருந்தார்கள். அப்பொழுது டி.கே.சி. அவர்கள் காந்திமதிநாதனைப் பார்க்கச்

செல்வார்கள். பின் வீட்டுக்கு வரவழைத்து உபசரிப்பார்கள். டி.கே.சி. உள்ளம் மனித உறவுகளின் உன்னதத்தை உணர்ந்திருந்தது. ஒரு சமயம் காந்திமதிநாதன் உடல் நலிவுற்றிருந்ததை அறிந்து, அவரைத்தேடிப் போனார் டி.கே.சி. தம்முடைய காரில் தம் வீட்டிற்கு அழைத்து வந்தார்கள். எல்லா வசதிகளையும் அவருக்குச் செய்து கொடுத்து மருத்துவரை வரவழைத்து மருத்துவம் செய்யச் சொன்னார்கள். ஒரு மருத்துவத்தாதி போல், காந்திமதி நாதனின் படுக்கைகளை மாற்றி, உடம்பை ஈரத்துணியால் சுத்தப்படுத்துவது, உடலுக்கு பவுடர் போடுவது, சாதத்தைக் கையில் உருட்டி உருட்டிக் கொடுப்பது, தட்டைக் கழுவி, எனப் பணிவிடை செய்தார் டி.கே.சி. டி.கே.சிக்கு வயது 50, காந்திமதிநாதனுக்கோ வயது 22. டி.கே.சியின் கல்வியும், பதவியும், செல்வாக்கும் இமயமாய் நின்றது. காந்திமதிநாதன் பார்த்த வேலை ஒரு அரசு அலுவலகக் குமாஸ்தா வேலை. டி.கே.சிக்கு உறவும் இல்லை, அவரது ஜாதியும் இல்லை. ஆனால் இதையெல்லாம் தாண்டி, டி.கே.சியின் அன்பு ஊற்றாக ஊற்றிக் கொண்டிருந்தது. சாதாரண மாணவரையும் தாய்போல் பேணிப் பணிவிடைச் செய்யச்சொன்னது அன்புதான். அன்பின் வேலையே இது தான். தன் வேலையை நன்றாகச் செய்துவிடும், இயல்பாகவே.

1949ஆம் வருடம், குற்றாலத்தில் டி.கே.சி. இருக்கும் பொழுது ஒரு நாள், முன்பின் தெரியாத ஒருவர் டி.கே.சியைக் காண வந்தார். அவரைக் கண்ட மாத்திரத்திலேயே கூறிவிடலாம் "அவர் ஒரு போக்கிரி" என்று. ஆனாலும் அவரை அமரச்செய்து உபசரித்துப் பின் விசாரித்தார்.

தான் தஞ்சாவூரிலிருந்து வருவதாகவும், திருவனந்தபுரம் செல்ல வேண்டும் என்றும், வழியில் இங்கு பணத்தை செலவழித்துவிட்டதாகவும் ஒரு 25 ரூபாய் கொடுத்தால் ஊருக்குப் போய்விடலாம் என்றும் கூறினார். ஊரில் தங்களைப் பார்த்தால் உதவி கிடைக்கும் என்று வழிகாட்டியதாகவும் கூறினார்.

"அப்படியா? அடடா!" என்றார் டி.கே.சி. தன் காரியதரிசியை அழைத்து அவர் காதில் ஏதோ கூறினார். அடுத்த நிமிடம் 25 ரூபாய் காரியதரிசி எடுத்து வந்தார். அந்த வாலிபரிடம் அன்பாய் அதைக் கொடுத்து வழியனுப்பி வைத்தார்.

இதைக் கண்ணுற்றவர்கள் "இவன்தான் போக்கிரியாயிற்றே! ஏன் உதவி செய்தீர்கள்?" என வினவினர். அதற்கு 'நாம் கொடுக்காவிட்டால், இந்தக் குற்றாலத்தில் வருபவர் போவோரிடம்

எல்லாம் தொந்திரவு பண்ணிப் பணம் வசூலிப்பான். ஏன் அவர்களுக்கு சிரமம் வைப்பானேன். வந்தவர்கள் குற்றாலமலையின் சாரலை அனுபவிக்காமல் இவனிடம் மாட்டிக் கொண்டு விடுவானேன். பணம் இருக்கத்தானே செய்கிறது. தொந்தரவிலிருந்து பலரைக் காப்பாற்ற நம் பணம் பயன்படுமானால் அதைவிட வேறு என்ன சிறப்பு வேண்டி இருக்கிறது பணத்திற்கு?" என்று டி.கே.சி. பதில் கூறினார்கள். பணத்தின் விரிவான பயன் அறிந்தவர் டி.கே.சி.

அறுபது வருடங்களுக்கு முன் திருநெல்வேலி & வண்ணாரப்பேட்டையில் நல்லசிவம்பிள்ளை என்றொருவர் இருந்தார். அவருக்கு எழுதப்படிக்கத் தெரியாது. ஆனால் பெரிய பெரிய வட்டமாக தன் கையெழுத்தை மட்டும் போடத் தெரியும். அவர் தனது வீட்டை மூவாயிரம் ரூபாய்க்கு டி.கே.சி.க்கு விற்பதாக கிரையம் பேசிவிட்டார். இதனையறிந்த ஒரு பிரபல வழக்கறிஞர், தான் 3,300 ரூபாய் தருவதாக அவரது மனைவி மக்களிடம் கூறி அவர்களது மனதைக் கலைத்து இருக்கிறார். அவர்களும் அவரை நச்சரித்து, அடித்து, உணவு கொடுக்காது துன்புறுத்தியிருக்கின்றனர். ஆனால் அவரோ கொடுத்த வாக்கு தவறமாட்டேன் எனக்கூறி, டி.கே.சியின் காலில் விழுந்து காப்பாற்றுங்கள் எனக்கதறிவிட்டார்.

"முதலியார் ஐயா! சீக்கிரம் கிரையம் பண்ணுங்கள். என்னை என் மனைவி மக்கள் கொன்று விடுவார்கள். சொன்ன சொல் மாறாது உங்களுக்கு எழுதிக் கொடுத்து விட்டு நான் செத்தால் தான் என் கட்டை வேகும்" என்று கூறிக்கதறினார் அவர்.

இதை நினைத்து நினைத்து டி.கே.சி. அவர்கள் உருகுவார்கள். அவரை உருகி உருகிப் பாராட்டுவார்கள். "நல்லசிவம் பிள்ளையை மறக்க முடியுமா? உண்மையை யார் தான் மறக்க முடியும்? நல்லசிவம் போன்றவர்களைப் பார்த்துதான் குறளாசிரியர் அனுபவித்து ஆனந்தத்தில் திளைத்து இருக்கிறார். இல்லாவிடின்,

யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை, எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற"

என்று உணர்ச்சி வேகமாய், உருவெடுக்குமா குறள்?!

டி.கே.சிக்கு யார் தன்னைப் பார்க்க வந்தாலும், அவர்கள் அவர் வீட்டில் தான் உணவு உண்ண வேண்டும். எப்போதும்

அது அசையா நெடுந்தவம். அனைவரும் அறிந்த ஒன்றுதான். ஒரு நாள் இரவு, வித்வான் ல.சண்முகசுந்தரம், நீதிபதி. மகராஜன் இருவரும் டி.கே.சியுடன் பேசிக் கொண்டு இருக்கிறார்கள். அப்போது அம்பாசமுத்திரத்திலிருந்து மரகத சுப்பிரமணிய பிள்ளை வந்து சேர்ந்தார். தவசுப்பிள்ளை அனைவருக்கும் சாப்பிட இலை போட்டு விட்டுத் தகவல் தெரிவித்தார். டி.கே.சி. "அனைவரும் சாப்பிடப்போகலாம் வாருங்கள்" என்றார். மரகதசுப்ரமணியப்பிள்ளை அவர்களோ தனக்கு வேண்டாம், வரும்போதே ஹோட்டலில் சாப்பிட்டு விட்டேன் என்று பதில் கூறினார். அவ்வளவுதான் டி.கே.சியின் முகம் வாடிச் சிவந்து விட்டது. "நான் என்ன செத்தா போனேன்? உயிரோடு இருக்கத்தானே செய்கிறேன்" என்று அலறிவிட்டார்கள் டி.கே.சி. அந்தக் கோபம் உண்மையானது. போலியாக இருக்காது. அடி உள்ளத்திலிருந்து வருகிற கோபம் அது. கருணையின் பயன் அது.

தவசுப்பிள்ளை சங்கரன் விஷயமாக டி.கே.சி. வீட்டில் சிறு சலசலப்பு நடந்தது. பிச்சம்மாள் அண்ணிக்கும் வருத்தம். ஒரு வழக்கறிஞர் டி.கே.சியிடம் "என்ன நம்ம சங்கரன் இப்படிப் பண்ணிட்டான், ரொம்ப சங்கடமாக இருக்கிறது" என்றார்.

உடனே டி.கே.சி., "அவன் மேல் தவறில்லை சிறுபையனாக இருக்கும் பொழுதே நம்மிடம் வந்து சேர்ந்து விட்டான். இப்போது அவனுக்கு 30 வயதாகிவிட்டது. நம் சொந்த மகனாய் இருந்தால் காலா காலத்தில் திருமணம் செய்து வைத்திருப்போமா மாட்டோமா?. அவனும் ஒரு பெண்ணிடம் இப்படியொரு உறவு வைத்திருந்திருக்க மாட்டான். நமக்கு அவன் உழைத்துப் போட்டுக் கொண்டு இருக்க வேண்டும் என்று என்ன கட்டாயம்? அவன் சந்தோஷத்தில் நாம் அக்கறைக் காட்டாது, அவனை இப்படிக் குறை கூறுவது தவறு. நாம் தான் தவறு செய்து விட்டோம். அவன் இல்லை. நாம் இப்படியே இருந்தால் உலகம் உருப்படுமா?" என்று உலக அளவில் அதைக் கொண்டு சென்று விட்டார் டி.கே.சி. அவரால் தான் பிரச்சனையின் உண்மையை, தன்னலமில்லாது அன்பு கொண்டு பார்க்க இயலும்.

டி.கே.சியின் தமையனார் காலத்தில் குடும்பச் சொத்து முழுவதும் அவரது பராமரிப்பில் இருந்தது. அவர் காலத்துக்குப் பின் சொத்துக்களைப் பிரிக்கவில்லை. அவரது மகன் டி.கே. சியின் மேல் வழக்கு தொடுத்து விட்டார். அவருக்கு அவரது பாகத்தைப் பிரித்துத் தரவேண்டும் என்று நீதிமன்றத்திடம்

கேட்டுவிட்டார். வழக்கு விசாரணைக்கு வரும் முன், நீதிபதியிடம் டி.கே.சி "நீதிபதி அவர்களே! என் தமையனார் மகன் தனக்குரிய பங்கைக் கேட்பது நியாயம். இதை அவன் என்னிடம் நேரடியாகக் கேட்டிருக்கலாம். பணத்தை அனாவசியமாகச் செலவு செய்துவிட்டான். போகட்டும், நடந்தது நடந்து விட்டது. சொத்து முழுவதையும் அவனிடம் ஒப்படைத்து விடுகிறேன். அவனுக்குரிய பங்கை எடுத்துக் கொண்டு மீதத்தைக் எனக்கு அவனே கொடுக்கட்டும். அது போதும் எனக்கு" என்றார்.

டி.கே.சியின் வாக்குமூலத்தைக் கேட்ட நீதிபதி மட்டுமல்ல, அந்த நீதிமன்றமே அசந்து போய்விட்டது. "இப்படியும் ஒரு மனிதர் உண்டோ!" என வியப்பில் வாய் மூடவில்லை.

எல்லாம் தமிழும் தமிழ்க்கவியும் செய்தமாயம். தமிழ் தந்த பண்பாடு அப்படி..

# கம்பனைக் காப்பாற்றிய டி.கே.சி.

பதின்மூன்று வருடங்கள் திருநெல்வேலி – வண்ணாரப்பேட்டையில் வாசம் செய்தார் டி.கே.சி. வாசலில் பெயரளவில் தான் வழக்கறிஞர் டி.கே. சிதம்பரநாதமுதலியார் எனப் பெயர்ப்பலகை தொங்கியது. வீட்டுக்குள் வேண்டாத விருந்தாளியாய் வந்த மலேரியாவுடன் போராடிக் கொண்டிருந்தார் டி.கே.சி. இதற்கு ஆறுதலாய்க் கம்பனும் வேறு சிலத் தமிழ்ப் பாடல்களும் துணைநின்றார்கள்.

கம்பர் தம் பாடல்களைப் படிக்கப் படிக்க, கம்பரை அவர் உணரத் தொடங்கி விட்டார். கம்பர் கவி போலவே தோற்றம் அளிக்கும் செய்யுள்கள் அதே எதுகை, மோனை, சீர், தளை, அடி, தொடை ஆகியவற்றோடு அமைந்து இருந்தன. அவையும் விருத்தப்பாவில்தான் அமைந்து இருந்ததால் உண்மைப் பாடல்கள் போல் மயங்கிக் கிடந்தது. ஆனால் அவை வெறும் செய்யுட்கள் தாம். கவியின் உருவம் அதில் தென்படவில்லை. கம்பராமாயணத்தில் மட்டும் இப்படிப் போலிப் பாடல்கள் மலிந்து கிடக்க காரணம் என்ன என சிந்தித்தார் டி.கே.சி. சிந்திக்கச் சிந்திக்க அவருக்கு உண்மை புலப்பட்டது.

கம்பனின் கவி ஒரு தனித்துவமான உன்னத உணர்ச்சி பாவங்களைக் கொண்டு இருக்கின்றன. அவை படிப்போர்களை மயக்குகிறது. அம்மயக்கத்தில் கிறங்கி, அவரைப் போல் அவையில் கவிகள் இயற்றிச் சேர்த்து விடுகின்றன. மேலும் இரண்டாவதாக, கம்பர் தாம் அமைத்த பாத்திரங்களுக்கு தம்முடைய லட்சியங்களுக்காக கதையின் போக்கினையும், கதையையும் ஆங்கே மாற்றியிருக்கிறார். ஆனால் மற்றவர்கள் அதாவது வால்மீகியையும், துளசிதாஸ் இராமாயணத்தைப் படித்த மற்றவர்கள், பாத்திரங்களுக்கும் கதைக்கும் தாங்கள் தான் பொறுப்பு என்பதுபோல் அப்படி மாற்றி அதே எதுகை,

மோனையில் செய்யுட்களை நிரப்பி விட்டனர். மூன்றாவதாக, முன் காலத்தில் ஓலைச் சுவடிகளில் தானே எழுதி வைத்திருந்தனர். அது மழையாலும், கரையான் அரித்தும் இற்றுப் போய்ப் பழுதுபடும். இதனால் அழிந்து போன பகுதிகளுக்குச் சிலர் நினைவிலிருந்து எடுத்துப் போட்டனர். சிலர் தானே இயற்றிச் செருகி விட்டனர் செய்யுட்களை.

இப்படிப் படலம் படலமாக போலிக் கவிகள் இருக்கிறது, கம்பராமாயணத்தில் இருக்கின்றது. இதைச் செருகு கவிகள் என்று கூறுகிறார் டி.கே.சி. அவர்கள். கம்பரது பாடல்களைத் தொடர்ந்து அனுபவித்து வந்தால் போலிக் கவிகளை விட்டு விலக முடியாத இடத்தில் மக்கள் மயங்கிக் கிடக்கிறார்கள். இந்த மயக்கத்தை எளிதில் விட்டுவிடக் கூடாது. தெளிய வைக்க வேண்டும். போனால் போகிறது இருந்து விட்டுப் போகட்டும் என்று விடக்கூடாது என்பது டி.கே.சியின் கருத்து. இவை உண்மைக்கும், பொய்க்கும் வேற்றுமை காண முடியாதபடிக் குருடாக்கி விடுகின்றன. உண்மையான உணர்வு உள்ளத்தினின்று உருகிக் கசிய இயலாத வண்ணம் வறட்சியாக்கிவிடுகின்றன. அதனால் கலை உலகில், அதிலும் கவி உலகில் போலி என்பது களை மட்டுமல்ல நஞ்சு. பொல்லாத நஞ்சு. இப்படிப்பட்ட ஆல கால விஷம், கம்ப இராமாயணத்தில் படலம் படலமாக இருந்தது. பாடல்களில் ஆயிரக்கணக்காணவை போலி.

டி.கேசி ஆர்வமாய்க் கம்பரைப் படித்தார். படிக்கப் படிக்க பாடலோடு பாடலாய்க் கரைந்து, யோகம், தவம், ஆனந்தம் என்று சொல்வார்களே அப்படி " தான் வேறு கம்பர் வேறு" என்று இல்லாமல், கம்பனில் கரைந்து ஒன்றாகிவிட்டார். கம்பனைக் கொண்டு அவர் பிழைப்பு நடத்தவேண்டும், பொருள், புகழ் சம்பாதித்து தடபுடல் பண்ணவேண்டும் என்று எண்ணி கம்பரைப் படிக்க வில்லை. கம்பன் தானாக வந்து அமர்ந்து கொண்டார். உடல், பொருள், ஆவி அனைத்தும் கம்பன் ஆனார். கம்பரை உணர்வில் உணர்ந்தார். அவர் பால் உள்ள பக்தியும்,அறிவின் தெளிவும் போலிப் பாடல்களின் பற்றை அடியோடுக் களைய உதவியது. உணர்ச்சி மயமான நேரத்தில் கவி மிகவும் வலுவாகத்தானே இருக்கும். சாதாரண நிலையில் கவிஞர் பாடிய பாட்டு கொஞ்சம் உணர்வு குறையலாம் எனக் கருணைக் காட்டவில்லை. கனி விளையும் மரத்தில் திருத்தமாகவும் புடைத்தும் விம்மியும் விளையும், சில வெம்பிச் சாம்பி விடும் என வாதிடலாம். இது உண்மை தான் எனினும்,

மாமரத்தில் மாங்கனி தானே காய்க்கும். அத்திக்கனியோ, ஆலங்கனியோ காய்க்காது. அது போல் உச்ச நிலை கொடுக்கின்ற பாடல்களிலும், சாதாரண நிலையில் பேசவும் கவிகளிலும், கவிப்பண்பு இருக்கும். மேலும் அது கவியாகவே தான் இருக்கும். கவிப்பண்புக்கு & தமிழ்ப்பண்புக்கு மாறாக இருக்காது எனத் தெளிவாய் உணர்ந்தார் டி.கே.சி. தான் உணர்ந்ததை மிகவும் வீரத்துடன் தெரியப்படுத்தினார். உண்மைக்கு மறுபெயர் வீரம் என்பதற்கு டி.கே.சி. எடுத்துக்காட்டாய்த் திகழ்ந்தார்.

# வட்டத்தொட்டி

டி.கே.சி. தேர்ந்தெடுத்த ஒவ்வொரு பாடலும், நம்மோடு பேசுபவையாக இருக்கின்றன. நம் கண்களை நம் காதுகளைத் திறந்து மனதையே திறந்து விடுகின்றன. உண்மையின் ஒளி உன்னதமாய் ஒளிர்கின்றது. நாம் செல்லும் வழியை அது காட்டி நிற்கின்றது. இப்படிக் கண்டறிந்த ஆனந்தத்தை அனைவரிடமும் பகிர்ந்தளிக்கத் துடித்தார் டி.கே.சி. தன் இல்லத்திற்குத் தமிழ் அன்பர்களை வரவழைத்து உபசரித்துப் பாடல்களைப் பாடிக் காட்டி, விளக்கம் கொடுத்தார். இவைகளைக் கேட்ட தமிழ் அன்பர்களும், கம்பரில் இத்துணைச் செய்திகள் இருக்கின்றனவா என வியந்து மகிழ்ந்தார்கள். டி.கே.சியின் இல்லம் வரவரத் தமிழன்பர்கள் தொடர்ந்து வரும் தமிழ்ச் சங்கம் ஆகியது.

உண்மையானத் தமிழ்ச்சங்கம் ஒன்றைப்பாண்டிய மன்னர்க்குப் பின் நிறுவி தமிழையும் தமிழ்ப்பண்பையும் காப்பாற்றினார் டி.கே.சி. என டி.கே.சியின் பணியைப் பாராட்டுகிறார் வித்வான் ல.சண்முக சுந்தரம், தன் நூலான டி.கே.சிதம்பரநாத முதலியார் என்னும் நூலில் (சாகித்திய வெளியீடு முதற்பதிப்பு 1987 பக்கம் 107) இது டி.கே.சி. தமிழுக்குச் செய்த அரும்பணி. கம்பனுக்குச் செய்த தவப்பணி ஆகும்.

திருநெல்வேலி வண்ணாரப்பேட்டை வீட்டின் முன்பகுதியில் ஒரு பெரிய வட்டமான முற்றம் இருக்கும். அதில் தமிழ் அன்பர்களுக்கு கம்பனையும், அவர் கவி உருவத்தையும் விவரிக்கத் தொடங்கினர். டி.கே.சி. 'வட்டத் தொட்டி' என்ற பெயரே ஏற்பட்டு விட்டது. 1924ஆம் வருடம் முதல் தொடங்கிய இச்சங்கம் வாரம் ஒரு முறை கூடும். இதற்கு தவறாது வந்து தமிழைக் கேட்டு இன்புற்ற அறிஞர்கள் திரு.எஸ்.வையாபுரிப்பிள்ளை, ஆர்.பி.சேதுப்பிள்ளை, சக்கரபாணி நம்பியார், எஸ். சுப்பையா முதலியார், பி.ஆவுடையப்ப பிள்ளை,

தமிழ் ஆசிரியர் ஈஸ்வர மூர்த்தியா பிள்ளை முதலியோர் ஆவர். 1928ஆம் வருடத்திற்கு பின் டி.கே.சியுடன் வட்டத்தொட்டி சென்னைக்குச் சென்றுவிட்டது. 1936ஆம் ஆண்டிலிருந்து 1938ஆம் ஆண்டு முடிய பழைய வண்ணாரப்பேட்டை வீட்டுக்கு வட்டத்தொட்டி மறு வீடு வந்துவிட்டது. இந்த காலத்தில்தான், பேராசிரியர். அ.சினிவாசராாகவன், ஆ.முத்து சிவன், தொ.மு.பாஸ்கரத்தொண்டைமான், எஸ்.மகராஜன், சோமு, சுந்தா, இன்ஸ்பெக்டர் முத்தையாபிள்ளை முதலியோர் வட்டத்தொட்டி அன்பர்களாய் இருந்து டி.கே.சியிடம் தமிழ்ப் பாடல்களைக் கேட்டு ஆனந்தத்தில் திளைத்தார்கள்.

பல புலவர் பெருமக்களும், தமிழ்ப் பேராசிரியர்களும், தமிழ் காவலர்களும் டி.கே.சியின் வட்டத் தொட்டியில் அவ்வப்போது கலந்து கொள்வார்கள். இதில் என் தந்தை டி.டி.திருமலையும் ஒருவர் எனக்கூறிக் கொள்வதில் மகிழ்கின்றேன். அவர், கம்பஇராமயணத்தில் பலப் போலிப் பாடல்களும், செருகு கவிகளும் விரவிப் படலம் படலாமகக் கிடக்கின்றன. அது எவ்வாறு என்பதையும், உண்மையில் கவியை வாய்மொழியாகச் சொல்லச் சொல்ல அற்புதம் அற்புதம் எனப் பாராட்டிப் புகழ்ந்தனர். ஆனால் அது அச்சாகி வெளிவரும் போது ஏற்றுக் கொள்ள மனம் ஒப்பவில்லை. நம்மில் ஒருவனுக்குப் பெயர் வருவதா? எனப் பொறாமை வந்துவிட்டது. எப்படிக் கம்பனைத் தொடலாம்? என வீறு கொண்டு வசைபாடினர். கம்பனைக் கெடுத்தவர் டி.கே.சி? என்று சொல்லத் தொடங்கினர். ஆனால் ஒருவராலும் இவர் 'கவி' என்று சொல்லும் பாடலை எதிர்க்கவில்லை. "இல்லை தவறு" என்று சுட்டிக் காட்டவும் இல்லை.

இதே திருத்தத்தை நூறு வருடங்களுக்கு முன்போ, நூற்றைம்பது வருடங்களுக்கு முன்போ ஒருவர் செய்துவிட்டு மறைந்திருந்தால், அவரை "ஆகா,ஓகோ" என்று போற்றுவார்கள். அவருக்குக் கோயில் கட்டியே கும்பிடுவார்கள். இல்லை ஒரு அமெரிக்கரோ, பிரெஞ்சுக்காரரோ, 'கவிதையில் போலி' என்று எடுத்துக்காட்டி இருந்தால் விழுந்து விழுந்து பாராட்டி இருப்பார்கள். இதைப்படித்து ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி டாக்டர் பட்டம் வாங்கப் போட்டி போட்டு வருவார்கள். ஆனால் டி.கே.சி. உயிரோடு இருந்தார். இது முதல் குற்றம். அத்துடன் தங்களோடு இருந்தார், தங்களில் ஒருவராக இருந்தார். இது இரண்டாவது குற்றம்.

தங்களில் ஒருவராய், தங்களோடு வாழ்கிற ஒருவர், தாங்கள் செய்ய முடியாத காரியத்தைச் செய்தால் அதை உலகத்தால் தாங்க முடியாது. பொறாமை என்பது அப்படி உடன்பிறந்து கொல்லும் நோய். இப்படி எல்லாம் திட்டிய பேர்வழிகளுடன் தமிழ்மேல் நம்பிக்கை இல்லாதவர்களும் சேர்ந்து கொண்டார்கள். கம்பராமாயணத்தைத் தீயிட்டு பொசுக்கவேண்டும் என்கிற கட்சியோடு சேர்ந்தவர்களும் ஒட்டிக்கொண்டார்கள். கம்பரையோ தமிழ்ப் பாடல்களையோ பார்த்து அறியாத பேர்வழிகளும் சேர்ந்து கொண்டார்கள்.

பொறாமைக்காரர்கள் பட்டாளம் பட்டாளமாய் அணிவகுத்து எதிர்த்து நின்றபோதும் டி.கே.சி. கலங்கவில்லை. கலங்காதது மட்டும் அல்ல, கடுகளவுகூட வருத்தப்படவில்லை அவர். அவ்கள்மேல் இரக்கப்பட்டாரே தவிர கோப்படவில்லை. காலப்போக்கில் திருந்துவார்கள் என்று நம்பினார். "உண்மைதான், இன்றில்லாவிட்டாலும் நாளைக்கேனும் எழுந்து நிற்கும். நிரந்தரமாக நிலைத்து நிற்கும். பொய் அப்படி நிற்கமுடியாது. ஆரவாரத்தோடு தடபுடல் பண்ணும். அட்டகாசம் புரியும். பிறகு இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும்" என்று நம்பினார்.

தம்மைக் கன்னாபின்னா என்று திட்டிக் கொக்கரித்த பொறாமைக்காரர்பற்றி சிரித்துக்கொண்டே, டி.கே.சி. சொல்வார்; "பொறாமை என்பது அநாதியான ஒரு தத்தவம். எது பற்றியும் அது எழுந்து நிற்கும். என் வீட்டில் ஒரு சிந்திப் பசு இருக்கிறது. அது வேளாவேளைக்கு நான்கு படி பால் கொடுக்கிறது என்பது அடுத்தவீட்டுக்காரருக்குத்தெரிந்தால்போதும். அவருக்கு என்மேல் மட்டும் அல்ல, பசு மேலேயே கோபம் வந்துவிடும். என்னுடைய தேகத்தை என்ன பிதுக்குப் பிதுக்கினாலும் அரைக்கால் படி பால்கூட வரமாட்டேன் என்கிறது! இந்தப் பசு எப்படி நான்கு பக்கா பால் கறக்கலாம்? என்று பகையை உண்டாக்கிவிடும் பொறாமை". மேலும் சொல்லுவார்கள், "பொறாமைதான் எல்லாத் தீமைகளுக்கும் மூலம். அதுதான் ஆணவத்தின் உருவம். அது எல்லா இடமும் விரிந்து பரந்து கிடக்கிறது. அந்த நூலாம்படையை அடித்துத் துப்புரவு பண்ணுவதற்கு வானளாவிய ஒட்டடைக்கம்பு நம்மிடம் இருக்கவா செய்கிறது? எண் சாண் உடம்பிற்குள்தானே நம்மைவைத்து ஆட்டுகிறார் கடவுள்? நாம் என்ன செய்யமுடியும் அதற்கு?" என்பார்கள்.

(இரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார் வித்வான் ல.சண்முகசுந்தரம், சாகித்திய அகாதெமி வெளியீடு 1987

முதற்பதிப்பு பக்கம் 108, 109)

இந்நிலையில் டி.கே.சியிடம், மிகவும் அன்பும் பிரியமும் கொண்ட ராஜாஜி, கல்கி, கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் போன்றவர்கள் இந்தப் பொறாமைக் கூட்டத்திலிருந்து விலகியிருக்க ஒரு யோசனைக் கூறினர். அதாவது "கம்பர் பாடல்களில் சுவைமிக்க பாடல்களைத் தேர்ந்தெடுத்து தொகுத்து வெளியிட இருக்கின்றேன்" என்று ஒரு அறிக்கை வெளியிடுங்கள் என்று கூறினார்கள்.

ராஜாஜி போன்றவர்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கிறது என்று டி.கே.சி. பதில் கூறினார். மேலும், ஒரு உண்மையைச் சொல்கிற பொழுது எதிர்ப்பு ஏற்படும், தொல்லைகள் நேரும், ஆபத்து வரும். இவையெல்லாம் நிகழாவிட்டால் உண்மைக்கு என்ன மரியாதை? அதற்காக உண்மையிடம் பேரம் பேசலாமா? அது பெரிய பாவமாகிவிடும் என்று கூறி மறுத்துவிட்டார். மேலும், தேர்ந்தெடுக்கப்பட்ட கவி இவையெனக் கூறினால், தெளிவு செய்யப்படாத பாடல்கள் (செருகு கவிகள் உட்பட) கம்பர் பாடிய பாடல்கள் என்று நாம் கூறுவது போல்தானே அமையும். உண்மைக்குப் புறம்பாகப் போய்விடாதா? என்று கேட்டதோடு நிற்காது, ஆனந்தவிகடன் போன்ற பத்திரிகைகளில் "கம்பர் கவிக்கு வந்தவினை, செருகு கவிகளின் கொடுமை" என்று கட்டுரைகள் எழுதி அவற்றை உறுதி செய்துவிட்டார்கள் டி.கே.சி.

போலிப் பாடல், செருகு கவி என்பனவற்றைக் கண்டு பிடித்தவர்கள் டி.கே.சிதான் அவர்கள் தான் இந்தச் சொல் தொடர்களை உண்டாக்கினார்கள்.

"போலிப் பாடல் என்பது தரும் பொருள் வேறு, செருகு கவி என்பது தரும் பொருள் வேறு.

உண்மைக் கவியை அனுபவித்து ஒரு மயக்கத்தில் ஒரு கிறுக்கில் பாடிய பாட்டு போலிப் பாட்டு. அப்படிப் பாடிய பாட்டை தக்க இடம் பார்த்து செருகிவைத்துவிடுகிறார் ஒருவர். அந்த போலிப் பாடலுக்குச் செருகு கவி என்று பெயர்.

உண்மையில் இருந்து உண்டாக வேண்டும் சொல். உணர்ச்சியில் இருந்து உண்டாக வேண்டும். சொல் அப்பொழுத தான் அந்தச் சொல்லுக்கு உயிர் இருக்கும்.

டி.கே.சியின் லட்சியம், புரட்சி, தமிழுக்கும், தமிழ்ப் பண்பாட்டுக்கும் ஆற்றிய சேவை எல்லாம் கம்பர் முதலிய கவிஞர்களிடம் அவர்கள் வைத்திருந்த பக்தியில் இருக்கிறது.

போலிப் பாடல்கள் இவை என்று கண்டுபிடித்த ஞானத்தில் இருக்கிறது. செருகு கவிகளைக் களைந்து எறிந்ததிலும், பிழைகளைத் திருத்தியதாலும் தமிழ்ப் புலவர் அணி திரண்டு எதிர்த்ததைக் கலங்காமல் சமாளித்த வீரத்தில் இருக்கிறது."

(இரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார் வித்வான் ல.சண்முகசுந்தரம், சாகித்திய அகாதெமி வெளியீடு 1987 முதற்பதிப்பு பக்கம் 112)

# வகித்த பதவிகளின் பண்பும் பயனும்
# சட்டசபையில் தமிழ்முழக்கம்

திருநெல்வேலியைச் சார்ந்த திரு.குமாரசாமி ரெட்டியார் அவர்கள் நெல்லை மாவட்டக் கழகத்தலைவராகவும், சென்னை மாகாண கல்வி மந்திரியாகவும் பலகாலம் தொடர்ந்து நாட்டிற்கு நற்பணியாற்றினார். அவர் டி.கே.சி. அவர்களின் அருமை நண்பர் ஆவார். 1926ஆம் ஆண்டு ரெட்டியாரின் விருப்பத்தினால் அவரும், டி.கே.சியும் மேல்சபைத் (வி.லி.சி) தேர்தலுக்காகப் போட்டியிட்டனர். இவர்கள் இருவருமே இணைந்தே போய் மக்களிடம் வாக்குகள் பெற சென்றனர். டி.கே.சி. கம்பராமாயணத்துடன் தான் சென்றார்.

மக்களிடம் டி.கே.சி. கம்பரின் அருமைகளைப் பற்றிப் பேசினார். ரெட்டியார் அவர்கள்தான் மக்களிடம் இனிமையாகப் பேசி அவர்களின் ஆதரவைத் திரட்டினார். இருவருமே மேல்சபை அங்கத்தினராக வெற்றி பெற்றனர். எனவே 1930வரை அடிக்கடி சென்னை வரும் வாய்ப்பு இருந்து கொண்டே இருந்தது. அப்போது காஸ்மாபாலிட்டன் கிளப்பில் தங்குவார்கள். இரயில் பயணத்திலும் கம்பராமாயணம் தான். காஸ்மாபாலிட்டன் கிளப்பிலும் கம்பராமாயணம் தான். சட்டசபையிலும் கம்பராமாயணம் தான். திருநெல்வேலி வட்டத்தொட்டி சென்னைக்கு வந்துவிட்டது. அப்போது திருவாளர் வி.வி. சீனிவாச ஐயங்கார் அவர்கள் தலைசிறந்த வழக்கறிஞராக விளங்கினார்கள். அவர்களுடைய மாளிகைக்கு கவிஞர்களும் வித்வான்களும் வந்த வண்ணம் இருப்பர். அவர்களை மதித்து உபசரிப்பார். வழக்கறிஞரும் சிறந்த கலாரசிகர். அவர் டி.கே. சியைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன் தமது மாளிகையான லட்சுமி விலாசத்திற்கு அழைத்து உபசரித்தார். கம்பர் பாடல்களைக் கேட்டு இன்புற்றார். இவ்வானந்தத்தைப் பலரும்

பகிர்ந்து கொண்டு இன்புற விரும்பினார். அதற்காக தன் மாளிகையில் தினந்தோறும் கம்பராமாயணம் பற்றி கூறும்படிக் கேட்டுக் கொண்டார். சென்னை மாநகரில் உள்ள சிறப்பு மிக்கச் சான்றோர்கள் பலர், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், உயர் அதிகாரிகள், டாக்டர்கள், பேராசிரியர்கள், பத்திரிகையாளர்கள் எல்லோரையும் தம்மாளிகைக்கு வரவழைத்து டி.கே.சியின் தெளிவுரையைக் கேட்டு இன்புறுமாறு செய்தார் திரு. சீனிவாச அய்யங்கார் அவர்கள்.

இது மாதக்கணக்கில் நடந்த நிகழ்வாகும். டி.கே.சியின் வாழ்வில் உன்னதமான நிகழ்வாகும். டி.கே.சியின் புகழ் பரவியது. சென்னையில் தமிழ் ரசிகர்கள், அன்பர்கள் திரண்டு விட்டார்கள். இவ்வளவும் வி.வி.சீனிவாச ஐய்யங்காரின் செயல்தான். "சென்னை மாநகரந்தான் தமிழ்ப் பயிர் வளர்வதற்கு ஏற்ற உரக்கால் நன்செய்" என்று டி.கே.சி. நம்பினார்கள்.

தமிழ் ஒன்றுக்கும் உதவாத மொழி என்று அதைத் தீண்டப்படாத ஒன்றாகப் பார்த்திருந்த நேரம்; ஆங்கில மோகம் தமிழின் எழில் காணாது மயக்கிய நேரம்; இந்த மயக்கத்தையும் அறியாமையையும் டி.கே.சி. என்னும் இரசனை அலைகள், வங்கத்தின் அலைகளாய் வந்து வந்து கரைமோதி, உடைத்து தகர்த்து எறிந்தன. தடையகன்றதும் அறிஞர்கள் தமிழின் ஆனந்த வெள்ளத்தில் அப்படியே ஆழ்ந்து திளைத்து தங்களையே மறந்து போனார்கள். டி.கே.சியெனும் உண்மையான ஆனந்த அலையைக் கொணர்ந்தது திரு.வி.வி.சீனிவாச ஐய்யங்கார் அவர்கள்தான். அவர் உயர் நீதிமன்ற நீதிபதியாகி சீரும் சிறப்புமாய் பணியாற்றினார். பின் ஓய்வு பெற்ற பின் வழக்கறிஞராய்ப் பணிபுரிந்தார்கள். பின்னும் அவர் டி.கே.சியை மறக்கவில்லை. டி.கே.சியும் அவர்களை மறக்கவில்லை.

டி.கே.சி. அவர்கள் செருகுகவிகளையெல்லாம் நீக்கி, பிழை திருத்தி முதல்முதல் வெளியிட்ட கம்பராமாயணத்தை, திரு. வி.வி. சீனிவாச ஐய்யங்கார் அவர்களுக்கு, "கம்பருடைய உள்ளத்தில் உல்லாசமாய்க் களித்துத் திரியும் ஸ்ரீமான் வி.வி.சீனிவாச ஐய்யங்கார் அவர்களுக்குச் சமர்ப்பணம்" என்று குறிப்பிட்டு சமர்ப்பித்தார்கள்.

# அறநிலையப் பாதுகாப்பாளர்

சென்னை மாவட்ட இந்து அறநிலையப் பாதுகாப்புக் கமிஷனர் பதவியை, 1930ஆம் ஆண்டு முதல் 1935ஆம் ஆண்டு முடிய ஏற்றுக்கொண்டு, தமிழ், கவி, கலை, இவற்றைக் கூறுவதோடு, கோயில்களின் பெருமைகளைக் கூறுவதும் அவரது பணியாக இருந்தது. அப்பணிக்காலத்தில் தமிழ்நாடு முழுவதும் உள்ள கோயில்களுக்கு நிர்வாகத் தொடர்பாக டி.கே.சி. அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். கோயில் நிர்வாகிகளிலிருந்து அங்குள்ள கோயிலின் ஒவ்வொரு வேலைக்காரர்களையும் வரவழைத்தார். அவர்களுக்கு, கோயில் சிற்பங்களையும், சித்திரங்களையும் விளக்கி மிகவும் கவனமாக அவைகளைப் பாதுகாத்தலின் அவசியத்தையும் எடுத்துரைத்தார். கோயில்களால் வளர்க்கப்பட்டு வரும் திருவிழாக்கள், திருமுறைப்பாராயணம், மேளம், தேர், முதலியவற்றின் உண்மையான இயல்பையும், அது பயக்கும் சமுதாய ஆனந்தத்தையும் விளக்கி, அது தடைபடாது தொடர்ந்து நடத்தப்பட வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தினார். கோயில் நிர்வாகமுறைகளை அறிந்து அதன் முன்னேற்றத்திற்குரிய வழிமுறைகளையும், சில திருத்தங்களையும் எடுத்துரைத்தார். கோயில் நிர்வாகம் தொடர்பான சுற்றுப்பயணங்களின் போது, அவர்களுக்குப் பாராட்டுக்கூட்டங்கள் நடைபெறும். அவற்றில் பலப் பெரிய மனிதர்கள் கலந்து கொள்வார்கள். டி.கே.சி. அவர்கள் தமிழ் மொழி வளத்தையும், தமிழ்க் கவியின் அருமைகளையும் தமிழ் நாட்டுக் கலைகளின் ஈடு இணையில்லாச் சிறப்புகளையும் நயமாகத் தமிழில் பேசி, எல்லோரையும் வியப்பில் ஆழ்த்திவிடுவார்.

கோயில்களில் மகேஸ்வர் பூஜையை நடத்தி, அனைவரையும் சாப்பாட்டிற்கு வரவழைத்துத் தானும் அவர்களுடன் அமர்ந்து உணவு அருந்துவார்கள். இறைவன் முன் தோட்டி முதல் தொண்டைமான் வரை உபசரித்து ஒன்றுபோல் நடத்திய டி.கே.

சியின் உள்ளப் பண்பாட்டை எல்லோரும் சொல்லிச் சொல்லி ஆனந்திப்பார்கள். கோயிலில் உள்ள பணியாளர்கள் நன்கு சாப்பிட வேண்டும் என நினைப்பார்கள். நன்கு உண்டால் தான் இறைவனுக்குத் தண்ணீர் சுமக்க உடலில் வலுவிருக்கும். இறைவனை சுமக்கும் சப்பரத்தை பந்தாடியபடி தோளுக்குத்தோள் மாற்றி இறைவனை ஆனந்தமாக எழுந்தருளச் செய்ய முடியும் என்பது டி.கே.சி அவர்களின் கருத்து. அதை அவர்கள் அடிக்கடி வலியுறுத்தியும் வருவார்கள். மலையாளம், கர்நாடகம் முதலிய இடங்களுக்குச் சென்று, நம் தமிழ்க் கவியின் செல்வாக்கையும், பண்பாட்டையும் அறிந்து வந்தார். கோயில்கள் மூலம் தான் இசை, நடனம், கலை, பண்பாடு இவைகளைத் தமிழ் மக்கள் நெடுங்காலமாக விடாமல் பாதுகாத்து வளர்த்து வந்திருப்பதை அறிந்ததால், தமிழ் நாட்டின் பல்கலைக் கழகங்களே நம்முடைய கோயில்கள் தான் என்று டி.கே.சியால் தெளிவாகக் கூறமுடிந்தது.

# கலைத்தொண்டு

நம் தமிழ்நாட்டுக் கோயில்களிலும் கோபுரங்களிலும் உள்ள எண்ணற்ற சிற்பங்களும், சித்திரங்களும் பார்க்கிறவர்களுக்கு அதுவும், இசையகமாகவும், காவியமாகவும் சமய ஞானபீடமாகவும் இருந்தது போல், நடனத்திற்கும் இவை அரங்கங்களாகத் திகழ்ந்தன. இதை உணர்ந்த நம் முன்னோர்கள் பரதநாட்டியத்தின் மேன்மையையுணர்ந்து, கோயில்களை நடன அரங்கமாகவும், அவைகளுக்கென்று மானியமும் அளித்து பரதக் கலையைப் போற்றிப் பாதுகாத்து வந்தனர். கல்யாண வீடுகளிலும் பரதநாட்டியக் கச்சேரி வைத்து மக்கள் ஆதரித்து வந்தனர். பரதநாட்டியம் மக்களின்பால் பக்தியின் பரவசத்தையும், கலையுணர்வையும் ஒருங்கே கொண்டு தெய்வீகத்தன்மை கொண்டு மிளிர்ந்ததை, காலத்தின் கோலத்தால் அதன் ஒளி மங்கத் தொடங்கி இருந்த காலகட்டம் அது. இதைக் கண்ட டி.கே.சி அவர்களின் மனம் பதைத்தது. அவர்கள் தன் இளமை முதலேயே பரதநாட்டியத்தின் புனிதத்தை உணர்ந்தவர். அக்கலையின் அழகை அனுபவித்தவர். அக்கலையை மீண்டும் புத்துணர்ச்சியோடு தமிழ்நாட்டில் தோன்றும்படி செய்தார். நடனத்திற்குரிய பதங்களை, பாடுகிறர்களிடம் கேட்டு கேட்டு சேகரித்தார்கள். அவர் தினமும் காலைதோறும் குழந்தைகளிடம் பரதநாட்டியத்தைக் கற்றுக் கொண்டார். ஆடுவதற்காக அல்ல. அதன் அற்புதமான தத்துவங்களையும் சக்திகளையும் அறிந்து கொள்வதற்காகத்தான், நம்முடைய நடனம் போல் உண்மைக்கு விளக்கம் கொடுக்கக்கூடிய நடனம் உலகத்திலேயே இல்லை. வேறு கலை இல்லையோ என்றுகூடச் சொல்லத் தோன்றும். அனேகமாக உண்மையும் அது தான் என்பதில் அவர் உறுதியாக இருந்தார். இக்கலை வளர இவரது அறநிலையப் பாதுகாப்பு கமிஷனர் பதவியும் உதவியது. அக்காலத்தில், வாரத்தில் ஒரு முறை, அல்லது இருவாரத்திற்கு ஒருமுறையேனும், திருமதி

பாலசரஸ்வதியைத் தம் வீட்டிற்கு அழைத்து வந்து, தம்முடைய நண்பர்களையும் அவர்களது குடும்பத்தாரையும் அழைத்து, அவரது தெய்வீகத்தன்மையான நடனத்தை ஆடச்சொல்லிக் காணவைத்தார். திருமதி. பாலசரஸ்வதியின் இணையில்லா பரதநாட்டியம் தமிழ்நாட்டிற்கு இப்படித்தான் அறிமுகமாகியது. அறிமுகப்படுத்தியது நமது டி.கே.சி. அவர்கள்தான்.

கலையோ, பண்பாடோ அணு அளவும் இல்லாத ஆங்கில நடனத்தில் கற்றமக்களே மயங்கியிருந்தபோது,பரதநாட்டியத்திற்கு பலப்பிரமுகர்களை தமிழ்நடனத்தில் ஆசையும் பக்தியும் கொண்டு அனுபவிக்கச் செய்து விட்டார் டி.கே.சி. ஒரு நாள் டி.கே.சி. வீட்டில் திருமதி. பாலசரஸ்வதி அவர்களின் நாட்டியம் நடந்து கொண்டிருந்தது. அப்போது ஆந்திரப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த டாக்டர் சி.ஆர். ரெட்டி ஒரு நாள் தற்செயலாக வந்தார். அமர்ந்தார். கண்டார். நடனம் முடியும் வரை இருந்துக் கண்டு களித்தார். கலையின் அனுபவம் அவரை அப்படியே அமரச்செய்துவிட்டது. “ஐயா! இம்மாதிரி நிகழ்ச்சி நடக்கும் போது சொல்லி அனுப்புங்கள். தவறாது வர விரும்புகின்றேன்” என்று டி.கே.சியிடம் கூறிவிட்டு நன்றியோடு விடைபெற்றார். அத்தகைய அனுபவம் அவர் பெற்றார். டி.கே.சியின் உள்ளம் தாம் பெற்ற இன்பம், ஆனந்தம் அனைவரும் பெற வேண்டும் என்று நினைப்பவரல்லவா, ஒரு இனத்தாருக்கு என்று வைத்து கலையை ஒதுக்கிய காலம் கழன்று ஓடியேவிட்டது. கலையின் உண்மை உருவமும், ஆற்றலும் வெளிவந்து விட்டது. இனி அவற்றை யாராலும் கட்டிப் போட முடியாது. டி.கே.சி. அதற்குக் காரணமாகி விட்டார். அவருக்கு அது கடன்பட்டதுதானே.

## எப்பாரும் போற்றும் இசைத்தமிழ்ச் செல்வா! என் அப்பா அழகிய செல்லையா!

டி.கே.சி. அவர்களுக்கும் பிச்சம்மாள் அண்ணிக்கும் அவர்களின் அன்பின் கனியாய் விளைந்தவர் செல்லையா என்னும் தீத்தாரப்பன். 1909 ஆம் வருடம் டிசம்பர் மாதம் பிறந்த பிள்ளைக் கனி. தமிழுக்கும் கவிக்கும் உறைவிடமான ஆனந்தத்திற்கும், அன்பிற்கும் வந்துதித்த புத்திரச் செல்வம். பெற்றோருக்குத் தப்பாமல் பிறந்த பிள்ளை தீத்தாரப்பன். பள்ளிப்படிப்போடு தமிழ்க்கவிகளில் திளைத்து அனுபவித்து, அதைத் தன் நண்பர்களுக்கும் அளிக்கும் மனப்பாங்கும், திறனும் உள்ளவராய் விளங்கினார். இது இயல்பாக தீத்தாரப்பனிடம் வந்து அமர்ந்து விட்டது. பள்ளிப் படிப்பும் கல்லூரிப்படிப்பும் இனிதாக முடிவடைந்தது. தான் பயின்ற பல்கலைக்கழகத்தாரிடம் “கலைச் செல்வன்“ என்னும் பட்டத்தையும் பெற்றுவிட்டார் என்றால் இனிமைதானே.

இளமையிலேயே பெற்றோர் மூலமாகத் தமிழ்ப் பண்பாட்டையும், தமிழ்மணத்தையும் பருகியவர், அம் மணம் கமழக் கமழச் சிறுகதைகள் பல எழுதி வெளியிட்டார். அவரது கதைகளின் படைப்பு இயல்பாகவும், சரளமான தமிழ் நடை கொண்டு, அதன் ஓட்டத்திலேயே படிப்பவர்களைப் பயனளிக்க வைத்திருக்கின்றது. கதைகளைப் போலவே கவிதைகளும் சரளமாகப் பொங்கி வந்திருக்கின்றன. இலக்கியம், கலை, பண்பாடு பற்றிய உன்னதமானக் கருத்துக்களுடன் கூடியக் கட்டுரைகளையும் எழுதியிருக்கின்றார்.

கலைமகள் இதோடு விடவில்லை. தனது அருள் முழுவதையும் தீத்தாரப்பனுக்கு அள்ளி அள்ளி கொடுத்துவிட்டாள். அவரது இசை ஞானம் பெரிது பெரிது. அவரது தேனினும் இனிய குரலோ அரிது; சரியாக, இவரது முழுமையான பதங்களுடன் கூடிய தமிழ்க்கிர்த்தனைகளை டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் அவர்கள்

கேட்டுப் பரவசமாகி, இவரது இசைஞானத்தையும் குரல் வளத்தையும் மனதார வாயாரப் புகழ்ந்தார். தீத்தாரப்பனுக்குத் 'தேன்' என்றே பெயர் வைத்து விட்டார்கள். இவர் மட்டுமா? இசை தேவதைகளான வீணைதனம்மாள், ஜெயம்மாள், பாலசரஸ்வதி போன்றவர்கள் இவரது இசையை அனுபவித்து அனுபவித்து ஆனந்தித்து, இசைஞானத்தைக் கண்டும் பிரமித்துப் போனார்கள். மதுரை மணி அய்யர் போன்ற சங்கீத வித்வான்கள் தீத்தாரப்பனின் இசையுலக இணைபிரியா நண்பர்கள். புதுக்கோட்டை சப் ஜட்ஜ் மகராஜபிள்ளை, கல்கி ஆசிரியர், சோமசுந்தரம், ஸ்ரீமான் காந்திமதிநாதன், ஆ.முத்துசிவன் முதலிய நண்பர்கள் தீத்தாரப்பனுடைய இசை ஞானத்தை நினைத்து நினைத்து குழைந்து போவார்கள்.

1931ஆம் ஆண்டு தீத்தாரப்பனுக்குத் திருமணம் நிச்சயமாயிற்று. சரஸ்வதிபாய் அவர்களின் நந்தனார் கதாகாலட்சேபத்தோடு அவரது திருமணம் கோலகலமாக நடந்தது. தீத்தாரப்பனின் அறிவுப்பொலிவையும், அன்பின் வெளிப்பாட்டையும், பண்பாட்டின் நலத்தையும் பார்த்தவர்கள் தந்தைக்கு மிஞ்சிய தனயன் எனப் பாராட்டினார்கள். காலனின் பார்வை மிகவும் தீர்க்கமாய் தீத்தாரப்பனின் மேல்பட்டுவிட்டது. அருமை மனைவியையும், மூன்று மகன்களையும், ஒரு மகளையும் விட்டுவிட்டு, பத்தாண்டு காலத்திலேயே இறைவனடி சேர்ந்தார்.

டி.கே.சியும் பிச்சம்மாள் அண்ணியும் எப்படிப்பட்ட நிலையை அனுபவித்திருப்பார்கள்? நடக்ககூடாத செயல் அல்லவா நடந்துவிட்டது? விதியின் விளையாட்டை என்னென்பது?

எப்பாரும் போற்றும்
    இசைத்தமிழ்ச் செல்வா! என்
அப்பா அழகிய செல் லையா - இப்பாரில்
    சிந்தை குளிரச் சிரித்தொளிரும் நின்முகத்தை
எந்தநாள் காண்பேன் இனி!
    கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

தேசிகவிநாயகம் பிள்ளைக்குக் கடிதம் எழுதினார் டி.கே.சி கடிதத்தை நீங்களே பாருங்கள்

எயரோ, மீனம்பாக்கம்,

250341

அருமை நண்பர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கு,

தங்கள் ஆர்வம் நிறைந்த கடிதம் கிடைத்தது. செல்லையாவிடம் தங்களுக்கு எவ்வளவோ பிரியம். தங்கள் கவியைக் கண்டவர்களில் அவன் ஒருவன். சதா மலரும் மாலையைப் படித்துக் கொண்டிருப்பான். அவன் மூலமாகத் தங்கள் கவிப் பண்பு உலகத்துக்கு வருங்காலத்தில் தெரிய வேண்டும். அப்படித் தங்களுக்குச் சேவை செய்யக்கூடியவன் போய்விட்டான். எல்லாம் கடவுள் செயல். நாம என்ன செய்யக் கிடக்கிறது. தங்கள் உள்ளத்தின் கனிவு வெண்பாவில் தெளிந்து கிடக்கிறது. தமிழுலகில் இந்த வெண்பா எழுத ஒருவர் தான். அது தாங்கள் தான் வேறு யாருக்கும் கவி என்பது என்னவோ ஒரு தமிழ்க்கவி உதயமாய் வருவதைப் பார்ப்பதில் அளவிறந்த ஆனந்தம். கவிக்கு உயிரையே கொடுக்கலாம் என்று சொல்வது நம்மவர் மரபு. தங்கள் கவி உயிரைக் கொடுத்து வந்த மாதிரியே இருக்கிறது.

“இசைத் தமிழ்ச் செல்வா” எவ்வளவு வாய்ப்பு! “என் அப்பா” எவ்வளவு கனிவோடு விளிக்கிறது. “அழகிய செல்” என்று நின்று மூன்றாவது சீரில், “ஐயா” என்று மோனையில் விழும்போது அருமைப் பாடெல்லாம் பிறந்து விடுகிறது. தமிழ் பாஷை தங்களுக்கு அருமையாய்த் துணைபுரிகிறது.'

டி.,கே.சி.யின் ஒரே புதல்வன் ஸ்ரீதெ.சி.தீத்தாரப்பன் (செல்லையா என்று செல்லப் பெயர்) மரணமடைந்த சமயம் தேவி எழுதியனுப்பிய பாடலே இங்கு குறிக்கப்படுகிறது. அது வருமாறு:

எப்பாரும் போற்றும் இசைத் தமிழ்ச் செல்வா என் அப்பா அழகிய செல்லையா - இப்பாரில் சிந்தை குளிரச் சிரித்தொளிரும் நின்முகத்தை

எந்தநாள்க் காண்பேன் இனி.

“keats சொன்னார் Truth is Beauty என்று, தங்கள் பாடல் அதற்குத் தக்க இலக்கியம் என்று எல்லாருக்கும் தெரிகிறது. கல்கி, ராஜாஜி வெளியில் இருந்தால் தங்கள் வெண்பாவை ரொம்ப அனுபவிப்பார்கள்.

ஆசிய ஜோதியில் தங்கள் கவியை (மகனை இழந்த தாய் வாசித்தேன். தாங்களும் தமிழுமாகச் சேர்ந்து எவ்வளவோ ஆறுதலைத் தருகிறீர்கள்.

உடல் நலத்துக்காக கன்யாகுமரியில் தங்குகிறதாகத் தெரிகிறது. சௌக்கியந்தானே?

தங்கள்,

டி.கே. சிதம்பரநாதன்.

# டி.கே.சி கண்ட கவி உருவம்

- கவிக்கு உயிர்
- டி.கே.சியும் செருகு கவிகளும்
- கம்ப இராமாயணத் திருத்தங்கள்
- மற்றப் பாடல்களில் திருத்தங்கள்
- சுவை அறி நிபுணர்
- டி.கே.சியும் தென்காசிச் சிற்பங்களும்
- டி.கே.சி.யும் நாட்டுப் பாடல்களும்

# டி.கே.சி. கண்ட கவி உருவம்

அன்று, நாற்பது கோடி ஜனங்கள் கொண்ட ஒரு சமுதாயம் புதிதாக வந்த ஒரு பாஷையின் மோகத்தினால் தடுமாறிக் கொண்டிருந்தது. ஆங்கில பாஷையை மோகிக்காது, அது ஒரு கருவிதான் எனக் கற்றிருந்தால் விஷயம் முக்கியமாகப்பட்டு, மேல்நாட்டில் கண்ட உண்மைகள் எல்லாம் நமக்கு எளிதில் கைவந்திருக்கும் என்பது ரசிகமணி டி.கே.சி. அவர்கள் கண்டறிந்த உண்மை.

ஆயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வந்த மரம் என்று மதிக்கிறோம் என்றால் அதற்கு உயிர் இருக்க வேண்டும். நிழல் தரு மரமாய் படர்ந்து விரிந்து இருக்க வேண்டும். ஆனால் பட்டுப்போன மரத்தைக் கொத்திக் கொண்டிருக்க இயலாது. மேலும் அதை வெட்டிச் சாய்த்து அதில் பிறிதொரு மரத்தை நட்டாலும் அங்கு தழைக்காது. நம்முடைய சமுதாய வாழ்க்கையிலே பழையன என்ற ஒரு காரணத்தினாலேயே வட்டம் போட்டு இடத்தை அடைத்துக் கொண்டிருக்கின்றன. சில துறைகளைப் பார்த்தால் ஒரே பட்டுப்போன மரங்கள் நிறைந்த அடர்ந்த காடாக இருக்கிறது என்கிறார் ரசிகமணி.

“நம்முடைய வாழ்க்கையையும் பண்பாட்டையும் அடிக்கடி ‘ஜடுதி’ பார்க்க வேண்டும். பழைய காரியங்கள் உயிரற்றவையாய் நின்று இடையூறு செய்கின்றனவா என்று பார்க்க வேண்டும். வேண்டாதவைகளைக் களைந்து எறியக் கூசக்கூடாது. அப்போதுதான் வாழ்க்கை வளம்படும்” என்று டி.கே.சி. அவர்கள் கூறுகிறார்கள் தம் இதயஒலி என்னும் நூலில். (பக்கம் 161&கவியும் உருவமும்)

நாற்பது ஐம்பது வருடங்களாகத்தான் இலக்கிய சம்பந்தமான வேண்டாத சில கொள்கைகள் புகுந்து கொண்டு நம்மையும் தமிழையும் கஷ்டப்படுத்திக் கொண்டிருக்கிறது. “எவ்வளவுக்கெவ்வளவு வார்த்தையும் இலக்கணமும்

வழக்கொழிந்திருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு உயர்ந்த இலக்கியம் என்று மதிப்பேறிவிட்டது. அப்பேர்ப்பட்ட நூல்களையோ பகுதிகளையோ பாடமாக வைத்து, வியாக்கியானம், விமரிசனம் எல்லாம் சொல்லிப் பிரமாதப்படுத்தி விடுகிறார்கள். பையன்கள் அப்பாவிகள், என்ன செய்வார்கள்! 'சங்கடப்படுத்துவதுதான் தமிழ்' என்று எண்ணி விடுகிறார்கள்" என்று அவர்களுக்காகக் கவலைப்படுகிறார் டி.கே.சி.

நூல்களை மதிப்பிடும்போது பழமை என்று சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. உருவம் என்று சொல்ல இடமில்லாதவைகளைத் தள்ளிவிட வேண்டும். பழைய நூல்கள் என்றாலும் கவிப்பண்பும் இதயப்பண்பும் இருந்தால்தான் ஒப்புக் கொள்ள வேண்டும் என்கிறார் டி.கே.சி. இலக்கியத்தை அணுகி, கவியை அனுபவித்து, கலையை ரசித்து, சிறந்த வாழ்க்கையை எப்படி வாழ்வது என்பதை நன்கு அறிந்தவர் டி.கே.சி.

கவி என்றால் உள்ளத்திலுள்ள வண்ணமயமான உணர்ச்சியினை வெளிப்படுத்த வேண்டும். கோபமோ, வியப்போ, ஹாஸ்யமோ, சோகமோ எதுவாயினும் உண்மை ஒளியோடு வெளியாக வேண்டும். அப்படி இல்லையென்றால் அது கவியல்ல. வெறும் வார்த்தைகளைக் கொண்டு யாத்த செய்யுள்தான். பண்டையக் காலத்தில் தமிழ்க் கவிஞர் இதில் அதிக அக்கறை கொண்டு விளங்கினர். அத்தகைய கவிகளால்தான் உண்மை கிடைக்கும். அந்த உண்மைதான் கவிக்கு உருவம் கொடுக்கும். இந்த உருவத்தைப் பற்றிப் பார்க்கலாம்.

வள்ளல் குமணன் வாழ்ந்த காலம். செல்வந்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரது செல்வம் வரும் விருந்தை உபசரித்து, அவர்கள் தேவையறிந்து உதவுவதும் ஆக பயன்பட்டுக் கொண்டிருந்தது. அவர்கள் வீட்டு அடுப்பு மிகவும் பெரியதாகவும் உயரமானதாகவும் கட்டப்பட்டிருந்தது. விறகு கட்டுக் கட்டாகப் போட்டு எரிப்பதால் நெருப்பும் மிகவும் பெரியதாக எரிந்து பார்க்கவே அழகாக இருக்கும். அந்த பரபரப்பும், விருந்து உபசரித்தலும், கலகலவெனப் பேச்சும், கும்மாளமும் மனசுக்கு உகந்ததாயிருக்கும். ஆனால் காலத்தின் மாற்றம். அந்த அடுப்பு எரிவது நின்று போனது. சமையலே நடப்பதில்லை. தரித்திரம் அதில் படர்ந்து வீட்டின் மோடு பிரிந்து கிடப்பதால் மழை அடுப்பிலேயே பெய்து விடும். கிடந்த சாம்பலில் உள்ள ஈரத்தால் குடை குடையாய் முளைத்துத் தரித்திரத்திற்குக் குடை பிடிக்கின்றன. இப்படிப்பட்ட நிலைமையில் மனையாள்

பட்டினியாகத்தானேக் கிடப்பாள். சதையெல்லாம் வற்றிப் போய் அவள் ஸ்தன்யத்தில் பால் ஊறுகிறதில்லை. துவாரமே (இல்லி) அடைபட்டுப் போய்விட்டதோ என்று சொல்லத் தோன்றுமாம். இப்படி நல்ல நிலையிலுள்ள ஒரு செல்வந்தர் விதியின் பிடியில் வறுமையுற்று, வள்ளல் குமணனிடம் தன்னிலையைக் கூறுவதாக அமைத்திருக்கின்றார், பிற்காலத்திலுள்ள ஒப்பிலாமணிப்புலவர். அவர் மனம் உருகி ஓடுகிறது. அவர் விஷயத்தைப் பூர்வமான செய்யுளான புறநானூறு 164ம் பாட்டிலிருந்து எடுத்துக் கொள்கிறார்.

“ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்பு பசி உழவாப்
பாஅல் இனிமையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தோறு, அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி
நீரோடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண் என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமணா”

நண்பர்களே! இந்தப்பாட்டை வைத்துக் கொண்டு நீங்கள் கஷ்டப்படாதீர்கள். வாசித்து அப்படியே விட்டு விடுங்கள். கவிக்கு வேண்டியது எளிமை. ஒப்பிலாமணிப் புலவர் இப்பாடலின் விஷயத்தை எடுத்துக் கொண்டு விடுகிறார். அதிலுள்ள சோகம் அவரை அப்படியேக் கவ்விக் கொள்கிறது. அது கவியாக வெளிவருகிறது. எப்படி என்று பார்ப்போம் நண்பர்களே! எவ்வளவு எளிமையாய் உண்மையான சோகம் வெளிப்படுகிறது பாருங்கள்.

“ஆடெரி படர்ந்த கோடுயர் அடுப்பில்
ஆம்பி பூப்பத் தேம்பு பசி யுழன்று
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை”

இப்படிப்பட்ட வற்றிய முலையைக் குழந்தை சுவைக்கிறதாம்.

“சுவைத்தொறும் சுவைத்தொறும் பால்காணாமல்
குழவி தாய்முகம் நோக்க, மனைவி
என்முகம் நோக்க, யானும்
நின்முகம் நோக்கி வந்தனன் குமணா!”

இந்தச் செய்யுளில் சோக பாவம் அப்படியே வந்து விடுகிறது. தமிழ்ப்பண்பு அப்படி என்கிறார் டி.கே.சி. நண்பர்களே! தமிழின் பாவமான தாளம் (ஆங்கிலத்தில் ரிதம் என்பார்களே) எல்லாம் அற்புதமாய் வந்து விளங்குகின்றன. தோழர்களே! பாடலைப் பாடப்பாட நமக்கு அப்படியே நம் உள்ளம் கனிந்து விடுகிறது பாருங்கள்! அதனுடன் நமக்கு ஒரு கவி அனுபவமும் கிடைத்து விடுகிறது பாருங்கள்.

ஆனால் புறநானூற்றுச் செய்யுளைத் தேவையில்லாத விஷயங்கள் வரவு அதனுடைய உருவத்தைக் குலைத்துவிட்டன. எளிமை அங்கு இல்லாது போயிற்று. அடைகளை அடுக்கி வைப்பதால், கவியின் உண்மையான உள்ளக்கிடை மயங்கிப் போய் விட்டது. கவி ரஸம் இல்லை என்றாகி விட்டது.

ஒப்பிலாமணிப் புலவரின் சோகபாவம் அக்கவிக்கு ஒரு உருவம் தந்தது போல், ஒரு வீர பாவம் பகரும் 'பா' ஒன்றைப் பார்க்கலாம் நண்பர்களே!

வல்வில் ஓரி என்ற வீரனின் வேட்டைத் திறத்தைச் சொல்லும் பாடல் இது. புறநானூற்றில் 152வது பாடலாக வருகின்றது. வல்வில் ஓரி ஒருநாள் வேட்டைக்குச் செல்கின்றான். அப்போது அவன் விடுத்த அம்பானது வேகமாய்ச் சென்றது. முதலில் ஒரு யானையை கீழே வீழ்த்தியது. பின் ஒரு புலியை ரொம்பவும் புண்படுத்தியது; பிறகு புல்வாய் ஒன்றை உருட்டியது; அதன்பிறகு காட்டுப்பன்றி ஒன்றைச் செத்து விழச் செய்தது. கடைசியாக அங்கிருந்த கறையான் புற்றுக்குள் தங்கியிருந்த உடும்பு ஒன்றையும் கொன்றது. செய்யுளைப் பார்க்கலாம் வாருங்கள் நண்பர்களே!

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி உரற்றலைக்
கேழற் பன்றி வீழ, அயலது
ஆழற்புற்றத்(து) உடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வளம்படுத் திருந்தோன்" புறம் 152

இச்செய்யுளின் போக்கையும் விஷயத்தின் போக்கையும் கொண்டு கம்பர் பாடலைப் பார்க்கலாம் எனக் கூறி அழைக்கிறார் டி.கே.சி. அவர்கள்.

ஒரு முக்கியமான கட்டந்தான். ராமனை, சீதையின் தந்தையான ஜனகன் அரண்மனைக்கு அழைத்துப் போகிறார் விசுவாமித்ரர்;

அயோத்தியிலிருந்து புறப்பட்டு வந்ததாகவும், இடையில் நிகழ்ந்த ராமனுடைய வீரச்செயல் இது என்றும் ஜனகனிடம் சொல்லுகிறார்.

"வரும் வழியில் ஒரு குன்று, அந்தக் குன்றைப் பற்றியும் அதில் வாழும் அரக்கியான தாடகையைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது திடீரென்று குன்றின் உச்சியில் அரக்கி பயங்கரமான உருவத்தில் தோன்றினாள். குன்றின் சரிவில் இறங்கி நின்றுகொண்டு அவள் ஒரு சூலாயுதத்தை எடுத்து எங்கள்மேல் வேகமாக வீசினாள். ராமன் ஒரு அம்பை எய்து அந்தச் சூலாயுதத்தை சுக்குச் சுக்காகப் போகும்படி முறித்து எறிந்தான். பிறகு பெரிய அம்பு ஒன்றை எடுத்து எய்தான். அது என்ன செய்தது? கொல்லுலைபோல அக்கினியைக் கொப்புளித்துக் கொண்டிருந்த கண் கொண்ட தாடகையின் (உரம்) மார்பை உருவிப் போயிற்று!"

"இப்போது பாட்டைப் பார்க்கலாம். அலை அலையாக மோதிக் கொண்டிருக்கும் நீலக்கடல் போல் சக்தியும் அற்புதமும் வாய்ந்தவனாய் இருக்கிறான் ராமன். ஜனகனைப் பார்த்து விசுவாமித்திரர் பேசுகிற பேச்சு:

"அலையுருவக் கடல்உருவத்(து)
ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை
நீயுருவ நோக்கையா!
உலையுருவக் கனல்உமிழ்கட்
தாடகைதன் உரம் உருவி."

தாடகையின் மார்பை உருவிவிட்டு வேறு என்ன செய்தது அந்த அம்பு? அவளுக்குப் பின்னிருந்த மலையை உருவியது; பிறகு மலைக்குப் பின்பக்கத்தின் சரிவில் வளர்ந்து ஓங்கிநின்ற மரம் ஒன்றையும் உருவியது; தன் காரியங்களை இப்படியாக முடித்துக் கொண்டு அந்த அம்பு கடைசியில் மண்ணுக்குள் பாய்ந்தது. செய்யுளை முழுமையும் பார்ப்போம்:"

"அலையுருவக் கடல்உருவத்(து)
ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை
நீயுருவ நோக்கையா!

உலையுருவக் கனல்உமிழ்கட்
    தாடகைதன் உரம் உருவி,
மலையுருவி மரம்உருவி
    மண்உருவிற்(று) ஒருவாளி!"

"பாட்டைப் பாடும்போது மூன்றாவது அடியிலுள்ள 'உரம் உருவி' என்ற வார்த்தையோடு கொஞ்சம் நிற்க வேண்டும்; பிறகு 'மலையுருவி' என்று ஆரம்பித்துப் பாட்டை முடிக்க வேண்டும். அப்போது பாவதாளத்தின் (ரிதம்) வேகம் இன்னதென்று தெரியவரும். அம்பின் வேகமே செய்யுளில் உருவமாக உருவெடுக்கிறது.இதைத்தான் ஆங்கிலத்தில் 'பார்ம்' (திஷீக்ஷீனீ) உருவம் என்று சொல்லுவார்கள். இந்த உருவம் இருந்தால்தான் கவி. உருவம் என்பது, விஷயம், உணர்ச்சி (இங்கே வியப்பும் வீரமும் கலந்த உணர்ச்சி) சொல், தாளம் எல்லாம் சேர்ந்து பிறக்கிற ஒரு அற்புத தத்துவம். இதெல்லாம் கவியில் தெளிவாகத் தெரியக்கிடக்கிறது. புறநானூற்றுச் செய்யுளில் இல்லைதான். இரண்டையும் சில தடவையாவது ஆர அமரப் பாடிப் பார்த்தால் எளிதில் வித்தியாசம் தெரிந்து விடும்."

கவிக்கு, விஷயம் அல்ல, உருவமே பிரதானம். (இதய ஒலி கவியும் உருவமும் முதற்பதிப்பு 1941 2ஆம் பதிப்பு 1981 பக்கம் 165,166,167)

# கவிக்கு உயிர்

நளச் சக்கரவர்த்தி கதை மேடையில் நடந்து கொண்டு இருக்கின்றது. நாடக மேடையில் நிலவு எரிந்துக் கொண்டிருக்கிறது. நளனும் தமயந்தியும் நடுக்காட்டில் படுத்திருக்கின்றார்கள். தமயந்தி உறங்கிக் கொண்டிருக்கின்றாள். நளனுக்கு உறக்கம் வரவில்லை. இருவருமாகச் சேர்ந்து உடுத்திய உடையை இரண்டாகக் கிழிக்கிறான் நளன். ஒருபாதியைத் தான் எடுத்துக் கொண்டு போய் விடுகிறான். சிறிது நேரங்கழித்து தமயந்தி விழிக்கிறாள். பக்கத்தில் நளன் இல்லை. தன் உடையில் பாதியும் இல்லை. எழுந்திருந்து, நாலாபக்கமும் பார்க்கிறாள். தன் கண்களைக் கசக்கிக் கொண்டு, கூர்ந்து பார்க்கிறாள். 'நாயகா' என அலறுகிறாள். ஏதாவது சப்தம் வருகிறதா என நாலா பக்கத்திலும் நோக்குகிறாள். அவளது எதிரொலியைத் தவிர வேறெந்த சப்தமும் வரவில்லை. உடம்பு ஒரே நடுக்கமாய் நடுங்குகிறது. அங்கு ஒரு அனாதைப் பெண்ணைப் பார்க்கின்றோம். அது நாடகம்தான் என்று மறந்து போகிறோம். நாம் இறந்து போய் நாடகப்பாத்திரமாகி விடுகிறோம்.

நாடகக்கலையில் இருப்பது போலவே மற்ற எந்தக் கலையிலும் இது உண்மையாகிறது. உணர்ச்சி பாவத்துடன் கூடிய சித்திரத்தைப் பார்த்துக் கொண்டே யூகித்தால், நேரம் ஆக ஆக பாவம் ததும்பும். ஒவ்வொரு உறுப்புடன் நம் மனம் அதில் ஈடுபட்டுக் கரைந்து விடுகிறது. சங்கீதம் செய்யும் வேலையும் இதுதான். சங்கீதத்திலுள்ள உணர்ச்சி பாவத்தோடு மனம் ஒன்றி விடுகிறது. நம்முடைய வசத்தை விட்டு வேறு எங்கேயோ உள்ள உணர்ச்சிக்கு வசமாகி விடுகிறோம் நாம்.

"கவியிலும் (அதாவது உண்மை ததும்பும் உருவத்தோடு கூடிய கவியிலும்) ஈடுபட்டுவிட்டால் வார்த்தை, தாளம், தமிழ்ப்பண்பு இவைகளில் கரைந்து விடுகிறோம் நாம். பாஷைக்கு ஒரு மந்திர

சக்தியிருக்கிறதாகவே தெரிய வருகிறது. கவியிலுள்ள உணர்ச்சி வசமாய்ப் போய், வார்த்தை, தாளம், செய்யுள், கோப்பு இவைகளால் ஆகிய உருவமாகவே மாறி விடுகிறோம். இந்த நிலையில் நெடு நேரம் நம்மை நிறுத்தி விடுகிறது கவி &எண் சாண் உடம்புக்கும் நமக்கும் வெகுதூரமாய்ப் போய்விடுகிறது." - இவை டி.கே.சி. அவர்களின் அனுபவ வார்த்தைகள்.

இந்த உண்மையை உணர்ந்த ஒருவர். அவர் எவ்விதம் வென்றிடுகிறார் என்று பார்க்கலாம் நண்பர்களே! வாருங்கள்! கதை நடக்கும் இடம் காஞ்சிபுரம். இதை ஆளும் மன்னன் நந்திவர்மன் என்னும் பல்லவ மன்னன். கலைகளில் அவனுக்கிருந்த பிரியம் போல் யாருக்கும் இருந்ததில்லை. அவனைச் சுற்றி எப்போதும் கவிஞர் கூட்டம்தான். கவியென வந்துவிட்டால் ஊண், உறக்கம் கிடையாது. ஒரு நாளைக்கு ஒரு செய்யுளாவது அரங்கேறும். அருமையான ரத்தினம் கிடைத்தாற்போல் அனுபவிப்பார்கள். கூத்தாடுவார்கள். அப்படிப்பட்ட ஒரு நாளில் நந்திவர்மனின் தம்பி கவி பாடுவதில் வல்லவனானவன், தான் இயற்றியக் கலம்பகத்திலிருந்து ஒரு வெண்பாவைப் பாடுகிறான். வெண்பா முழுவதையும் கேட்டவுடன் தம்பியைப் பார்த்து அரசன் பின்வருமாறு கூறுகிறான்.

"அற்புதமாய் இருக்கிறது உன்பாட்டு. சரஸ்வதி கடாக்ஷத்தினால் நீ பாடி இருக்கின்றாய். என் உள்ளம் உன் பாட்டோடு ஒன்றி விட்டது. நூல் முழுவதையும் கேட்டாலொழிய அமைதியடையாது என் மனம். கலம்பகம் முழுவதையும் நான் கேட்க வேண்டும். அப்படிக் கேட்பதுதான் எனக்கு ஜென்ம சாபல்யம்" என்றான்.

அதற்குத் தம்பி "அரசே! என்னை மன்னித்து விடுங்கள். ஆயுதத்தால் உங்களைக் கொல்ல எத்தனித்தேன். இயலவில்லை. அதனால் அறம்பாடிக் காரியத்தைச் சாதிக்கலாம் என்று நூலை இயற்றினேன். தயவுசெய்து நூலை எரித்துவிட உத்தரவிடுங்கள்" என்றான்.

ஆனால் அரசனோ பிடிவாதமாய், 'செய்யுளை எரிக்கக்கூடாது. ஒரு செய்யுளிலேயே இவ்வளவு ஆனந்தம் என்றால் நூறு செய்யுளையும் கேட்டு விட்டால் உண்டாகும் ஆனந்தத்திற்கு அளவுண்டோ!" என்று தம்பியைப் பாடச் சொல்லிக் கேட்கிறார் அரசர்.

அவையோருக்கு அதிர்ச்சி. அறவாக்கு அமைந்த கவிகளைக் கேட்டு உயிர் துறக்க யாராவது சித்தமாயிருப்பார்களா?

தம்பியின் வேண்டுகோளுக்கிணங்க அரண்மனையிலிருந்து தொடங்கி 99 பந்தல்களையும், இறுதியாய் மயானத்தில் நூறாவது பந்தல் அமைத்து, சந்தனக் கட்டைகளை அமைத்து காஷ்டம் கட்டியாகிவிட்டது. தம்பிப் பாடப்பாட, அவன் ஒவ்வொரு பந்தல் வழியாக வர வேண்டும். ஒவ்வொரு பாடல் முடியவும் ஒவ்வொரு பந்தல் எரியும். அப்படியே நடந்தது. இறுதியாக காஷ்டத்தின் மேல் நந்திவர்மன் படுத்துக் கொண்டான்.

"வானுறு மதியை அடைந்ததுன் வதனம்"

என்று கடைசிப் பாடலைப் பாடத் தொடங்குகிறான் தம்பி. மேலேயுள்ளப் பந்தலிலும், கீழேயுள்ள காஷ்டத்திலும் அங்கொன்று இங்கொன்றாக நெருப்புச் சுடர் தென்படுகின்றன.

"வானுறு மதியை அடைந்ததுன் வதனம்,
வையகம் அடைந்ததுன் கீர்த்தி,
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்,
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்,
தேனுறு மலராள் அரியிடம் சேர்ந்தாள்,
செந்தழல் புகுந்ததுன் மேனி,
யானும் என் கவியும் எவ்விடம் புகுவேம்
எந்தையே நந்திநா யகனே".

என்று சோகமாய்ப் பாடி முடிக்கின்றான் தம்பி. பந்தலும் காஷ்டமும் நந்தி வர்மனும் ஒரே அக்னிப்பிழம்பாய்ப் போய் விடுகிறார்கள்.

கதை முடிகிறது. தம்பி, வாக்கு, பந்தல், பந்தல் எரிதல், ஆகிய எல்லாம் கற்பனைதான். ஆனால் நந்திவர்மன், கவிஞன், கவிதை, நாம் எல்லோரும் உண்மையானவைகள். ஒன்றோடு ஒன்று பின்னப்பட்டவையாகும். தொன்மையான தமிழ்ப்பண்பாடு கூடிய கவியைக் கேட்ட மாத்திரத்தில் நம்முடைய உணர்ச்சி தத்துவம் எங்கேயோ போய் விடுகிறது. கவிமயமாய்ப் போய் விடுகிறோம் நாம். கவி நம்மை உண்டு விடுகிறது.

# டி.கே.சியும் செருகுகவிகளும்

ஆங்கிலத்தில் இரண்டு எழுத்துப் பட்டம் வாங்கிவிட்டு, எனக்கு கிருக்கும், லத்தினும்தான் பழக்கம். தமிழில் பேச வராது என்று சிலிப்பித் திரிந்த காலம் அது. அக்காலத்தில் ஆங்கிலம் படித்த தமிழர், வழக்கறிஞர், சென்னை சட்டசபை அங்கத்தினர், இந்து அறநிலையப் பாதுகாப்பாளர் என சீரியப் பதவிகள் வகித்தும், தமிழை மறக்காது, அதை அநுபவித்துக் கொண்டிருந்தவர் டி.கே.சியாவார். வள்ளுவரும் கம்பரும் முத்தொள்ளாயிரமும் திருவாசகமும் இணைந்து கலந்து அவரை ஆனந்த உலகுக்கே அழைத்துச் சென்றுவிட்டன.

அவர் மலேரியா சுரத்தினால் அவதியுற்றபோது, உற்ற மருந்தாய் கம்பராமாயணம் அவருக்குக் கிடைத்தது என்று முன்பே கூறினேன் அல்லவா நண்பர்களே! அவர் முதலில் ஒரு படலத்தை எடுத்துப் படிக்கிறார். ஆஹா என்ன அருமையானக்கவி என்று "பேஷ்! பேஷ்" என்று குதூகலிக்கிறார். ஆனால் ஆஹா என்ன மட்டமான கவி வெறும் செய்யுளாக சிரிக்கின்றனவோ கதாபாத்திரத்தில் வளமையைக் குறைக்கின்றனவே" எனப் பதறிவிட்டார். சிந்திக்கிறார். நிச்சயமாக இப்படிப் பெருத்த வித்தியாசம் ஒரு கவிஞரால் தர இயலுமா எனச் சிந்தித்துப் பார்க்கிறார். துணிந்து இவற்றையெல்லாம் தள்ளி வைக்கிறார். எஞ்சியிருந்தக் கவிகளையெல்லாம் இணைத்து வைத்துப் பார்க்கிறார். ஆஹா பரவசமாகி விடுகிறார். அவை தரும் ஆனந்தம் இருக்கிறதே.

கதையின் கட்டுக்கோப்பு, பாட்டுக்களின் ஒழுங்கான ஜதி, பாவம் இவையெல்லாம் ஆகாயத்தை நோக்கி ஏறுவது மாதிரி இருக்கிறது. கம்பரது கவி ஆற்றல் அவரது மனதில் பட்டுவிட்டது. ஆகவே இதுபோல் பல படலங்களையும் தள்ளுவதைத் தள்ளி, கொள்ளுவதைக் கொண்டு படித்த போது, அவர் அனுபவித்ததைக் கேளுங்கள் நண்பர்களே!

“பொன்மயமானதோர் கோபுரத்தில் அனேக பாகங்கள் இடிந்து தகர்ந்த பாகங்களை ஏதோ ஒருவகைச் சாந்தினால் மறுபடியும் கட்ட சிலர் முயன்றிருக்கிறார்கள் என்றும், இன்னும் சிலர் புதிய புதிய சுவர்களையே எழுப்பிக் கோபுரத்தின் வன்மையான அழகையே கெடுக்கப் பார்த்திருக்கிறார்கள் என்றும் தெரிய வந்தது. காரணம் பல பாகங்கள் சிதைந்தும் விட்டுப் போனதுதான். அத்துடன் செருகி வைக்கப்பட்ட கவிகளுக்கும் குறைவில்லைதான். இப்படியாகயெல்லாம் கம்பரை இனங்கண்ட பிறகு, அவருடைய காவியத்தை நாம் கற்றோம் என்று சொல்ல முடியாது. அவரே தனித்த முறையில் தனித்த குரலோடு நம்மிடம் பேசுகிறார் என்ற உணர்ச்சி வந்தது” என்று இரசிகமணி தன் அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார்.

முப்பது முப்பத்தைந்து வருஷ அனுபவத்திற்குப் பின்தான் டி.கே.சி. அவர்கள் கம்பராமாயணத்தில் செருகுகவிகள் ஏராளமாய்க் கலந்து காணப்படுகின்றன என்பதைக் கூறினார். அவைகளைத் துணிவுடன் தன் கம்பராமாயணப் பதிப்பிலிருந்து நீக்கினார். அவரிடம் கல்கி, இராஜாஜி ஆகிய இருவரும் ‘தெரிந்தெடுக்கப்பட்ட கவிகள்’ என்று போடுங்கள் என்றனர். ஆனால் டி.கே.சியோ மறுத்துவிட்டார். அவ்வாறு செய்தால் எஞ்சிய கவிகள் கம்பன் கவிகள் என்றல்லவா பொருள்படும் என்று கூறிவிட்டார். கம்பரது இராமாயணத்தில் எப்படி செருகப்பட்டன? அவைகளை அறிவது எப்படி? என்றெல்லாம் எழுந்த கேள்விகளுக்கு டி.கே.சி. தம் கம்பராமாயணப் பதிப்பில் முகவுரையில் பதில் கூறுகிறார். நண்பர்களே! அதை நாம் பார்க்கலாம்.

இப்படியெல்லாம் அவர் கம்பனை அனுபவித்துப் படித்துத்தான், இன்று நம்மை எல்லாம் அவனுடைய கவிதையை அனுபவிக்கும்படி செய்கிறார். முப்பது முப்பத்தைந்து வருஷ அனுபவத்திற்குப் பின்புதானே அவர் கம்ப ராமாயணத்தில் செருகு கவிகள் ஏராளம் என்று கூறினார். அவைகளைத் துணிவுடனேயே அவருடைய கம்பராமாயணப் பதிப்பிலிருந்து நீக்கினார். கம்பரது ராமாயணத்தில் செருகு கவிகள் எப்படிச் செருகி வைக்கப்பட்டன? அவைகளை அறிவது எப்படி? என்றெல்லாம் எழும் கேள்விகளுக்கு டி.கே.சி. நல்ல பதில் சொல்கிறார். அவருடைய கம்பராமாயண முகவுரையிலே. அதையே கொஞ்சம் பார்க்கலாம்.

"கம்பருடைய கவிகளுக்குத் தனியான ஒரு சுவை உண்டு. செய்யுளினங்கள் பூர்வமானவைதான். ஆனால் இதய பாவத்தை உட்கொண்ட செய்யுள்கள் அடியெடுத்து வைக்கும்போது தனியான கதி நயங்களைக் காண்கிறோம். அவைகளின் பாவமும் வேகமும் எங்கேயோ இருந்து வந்த மாதிரி புத்தம் புதியவையாய் இருக்கும். ஒவ்வொரு செய்யுளிலும் ஒரு தனியான ரஸம். கவிக்கு ஏதோ நவரசம் என்கிறார்கள்; ஆனால் கம்பருடைய கவிகளைப் பார்க்கும்போது ஆயிரக்கணக்கான ரஸங்கள் உண்டென்று சொல்ல வேண்டியிருக்கிறது.

"இப்படித் தனித்த ரஸம் வாய்ந்த, உயிர்த் தத்துவம் வாய்ந்த கவிகளாய் இருப்பதாலேயே கம்பருடைய கவிகளை இனம் கண்டுகொள்ள முடிகிறது.

"கம்பராமாயணத்தில் காண்கிற மாதிரி வேறு எந்த நூலிலும் காணமுடியாத வஸ்து ஒன்று உண்டு. அதுதான் செருகு கவி. கம்பராமாயணப் புஸ்தகம் செருகு கவி மயம் என்று சொன்னால் குற்றமில்லை. எப்படிச் செருகு கவிகள் வந்து சேர்ந்தன என்பதைப் பார்க்கலாம்.

"கம்பர் பாடி கவிகள் அபூர்வமான பாவங்களை கொண்டவைகளாய் இருந்ததனால் படிப்பவர்களுடைய இதயத்தைப் பற்றிக் கொண்டன. சதாபாடிக்கொண்டே இருக்கும்படி தூண்டின. அதிலிருந்து ஒரு மயக்கம் உண்டாகி போலிச் செய்யுள்களையும் இயற்றும்படி சிலரைத் தூண்டி விட்டன. இப்படி இயற்றிய போலிச் செய்யுள்களைப் புஸ்தகத்திலே கட்டம் கட்டமாகப் பார்க்கலாம்.

"ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்.

"குடிகளைக் காப்பது பெரிய தர்மம் என்றே எண்ணுகிறான்; மிக்க சிரத்தையோடும் ஆர்வத்தோடும்தான் காத்து வந்ததாகவே சொல்கிறான். ஆனாலும் தனக்குக் கொஞ்சம் ஓய்வு வேண்டுமென்றும், ராமன் அந்த உயரிய தர்மத்தை நடத்த வேண்டுமென்றும் சொல்கிறான். ராஜ்ய பரிபாலனத்தை இகழ்வது என்று ஏற்பட்டுவிட்டால், ராமனை ஏற்றுக்கொள்ளும்படி பரிவுடன் சொல்லுகிற வார்த்தை பொருந்துமா? பொருந்தவே பொருந்தாது. போலிக்கவி ஒன்று வந்து, தசரதனுடைய இதமான, நளினமான பேச்சை எப்படிக் கெடுக்கிறதென்று பாருங்கள்.

கச்சையங் கடகரிக்
கழுத்தின் கண்ணுறப்

பிச்சமும் கவிகையும்
　　பெய்யும் இன்னிழல்
நிச்சயம் அன்றெனில்
　　நெடிது நான் உண்ட
எச்சிலை நுகர்வது
　　இன்பம் ஆகுமோ? - அயோ மந்திரப் படலம்

இது மாதிரிப் போலிக் கவிகளை எழுதிய ஆசாமி இந்தக் கட்டத்தில் ஏழோடு விட்டு விட்டார். எழுபது எழுநூறாகக் கயிறு விட்டிருக்கலாம். ஏதோ கருணையினால் அப்படிச் செய்யவில்லை.

செருகு கவி வந்து விழுவதற்கு இன்னொரு காரணம். அதுவும் விசித்திரமானதே. யோசித்துப் பார்க்கும்போது, எல்லோருக்கும் தெரிந்த கதையைக் கம்பர் ஏன்தான் கையாண்டார்ரோ என்று வருந்தவேண்டி யிருக்கிறது. ராமாயணக் கதையை, வால்மீகி ஒரு விதத்தில் நடத்தினார். வேறு பலரும் வேறு வேறுவிதமாக நடத்தினார்கள். இந்தக் கதைகளையெல்லாம் கேட்டுவந்த ஆசாமிகள் கம்பராமாயணத்தை வாசிக்க நேர்ந்தது. கம்பர் தம்முடைய பாத்திரங்களுக்கும் லட்சியங்களுக்கும் தக்கவாறாக, ஆங்காங்குக் கதையையும் போக்கையும் மாற்றியிருக்கிறார். அப்படி மாற்றியதின் காரணமாகவே பாத்திரங்களுக்குத் தனியான வேகமும், கட்டங்களுக்குத் தனியான தெளிவும் ஏற்படுகின்றன. இதையெல்லாம் கண்டாரா அந்த ஆசாமி? தம்முடைய ஏதோ கோணலான குறுகிய அளவுகோலைக் கொண்டு வந்து கம்பர் போட்ட பாதையில் வைத்தார். பொருந்தவில்லை. அப்படியே கட்டத்தை மாற்றி எதுகை மோனைகளோடு, செய்யுள்களாகக் கொட்டி நிரப்பிவிட்டார்.

“மிதிலைக் காட்சிப் படலத்தில், ராமன், லக்ஷ்மணன், விசுவாமித்திரர் மூவரும் ஜனகனது அரண்மனைக்குப் போகிறார்கள். அவர்களைச் சதானந்த முனிவர் வரவேற்கிறார். அவர்களும் உட்காருகிறார்கள். முதலில் ராமனைப் பற்றி விசுவாமித்திரர் புகழ்ந்து பேசி விடுகிறார். அப்பாவி சதானந்தர் பேச்சுக்கு விஷயம் அகப்படாமல் திண்டாடுகிறார். ராமனைப் பார்த்தே விசுவாமித்திரரைப் பற்றி (இத்தனை நாளும் உடன் வந்த விசுவாமித்திரரைப் பற்றி!) ஒரு புராணமே பாடித்தீர்த்து விடுகிறார். மிதிலைக்காட்சி 91 முதல் 137 வரையுள்ள புராணந்தான் அது. (பழைய பதிப்புகளின்படி) இந்த அருமையான கைங்கர்யத்தைச்

செய்தவர், கம்பருடைய உண்மையான பாட்டுக்கள் அடங்கிய எத்தனை ஓலைகளைக் கிழித்தெறிந்தாரோ சொல்ல முடியாது. நமக்கு வருத்தமெல்லாம், இப்படித் தொலைந்துபோன கவிகளைப் பற்றித்தான். போலிக் கவிகளையோ சுண்டிப்பார்த்து .மட்டம் என்று தள்ளி விடலாமே!

"செருகு கவிகள் வந்து புகுவதற்கு இன்னொரு காரணம்: கம்பரது காவியத்தை ஆயிரம் வருஷத்துக்கு முன் ஓலைச்சுவடிகளில் எழுதி வைத்தார்கள். சுவடிகளை வைத்த இடம், மண் தளம், மண் சுவர் கூரை மேடு இவைகளாலாகிய சாமானியக் கட்டிடங்கள்தான். மழைக்காலத்தில் மேலேயிருந்து ஒழுகும்; கீழேயிருந்து ஈரமும் கறையானும் ஏறும். இது காரணமாக, எத்தனையோ ஏடுகள் கெட்டுப்போயிருக்க வேண்டும்.

மேலும், சுவடிக்காக அவ்வப்போது சேர்த்த ஓலைகளில் சில, பதனுக்கு வராத குருத்தோலைகளாகவும் முற்றிய ஓலைகளாகவும் இருந்திருக்கக்கூடும். அந்த ஓலைகளெல்லாம் இருந்திருக்கக் கூடும். அந்த ஓலைகளெல்லாம் மக்கி உதிர்ந்து போயிருக்கலாம். இத்தகைய ஓலைகளின் காரணமாகவும் கறையான் ஈரம் இவைகளின் காரணமாகவும் எத்தனை எத்தனையோ கவிகளும், படலங்களுமே ஒழிந்துபோய்விட்டன. கம்பராமாயணத்தைப் பாடிப்பாடி, அதில் ஈடுபட்ட சிலர், தொலைந்து போனவைகளுக்குப் பதிலாக, செய்யுள்களை ஏதோ எழுதிச் சேர்த்தார்கள். இப்படிச் சேர்த்ததில் மனப்பாடமாயிருந்த சில செய்யுள்களை அங்கொன்று இங்கொன்றாக அப்படியே வைத்தும் இருக்கிறார்கள்.

எல்லாம் சேர்ந்து எப்படியோ கம்பரது உண்மையான பாடல்களைக் குறைத்துவிட்டன.

"இந்த விஷயங்களையெல்லாம் பிற்காலத்தவர் ஒருவர் கண்டு ஒரு கதை கற்பித்தார். அது தமிழ் நாடெங்கும் வழங்குகிற கதை.

"கம்பர் ஏதோ ஒதுங்கலான ஒரு குக்கிராமத்தில் ஒரு பிரபுவோடு தங்கியிருந்தார். மாலையில் ஒரு புலவர் கோயிலில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்யப் போவதாகவும் அதற்குப் போய் வரலாம் என்றும் கம்பரிடம் சொன்னார். கம்பரும் இசைந்தார். இருவருமாகப் போனார்கள். புலவர் வெகு தடபுடலாய்ப் பிரசங்கம் செய்தார். அநேக பாடல்களை அபாரமாக அனுபவித்துப் பாடினார். பிரசங்கம் முடிந்ததும், புலவருக்குக் கம்பரை அறிமுகப்படுத்தினார் பிரபு. புலவர் ரொம்ப

ரொம்ப சந்தோஷப் பட்டவராய்க் கம்பரைப் பார்த்து 'அடடா, தங்கள் கவிகள் அனைத்தும் அற்புதமாய் அமைந்திருக்கின்றன. அன்னை கலைமகளின் அருள் கொழித்த அருமைக் கவிகள்தான் அவை' என்று பாராட்டினார். அதற்குக் கம்பர் 'தாங்கள் பாடிய பாடல்களில் ஒன்றிரண்டு என்னுடையதாகவும் இருக்கின்றன. ரொம்ப சந்தோஷம்' என்று பதில் சொன்னார்!

"இதிலிருந்து செருகு கவிகள் எவ்வளவோ கம்பராமாயண ஏட்டுக்குள் முன்னமேயே புகுந்து விட்டன என்று தெரிகிறதல்லவா?"

இப்படிப்பட்ட செருகு கவிகளையெல்லாம் கம்பராமாயணப் பதிப்பிலிருந்து நீக்குவதற்கு எவ்வளவோ துணிச்சல் வேண்டும். அந்தத் துணிவுடனேதான் அவைகளை நீக்கியிருக்கிறார் அவருடைய பதிப்பிலே. 'ஐயோ! ஆயிரம் ஆயிரமாக எண்ணி, நான் கட்டி வைத்திருந்ததெல்லாம் போய்விட்டதே' என்று அங்கலாய்ப்பவர்களுக்கெல்லாம் நான் ஒரேயொரு ஆறுதல் சொல்லக்கூடும். டி.கே.சி. ஏன் இத்துணை பாட்டைச் செருகு கவி என்று தள்ளுகிறார்? எல்லாம் கம்பன் பெருமைக்கு ஒரு மாசு மறு ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காகத்தானே. கவிச்சக்கரவர்த்தி கம்பன், மகாகவி கம்பன் என்றெல்லாம் பறை சாற்றிவிட்டு அவன் காவியத்திலும் குறையில்லாமல் இருக்குமா? அவனும் மனிதன்தானே என்றெல்லாம் சொல்வதில் அர்த்தமே இல்லையல்லவா! கம்பராமாயணத்திலிருந்து செருகு கவிகளையெல்லாம் நீக்கிவிட்டால் கம்பன் பாடல்களின் எண்ணிக்கை அப்படி ஒன்றும் குறைந்து விடாது. மேலும் கம்பன் கவிதையின் பெருமை அக்கவிதையின் நயத்தில் இருக்கிறதா அல்லது அதன் எண்ணிக்கையில் இருக்கிறதா. டி.கே.சி.யோடு ஒத்துப் போகிறவர்கள் அப்படியே போகட்டும். இல்லை, அவரோடு ஒத்துப்போக இஷ்டப்படாதவர்கள், டி.கே.சி. பதிப்பை, ஒரு கம்பராமாயணக் கோவை என்று வைத்துக் கொள்ளலாம். அதனால் கம்பனுக்கும் நஷ்டமில்லை டி.கே.சிக்கும் நஷ்டமில்லைதானே."

(ரசிகமணி டி.கே.சி. தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான் எம்.ஏ. ஸ்டார் பிரசுரம், முதற்பதிப்பு டிசம்பர் 1945, பக்கங்கள் 36&43)

# கம்பராமாயணத் திருத்தங்கள்

இருபதாம் நூற்றாண்டில் இலக்கியத்தில் டி.கே.சி அவர்கள் தடம் பதித்தவர் என்பதற்குச் சான்றுகள் அவரது ரசனையும், கவிகளில் உண்மையான கவியைக் கண்டுபிடித்தமையும்தான்.

கம்பன் கவிதையைத் தமிழ்நாட்டில் சென்ற சுமார் ஆயிரம் வருடங்களாகப் பாடி வருகின்றனர். வித்வான்களும், புலவர்களும் கம்பரைப் புரிந்து கொள்ளவில்லை. ஒரு மகாகவி எப்படி அபத்தமான கவிகளை இயற்றி இருக்க முடியும்? தமிழன் அதை உணர்ந்து அறிய வேண்டாமா? என்று கேட்கிறார் ரசிகமணி அவர்கள். கவிகளால் ஒரு எழுத்தோ, ஒரு சொல்லோ மாறி விழுந்து விட்டால் அதைப் படிக்கும் ரசிகர்களுக்கு எவ்வளவு மனவேதனையை அளிக்கும்? கம்பனைப் பாடிப்பாடி அவரது லயத்தை (Rhythm) தன்னுள் வாங்கி, அனுபவித்துக் கொண்டு இருக்கும் பண்பட்ட உள்ளத்திற்கு இத்தவறான கவியைப் பொறுத்துக் கொள்ள முடியுமா? நல்ல கவியை உணரும் டி.கே.சிக்கு எந்த இடத்தில் தாளம் தவறுகிறது? சொற்கள் மாறி விழுந்திருக்கின்றனவா? அதனால் கவி உருவமே சீர்குலைந்து போகிறது என்பதெல்லாம் மிகவும் எளிதாக உணர முடிகிறது. அப்படிப்பட்ட கவிகள் காதில் விழும்போது, முகம் சுளித்து, மனவேதனை கொண்டு, பாட பேதங்களையெல்லாம் துருவித்துருவி மிகவும் நேர்மையாக ஆராய்கிறார். இப்படியெல்லாம் அவருக்குத் திருப்தி ஏற்படாவிட்டால், கவியைத் திருத்துகிறார். திருத்தியவுடன் கவி வியக்கும் வகையில் உருவம் பெற்று விடுகிறது. அதற்கு முக்கியமான தாளலையம் (Rhythm) அமைந்து, பாட்டைப் படிக்கும் போது, உள்ளத்தில் இல்லாத உணர்ச்சிகளையெல்லாம் உண்டாக்கி, கம்பர்

இப்படித்தான் பாடியிருக்கக் கூடும் எனக் கூத்தாடவே செய்து விடுகிறார் டி.கே.சி. அவர்கள். அவரது ஆனந்தம் பக்கத்தில் அமர்ந்திருப்பவர்களையும் அப்படியே தொற்றிக்கொண்டு விடும். நண்பர்களே! ..... ஒன்றிரண்டு திருத்தங்களை நாம் காணலாம் நண்பர்களே! கம்பராமயணத்தில்தான்.

பாலகாண்டம் குலமுறை கிளத்து படலத்தில் கடைசிப்பாட்டு பழைய கம்பராமாயணப் பதிப்புகளில்-

**கோதமன்றன் பன்னிக்கு**
**முன்னை யுருக் கொடுத்ததிவன்**
**போது நின்ற தெனப்பொலிந்த**
**பொலன் சுழற்கால் பொடிகண்டாய்**
**காதலென்றனுயிர் மேலும்**
**இக் கரியோன் பாலுண்டால்**
**ஈதிவன் றன் வரலாறும்**
**புயவலியும் என உரைத்தான்**

என்று அச்சடிக்கப்பட்டிருக்கிறது. சந்தர்ப்பம் எல்லோருக்கும் தெரியும். விஸ்வாமித்திரன் ராமனையும் லக்ஷ்மணனையும் ஜனகனிடம் அறிமுகப்படுத்துகிறான். 'ராமன் பேரில், என் உயிர்மேல் வைத்திருக்கும் காதலைவிட அதிகமான காதலை வைத்திருக்கிறேன் பார்த்துக்கொள்' என்று விஸ்வாமித்திரன் தடபுடலாகத் தன்னையே தெரிவித்துக் கொள்வதாக மூன்றாவது அடி அமைந்திருக்கிறது. இப்படியெல்லாம், ராமனை அறிமுகப்படுத்தும் வாயிலாகத் தன் அளப்பரிய அன்பையே விளம்பரப்படுத்திக் கொள்கிறான் விஸ்வாமித்திரன் என்று சொல்வது சரியா? மேலும் "காதலென்றன் உயிர்மேலும் இக்கரியோன் பாலுண்டால்' என்னும்போது 'ரிதம்' நம் காதுகளில் சரியாகவா ஒலிக்கிறது. தாளலயம் எங்கேயோ தவறுகிறது போலல்லவா இருக்கிறது. அந்த மூன்றாவது அடியைத்தான் அப்படியே மாற்றுகிறார் டி.கே.சி. விஸ்வாமித்திரன் ஜனகனைப் பார்த்து நேரே அழைத்துப் பேசுவதாக அமைத்துவிடுகிறார். "வேதம் என்ற உருவுடையாய், மிதிலையர்தம் உயிர் அனையாய்! என்று ஜனகனை விஸ்வாமித்திரன் அழைப்பதில்தான் என்ன பொருத்தம்? தாளலயம்தான் என்ன என்ன ஜாலம் எல்லாம் செய்கிறது இந்த அடியில்

கோதமன்தன் பன்னிக்(கு)
முன்னைஉருக் கொடுத்த(து), இவன்
போதுவென்ற தெனப்பொலிந்த
பொலன்கழற்கால்ப் பொடிகண்டாய்!
வேதம்என்ற உருவுடையாய்,
மிதிலையர்தம் உயிர் அனையாய்!
ஈ(து)இவன்தன் வரலாறும்
புயவலியும் எனஉரைத்தான்

என்பதுதான் டி.கே.சி பதிப்பிலுள்ள பாட்டின் முழு உருவம். இப்போது பாடிப்பாருங்கள். பாட்டு எப்படி இருக்கிறது என்று. எது கம்பன் பாட்டாயிருக்க முடியும் என்று தீர்ப்புச்சொல்லுங்கள் நன்றாய்ப் பாடிப்பார்த்த பின்னால்.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப் போகிறது என்பதை அறிந்த மக்கள் எப்படி இருக்கிறார்கள்? அதை வர்ணிக்கிறார் கம்பர்.

மாதர்கள் கற்பின் மிக்கார்
கோசலை மனத்தை ஒத்தார்
வேதியர் வதிட்டன் ஒத்தார்
வேறுள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார் அன்னாள்
திருவினை ஒத்தாள்; அவ்வூர்
சாதுகை மாந்தர் எல்லாம்
தயர தன் தன்னை ஒத்தார்

என்பது பழைய பிரதிகளில் உள்ள பாட்டு. 'மாதர்கள் கற்பின் மிக்கார்' என்றவர் பின்னால் 'வேறுள மகளிர் எல்லாம்' என்று சொன்னால் எந்த மகளிரைக் குறிக்கிறார் கம்பர் என்ற கேள்வி எழுவது இயற்கை. அயோத்தி நகரத்தில் உள்ள பெண்களை 'கற்புடைய மாதர்' 'மற்ற மாதர்' என்றா பாகுபாடு செய்வார். இது எவ்வளவு அசம்பாவிதம்? இதை அறிந்துதான் டி.கே.சி.

மாதர்கள் ஆண்டின்மிக் கார்
கோசலை மனத்தைஒத்தார்;
வேதியர் வசிட்டன் ஒத் தார்;

வேறுள மகளிர்எல்லாம்
சீதையை ஒத்தார்;அன்னாள்
திருவினை ஒத்தாள்;அவ்வூர்
சாதன மாந்தர்எல் லாம்
தயரதன் தன்னைஒத் தார்.

என்று திருத்துகிறார். அடடே! பெரிய அபவாதத்தையல்லவா எவ்வளவோ லேசாக மாற்றிவிடுகிறார் டி.கே.சி. இந்தத் திருத்தத்திற்கா ஆக்ஷேபம்? இதையா திருத்தம் என்று சொல்லவது? கம்பர் எப்படிப் பாடியிருப்பார், அதை எப்படித் தப்பும் தவறுமாய்ப் பின்னால் எழுதியிருப்பார்கள் என்று இப்போதல்லவா தெரிகிறது.

மேலும் ராமனைக் கானாளக் கட்டளை இடுகிறாள் கைகேயி. 'அது அரசன் ஆணை' என்று வேறே சொல்லிக் கொள்ளுகிறாள் அவள். 'தனக்குப் பட்டம்' என்று தழைக்கும் உள்ளத்தோடு வரும் ராமன் எப்படி இக்கட்டளையை ஏற்றுக் கொள்கிறான்? அவன் முகமாகிய தாமரை கட்டளையைப் பெறுவதற்கு முன்னால் எப்படி இருந்தது? கட்டளையைப் பெற்றபின் எப்படி இருக்கிறது? என்று தெரிவிக்க விரும்புகிறார் கம்பர். இதைத்தான்,

இப்பொழு தெம்மனோரால்
இயம்புதற் கெளிதே யாரும்
செப்பருங் குணத் திராமன்
திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பு அவ்
வாசகம் உணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா
மரையினை வென்றதம்மா

என்ற பாட்டாகப் பழைய பிரதிகளில் பார்க்கிறோம். இந்தப் பாட்டில் சின்னத் திருத்தங்கள் சில செய்கிறார் டி.கே.சி.

இப்பொழு(து) எம்மனோ ரால்
இயம்புதற்(கு) எளிதோயார்க் கும்
செப்பரும் குணத் திரா மன்

திருமுகச் செவ்விநோக் கி
ஒப்பதே முன்பு,மற்(று) அவ்
வாசகம் உணர்ந்தபின் னர்
அப்பொழு(து) அலர்ந்த செந்தா
மரையினை வென்ற(து)அம் மா!

இதுதான் டி.கே.சி திருத்தியபடி உள்ள பாட்டு. 'முன்பு பின்பு' என்பதற்கெல்லாம் எப்படி எப்படி எல்லாமோ வின்னியாசமாக அர்த்தம் சொல்வதை எல்லாம் கேட்டுக் காது புளித்த நமக்கு இந்தத் திருத்தங்கள் எவ்வளவோ இனிமையாக இருக்கின்றன. பொருளையும் எளிதாக அருமையாக விளக்குகின்றதல்லவா? இப்படித்தான் அவர் திருத்தங்கள் செய்கிறார். இல்லை. கம்பர் எப்படி எழுதியிருப்பார் என்பதைக் கண்டுபிடிக்கிறார்.

"சாதாரண அறிவிற்குப் பொருத்தமான திருத்தங்களையுமா செய்யக்கூடாது? இத்தனை வருஷங்களாகத் தனித்தும் பலபேர்களைக் கூட்டி வைத்தும் திரும்பத் திரும்பக் கம்பனைப் படித்த நான் அக்கிரமமாக ஏதேனும் திருத்தம் செய்யத் துணிவேனா? எனக்கு இலக்கிய மனச்சாட்சி (லிவீமீமீகூஷீணீகூஷீஹ் சிஷீஸீஉநீவீமீஸீநீமீ) கிடையாதா?" என்று டி.கே.சி நம்மிடம் கேட்கும் போது நாம் வாயடைத்துப் போகிறோம். 'பாட்டைத் திருத்துகிறார் பாட்டைத் திருத்துகிறார்!' என்று புகார் சொல்லும் அன்பர்களுக்கு அவர் தம் பண்பட்ட உள்ளத்தை அப்படியே திறந்து காட்டுகிறார். அப்படியிருந்தும் சிலருக்கு அவரிடம் ஏன் குரோதம் என்றுதான் தெரியவில்லை.

டி.கே.சி பற்றி புகார் சொல்பவர்களுக்காகவும், அவர் புண்பட எழுதி வந்தவர்களுக்காகவும், ராஜாஜி அவர்கள் கல்கியில் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதில்,

"கொஞ்சநாளாக ஸ்ரீ டி.கே.சிதம்பரநாத முதலியாரைச் சிலர் வெகு கோபமாகத் தாக்கி வருகிறார்கள் என்று தெரிகிறது. தமிழ் என்றால் என்ன, கவிதை என்றால் என்ன என்பதை எனக்கு ஓரளவு புகட்டிய ஆசிரியரிடத்தில் எனக்கு வரம்பற்ற அன்பும் பட்சபாதமும் இருக்கத்தான் செய்யும். ஆகையால் நான் அவருக்காகப் பரிந்து பேசினால் அதற்கு ஒருவேளை மதிப்பு இராது. ஆயினும் என் பேச்சல்ல, நானே ஒரு அத்தாட்சியாவேன் டி.கே.சியின் தமிழ்ப்பணிக்கும், பெருமைக்கும். பேச்சைவிடப் பொருட்சான்றே வலியதாகும். என்னைப் போன்ற ஒருவனையும்கூடத் தமிழாசை கொள்ளச் செய்தவர்

டி.கே.சிதான். இதை இப்போது பலர் அறியச் சொல்கிறேன்; உபசாரமல்ல உண்மை.

"என்னைத் தள்ளுங்கள்; தமிழ்நாட்டில் தமிழ்ப்பணிக்கு நல்ல வீரச்சேனை சேருமாறு இக்காலத்தில் ஊக்கம் உண்டாக்கியவர் டி.கே.சி என்றே சொல்லுவேன். பலர் பல அரிய பணிகள் செய்திருக்கிறார்கள். செய்தும் வருகிறார்கள். ஆனால் டி.கே.சியின் தமிழ்ப்பணி ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது. அதை வேறு யாரும் செய்ததில்லை; இதயதத்துவமும் கவிதையின் தனிப்பண்பும் அறிந்து பெரும்பணி செய்பவர் டி.கே.சி.

"மகனைப் பறிகொடுத்ததையும் உடல் நோயையும் ஆத்ம சக்தியைக் கொண்டு மறந்து துக்கங்களுக்கும் துன்பங்களுக்கும் இடையில் யோகியைப் போல் நின்று தமிழ்ப்பணி செய்து வருகிறார். அவர் மனது புண்படச் செய்வது வீரியமல்ல; தமிழ்ப் பணியுமல்ல, சுத்த அறியாமை.

"எந்த அபிப்பிராய பேதத்தைக் கொண்டு இப்போது தாக்கப்படுகிறார் டி.கே.சி கம்பர் எவ்விதக் குற்றமும் குறையுமில்லாமல் விளங்கும் தெய்வீக அறிவும் உணர்ச்சியும் சிருஷ்டியும் சக்தியும் கொண்ட ஒரு கவியாவார். ஆகையால் அவருக்கு எது அழகாகத் தோன்றவில்லையோ, எது பூரண ஒளியின்றி மங்கி விளங்குகின்றதோ அதை அவர் கம்பர் எழுத்தல்ல என்று நீக்கிவிடுகிறார். அவசரத்தில் அல்ல, நிதானமாய் ஆராய்ந்தே இவ்வாறு செய்யத் துணிகிறார். ஏட்டில் பக்திவைக்காமல், தான் கண்ட கம்பரின் மேல் அபார பக்திவைத்துப் பாட்டுக்களைத் திரட்டுகிறார். இது இஷ்டதேவதை பூசனைக்கிரம 'அவரவர் தம தம தறி தறி வகை வகை' என்ற ஆழ்வார் பாடிய முறையில் பக்தியுடன் ஆராதிப்பவர் ஒருவரை யாரும் தாக்குதல் கூடாது.

"அச்சியந்திரமும் காகித ஏடுகளும் இல்லாத பழையகாலத்தில் ஒரு பெரிய காவியம் எவ்வாறு மக்களிடை வழங்கி வந்தது என்பதை இந்தக் காலத்தில் கற்பனை செய்து கொள்வது கஷ்டம். கற்பனை செய்து சாந்தமாக ஆய்பவர்களுக்கு டி.கே.சி சொல்லும் அபிப்பிராயங்களில் ஏதும் வியப்புத் தோன்றாது.

"அபிப்பிராய பேதமிருந்தாலும் அது எவ்வளவில் நிற்கும்? டி.கே.சி 'இந்தப்பாட்டு அல்லது இந்தவரி அழகில் குறைந்திருக்கிறது. இதை நம் கம்பர் எழுதியிருக்கமாட்டார்' என்கிறார். மற்றவர்கள் 'இதையும் கம்பர் எழுதினார் என்றே எண்ண முடியும் எப்போதும் ஒரே உன்னதப்படியில் நிற்க யாராலும் முடியுமா? சில சமயம் கம்பர் இத்தகைய பாடலும் பாடினார் என்று வைத்துக் கொள்வதில் கம்பரின் மகிமை

குறையாது, பல நாட்களாக நாம் படித்துவந்த ஏட்டை அவமதிக்க வேண்டியதில்லை' என்று வாதிக்கலாம்.

"இவ்வளவேதான். இதில் பெரிய ஆபத்தான வித்தியாசம் ஒன்றும் இல்லை. டி.கே.சியின் பணிக்கு இடைஞ்சல் செய்யாமலும் தமிழ்நாட்டில் அவர்மேல் அபார அன்பும் பக்தியும் கொண்டிருக்கும் கணக்கற்ற தமிழன்பர்களின் மனதைப் புண்படுத்தாமலும் வேண்டுமானால் விவாதத்தை நடத்தலாம்.

"டி.கே.சி வெளியிட்ட கம்பரை, செருகு கவிகள் நீங்கிய உண்மைக் கம்பராக வைத்துக் கொள்வோர் அவ்வாறு வைத்துக் கொள்ளட்டும் 'செருகு என்பதே கிடையாது, டி.கே.சி சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது, ஓலையேடுகள் ஒருவாறு அச்சிடப்பட்ட பிறகு அதைப்பற்றி விவாதமே கூடாது' என்கிற கட்சியைச் சேர்ந்தவர்கள் டி.கே.சியின் வெளியீடுகள் ஒருவித காவிய சங்கிரகம் என்றே வைத்துக்கொள்ளலாம். அவ்வாறு வைத்துக் கொண்டு, விட்டுப்போன பாடல்கள் கம்பருடையதா அல்லவா என்கிற கேள்வியையே பெரிய கேள்வியாக செய்துவிடாமல் டி.கே.சி பொறுக்கித் திருத்தி வெளியிட்டிருப்பதை மட்டுமே எல்லாரும் படித்தால் தற்காலத் தமிழ் மக்களுக்கு அதுவே போதுமல்லவா. அவகாசமும் ஆற்றலும் உள்ள புலவர்கள் முழுக் கம்ப ராமாயணத்தையும் ஏடுகளில் உள்ளபடி படித்துத் தெளிவடைவோரை யாரும் வேண்டாம் என்று சொல்லவில்லையே.

"முக்கியமாக ஒரு மகான், சிறந்த பணியாற்றுகிறவர் - அவருடைய மனது புண்படத் தாக்குதல் கூடாது. புதிதாக வெளிவந்திருக்கும் முத்தொள்ளாயிரப் பதிப்பையும் அதில் டி.கே.சி அவர்களால் வரையப்பட்டிருக்கும் கண்ணைத் திறந்து காட்டும் அற்புதமான விளக்கத்தையும் படித்து அனுபவித்தவர்கள் என் கோரிக்கையை முழு மனதுடன் ஆதரிப்பார்கள்.

"பொருள் என்ற உயிருக்குச் சொற்கள் என்ற தாதுக்களைக்கொண்டு தகுந்த ஒரு உடலை உயிரும், உடலும் கூடி, உணர்ச்சியும் அழகும் பொருந்திய உருவத்தோடு நிற்பது கவிதை. இத்தகைய சிருஷ்டியை - நன்னூலார் கூறுகிறபடி & 'உணர்வினில் வல்லோரே' மக்களுக்கு ஆக்கித்தர முடியும். உணர்வு என்றால் அறிவு மட்டுமல்ல; இதயத் துடிப்புகளும் கலந்த ஜீவ இயக்கம்.

"கவிதை என்றால் என்ன என்பதை வெகு சிலரே உணர்வார்கள். தாம் உணர்ந்ததைப் பிறரும் உணருமாறு

விளக்கும் ஆற்றல் படைத்தவர்களாயினும் விடாமுயற்சியுடன் சொந்த துக்கங்களையும் நோய்களையும் கவனியாமல் பணி செய்பவர்கள் மிக மிகச் சிலர். அவர்களில் ஒருவர் டி.கே.சி. அவருடைய பணியும் புகழும் குறைவின்றி ஓங்க வேண்டும்." (கல்கியில் பிரசுரிக்கப்பட்டது) (இரசிகமணி டி.கே.சி. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ. முதற்பதிப்பு, 1945 ஸ்டார் பிரசுரம், பக்கம் 51&55)

குறையாது, பல நாட்களாக நாம் படித்துவந்த ஏட்டை அவமதிக்க வேண்டியதில்லை' என்று வாதிக்கலாம்.

"இவ்வளவேதான். இதில் பெரிய ஆபத்தான வித்தியாசம் ஒன்றும் இல்லை. டி.கே.சியின் பணிக்கு இடைஞ்சல் செய்யாமலும் தமிழ்நாட்டில் அவர்மேல் அபார அன்பும் பக்தியும் கொண்டிருக்கும் கணக்கற்ற தமிழன்பர்களின் மனதைப் புண்படுத்தாமலும் வேண்டுமானால் விவாதத்தை நடத்தலாம்.

"டி.கே.சி வெளியிட்ட கம்பரை, செருகு கவிகள் நீங்கிய உண்மைக் கம்பராக வைத்துக் கொள்வோர் அவ்வாறு வைத்துக் கொள்ளட்டும் 'செருகு என்பதே கிடையாது, டி.கே.சி சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது, ஓலையேடுகள் ஒருவாறு அச்சிடப்பட்ட பிறகு அதைப்பற்றி விவாதமே கூடாது' என்கிற கட்சியைச் சேர்ந்தவர்கள் . டி.கே.சியின் வெளியீடுகள் ஒருவித காவிய சங்கிரகம் என்றே வைத்துக்கொள்ளலாம். அவ்வாறு வைத்துக் கொண்டு, விட்டுப்போன பாடல்கள் கம்பருடையதா அல்லவா என்கிற கேள்வியையே பெரிய கேள்வியாக செய்துவிடாமல் டி.கே.சி பொறுக்கித் திருத்தி வெளியிட்டிருப்பதை மட்டுமே எல்லாரும் படித்தால் தற்காலத் தமிழ் மக்களுக்கு அதுவே போதுமல்லவா. அவகாசமும் ஆற்றலும் உள்ள புலவர்கள் முழுக் கம்ப ராமாயணத்தையும் ஏடுகளில் உள்ளபடி படித்துத் தெளிவடைவோரை யாரும் வேண்டாம் என்று சொல்லவில்லையே.

"முக்கியமாக ஒரு மகான், சிறந்த பணியாற்றுகிறவர் - அவருடைய மனது புண்படத் தாக்குதல் கூடாது. புதிதாக வெளிவந்திருக்கும் முத்தொள்ளாயிரப் பதிப்பையும் அதில் டி.கே.சி அவர்களால் வரையப்பட்டிருக்கும் கண்ணைத் திறந்து காட்டும் அற்புதமான விளக்கத்தையும் படித்து அனுபவித்தவர்கள் என் கோரிக்கையை முழு மனதுடன் ஆதரிப்பார்கள்.

"பொருள் என்ற உயிருக்குச் சொற்கள் என்ற தாதுக்களைக்கொண்டு தகுந்த ஒரு உடலை உயிரும், உடலும் கூடி, உணர்ச்சியும் அழகும் பொருந்திய உருவத்தோடு நிற்பது கவிதை. இத்தகைய சிருஷ்டியை - நன்னூலார் கூறுகிறபடி & 'உணர்வினில் வல்லோரே' மக்களுக்கு ஆக்கித்தர முடியும். உணர்வு என்றால் அறிவு மட்டுமல்ல; இதயத் துடிப்புகளும் கலந்த ஜீவ இயக்கம்.

"கவிதை என்றால் என்ன என்பதை வெகு சிலரே உணர்வார்கள். தாம் உணர்ந்ததைப் பிறரும் உணருமாறு

விளக்கும் ஆற்றல் படைத்தவர்களாயினும் விடாமுயற்சியுடன் சொந்த துக்கங்களையும் நோய்களையும் கவனியாமல் பணி செய்பவர்கள் மிக மிகச் சிலர். அவர்களில் ஒருவர் டி.கே.சி. அவருடைய பணியும் புகழும் குறைவின்றி ஓங்க வேண்டும்." (கல்கியில் பிரசுரிக்கப்பட்டது) (இரசிகமணி டி.கே.சி. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ. முதற்பதிப்பு, 1945 ஸ்டார் பிரசுரம், பக்கம் 51&55)

## மற்றபாடல்களில்' திருத்தங்கள்

டி.கே.சி. கம்பனது பாடலில் திருத்துவது தவிர, ஒரு தனிப்பாடலைத் திருத்தி அமைத்தால் அதில் ஒரு ஒழுங்கும் உருவமும் வந்து விடுகிறது. அவர் கூறும், உயிரும், உணர்வும் .... அதற்கு கிடைத்துவிடும். உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சிகளைச் சப்தச்சித்திரத்திலே முறையாக அமைத்துக் காட்டுவதுதான் உண்மையான கவி. எனவே அத்தகைய உண்மையான கவி ஒன்றில் சொற்கள் சிதைந்து உருமாறிக் கிடந்தால் அதைத் திருத்தி அமைத்துப் பார்க்க வேண்டும்தானே!

கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன், சொல்லாழி வெண்சங்கே!

என்பது ஆண்டாள் பாசுரம். இதில் மூன்றாவது அடியில் இறுதிச் சீரில் வரும் "நாற்றம்" நன்றாக இல்லையென்று, 'வாயமுதும் வாசமும்' என்று டி.கே.சி. திருத்தி எழுதினார்.

"மருப்பொசித்த மாதவன்தன் வயமுதும் வாசமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"

நாட்டியக்கலையில் பிரபலம் பெற்ற திருமதி. பாலசரஸ்வதி உள்ளிட்ட எல்லா ரசிகர்களும் இந்தப் பாடத்தையே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

உண்மை எப்போதும் பயன் அளிப்பதாகத்தான் இருக்கும். ஒருவனுடைய இதயத்தில் உண்டாகின்ற உண்மையைக் காண்பதில்தான் நமக்கு அதீதமாய் ஆசை ஏற்படுகிறது. அது இன்பம் விளைவிக்கிறது. கவிஞர்களது மனத்தில் நிகழும்

உண்மையான உணர்ச்சிகள்தான். அவை உருவம் பெற்று, இசையாக, கவியாக, சிற்பமாகப் பிரதிபலிக்கிறது. அந்த உண்மையை வெளிவிடத்தான் அவரும் அப்படியொரு தவிப்பு தவித்து, இறுதியில் வடிவமாகக் கொடுக்கிறார். அந்த வடிவத்தை , உருவத்தை அவரது தவிப்பிலேயே நின்று நாம் ரசித்தால் அதைவிட பெரிய ஆனந்தம் ஏது.

இதுதான் நான் டி.கே.சியின் ஆனந்த தத்துவத்தின் சூட்சுமம் என எண்ணுகின்றேன் நண்பர்களே! சரிதானே!

## சுவை அறி நிபுணர் டி.கே.சி.

பிரான்ஸ் நாட்டிலே ஒரு நிபுணர் ஒயினைச் சுவைத்து, அது எந்த நாட்டு ஒயின், எந்த வருஷத்தியது, எந்தப் பழங்களைக் கொண்டு எந்த நாட்டில் தயாரிக்கப்பட்டது, என்று சொல்லி விடுவாராம். ஒருசமயம், ஒரு பிரபுவின் விருந்தில் அவருக்கு ஒரு புதிய ஒயின் ஒன்று பரிமாறப்பட்டிருக்கின்றது. ஒயின் எப்படி இருக்கிறது என்று அந்தப் பிரபு அவரிடம் வினவ, 'தோல் வாடையும், துருப்பிடித்த இரும்பு வாடையும் வருகிறது' என்று பதில் அளித்தார். உடனே அந்தப் பிரபு ஆச்சர்யப்பட்டு, ஒயின் சேகரித்து வைத்த நிலவறையைச் சோதித்த போது உண்மை தெரியவந்தது. எத்தனையோ காலம் ஒயின் சேகரித்து வைக்கப்பட்டதில், தோல்பட்டையுடன் கூடிய சிறிய சாவி அதில் கிடந்தது. எத்தனையோ காலன் அளவு ஒயினில் சிறு சாவியின் சுவை கலந்தன. நுண்ணிய திறத்தால் அந்த நிபுணர் அதை உணர்கிறார். ஆச்சர்யம்தானே நண்பர்களே! என்று தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் தன் ரசிகமணி டி.கே.சி. என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.

தமிழ்நாட்டில் சுவையை அறிவதற்கு ஒயின் கிடைக்காவிட்டாலும் சுவைத்து சுவைத்து அனுபவிக்க ஏராளமான பாட்டுக்கள் உண்டு. ஆனால் பெரும்பாலோருக்கு கம்பனும், காளமேகப் புலவரும் ஒன்றாகத் தோன்றும். ஒரு கவி, அது சாரமற்ற வெறும் செய்யுள் என்று பகுத்தறிய உணர்வு கிடையாது. ஆனால் டி.கே.சியோ, ஒயினைச் சுவைத்து அறியும் சுவை நிபுணர்போல் இது கம்பன், இதுதான் கவிதை என உணர்ந்து அறிந்து விடுவார். இதற்கு வலுசேர்க்கும் வகையில் ஒரு நிகழ்வைக் கூற விழைகின்றேன் நான்.

நண்பர்களே! 1937ஆம் ஆண்டு செப்டம்பர் 1ஆம் நாள் வெள்ளக்கால் ராவ் சாஹிப் வெ.ப. சுப்ரமணிய முதலியார்

அவர்களுடைய 80ஆம் ஆண்டு நிறைவு விழா சிறப்பாக திருநெல்வேலியில் நடைபெற்றது. அன்று வாழ்த்துச் செய்திகளும், பாமாலைகளும் வந்து குவிந்த வண்ணம் இருந்தன. எல்லாவற்றையும் கொடுத்தனர். அதில் ஒரு பாடல் பெயரிடப்படாமல் இருந்தது. இதற்கிடையே டி.கே.சி வந்தார். அவரிடம் அந்தத்தாள் தரப்பட்டது. அதை வாசித்தார். பின் மீண்டும் ஒருமுறை படித்தார். அவ்வளவுதான். இப்படி எழுதுவதற்கு தமிழ்நாட்டில் ஒருவர்தான் உண்டு. அவர்தான் தேசிகவிநாயகம் பிள்ளை. உடனே இதனை அச்சிட்டு எல்லோருக்கும் வழங்குங்கள் என்று உற்சாகமாய் பேசத் தொடங்கி விட்டார் டி.கே.சி.

"எண்பதாண் டான இளைஞனே!
இன்னமுதப்
பண்பெலாம் காட்டு தமிழ்ப் பாவலனே!
நண்பனே!
வெள்ளக் கால்ச் செல்வனே!
வேள்சுப் பிரமணிய
வள்ளலே வாழ்க மகிழ்ந்து!"

என்பதுதான் பாட்டு. பாட்டில் கையொப்பமில்லை. இதுதான் 'தே.வி'யின் முத்திரை இருப்பதைக் கண்டுபிடித்து விட்டார். டி.கே.சி. ஆம். ஒயினைச் சுவைத்து அதன் சுவையை நிர்ணயிக்கும், நிபுணரைப் போல கவிச் சுவையை நிர்ணயிக்கும் நிபுணர் அல்லவா டி.கே.சி. என்ன நண்பர்களே! சரிதானே! நான் கூறுவது!

(கவிமணி அவர்கள் கல்வெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த நேரம். திரு. ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கள், கவிமணியிடம், நீங்களோ அபூர்வமான கவி. கல்வெட்டிற்குப் பலர் கிடைப்பார்கள். அதை ஒதுக்கிவிட்டு, ..... கவி எழுத வேண்டும்' என விரும்பிக் கேட்டுக் கொண்டார். இதைக் கேட்டதும் கவிஞர் சட்டென சிரித்துவிட்டார். பின்பு பரிவோடும் அன்போடும், திரு. மகராஜன் அவர்களைப் பார்த்து, "நீரிழிவு நோய் என்னை அல்லற்படுத்தி விடுகிறது. ஒரு வெண்பா எழுதி முடிப்பதற்குள் நீரில் இனிப்பு மிகுந்துவிடுகிறது. எனவே கவிபாடுவதை சற்றுக் குறைத்து இருக்கிறேன்" என்று கவிமணி அழகாய் எடுத்துரைத்தார். உண்மையான உணர்ச்சிமிக்க கவி ஒன்று

நமக்கு கிடைக்க வேண்டுமென்றால் கவிஞன் தன் உடம்பையும் உயிரையும் பிழிந்து அதில் கொட்ட வேண்டியிருக்கிறது.)

சிலந்திப்பூச்சி தனக்கு வீடு கட்டுகிறது என்றால் கடைக்குப்போய் சுண்ணாம்பும் செங்கலுமா வாங்கி வருகிறதா என்ன? நண்பர்களே! அதுதன் உடம்பிலிருந்து சுரக்கும் ஒருவகைப் பிசினைக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக கட்டி விடுகிறது. ஒரு அழகான அதற்கேற்ற வீடு கிடைத்து விடுகிறது. பசுவின் பால் அதன் ரத்தம்தானே! அதைச் சுவையாக நமக்குக் கொடுக்கிறது. அதுபோல் நமக்கு ஆனந்தம் கொடுப்பதற்காகக் கவிஞன் தன் உடல், உயிர் இரண்டின் சத்தையும் தன் கவிதையில் பெய்து வைக்கின்றான். எனவே, நண்பர்களே! கவி என்பது கடைச்சரக்கல்ல. நாம் அப்படியே வாங்கித் துய்ப்பதற்கு. இந்தக் கருத்தைத்தான் ஃப்ரெஞ்ச் கவி, (Bandelaire), "ஒரு உருவமற்ற கருத்துக்குக் கலையுருவம் கொடுப்பதற்குள் கலைஞன் உடம்பையும் உள்ளத்தையும் வருத்தி வேலை வாங்க வேண்டியிருக்கிறது" என்று கூறுகிறார்.

நல்லதொன்றைக் கண்டுவிட்டால் தலைமேல் வைத்துக் கூத்தாடும் குழந்தை உள்ளம் கொண்டவர்தான் டி.கே.சி. அவர்கள். கண்ணாரக்காண்பதற்கு ஒரு கவிஞர் நமக்குக் கிடைத்து விட்டார் என கும்மாளியும் குதூகலமாய் ஆனந்தக் களிப்பானார் அவர்.

கவிமணியின் உழைப்பு, இரஸிகமணிக்கு 'டானிக்' காக இருக்கின்றது. நோய் குறைக்கும் மருந்தாகி விடுகிறது. ஒருநாள் டி.கே.சி. அவர்களுக்கு நல்ல காய்ச்சல் அடித்துக் கொண்டு இருக்கின்றது. அவரைப் பார்க்க நம் ஜஸ்டிஸ் மகராஜன் வருகிறார்கள். இரஸிகமணி படுத்திருக்கின்றார்கள். தெர்மாமீட்டர் வைத்துப்பார்த்தால் ஜுரம் 103°டிகிரி இருந்தது. திரு. மகராஜன் அவர்களோ தான் கிளம்புவதாகக் கூறுகிறார். இரஸிகமணியோ "இருங்கள், இருங்கள். உங்களுடன் கவியை அனுபவித்தால் அது டானிக்காகவே இருக்கிறது" ஒரு பாடலைக் கேளுங்கள் என்று கவிமணியின் கவிதை ஒன்றைப் பாடினார்கள். இரஸிகமணி.

"தில்லைப் பதியுடையான் சிற்றம் பலந்தன்னில்
அல்லும் பகலும்நின் றாடுகின்றான் எல்லைக்கண்
அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து."

இவ்வெண்பாவைப் பாடப்பாட அவர்கள் முகத்தில் சோர்வு சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிட்டது. "அண்ணா ஆ ஆ ஆ மலைமன்" என்ற வாய் நிறைந்த சொல்லை எப்படிக் கவிஞன் அனுபவித்து விட்டார் பாருங்கள் என்றும் பலமுறை பாடலைப் பாடி, ஆர்வமாய் பாடலுக்கு ஒருமணி நேரத்திற்கும் மேல் விளக்கம் கூறினார்கள் இரஸிகமணி. திரு. மகராஜன் அவர்களுக்கு காய்ச்சல் பற்றிய நினைவு வரவும், தெர்மாமீட்டரை எடுத்து இரஸிகமணியின் நாவின் அடியில் வைத்துப் பார்த்தார். 98.45 டிகிரிக்கு இறங்கிவிட்டது சூடு. - என்று திரு. ஜஸ்டிஸ் மகராஜன் கவிசெய்யும் மாயத்தை தன் நூலின் மூலம் (ரஸஞ் ஞானி ரஸிகமணி) நம்மிடம் பகிர்ந்து கொள்கிறார்.

ஒத்த உணர்ச்சியோடு டி.கே.சியைப் போல் அனுபவிக்கக் கூடிய ரஸிகனுக்காகவே தவங்கிடக்கிறான் கவிஞன். அப்படி ஒரு ரஸிகன் கிடைப்பதற்குப் பல நூற்றாண்டு ஆகலாம். கம்பனைப் போன்ற ஒரு ரஸிகன் கிடைப்பதற்கு வள்ளுவர் 700 ஆண்டுகள் காத்திருந்தார். டி.கே.சி.யைப் போன்ற ரசிகன் கிடைப்பதற்குக் கம்பன் 1000 ஆண்டுகள் காத்திருக்க வேண்டியிருந்தது. ஆனால், கவிமணிக்கு ஏற்பட்ட நற்பேறு என்னவெனில், தம் வாழ்நாளிலேயே அத்தகைய ரஸிகனைப் பெற்று, அந்த ரஸிகனோடு நெருங்கி உறவாடும் வாய்ப்பையும் பெற்றார்கள். இவ்வாறு ஒரு ரஸிகன் கிடைத்த மாத்திரத்திலே கவிஞனுக்குப் பிறவிப்பயனே கிட்டி விடுகிறது. படைக்கும் போது இவ்வித ஆனந்தம், ஸஹிருதயனைப் பெற்றவுடன் கவிஞனுக்குக் கிடைத்து விடுகின்றது. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் நிலைப்பேற்றை அடைந்து விடுகிறான் அவன். (ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களின் வார்த்தைகள் இவை)

# டி.கே.சியும் தென்காசி சிற்பங்களும்

ஒரு பெண்ணின் கணவன் சிலநாட்கள் முன்பு வெளியூர் சென்றிருக்கின்றான். அன்று அவன் திரும்பி வருவதாகச் செய்தி அவளுக்குக் கிடைக்கிறது. நாயகனை வரவேற்க, வாசனைத் திரவியங்கள் போட்டு குளித்துவிட்டு தலையைக் கோதிச் சடைபின்னித் தொங்க விட்டாள். இடது கையில் கண்ணாடியை வைத்துக் கொண்டு வலது கையைத் தலைக்கு மேல்ப்பின்புறம் தூக்கிய வண்ணம் நெற்றியில் திலகம் தீட்டுகிறாள். அழகிய முகத்தில் ஆனந்தம் எக்களிப்பு இரண்டும் சேர்ந்து விளையாடுகிறது. ஆனந்தம் காரணமாகக் காலிலும் உடலிலும் நடனபாவம் தோன்றுகிறது. இந்தப் பெண்ணின் உருவத்தை ஒருமுறை சிற்பி பார்த்தான். இந்த ஆனந்தமும், அழகிய நடனமும் சிற்பியின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. அந்த நடன வடிவமும் அந்த அரிய பாவமும் அவன் உள்ளத்தில் பத்திரமாக இருந்து கொண்டது.

அரிகேசரி பாண்டியர் (கி.பி. 1446ல்) தன் அரண்மனையிலிருந்து மேற்கே சுமார் முக்கால் மைல் தூரத்தில் சித்ரா நதி பக்கமாக (தென்காசி) காசி விஸ்வநாத சுவாமிக்கு கோயில் கட்ட ஆரம்பித்தார். ஆறுவருட காலத்தில் கோபுரம் கட்டி முடிந்தது. கல்தச்சர்களும், கொத்தனார்களும், சிற்பிகளும் பராக்கிரம பாண்டியனும் இடைவிடாது இப்பணியை மேற்கொண்டனர்.

அம்மன் கோயில், ஸ்வாமி கோயில் என் இரண்டு கோயில்கள், சுற்றுக் கோயில்கள், இவைகளை அடக்கிய நான்கு மதில்கள், ஒன்பது நிலையுள்ள பெரிய கோபுரம் ஆகிய இத்தனையும் ஒரு சிற்றூரில் பதினாறு வருடங்களில் கட்டி முடிக்க முடிந்தது என்றால் பக்தியே சக்தியாய் இருந்து எல்லோருக்கும் ஊக்கத்தைக் கொடுத்தது. அந்தக்காலத்திலிருந்த தமிழ் மக்களின் கலை ஆர்வம், பக்தி, வாழ்க்கை உயர்வு ஆகிய இவற்றிற்கு இது ஒரு எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறது.

கோபுரத்திற்கும் ஸ்வாமி கோயிலுக்கும் இடையே ஒரு கொடி மண்டபம் அமைக்க வேண்டும் என்று எண்ணியவுடன், அந்த சிற்பியை அழைக்கிறான் மன்னன். இந்த வேலைய்ய அவனிடம் ஒப்படைக்கின்றான்.

சிற்பியும் தென்காசியைச் சுற்றியுள்ள குன்றுகளைப் பார்த்து மண்டபத்துக்கு வேண்டிய உத்தரங்களை கல்தச்சர்கள் கொண்டு பெயர்த்துவர ஏற்பாடுசெய்தான்.ஒருநாள் அவற்றைப்பார்வையிட சென்றான். அங்கு அனேக உத்தரங்கள் பெயர்க்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் உள்ள ஒரு உத்தரத்தினுள், அன்று கண்ட பெண்ணின் நடன உருவம் அப்படியே பதிந்து கிடந்தது. மற்ற உத்தரங்களைப் பார்த்து விட்டு அதனருகில் வந்தான். புதைந்து கிடந்த அந்தப் பெண்ணின் உருவம் மிகவும் எழிலாய்த் தெளிவாய் அவனுக்குத் தெரிந்தது. அந்தக் கருங்கல் பாகம் எல்லாம் ஒரு கண்ணாடி போல் ஊடுருவிப் பார்க்கும் ஊடகம் போல் அவன் கண்ணுக்குத் தெரிந்தது. எப்படியோ வேண்டாத பாகத்தையெல்லாம் செதுக்கித் தள்ளி விடுகிறான். அந்த ஆனந்த புன்னகையுடன் குழைந்த பெண்ணின் முகம் வெளிவந்துவிட்டது. அவளது பூங்கொடி போன்ற நடன அசைவும் உல்லாச ரூபமும் உடன் வெளிவந்துவிட்டன. இரண்டு தூண்களில் இவ்விரு பெண்ணின் உருவம் வெளிப்பட்டு விட்டன. மூன்றாவது தூணில் ஒருபாதம் கீழ்நிறுத்தி, ஒருபாதம் மேல்தூக்கி பாதாளத்திலிருந்து வான் உச்சிவரை கூத்து ஆடுவதாக நடராஜப் பெருமானின் நட்னம் வடிவம் வடித்துவிட்டான். இவ்விறைவனின் குணங்களில் அறிந்தவை நமக்கு ஏதோ ஒன்றிரண்டுதான். பிற மறைபொருளாகத்தான் வைக்கப்பட்டுள்ளன. அதைக்குறிக்கும் நிமித்தம் தூக்கிய பாதத்தின் உள்ளங்காலைப் பின்புறமாக வைத்து, ஒரு சிருஷ்டித் தத்துவத்தை நடராஜப்பெருமானின் முகத்திலுள்ள பாவம் காட்டுவதாகவடிக்கிறான்.நாலாவது தூணிலுள்ள நடராஜமூர்த்தி ஆனந்தமயமான உண்மையைக் காட்டுவதாக முகத்தை மலர்ச்சியாய் மலர்த்திக் காண்பித்திருக்கின்றான் கலைஞன். ரதியும், மன்மதனும் முறையே 5வது 8வது தூணிலிருந்து ஆனந்தத்தோடு எதிரெதிராக நின்று மலர்க்கணைகளைத் தொடுத்துக் கொண்டு இருக்கின்ற உருவங்கள் எழுகின்றன. சட்டநாதர், வீரபத்திரர், காளி & ஆகிய இம்மூவர்களின் கோபமும், வீரமும் நம்மை நடுங்க வைக்கும் வண்ணம் வடிக்கப்பட்டுள்ளன. திருமால் புல்லாங்குழல் கொண்டு திளைக்கும் நின்ற வடிவம், அவனது

அமைதியான இசை வடிவத்தில் நம்மை அப்படியே கொள்ளை கொண்டு போக வைத்துவிட்டார் சிற்பி ஒன்பதாவது தூணில். இந்த அதி அற்புத உணர்வுகள் கசிந்து வரும் கல்தூண்களை கொடிமண்டபங்களில் அமைத்து, அதன் அழகின் எழிலின் அமைதி தெறித்து விடுவதுபோல் அமைத்து விட்டு நிற்கின்றான் சிற்பி.

இந்தப் பத்துத் தூணோடு ஒட்டிய உருவங்களும் ஒன்பது நிலைமாடங்களை கொண்ட கோபுரமும் உண்மையிலேயே வெகு விசித்திரமான சிறப்பான தனித்துவம் மிக்க படைப்புகள். அவைகளைப் பார்க்கப் பார்க்கப் பரவசம் மேலிட்டுக் கொண்டே இருக்கும்.

கோபுரம் முடிந்தது. சிற்பகலைஞனின் வேலை முடிவடைகிறது. ஒரு கவிஞர் இந்த அதிசயத்தை அழகான வெண்பாவில் அமைத்து, கோபுரவாசலின் கருங்கல் சுவரில் பொறிக்கச் செய்தார். இன்றும் இதைக் காணலாம். சிற்பி தன் கலை வண்ணத்தைக் கல்லில் வடித்தான். கல்லில் வடித்த உருவத்தின் அழகை சொல்லில் வடிக்கின்றான் கவிஞன். சிற்பியின் உள்ளத்தையும் கவிஞனின் உள்ளத்தையும் உணர்ந்த டி.கே.சி. இருவரையும் அனுபவிக்கிறார். பாடலை நமக்குக் காட்டுகிறார்.

**ஓங்கு நிலையொன்பது,**
**உற்றதிருக் கோபுரமும்**
**பாங்குருவம் பத்துப்**
**பயில்தூணும் - தேங்குபுகழ்**
**மன்னர் பெருமான்**
**வழதிகண்ட தென்காசி**
**தன்னில் அன்றி உண்டோ**
**தலத்து.**

(நிலை ஒன்பது உற்ற: மாடங்கள் ஒன்பது அமைந்துள்ளன. பாங்குருவம் பத்து: அழகிய சிலை உருவங்கள் பத்து: பயில் தூணும்: செதுக்கிய தூண்களும்: மன்னர் பெருமான் வழதிகண்ட: காசிகண்ட பராக்கிரம பாண்டியன் காட்டிய: தலத்து: இந்தப் பூவுலகத்தில்)

கோயில் அமைத்து, பத்து அற்புதமான சிலைகளோடு கொடிமண்டபம் கட்டி, கோபுரமும் கட்டியாகிவிட்டது. பக்தி சித்தியாகி விட்டது. கோயிலுக்கு கும்பாபிஷேக தினம்:

ஆயிரக்கணக்கான பக்தர்கள் குழுமியிருந்தனர். பக்தியும் ஆனந்தமும் கோலாகலமும் குவிந்து கும்மாளம் போட்டது. அதைப்பார்த்த பராக்கிரம பாண்டியனின் எண்ணம் புதியதாய் இருந்தது. எத்தனையோ கோயில்கள் கட்டப்படுகின்றன. நாளடைவில் அது பழுதடைந்து விட்டால் திருப்பணி இல்லாது கவனிப்பாரின்றி பிற்பட்டுப் போய்விடும். அப்படியொரு நிலை இக்கோயிலுக்கும் வந்து விட்டால், அவனால் அதைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. அப்படியே சன்னிதியில் பூமியில் தன் உடல்பட வணங்குகிறான். யாரைப் பிரார்த்தனை பண்ணுகின்றான் அவன் என்று டி.கே.சி விளக்குகிறார்.

ஆரா யினும், இந்தத்
        தென்காசி மேவுபொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால்,
        அப்போது அங்கு வந்த(து) அதனை
நேராக வேயொழித்
        துப்புரப் பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன்
        பராக்கிரம பாண்டியனே

(ஆராயினும்: இனிமேல் ஐந்நூறு வருஷங்கள், ஆயிர வருஷங்கள் கழிந்து அப்போது வாழும் மக்களில் யாராவது; இந்த தென்காசியில் மேவு பொன் ஆலயத்தை; இந்தத் தென்காசியிடம் அமைந்துள்ள அழகிய ஆலயத்தில்; வாராததோர் குற்றம் வந்தால்; எதிர்பாராத பழுது ஏதேனும் ஏற்பட்டால்; அப்போது அங்கு வந்து; அந்தச் சமயத்தில் ஆலயத்துக்குச் சிரத்தையுடன் வந்து; அதனை நேராகவே ஒழித்து; அந்தக் குறையை உடனடியாகவே நீக்கி; புரப்பார்களை; ஆலயத்தைப் பாதுகாக்கும் தர்மவான்களை; நீதியுடன் பாரார் அறிய; சாஸ்திர முறைப்படி இதோ நிற்கிற உலகத்தால் சாட்சியாக; பணிந்தேன். நன்றியுடன் வணங்குகின்றேன் பராக்ரம பாண்டியனே: பராக்கிரம பாண்டியனாகிய நான்தான்)

பாண்டியனுக்கு விசுவநாத சுவாமியிடம் சொல்லில் சொல்லிவிட இயலாபக்தி. அக்கோயிலும் கோபுரமும் அவனுக்கு அப்படியொரு பக்தியை தினந்தோறும் நல்கிக் கொண்டே இருந்தது. தினந்தோறும் வந்துரைத்து திருவாசகம், தேவாரமும்பாடிப்பாடி துதித்துக் கொண்டிருந்தான். ஒரு வருடத்திற்குள் அவனது ஆயுட்காலம் முடிந்தது. அவனது சமயப் பண்பாட்டையும், பக்தியையும் கவனித்து உடனிருந்த ஒரு கவிஞர் அக்கவிஞன், அதைக் கருங்கல்லில் பொறித்து

வைத்து விட்டான். அவன் எங்கே போய்விடுவான்? குற்றமற்ற பக்தி கொண்ட பராக்கிரமன் எங்குதான் செல்லமுடியும்? கோயிலில் வீற்றிருக்கும் அறுபத்து மூவர் நாயன்மாரோடு அறுபத்து நான்காவது நாயன்மாராய் அமர்ந்து விட்டான் என்று உறுதியாய் உரைக்கிறார்.

கோதற்ற பக்தி
அறுபத்தி மூவர்தம்
கூட்டத்தி லோ,
தீதற்ற வெள்ளிச்
சிலம்பகத் தோ செம்பொன்
அம்பலத் தேடி,
வேகத்தி லோ, சிவ
போகத்திலோ விஸ்வ
நாதன் இரு
பாதத்திலோ, சென்று
புக்கான் பராக்ரம
பாண்டிய னே!

இப்போது கோபுரம் நிற்கும் நிலையைப் பார்க்க அந்தப் பரம பக்தனான பராக்கிரம பாண்டியன் இல்லை.

பெரிய ஆறுதல்தான் என்று டி.கே.சி. கட்டுரையை முடிக்கிறார். (கல்கி - பொங்கல்மலர் 1947)

# டி.கே.சி.யும் நாட்டுப் பாடல்களும்

பூர்வமான தமிழ்ப் பாடல்கள் எத்தனையோ தொலைந்து போய்விட்டன. அகஸ்தியர் பாடல்கள் மிச்சம் ஒன்றுமே இல்லை என்று சொல்லும்படி எல்லாம் தொலைந்து போய்விட்டன.

முத்தொள்ளாயிரம் இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களில் நூறுதான் மிஞ்சியிருக்கிறது. அவ்வையார் பாடல்கள், எல்லாம் போய் பத்தோ இருபதோ மிஞ்சியிருக்கிறது. கம்பர் பாடல்களும் வேண்டிய மட்டும் தொலைந்து போய் இருக்கின்றன.

இவைகளை எண்ணியெண்ணி நமக்கு மனம் நோகிறது. இனி, இவ்வளவு நஷ்டதேதோடு இன்னொரு நஷ்டத்தையும் சேர்த்து, க ணக்கு வைக்க வேண்டியிருக்கிறது.

நாட்டுப் பாடல்கள், ஆயிரக்கணக்கான வருஷங்களில் உண்டாய்வந்த பல்லாயிரக்கணக்கான பாடல்கள் தொலைந்து போய் இருக்கின்றன. இந்த நஷ்டமே பெரிய நஷ்டம் என்று கூடச் சொல்லத் தோன்றும். ஏனென்றால் அவைகள் தாமாக அனாயாசமாக விளைந்த செல்வங்கள்.

நாட்டுப்புறத்து மண்ணிலிருந்தும், மரத்தில் இருந்தும், செடியிலிருந்தும், கொடியிலிருந்தும் பூத்த நறுமணம் கொண்ட மலர்கள் அவைகள். நம் கைக்கு வந்தவை மிகச் சில.

அவைகளில் சில மிகப் பூர்வமானவை. வேறு சில சமீபத்தில் உண்டானவை. ஆனாலும் அவைகளில்த் தமிழ் நாட்டு மண்ணின் அற்புதமான மணம் கமழப் பார்க்கிறோம்.

எத்தனையோ விஷயங்கள் பற்றி இந்தப் பாடல்கள் நம்முடன் ஒட்டிப் பேசுகின்றன. தமிழ் பாஷையின் லாவகங்களும் தாளங்களும் தேனினும் இனிய இன்னிசைகளும் அவைகளில் நிறைந்திருக்கின்றன.

சரி, ஒரு விஷயத்தைப் பார்க்கலாமா:

தற்சமயம், அதிலும் யுத்தம் உலகத்தைத் தூள்பட மிதித்துத்

தாண்டவம் ஆடிக் கொண்டிருந்த காலத்தில்ப் பணம் எங்கே பார்த்தாலும் மலிந்து இருந்தது. பணப் பெருக்கைச் சொல்ல வேண்டுமானால் நூறு என்றும் ஆயிரம் என்றும் லஷம் என்றும் சொன்னால் பொருளில்லை. கோடி பல கோடி என்று சாதாரணமாய்ச் சொல்லும்படியாக இருந்தது. இது நாம் பார்த்த விஷயம். இந்த உண்மையோடு வேறு ஒரு உண்மையையும் பார்க்க நேர்ந்தது. வயிற்றுக்கு ஆகாரம் கிடையாது. அரிசி கிடையாது. "அவுன்ஸ்" கணக்கில் அளந்து சாப்பிட வேண்டும் என்று ஏற்பட்டுவிட்டது. இதைவிட தரித்திரம் தசை என்பது ஒன்று உண்டா!

பழைய காலத்திலும் இந்த உண்மையைத் தெரிந்து அனுபவித்திருக்கிறார்கள். எப்படி அனுபவித்தார்கள்.

நெல்லுமணி இல்லாத
நீள்நிலத்தில்க் காசுபணம்
கல்லும் மண்ணும்
அல்லவோ காவலவா

சாப்பாட்டுக்குநெல்லுஇல்லாதஊரில்பொற்காசும்வெள்ளிப்பணமும் மலையாகக் குவிந்திருக்கட்டுமே. என்ன பிரயோசனம்.

நெல்லுமணி இல்லாத
நீர் நிலத்தில், காசுபணம்
கல்லும் மண்ணும்
அல்லவோ காவலவா

இந்தப் பாடல் மனுஷனுடைய உள்ளத்தில் இருந்து வந்தது என்று சொன்னால்ப் போதாது. தமிழ்நாட்டு மண்ணில் இருந்தே வந்தது என்று சொல்ல வேண்டும்.

பொருளாதாரம் அப்படி இருக்கட்டும் இனி,

மக்களுடைய நடத்தைகளைப் பார்த்தால் ஏதோ பிறவியிலிருந்தே சிலர் கேடானவர்களாய் இருக்கிறார்கள் என்று சொல்லவேண்டியிருக்கிறது. அவர்களுக்கு என்ன புத்தி புகட்டினாலும் பிரயோசனம் இல்லை. என்ன உபசாரம் செய்தாலும் பிரயோசனம் இல்லை. வாழ்க்கையில் என்ன வசதி செய்து கொடுத்தாலும் பிரயோசனம் இல்லை. நல்லவர்களோடு பழக சந்தர்ப்பம் கொடுத்தாலும் குணம் மாறாது. இந்த விஷயம்

நாட்டுப் புறத்தான் ஒருவன் மனசில் ஆழமாய்ப் பதிந்துவிட்டது. அந்த மனக்கசப்பில் இருந்து பாடல் வருகிறது.

எருக்கலைக்குத் தண்ணிகட்டி
எத்தனைபூப் பூத்தாலும்
மருக்கொழுந்து வாசமுண்டோ
மலைப்பழனி வேலவனே

எருக்கலைச் செடிக்கு கொத்திக் கொடுக்க வேண்டாம். தண்ணீர் பாய்ச்சவும் வேண்டாம்தான். ஆனாலும் கொத்திக் கொடுத்து பண்ணை குழித்து தண்ணீர் கட்டினாலும், அது காரணமாக ஒன்றுக்கு நூறாய்ப் பூத்தாலும், பூவில் வாசனை வந்துவிடவா செய்யும். வரவே வராது.

அதே மாதிரி கயவர்களும் என்ன செய்தாலும் அவர்கள் திருந்தப் போவதில்லை.

பழனி மலைமேல் வீற்றிருக்கும் வேலவனைப் பார்த்து அடிவானத்தில் இருந்தே கதறின மாதிரி இருக்கிறது தடித்த பாவம்.

எருக்கலைக்குத் தண்ணி கட்டி.
எத்தனைபூப் பூத்தாலும்
மருக்கொழுந்து வாசமுண்டோ,
மலைப்பழனி வேலவனே.

இனிக் காதல்க்கவி ஒன்றைப் பார்க்கலாம். அது ஒரு நாடகமே தான்.

ஒரு நாட்டுப்புறத்துப் பெண். அவள் பெயர் முத்து வீராயி. அவளுடைய அழகும் கட்டும் பக்கத்து ஊர் இளைஞன் ஒருவனது மனசைக் கவர்ந்துவிட்டன.

அவளை மணக்க அவன் எவ்வளவோ பிரயத்தனம் செய்தான். பல சந்தர்ப்பங்களில் அவளை நேரில்க் கேட்டும் பார்த்தான். இணங்கின பாடாக இல்லை அவள். அதன்மேல் வாழ்க்கையில் வெறுப்புத் தட்டிவிட்டது அவனுக்கு தேகத்தைப் பேணவில்லை. தலையைப் பேணவில்லை. இந்த விதமாக வருஷம் ஒன்றாகிவிட்டது. ஏன் மாசம் ஒன்றரையும்கூட ஆகிவிட்டது.

இந்த நிலையில் பெண்ணைச் சந்திக்க நேர்ந்தது இளைஞனுக்கு அவன் அவளிடம் தன் கஷ்டத்தைச் சொல்லுகிறான்.

ஒருவ ருஷமும்
ஒண்ணரை மாசமும்
உன்னையும் காணாமல்
என்னையும் தேய்க்காமல்
சடை ப டர்ந்ததும்
சன்யாசி ஆனதும்
சம்மதமோ முத்து
வீரா யி

சடை படர்ந்து சன்யாசிக் கோலம் அல்லவா எனக்கு வந்துவிட்டது. ஆனாலும் உன் மனம் இளகவில்லையே.

ஒருவ ருஷமும்

காதல் இந்த விதமாய் சோகத்தோடு பேசுகிறது. சோகம் நம் மனசை எளிதில் தட்டி விடுகிறது. காதல் இருக்கட்டும். இனி பக்தி எப்படிப் பேசும் என்பதைப் பார்ப்போம்.

சிவபூஜையில் ஈடுபட்டவர்களான இருவர் ஒரு இரவு ஒரு புண்ணிய ஸ்தலத்தில் சத்திரத்துத் திண்ணையில்ப் படுத்திருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரே ஆத்திரம் அதிகாலையில் எழுந்து நந்தவனத்தில் புஷ்பம் எடுத்து கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு பூஜை செய்ய வேண்டும் என்பதாக ஆத்திரம்.

காலை ஐந்து மணிக்கே விழித்துவிட்டார்கள். ஆனாலும் ஒரே கும் இருட்டாய் இருக்கிறது. இன்னும் விடியவில்லையே. எப்போது விடியும் என்று ஒருவர் அடுத்தவரை ஆத்திரத்தோடு கேட்கிறார்.

பொழுதெப்ப விடியும்
பூஎப்ப மலரும்
சிவன் எப்ப வருவார்
பலனெப்ப தருவார்

அடுத்தவர் பதில் சொல்லுகிறார்.

கிழக்கு வெளுத்துவிட்டது என்பதை அறிந்துகொண்டவராய் எக்களிப்போடு பதில்ச் சொல்லுகிறார்.

பொழுதிப்ப விடிந்தது
　　பூஇப்ப மலர்ந்தது
சிவனிப்ப வந்தார்
　　பலன்இப்ப தந்தார்

சிவபூஜையின் பயனும் ஆனந்தமும் அப்படியே கைக்கு வந்த மாதிரி பேசுகிறார் பக்தர்.

மேலே சொன்ன பாடல்களில் உண்மையான தமிழ்ப் பண்பும் கவிப்பண்பும் நிறைந்திருக்கின்றன. இலக்கண ஆசிரியர்களுக்கு ஒத்த பாஷை அல்லதான். ஆனால் இதயத்துக்கு ஒத்த பாஷை.

பாடப்பாட நாவில்த் தமிழின் அற்புதமான ருசி தட்டும்.

*(6,2,1949 திருச்சி வானொலியில் ஒலிபரப்பியது)*

# டி.கே.சியின் பன்முகங்கள்

- கல்வி
- வசனம் (உரைநடை)
- சமயம்
- தமிழிசை இயக்கம்
- பண்பாடு

## கல்வி

அன்றைய காலத்தில் திண்ணைப் பள்ளிக் கூடம் தான் கல்விக் கூடமாக இருந்தது. மணல்பரப்பி அதில் எழுதக் கற்றுக் கொடுப்பார்கள். பின் ஓலை, எழுத்தாணி என்றாகி விட்டது. பின் தான் சிலேட்டு வந்தது. டி.கே.சி. பள்ளி விட்டு வந்ததும், 'டியூஷன்' வீட்டில் தொடங்கி விடும். ஒரு டியூஷன் முடிந்து ஆங்கில வாத்தியார் வந்து விடுவார். இப்படி இரவு பத்துமணி வரை சென்று விடும். "விளையாட்டு இருக்கவே இருக்கு. எப்பவும் விளையாண்டுக் கிடலாம்" என்று டி.கே.சியின் தந்தையார் கூறிவிடுவார். டி.கே.சிக்கு விளையாட்டும் வேலையும் தான் ஆனந்தம் பேரானந்தம். அது தான் அவருக்கு கல்வி என்று பிற்காலத்தில் கூறுகிறார். இந்த டியூஷனின் நெருக்கடியும், அதில் அவர்கள் கூறும் பழங்காலப் பாடல்களும், நம் நாட்டுக்கு ஒவ்வாத பாட முறைகளும் அவர்களுக்கு அலுப்பாக இருந்திருக்கின்றது. ஆங்கில வாத்தியார் தேவையில்லாது தனக்குத் தெரிந்த ஆங்கிலச் சொற்களையெல்லாம் கொட்டி விட்டுப் போய்விடுவார் என்பார்கள். இந்த நெருக்கடியில் உணவைக் கூட ரசித்துச் சாப்பிட இயலாது போயிற்று என்கிறார் அவர். அவரது உயர்நிலைப் படிப்பு திருச்சி உயர்நிலைப் பள்ளியில் தொடங்கியது. அந்நாட்களிலும், வகுப்புகளில் கற்றதை விட, அவரது நண்பர்களுடன் விளையாடும் போது தான் கற்றுக் கொண்டது தான் கல்வி என்கிறார். அவருக்கு கல்லூரிப் படிப்பு சென்னைக் கிறிஸ்துவக் கல்லூரியில் கிடைத்தது. அங்கு சிறந்த புலமையும், தெளிந்த உரைவளமும், நுண்ணுணர்வும் வாய்ந்த ஆசிரியர்கள் இருந்தனர். அவர்கள் தத்தம் துறையில் சிறந்து விளங்கினர். அவர்களில் டி.கே.சிக்குக் கற்பித்த திரு. லாஸ் ஹெண்டர்ஸன், ஸ்கின்னர் முதலியோரின் அறிவின் திறத்தையும், அன்பாய் பாடஞ் சொல்லிக் கொடுக்கும் இயல்பையும்

பாராட்டுவார்கள். அந்தக் காலத்தில் மாணவர்கள் பல வயது வித்தியாசத்துடன் இருப்பார்கள். அவர்களுக்கு ஏற்றவாறு பொறுமையாய் ஆசிரியர்கள் இருவரும் கற்பிப்பார்கள். அக்காலப் பாடங்களில் பல விஷயங்கள் மாணவர்களுக்கு விளங்கவில்லை. ஷேக்ஸ்பியர் நாடகமும் அப்படித்தான். அப்போதெல்லாம் மாணவர்கள் தவிக்கும் நிலை கண்டு, "மாணவர்கள் உள்ளம் தொடும் அளவு பாடங்கள் வைக்கவில்லையே" என்று ஸ்கின்னர் வருந்துவார் என்று டி.கே.சி. அவர்கள் கூறுவார்கள்.

டி.கே.சிக்கு ஆங்கிலம் நன்றாக வந்தது. அவருக்கு விஞ்ஞானம், தாவர இயல், உடல் இயல் முதலிய துறைகளைப் பற்றி அறிய அளவு கடந்த ஆவல். ஆகையால் அவை தொடர்பாக பல நூல்கள் வாங்கிப் படித்து, ஐயங்களை ஆசிரியர்களிடம் கேட்டுக் கற்றுக் கொள்வார். இவை தொடர்பான கூட்டங்களுக்குச் செல்வார். பின் பலரோடு கலந்து உரையாடி தம் அறிவைப் பெருக்கிக் கொள்வார்.

வகுப்பில் இவர் அனைத்துப் பாடங்களுக்கும் குறிப்பு எடுக்கும் பழக்கம் உள்ளவர். இவரது குறிப்புகள் மிகவும் தெளிவாக இருக்கும். இவருடன் பயில்பவர்கள் மற்றும் இவரது சுற்றத்தார் வேறு கல்லூரிகளில் படித்தாலும் இவரிடம் வந்து இந்தக் குறிப்புக்களை நகல் எடுத்துச் சென்று, தேர்வில் வெற்றி பெறுவார்களாம். பாடங்களை மனப்பாடம் பண்ணுவதில் இவருக்குப் பற்றுக் கிடையாது. மேலும் இவர் படித்ததை மற்றவர்களிடம் எடுத்துச் சொல்லிப் பகிர்ந்து கொள்வதிலும் அதிக நாட்டம் உடையவர். நம்முடன் இருக்கும் தாவரங்கள், விலங்குகள், மனிதர்கள், . இயற்கைக் காட்சிகள், இயந்திரங்கள் ஆகியவற்றின் இயல்புகளை, தனித்தன்மைகளைக் கவனித்து, உணர்ந்து அனுபவிப்பதில், டி.கே.சிக்குத் தணியாத வேட்கையுண்டு.

இவரது படிப்பு முடிந்த காலத்தில், ஆங்கில மோகம் அதிகம் இருந்தது. (இப்போதும் அதற்குக் குறைந்தது இல்லை 'தமிழ்' படிக்கிறோம் என்றால் நம்மை ஒரு மாதிரி இளக்காரமாகத்தான் பார்க்கிறார்கள்) தமிழில் என்ன இருக்கின்றது? ஆங்கிலத்தில்தான் அனைத்து புத்தம் புதிய விஷயங்களும் இருக்கின்றன என நம்பிக் கொண்டிருந்த காலம். அதற்கு முன், ஆங்கிலப் பள்ளிகள் நிறுவப்படாத காலம். எனவே கிராமங்களில் ஒவ்வொரு ஊரிலும் ஒரு சாவடி இருக்கும். அதில் நம் பண்பைக்காக்கும் விதத்தில், கம்பராமாயணம், திருவிளையாடல் புராணம் முதலிய

தமிழ் நூல்களைக் தாளக்கட்டோடு, இராகத்தோடு பாடி, மாதக்கணக்கில் விளக்குவார் பௌராணிகர். அது தானாக உள்ளத்தில் போய் உட்கார்ந்து விடும். ஆரம்பப்பள்ளிகள் தான் அதிகமாய் இருந்த காலம். குழந்தைகள் கும்மி, கோலாட்டம், முதலிய கலைகளைப் பயின்று வந்தார்கள். மந்தை நாடகம் என்று ஊர்தோறும் நடைபெறும். இசையும், கூத்தும் கவிப்பாங்கும் தமிழ்நாட்டில் கிராமங்கள் காப்பாற்றி வந்தன.

ஆனால்,நகரத்தில்,ஆங்கிலம் படித்தவர்கள் தான் உயர்ந்தவர்கள். ஆங்கிலத்தில்தான் உண்மையை உணர முடியும் என்று ஒரு மாயை நன்கு படித்தவர்களிடையேப் படியத் தொடங்கியது. இதற்குக் காரணம் ஆங்கில ஆட்சி. அப்போது உயர் பதவிகளில் வீற்றிருந்தவர்களால் அறியவைக்கப்பட்ட மாயை. ஆங்கிலம் தெரிந்ததால்தான் உயர்வாய் வாழ்கிறார்கள் என்று கிராம மக்கள் தவறாக எண்ணி விட்டார்கள். ஆங்கில மோகம் மெல்ல மெல்ல தமிழ் மொழியையும், தமிழ்ப் பண்பாட்டையும் அழித்து நசுக்கத் தொடங்கி விட்டது. பெரும்பாலும் அழிந்தே விட்டது எனலாம்.

அவ்வமயம், நம் தாயை நமக்குத் காட்டிக் கொடுக்க ஒரு ரசிகமணி தேவைப்பட்டிருக்கின்றது. நாம் பாக்கியசாலிகள். இல்லாவிடில் நம் தாயைத் தொலைத்து நம்மையும் தொலைத்திருப்போம் நண்பர்களே! ஆம்! நண்பர்களே! ஆம்! நம் தமிழன்னை தன்னைக் காத்துக் கொள்ளவே டி.கே.சிதம்பர நாதனை அனுப்பியிருக்கிறார்.

ஆயிரம் வருஷத்திற்கு முன்னுள்ள மகாகவி ஒருவரின் இதயத்தை அறியக் கொடுத்து வைத்திருக்கின்றது என்கிறார். அதனால் நாம் பாக்கியசாலிகள் என்கிறார். ஆனால் நண்பர்களே! அதை அழிந்துவிடாமல் நம்மிடம் மீட்டு அறிந்து அனுபவிக்கும் வண்ணம் அவர் செய்திருக்கின்ற பண்பே “நாம் பாக்கியசாலிகள்” என்று கூற வேண்டும். நம் தமிழ்ப் பாடல்களின் அமைப்பையும், அழகையும் உணர்ந்து, நம் மொழி, பிறக்கும் போதே இசை, வசனம், தாளம் ஆகியவற்றுடன் இணைந்தே பிறந்து விட்டது என்று எடுத்துக்காட்டி, தமிழ்க் கவியைப் பாட வேண்டும். படிக்கக் கூடாது. பாடப் பாட உணர்ச்சிகள் விஷயங்கள் கலந்த அந்தக் கவி உருவம் மனதிற்குப் புலப்பட்டு, இதயப்பூர்வமாக அனுபவிப்போம் என்பதைக் கற்றுக் கொடுத்த டி.கே.சியைப் பெற்ற நாம், நம் தமிழர்கள் பாக்கியசாலிகள் தானே நண்பர்களே!

இத்தத்துவம் கொண்டுதான், அறிவின் நேர்மையை உண்மையை அறிய வேண்டும். அது எந்தத்துறையானாலும் சரி அதன் உண்மையை அறிய வேண்டும். அது வெறும் வகுப்பறையில் சாத்தியமில்லை என்கிறார். தன் வாழ்வியலில் கற்றதைத்தான் எடுத்துரைக்கிறார். இந்த நோக்கில் பார்க்கும்போது காந்தியும் டி.கேசியும் ஒன்று என்று எனக்குத் தோன்றுகிறது நண்பர்களே! இருவரும் கண்டது "சத்தியத்தின் நிதர்சனத்தைத்தான்". என்ன அப்படித் தானே!

டி.கே.சி. அவர்களின் 'இதய ஒலி' என்னும் கட்டுரை நூலில் அவர் எழுதியுள்ள "நாம் கல்வி கற்ற முறை" என்னும் கட்டுரையைப் படிக்கும் போது அவர்கள் எவ்வளவு தொலை நோக்கோடு எழுதியிருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது.

உடைய உடையக் கற்பலகைகள், சுமக்க சுமக்க மேன்மேலும் புத்தகங்கள், பிஞ்சு விரல்கள் நோக நோக நோட்டுப் புத்தகங்கள், சின்னஞ்சிறு தலையில் அடங்காத் திணிப்புகள் என்னும், அத்தனையும் பிள்ளைகள் தலையில் கட்டும் வியாபாரம் தான் என்கிறார்கள் டி.கே.சி. அவர்கள். பள்ளிப் பிள்ளைகளின் தலையில் சும்மாட்டில் வைக்கும் இலக்கிய இலக்குகளை சமய சரித்திர ஆராய்ச்சி நூற்சுமைகள் என்கிறார்.

**"எழுதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்;**
**இருக்கின்றார் மாணவர்கள் எண்ணில் பல்லோர்;**
**அடுத்தடுத்து விலை கொடுக்கப் பெற்றோர் தாமும்**
**இருக்கின்றார் இருக்கின்றார் இருக்கின்றாரே"**

என்று நூலாசிரியருக்கும், புத்தக வியாபாரிகளுக்கும் டி.கே.சி. அவர்கள் பாடிய பல்லவி.

டி.கேசி அவர்கள் அடுத்த கட்ட வியாபாரத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறார். பரிட்சைகள் எழுதுதல் பற்றிப் பேசுகிறார். பரிட்சைகள்& இவற்றால் வரும் வருமானம் அரசிற்கும், பல்கலைக்கழகத்திற்கும் உரியவை. தேர்வில் மாணவன் தவறினால் லாபம் அரசிற்கும் பல்கலைக்கழகத்திற்கும். எப்படியும் தேறும் வரை அவன் எழுதிக் கொண்டுதான் இருப்பான். தேர்வில் தேறினால் உடனே வேலை கிடைத்து விடுகிறதா என்ன? புலவர் ஜெயங்கொண்டார், கலிங்கனையும் சோழனையும் விட்டு விட்டு.

"வீழ்க வீழ்க மாணவர்
மடிந்து வீழ்க மாணவர்!
வாழ்க வாழ்க பல்கலைக்
கழகம் வாழ்க வீழ்கவே"

என்று பரணி பாடியிருப்பார் என்கிறார் டி.கே.சி. அவர் கூறுவதில் தப்பென்ன இருக்கின்றது? சொல்லுங்கள் நண்பர்களே! இப்போதைய கல்வியின் நிலையென்ன? கல்விக்கூடங்கள் வியாபாரத் தலங்கள் ஆகி விட்டன. புற்றீசல் போல் கல்லூரிகளும், பார்ப்பதெல்லாம் பல்கலைக் கழகங்களும் தோன்றிவிட்டன. அவர்கள் லட்சியம், நோக்கம்& உடல், பொருள், ஆவி அனைத்தையும் பெற்றோர்களிடமிருந்து பணமாக உறிஞ்சிக் கொள்வது தானே தோழர்களே! இன்று நீதிமன்றத்தின் தீர்ப்பில் நம் கல்வி காத்துக் கிடக்கிறது.

டி.கே.சி. அவர்கள் திரு.லாலா லஜபதிராயின் வருத்தத்தை இக்கட்டுரையில் நம்முடன் பகிர்ந்து கொள்கிறார். திரு.லாலா லஜபதிராய் அவர்களுக்கு சில காலம் அமெரிக்க வாசம் செய்யும்படி நேர்ந்திருக்கிறது. மிகவும் ஆனந்தமாய்த் தானே சென்றிருப்பார்.

"அமெரிக்கர்களில் சாமான்ய மக்களுக்கே எத்தனையோ விஷயங்களில் தேர்ச்சி இருக்கிறது. உல்லாச சமயங்களில் விருந்தினரை உவகையூட்டப் பாட்டும் கவியும் கூத்துமாக ஏராளமான சரக்கு வைத்திருக்கிறார்கள். பல்கலைக் கழகங்களில் பட்டம் பெற்றவரோ ஒரு கூட்டத்தினரிடையில் எளிதில் அலங்காரமாய் விளங்குகிறார்கள். அவர்களிடையில் நான் மாத்திரம் ஒன்றுக்கும் உதவாதவனாய்த் தோன்றினேன். இந்தியப் பள்ளிக்கூடங்களில் படிப்பது எவ்வளவு பயனளித்தது என உணர்ந்தேன். பல்கலைக்கழகம் எனக்களித்தபட்டம் பொய்ப்பட்டம் என நாணினேன். அவர்களிடம் "நான் ஒரு பி.ஏ., பி.எல்.," என்று சொல்வது அவமானமாயிருந்தது. என்னுடைய அறியாமையை நோக்கி அவர்கள் உள்ளுக்குள் நகையாடிக் கொண்டிருக்கிறார்கள்."

இந்தியப் பல்கலைக்கழகம் ஒன்றிலே தோன்றிய சிறந்ததோர் மணியான லாலா லஜபதியாருக்கே இப்பாடு என்னில்......? பல்கலைக்கழகத்தை மேல் நாட்டினர் 'தாய்' என்பார்களாம். அப்படியென்னில் நம் பல்கலைக்கழகத்திற்கு, தாய்க்கு நாம்,

"பெற்றாளே பெற்றாள் பிறர் நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று"

என்று வாயார வாழ்த்த வேண்டி புகழ் இதுதான்.

கல்வி இலாகா பழமையைப் பற்றுவது போல் உடும்புக்கும் பற்ற இயலாது. இறந்தொழிந்து போன முறைகளைக் கையாண்டு கையாண்டு கல்விப் பயிற்சியில் உயிர்த் தத்துவம் அணுஅளவும் இல்லாமற் போயிற்று. அது, புத்தம் புதிய முறைகளைக் கையாண்டு உயர்தரக் கல்வியைத் தர வேண்டும். அறிவின் சுவையை ஐந்து வயதிலேயே பருகக் கற்றுக் கொடுக்க வேண்டும். மாணவர்களுக்குக் கற்பிக்கப்படும் ஒவ்வொரு பொருளும் அவர்கள் பருவத்திற்கு ஒத்ததாக, அவர்கள் அனுபவத்துடன் ஒன்றக் கூடியதாக, அவர்கள் மனம் அதில் ஈடுபடுமா என்று ஆசிரியர் கருதிக்கருதி கற்பிக்க வேண்டும். இதுதான் தரமான உயர்தரமான கல்வியாகும். இப்படிக் கற்பிக்கப்படுமானால், எத்தனையோ துறைகளில் முழுகி முழுகிப் புதிதுபுதிதான மணிகளை எடுத்து பலருக்கு உதவும் மேதைகள் ஆக விளங்குவார்கள்.

தொழுவார், வலம் வரு
வார்துதிப் பார்தம்
தொழில் மறந்து

விழுவார், அருமறை
மெய்தெரி வார், இன்ப
மெய்புலி கித் (து)

அழுவார், இரு கண்ணின்
நீர்மல்கு வார், என்னை
ஆளும் அன்னை
வழுவாத செஞ்சொல்க்
கலைமங்கை பால் அன்பு
வைத்தவரே - (சரஸ்வதி அந்தாதி.)

"மனதிற்குள் இருந்து ஆவேசம் பொங்கித் ததும்பக் கலைகளையும் கவிகளையும் ஆய்ந்து கற்கத் தலைப்படுவர். அதுவே இன்பம், அதுவே செல்வம் என்று சாந்துணையும்

கல்லாரோ! ஏனைய பொருளெல்லாம் பொய்க்கும் பொருளென்று கருதி விடாரோ? இப்போதுள்ளபடி "பொருள் மகள்" கடாக்ஷம் இந்தக் கலைமகளை வழிபடுவார்?" கேட்பது டி.கே.சி. நம்மிடம். என்ன பதிலைத் தரப்போகிறோம் அன்பர்களே!

நான் காந்தியண்ணலுக்கு டி.கே.சியை ஒப்பிட்டேன். உண்மைதான். வெறும் புகழ்ச்சிக்கில்லை தோழர்களே! காந்தி தாம் கடைபிடித்ததைத்தான் கூறினார். நம் டி.கே.சி. தாத்தாவும் அப்படியே தான். நம் கல்வி முறை மேல் அவருக்கு நம்பிக்கை இல்லை. அதை வலுவாக நம்பத் தொடங்கியவுடன் தன்னுடைய பேரன்கள், பேத்தி ஆகிய நான்கு பேர்களையும் பள்ளிக்கு அனுப்பவில்லை. ஆனால் அதற்காக அவர்களின் அறிவு வளர்ச்சிக்குப் பொறுப்பு எடுக்காமல் இல்லை அன்பர்களே! அவர் படித்த டியூஷனையும் இவர் அளிக்கும் டியூஷனையும் நாம் இப்போது பார்க்கலாம்.

"பள்ளிக்கூடத்தை தீ வைத்துக் கொளுத்த வேண்டும்" என்று வெறும் வாசகங்களாகச் சொல்லவில்லை. எப்படிக் கற்பிக்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டார்.

பேரன் பேத்திக்குக் கல்வி கற்பிக்க "ராமானுஜாச்சாரியர்" என்னும் ஆசிரியர், கல்கி அவர்களால் சென்னையிலிருந்து வரவழைக்கப்பட்டார். அவர் சென்னை கார்ப்பரேஷன் பள்ளியில் வேலைப் பார்த்துக் கொண்டிருந்தவர். டி.கே.சி. அவர்களுடன் அவர்கள் வீட்டிலேயே தங்கி இருந்து, இரு வருடங்கள், எலிமண்ட்டரி படிப்பைச் சொல்லிக் கொடுத்தார். அவருக்கு டி.கே.சி. அவர்களுடன் மிகுந்த ஈடுபாடு. டி.கே.சிக்கு அவர்களுடன் மிகுந்த அன்பு உண்டாயிருந்தது. எப்படிப் பாடம் கற்பிக்க வேண்டும் என்று இவர்கள் சொன்னார்களோ அப்படியே குழந்தைகளுக்குப் பாடம் கற்பித்து வந்தார். குடும்பத்துடன் ஒருவராகிவிட்டார்.

டி.கே.சி. அவர்களின் பேரன், பேத்திகளுடன் பி.சி.பலராம ராஜாவும் டி.கே.சியிடம் பாடம் கேட்டார்கள். டி.கே.சி. அவர்கள் இவர்களுக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுத்த பாணியே தனி பாணி என்கிறார் பி.சி. பலராமராஜா. (ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு விழா மலர், உலக இதயஒலி வெளியீடு பக்கம் 58)

A.B.C.D யில் இருந்து ஆரம்பித்தோ, அல்லது C A T = C A T பூனை என்றோ கற்பிக்கவில்லை. எடுத்த எடுப்பிலேயே ஹிந்து பத்திரிகை எடுத்துப்படித்து விளக்குவார்கள். அதையே படிக்கச் சொல்வார்கள். நாளடைவில் மொழிபெயர்க்கச் சொல்வார்கள்.

பின் ஏதாவது ஒரு வார்த்தை தெரியவில்லை என்றால் அதை அப்படியே ஆங்கிலத்தில் எழுதச் சொல்வார்கள். பின் மறுநாள் அதற்கு அவர் விளக்கம் சொல்வார்கள். ஆங்கிலம் தெரியாது என்று இருக்கக்கூடாது. அதை வருந்தித்தான் கற்க வேண்டும். பாஷை பிறந்த பின் தான் இலக்கணம் பிறந்தது. அதனால் ஒரு மொழியைக் கற்றுக் கொண்ட பின், அதில் கவிதையை உணரத் தொடங்கிய பின் இலக்கணம் கற்றுக்கொள்ளலாம் என்பார்.

ஒருமுறை கீட்ஸ் என்ற ஆங்கிலக் கவியின் கவிதையின் இருவரிகளை ஒரு தமிழ் பாடலைக் கொண்டு விளக்கினார். அதை நேரிடையாகவும், எளிதாக விளக்கி விடலாம். ஆனால் அக்கவிதையின் உயிரைக் கண்டு உணர வேண்டும் என்று நினைத்தார் டி.கே.சி.

ஒரு கிராமத்து இளைஞன் கோவிலின் வாசலில் ஒரு அழகான பெண்ணைப் பார்க்கிறான். அவளிடம் பேச்சுக் கொடுக்கிறான். அவள் பேசவும் செய்கிறாள். பின் கடைக்கண் காட்டி கோயிலுக்குப் போய் வந்து விடுவதாகக்கூறி கோயிலுக்குள் சென்று விடுகிறாள். சொல்லிவிட்டுப் போனவள் போனவள்தான். அவளுடைய பெயரையும் சொல்லவில்லை. யாரிடம் கேட்டாலும் தெரியாது என்று வேறு சொல்கிறார்கள். அவன் என்ன செய்வது என்று தெரியாது துடிக்கும் துடிப்பு ஒரு பாடலாகத் தெறித்து விழுகிறது.

**இல்லென்பார் தாம் அவரை**
**யாம் அவர்தம் பேரறியோம்**
**பல்லென்று செவ்வாம்பல்**
**முல்லையையும் பாரித்துச்**
**சொல்லென்று காமனையுங்**
**கண் காட்டி கோபுரக்கீழ்**
**நில்லென்று போனார் என்**
**நெஞ்சைவிட்டுப் போகாரே.**

இப்போது கீட்ஸுக்கு வருவோம்
I See her is to love her
and love but her for ever

தானாகவே பொருள் விளங்கி விடுகிறதல்லவா? அந்த வரிகளின் உயிரையும் உணர்ந்து விடுகிறோம் அல்லவா?

தமிழ்ப்பண்பாடும், தமிழ்க் கல்வியும் ஒப்பற்றவை என்பது டி.கேசியின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். கவிதையின்

ஜீவனைப் புரிந்து கொள்ள யத்தனித்தது போய், அறிவியலின் உண்மையை அறிய அவர் தயங்கவில்லை. அறிவியலைப் பள்ளிக்கூட வகுப்புக்கள் எப்படி விளக்க முடியும்? விஞ்ஞான அறிவையும் சரித்திர அறிவையும் வெறும் பாடத்திட்டங்கள் அதாவது 'டெக்ஸ்ட் புக்' கொடுக்க இயலாது என்பது அவரது அனுபவம். வெற்றுச் சூத்திரங்களும் வார்த்தைகளும் தான் மண்டைக்குள் திணிக்கப்படும். தவறு எங்கே இருக்கிறது என்னில் அடிப்படையில் இருக்கிறது. நேர்முகமான கல்வி முறைதான் இதற்கு ஒரே வழி என்று கூறிக்கொண்டிருந்தார். இவற்றைத்தன் எளிய தமிழில் நேருக்குநேர் பேசுவதுபோல் பழகு தமிழ்ச் சொற்களில் எடுத்துச் சொன்னார்.

ரசிகமணி அவர்களுக்கு தாவர இயல் மிகவும் பிடித்த விஷயம். தாவரங்களும் உயிரினங்களும் என்பதைப்பற்றி அடிக்கடி விளக்குவார்கள். கற்காலத்தில் பொதிகை மலையில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட தாவர இனங்கள் (ஷிஜீமீநீவீமீ) இருப்பதைக் கூறி, எல்லோரையும் மலைமேல் அழைத்துக் கொண்டு போவார்கள். புல்லிலிருந்து பலதரப்பட்ட செடிகளின் பக்கத்தில் நின்று எடுத்து விளக்குவார்கள்.

ஒரு சமயம் ரசிகமணி அவர்களின் நெருங்கிய மி.சி.ஷி. அதிகாரி ஒருவர் தன் மகளுடன் டிகேசியைப் பார்க்க வந்திருந்தார். மகளை 'Botany' படிப்பதற்கு அமெரிக்காவுக்கு அனுப்பப்போவதாகவும் அவளை ஆசீர்வதியுங்கள் எனக் கேட்டுக் கொண்டார். உடனே டி.கே.சியும் அம்மா! மிகவும் சந்தோஷம்! இருபது அல்லது இருபத்தைந்தாவது மாடியிலிருந்து அங்கு பாட்டனி படிப்பாய். இங்கு பொதிகைமலை என்றால் எல்லாவற்றையும் தொட்டுத் தடவிப் படிக்கலாம். உயிரோடு வேறு இருக்கும். அங்கு என்னில் அடித்துத் தட்டையாக்கிய பிரஸ் செய்யப்பட்ட உயிரற்றவைகளைக் கொண்டல்லவா படிக்க வேண்டும் பேஷ் என்று கூறினார். I.C.S. நண்பர் தன் பெண்ணை அமெரிக்கா அனுப்பவில்லை.

டி.கே.சி. அவர்கள் B.L. படித்துக் கொண்டிருந்த நேரம். தன் மருமகன் தீர்த்தாரப்பனைத் தினந்தோறும் மாலை 6 மணிக்குத் தன்னைப் பார்க்குமாறு கூறியிருந்தார்கள். தீர்த்தாரப்பனுக்கு தினந்தோறும் ஒரு 30 நிமிடங்கள் சரித்திரம், விஞ்ஞானம், ஆங்கிலம் போன்ற பாடங்களை சொல்லிக் கொடுத்தார். சரித்திரத்தை வெறும் தேதி, வருடம் என்று கூறமாட்டார்களாம். நிகழ்ச்சிகளாக சுவைபடக் கூறுவார்கள். அப்போது உலக

மகா யுத்தம் நடந்து கொண்டிருந்தது. டி.கே.சியோ, தன் கையில் ஒரு புத்தகமோ, சிறு குறிப்புகள் கூட வைத்திருக்க மாட்டார்களாம். தினந்தோறும் 30 நிமிடங்கள் இந்த படிப்பு நடந்து கொண்டிருந்தது. இதைக் கண்ட டி.கே.சி அவர்களின் தமையனார், வேறு சில உறவினர்கள் போன்றவர்களுக்கு இந்தச் சிறுகால அவகாசத்தில் என்ன பெரிய படிப்பு படித்திட முடியும் என்று தோன்றியது. உடனே அவர்கள் ஒருநாள் டி.கே. சியிடம் கேட்டார்கள். அதற்கு விடையாக டி.கே.சி. அவர்கள் தீர்த்தாரப்பனை அழைத்தார்கள். நேற்று நடந்த குற்றாலத்தின் தேர்த்திருவிழா பற்றியும். உலக மகா யுத்தம் பற்றியும், அதன் காரணங்கள் பற்றியும் ஆங்கிலத்தில் கேள்விகள் கேட்க, அதற்கு அழகாக ஆங்கிலத்தில் தீர்த்தாரப்பன் பதில் கூறினார். டி.கே. சியின் சகோதரரும், உறவினர்களும் வியந்து போய்விட்டனர். மெட்ரிகுலேஷன் படிக்கும் மாணவன் கூட இப்படி ஆங்கிலத்தில் பேச முடியாது. 5ஆம் வகுப்பு படிக்கும் இவன் எப்படி இப்படியொரு தெளிவான ஆங்கிலத்தில் பதில் கூறுகிறான் என்று ஆச்சரியப்பட்டு மகிழ்ந்தார்கள்.

"இது ஒன்றும் விந்தையில்லை. பள்ளிக்கூடங்களில் புத்தகங்களைக் கொண்டு படிக்கச் சொல்கிறார்கள். உண்மையில் ஆசிரியர் நேரடியாக உறவாடிக் கற்பிப்பதில்லை. மாணவர்கள் தயங்குகிறார்கள். அறிவு மழுங்க வைக்கப்படுகிறது என்று பள்ளிகளில் ஒழுங்கான கல்வி முறையில்லை என்று டி.கே.சி விளக்கம் கொடுத்தார்கள்.

பின், தீர்த்தாரப்பன், அவரது தம்பி, திருமதி பிச்சம்மாள் அண்ணியின் சகோதரர்கள் ஆக 4,5 பேர்கள் இருந்து கல்வி கற்றனர். 1928 ஆம் ஆண்டு வரை இப்படி அவருடன் மாணவர்கள் தங்குவது நிகழ்ந்து கொண்டிருந்தது. டி.கே.சி. அவர்கள் மகன் 'தீபன்' ம் இவர்களுடன் பள்ளியில் படித்து வந்தான். அப்பொழுது டி.கே.சி. அவர்கள் பள்ளியில் உள்ள சாரணர் இயக்கத்தில் கலந்துகொள்ளுமாறு அறிவுரை கூறினார். சாரண இயக்கத்தில் குற்றாலம் மற்றும் சுற்றியுள்ள இடங்களுக்கு மாதா மாதம் அழைத்துச் செல்வர். அவர்களே சமைத்து உண்ண வேண்டும். இயற்கையை அறிய வாய்ப்பு இருந்தது. ஒருவரோடு ஒருவர் உறவாடிட இது வழிவகுத்ததால், டி.கே.சி. அவர்கள் சாரணர் இயக்கத்தை மிகவும் ஆதரித்தார். இதைவிட இன்னொன்று முக்கியமான விஷயம். இரு தினங்களாவது இந்தப் பள்ளிக்கூட இம்சையிலிருந்து தப்பிக்கலாம் என்பதே.

இத்துணை பேர்கள், அதுவும் சிறுவயது பாலகர்கள் ஓரிடத்தில் தங்கி இருக்கும் போது ஒரு சில சலசலப்புகள் வரத்தான் செய்யும். அதை டி.கே.சி. அவர்கள் மிகவும் அழகாக கையாள்வார் என்று அவரது பேரன்களில் ஒருவரான ஜி.குத்தாலிங்கம் அவர்கள் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்கள் தன் கட்டுரையில். (உலக இதய ஒலி நூற்றாண்டு மலர், பக்கம் 145)

"உறவினர் பலரும் அங்கிருந்து படித்து வந்தார்கள். சிறுவர்களிடம் சச்சரவு ஏற்படுவது உண்டு. தாத்தாவின் காதில் விழுவதுண்டு. உடன் கேட்பது கிடையாது. மதியம் சாப்பாடு எல்லோரும் ஒன்றாக இருந்து சாப்பிடுவது உண்டு. மோர் சாதம் சாப்பிடும் போது கண்டிப்பார்கள். அதற்கு முன்பே கண்டித்தால் பையன் சாப்பிடாமலேயே எழுந்துவிடக்கூடாது என்று நினைப்பார்கள்.."

ரசிகமணி அவர்கள் நாம் எழுதும் எழுத்துக்களைப் பற்றிப் பேசும் போது, "அச்சு எழுத்துக்கள் கண்ணை உறுத்தும்படி நெட்டுக் குத்தாக இராமல் வலது பக்கம் கொஞ்சம் சாய்ந்தே இருக்க வேண்டும்" என்று ஒரு முறை கூறினார்கள். பின் அதை தன் காரியதரிசியிடம் அம்மாதிரியான எழுத்துள்ள புத்தகத்தைக் கொணரச் சொல்லிக் காண்பித்தார்கள். (அன்னப்பறவை &கி. ராஜ நாரயணன், அன்னம் வெளியீடு, பதிப்பு 2007 பக்கம் 48)

"எந்தத் துறையாய் இருந்தாலும் எல்லோரும் பயன் பெற வேண்டும் எல்லோரும் அனுபவிக்க வேண்டும் என்பதே தாத்தாவின் குறிக்கோளாய் இருந்தது" என்கிறார் டி.கே.சியின் பேரன் தீப.நடராஜன் அவர்கள். கல்வி பற்றி நெடுகிலும் ஓயாத சிந்தனையில் இருந்திருக்கிறார்கள். இதைக்குறித்து இடைவிடாத கருத்துப் பரிமாற்றம், கவலைகள் ராஜாஜியிடமும் கல்கியிடமும் நிகழ்ந்திருக்கின்றன. கல்கியின் மருமகன் திரு.கோபாலன் அவர்களை உண்மைக்கல்வி கற்க குற்றாலம் அனுப்பி வைத்தார் கல்கி அவர்கள். கல்லூரியில் அவரை மயங்க வைத்த கோல்ட் ஸ்மித் கவிதைகளை நன்றாக விளங்க வைத்தார்கள் டி.கே.சி. மேலும் கல்லூரியில் பாடம் இல்லாத ஜெரோம்கேஜெரோம், ஏ.ஜி. கார்டினார், வாஷிங்டன் இர்விங் போன்ற ஆசிரியர்களை எல்லாம் திரு.கோபாலனுக்கு பரிச்சயம் செய்து வைத்தார்கள்.

"குற்றால மலையின் மேல் மொட்டைப் பாறை இருக்கிறது. ஐந்தருவியைத் தாண்டிக் கொஞ்ச தூரம் போவீர்களானால் அந்தப் பாறையை அடைந்து விடுவீர்கள். அந்தப் பாறையில் நின்று கொண்டால் நீலவானம் தெரியும். இடையில் வெண்மேகம்

ஓடும்" என்று தன் நினைவுப் படலத்தைத் திறக்கிறார் தீப.நடராஜன் அவர்கள். (கவிதையும் ஆனந்தமும் தீப.நடராஜன்) டி.கே.சி அவர்களின் வெளிவழிக் கல்வி வருகிறது.

அந்த மொட்டைப் பாறையில் ஸத்சங்கம் மாலை 5.30 மணி அளவில் நடக்கும். இரண்டு பேரிலிருந்து 5 பேர் வரை வருவர். இருட்டுவது கூடத் தெரியாமல் பேச்சுப் போகும். இந்த மலை ஏறுவது ஒரு கலை என்று அவரிடமிருந்து அறியலாம். எப்படி ஏறுவது என்று சொல்லிக் கொடுக்கிறார் தீப.நடராஜன் அவர்களுக்கு.

"ஏறும் போது ஒரேயடியாக விறு விறு என்று ஏறக்கூடாது. பத்தடி பதினைந்தடிக் கொரு தரம் நின்று விட வேண்டும். நின்று நின்று ஏறினால் மலைமேல் ஏறுகிறோம் என்றே நமக்குத் தோன்றாது. ஏன் எவரெஸ்ட் சிகரத்திற்கே இப்படியே எளிதாக ஏறிவிடலாம்" என்று டி.கே.சி. சொல்வார்கள்.

"மெல்ல மெல்ல அந்தப் பாறை மீது ஏறி துண்டை உதறி உட்கார்ந்தாகிவிட்டது. வேறு யாரும் வரவில்லை. தாத்தா மட்டும்தான். ஏதோ பாடலை முணுமுணுத்துக் கொண்டிருந்தார். பின் இருவரும் இறங்கினார்கள். இறங்கும் போது பேரனின் கவனத்தை ஒரு மரம் ஈர்த்தது. அந்த மரம் ஒரு சிறு பாறையின் மேல் முளைத்து நின்று கொண்டிருந்தது. உடனே பேரன் தாத்தாவிடம் இதைப் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க இயலுமா? பகிர்ந்து கொண்டார்.

தாத்தா முதலில் பக்கத்தில் போய்ப் பார்த்தார். பின் பேரனையும் வந்து பார்க்குமாறு அழைத்தார். அந்தப் பக்கத்தில் ஒரு பிளவு மேலிருந்து கீழே வரை வெடித்திருந்தது. அந்தப் பிளவின் வழியாக வேர் பூமிக்கு வந்து பதிந்துவிட்டிருந்தது.

பாறைக்கு அடியிலுள்ள மண்ணில் விதை விழுந்திருக்கிறது. அது துளிர்த்து செடியானவுடன், பாறை அதற்கு இடம் கொடுத்து இருக்கிறது. அதன் பயன் பாறையில் பிளவு உண்டாகி விட்டது. செடி வளர்ந்து பாறையை விடப் பெரியதாய் வளர்ந்து விட்டது.

எந்த விஷயமும் நயமாகவும் அன்போடும் சொன்னால் எல்லாம் தன்னால் நடந்து விடும். நம் வார்த்தைக்கு மதிப்பு உண்டு. கடிந்து கொள்வோமானால் ஒருவரும் அதை ஏற்கமாட்டார்கள் என்று தாத்தா பேரனுக்குக் கூறி, அதையொட்டிய பாடலைச் சொன்னார்கள்.

வெட்டெனவை மெல்லெனவை
        வெல்லாவாம், வேழத்தில்ப்
பட்டுருவும் கோல்ப் பஞ்சில்ப்
        பாயாது & நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்கு விடாப்
        பாறை& பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

பாடலை ஒரு தடவை சொன்னார்கள். இரண்டு தடவை பாடினார்கள். பேரனைத் திரும்பச் சொல்லச் சொன்னார்கள். இரண்டு தடவைகள் சொன்னதும் பாடல் பேரனுக்கு உள்ளத்தில் பதிந்து விட்டது. விளக்கம் ஏதும் சொல்லவில்லை. வேழம் என்றால் யானை. கோல் என்றால் அங்குசம். அன்றிரவு பேரனின் நோட்டில், பதம்பிரித்து அழகாக எழுதிக் கொடுத்து விட்டார். "கடினமான வார்த்தைகள் இதமான வார்த்தைகளை வென்று விட மாட்டாது" என்றொரு குறிப்பும் எழுதிவிட்டார்.

பிறிதொரு நாளில் சிற்றருவி சலசலத்து ஓடிக்கொண்டிருந்தது. அதனருகில் தாத்தாவும் பேரனும் சென்று கொண்டிருந்தனர். அப்போது, தாத்தா, பேரனிடம் சிறு கூழாங்கல்லை எடுத்து தண்ணீரில் எறியச் சொன்னார்கள். பேரன் எறிந்த கல், தண்ணீரில் குழி பறித்துக் கொண்டு மூழ்கி விட்டது. அடுத்த வினாடி தண்ணீரில் ஏற்பட்ட பிளவு மறைந்து விட்டது.

தண்ணீர் இரண்டாய்ப் பிளந்தால் உடனே தானாகவே ஒட்டிக் கொள்ளும். இரண்டாய்ப் பிளந்தக் கல்லை ஒட்ட வைக்க இயலாது. தங்கக் கம்பிகள் இரண்டாய் ஒடிந்தால் தட்டாசாரி உலையில் வைத்து ஒட்டி விடுவார். இதுபோல் மனிதரில் மூன்று வகை உண்டு. கோபத்தால் பிரிந்து போன மனிதர்கள் பண்பாடு காரணமாகவும், மனநிலை காரணமாகவும், எப்படி நடந்து கொள்வர் தெரியுமா? என்று கேட்டுவிட்டு டி.கே.சி. அவர்களே ஒரு கவிதையைக் கூறினார்.

கற்பிளவோ டொப்பர்
        கயவர்; கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும்
        உண்டாமால் - விற்பிடித்து
நீர்கிழிய எய்த

வடுப்போல மாறுமே
சீர்ஒழுகு சான்றோர்
சினம்.

1925ல் டிசம்பர் மாதத்தில் டி.கே.சி. தன் குடும்பத்தினரையும் தன் சகோதரி குடும்பத்தினரையும் சென்னை மகாணத்திலுள்ள பல ஊர்களுக்கு அழைத்துச் சென்றார். அந்தந்த ஊர் சம்பந்தப்பட்ட சரித்திர விளக்கங்கள், அக்காலத்து அரசர்கள் பற்றியும் அவர்கள் ஆற்றிய செயல்கள் பற்றியும், மாமல்லர், ராஜராஜன், திருநாவுக்கரசர், திருமலை நாயக்கர் இவர்களின் சரித்திர சம்பந்த விளக்கங்களையும் பிரயாணத்தின் போது கூறியதில் நல்ல கல்விச் சுற்றுலாவாக அமைந்தது. மேலும் முன்பு வகுப்பில் படித்தவை யாவும் நினைவு கூர்ந்து பசுமரத்தாணிபோல் மனதில் பதிந்து விட்டது.

அருவியில் குளிப்பது எப்படி என்று டி.கே.சி. அவர்களிடம் தான் கேட்டுத் தெரிந்து கொள்ள வேணடும். ஒருசிலர் காலையில் போனால் மாலையில் வருவார்கள். ஒரு சிலரை சீசன் முடிந்தல்லவா அருவி விட்டு வருவார் என்று கேலி பண்ணுவார்கள்.

முதலில் அருவி பக்கம் போக வேண்டும். அதன் சாரல் நம்மீது பட்டவுடன் குளிரும். எண்ணெய் தேய்த்துக் கொண்டு அருவியில் குளிக்க வேண்டும் என்பது சம்பிரதாயமாகப் போய் விட்டது. நம் உடலில் தண்ணீர் விழும் இடங்களில், தலை, காது மடல் ஆகிய இடங்களில் எண்ணெய் வைத்துக் கொள்ளலாம். குளிர்காலத்தில் எண்ணெய் வைத்துக் கொண்டால் உடலுக்கு மிகவும் இதமாக இருக்கும். சரி. அருவியின் உள்ளே சென்று விட வேண்டும். அருவியின் அடியில் நிற்க வேண்டும் உடனே குளிரும். சிறிது நேரம் கழித்து, உடலில் மெதுவாக குளிர் மாறி சூடு பரவத் தொடங்கும். அதுதான் சரியான சமயம். வெளியில் வந்து விட வேண்டும். பின் மீண்டும் குளிக்க விருப்பம் இருந்தால் இது போல்தான் குளிக்க வேண்டும். அதுதான் ஆனந்தமாக இருக்கும். மற்றவையெல்லாம் உடம்பைச் சித்ரவதை செய்வது போல் என்கிறார்.

டி.கே.சி. அவர்களுக்கு விவசாயத்தில் நல்ல அறிவு உண்டு. தன் தமையனார் இறந்ததற்குப்பின் இவர் சிறிது காலம் நிலபுலங்களைக் கவனித்து வந்தார். அப்போது பத்து ஏக்கரில் தென்னை நட்டிருந்தார்கள். அது காய்க்காது காலந்தாழ்த்திக்

கொண்டிருந்தது. இது இவரது கவனத்திற்கு வந்ததும் அங்கு போய் ஒரு முறை கவனமாய் சுற்றிப் பார்த்தார். தென்னையோடு பனையும் புன்னையும் வளர்ந்திருந்தது. தென்னையின் உணவை பிற இரண்டு மரங்களும் பகிர்ந்து கொண்டதில், தென்னைக்குத் தேவையான சத்துக் கிடைக்கவில்லை. அதை இவர் அறிந்து கொண்டார். ஆட்களை அழைத்து பனை, புன்னை மரங்களை வெட்டச் செய்தார். முதலில் அவர்கள் பச்சை மரத்தை வெட்டுவதா என்று தயங்கினார்கள்.

(நாமாக இருந்தால் உடனே வெட்டி விட்டுத்தான் மறு வேலை. நமக்குத்தான் பசுமையே பிடிக்காதே. கான்கிரிட் கட்டிடமாக அல்லவா வைத்துக் கொண்டிருக்கிறோம். என்ன அன்பர்களே! எங்களது பக்கத்து வீட்டில் பூத்துக் குலுங்கி மணம் பரப்பிய வேம்புவை வெட்டி விட்டார்கள். ஆஸ்பத்திரி கட்டிடத்தை அது மறைக்குதாம். நல்ல இளங்காற்றுடன் வரும் வேப்பம் பூவின் மணம் இனிக் கிடைக்குமா அவர்களுக்கு நண்பர்களே!)

டி.கே.சி. ஐயா சொல்கிறார்கள் என்றதும் எல்லா பிற மரங்களையும் வெட்டி விட்டார்கள். பின் அவர் கூறியபடி, தென்னை மட்டைகளை அங்கேயே புதைத்தார்கள். அவைகள் ஈரத்தைக் காத்து மரங்களுக்குக் கொடுத்தன. மறு வருடமே நன்கு காய்த்துக் குலுங்கின அனைத்துத் தென்னை மரங்களும்.

கொள்கையில் சீர்திருத்தங்கள் கொண்டிருந்தது மட்டுமல்லாது அதை எங்ஙனம் வாழ்வியலாக்குவது என்று அறிந்திருந்தார் டி.கே.சி அவர்கள். கல்விக் கொள்கையில் புதுமைகளைத் தானே சேர்த்து, செயல்படுத்தியும் காட்டி வெற்றி பெற்றார்கள். தன் பேரன்கள் பேத்தி நால்வரையும் பள்ளிக்கு அனுப்பாது, தன் வீட்டில் விவசாயக் கல்வி அளித்தார். இந்நால்வரும் மேலான கல்வி பெற்று அறிவுத்திறனும் வியக்கத்தக்க பண்பாடும் திறமையும் மிக்கவர்களாகத் திகழ்கிறார்கள். டி.கே.சியின் பண்பாடு, குணநலம் எல்லாம் இந்த நால்வருக்கும் நேராக இறங்கி வந்துள்ளது. டி.கே.சி. அவர்கள் கடைபிடித்து வந்த நற்பண்புகள் யாவற்றையும் நால்வரும் போற்றி வளர்த்து வந்தார்கள்.

ஆம். நண்பர்களே! அந்நற்பண்பின் சாரலில் நானும் சமீபகாலமாக நனைந்து ஆனந்தித்துக் கொண்டிருக்கின்றேன். இது டி.கே.சியின் கல்வி முறையின் பண்பும் பயனும் அது.

## உரைநடை (வசனம்)

மொழியெனில் கவிதையாய்த்தான் பிறந்திருக்கின்றது. கவிதை நடையிலிருந்து உரைநடை வடிவத்தை அடைகிறது. ஆங்கில மொழி என எடுத்துக் கொண்டால் உரைநடைக்கு முதன்முதலில் தாமஸ் மலோரியை எடுத்துக் கொள்ளலாம். பின் பனியான்ஸின் 'Pilgrims Progress' யைச் சொல்லலாம். இதனையடுத்து விவிலிய நூலின் செம்மையான, நம்பகமான மொழிபெயர்ப்பைக் கூறலாம். இவ்வாறு ஆங்கில மொழியின் உரைநடை வளர்ச்சியை வரிசைப்படுத்தலாம்.

தமிழ் வசனத்தைப் பற்றி நம் டி.கே.சி.யின் கருத்து என்ன என்பதை நாம் தெரிந்து கொள்வோம். நண்பர்களே!

"தமிழில் பாஷை தோன்றிய நாளிலிருந்தே, வசனம் உண்டென்று சொல்ல வேண்டும். தமிழில் மாத்திரம் அல்ல, பேசப்படுகிற எந்த பாஷையிலுமே வசனம் என்பது எப்போதும் உள்ளது. பாஷை எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. பாஷை என்றால் மக்கள் உள்ளத்தில் நிகழ்வதை வெளிப்படுத்துவதுதான். கோபமோ, ஆத்திரமோ, சோகமோ, கருணையோ, மனசில் உண்டானால் அதை அப்படியே வாய்திறந்து மனிதன் சொல்லி விடுகிறான். அவ்வாறு சொல்வதே வசனம்".

"தமிழ் மக்கள் தங்கள் உள்ளக்கிடக்கைகளை ஆயிரக்கணக்கான வருஷங்களாக வெளியிட்டிருக்கிறார்கள். எத்தனையோ விதத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அப்படி வெளியிடு வதிலெல்லாம் ஒரு தொடர்பு, ஒரு முறை நாளடைவில் ஏற்பட்டுத் தமிழ் வழக்கு என்னும் ஒன்று உண்டாகியிருக்கிறது. இந்தத் தமிழ் வழக்கு என்பது தமிழ் மக்கள் நாவிலேயே இருக்கிறது. உண்மையில் தமிழ் பாஷையே ஆடவர், பெண்டிர், பிள்ளைகளின் தமிழ் நாவிலே கிடப்பதுதான். நாவை விட்டு ஏடுகளில் மாத்திரம் கிடக்குமானால் அது தமிழ் அல்ல. பாஷைகளின் அமைப்பையும், மர்மத்தையும் ஆராய்ந்தறிந்த நிபுணர்கள் "ஒரு வார்த்தையோ

முடிவோ வழக்கிழந்து விட்டது என்றால், காரியத்தை சாதிக்க அதனால் முடியவில்லை என்று ஆகும். ஆகவே அழிந்து போனது நல்லதே" என்று சொல்லுகிறார்கள்.

"தமிழில் எத்தனை எத்தனையோ வார்த்தைகள் வழக்கிழந்து போயிருக்கின்றன. இலக்கண முடிவுகளும் அப்படியே வழக்கிழந்து போயிருக்கின்றன. புதிதான வார்த்தைகளும் முடிவுகளும் நெடுகிலும் பாஷைக்குள் வந்து புகுந்து தங்கி நிற்கின்றன... இருந்தாலும் மாறுபாடுகளுக்கு ஊடெல்லாம் தமிழ்ப் பண்பு என்று தனித்த பண்பொன்று தொடர்ந்து வந்திருக்கிறது. இந்தப் பண்பு, வழக்கில் உள்ள சொற்களிலெல்லாம் இதர பாஷைகளிலிருந்து வந்த திசைச் சொற்களில் எல்லாம் கூட ஊறி நின்று தமிழர் செவிக்குச் சுவை தந்திருக்கிறது. தமிழ்ப் பண்போடு கூடிய சொல்லுக்கே& பேச்சானாலும் சரி, எழுத்தானாலும் சரி& இனிமையோ வேகமோ ஏற்படக்கூடும்". (டி.கே.சி.யின் முகவுரை&கல்கியின் "கணையாழியின் கனவு")

(தமிழ் உரைநடை & வல்லிக்கண்ணன், பாரிநிலையம் முதல்பதிப்பு 2010 பக்கம் 8)

ஆனால் நம் தமிழ் மொழியில் உரைநடை எவ்வாறு இருந்தது. நச்சினார்க்கினியன், இளம்பூரணார், சேனாவரையர் போன்றோரின் உரைகளைப் படித்துப் புரிந்து கொள்ள பிறிதொரு உரையாசிரியர் தேவைப்பட்டது. அவர்கள் காலத்தே பிறருக்குப் புரியாமல் எழுதுவதுதான் புலமைக்கு அழகு எனக் கருத்துக் கொண்டிருந்தனர். ஒரு சிறிய விஷயத்தைச் சொல்லித் தெளிவாக விளக்க வேண்டும் என்றால் கூட கடின நடையைப் பின்பற்றுவது ஒரு மரபு ஆக இருந்தது.

"உதாரணத்துக்கு ஒன்றைக் குறிப்பிடலாம். 'நூல்' என்பதை விளக்க முன்வந்த இறையனாரகப் பொருளுரை, ஆசிரியர் எழுதியுள்ளது இது :

"நூல் போறலின் நூலென்ப : பாவை போல்வாளைப் பாவை என்றாற் போல, நூல் போறல் என்பது, நுண்ணிய பலவாய பஞ்சு நுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செய்கை மாண்பினால் ஓரிழைப்படுத்தலாம் & உலகத்து நூல் நூற்றலென்பது அவ்வாறே சுரந்து பரந்து சொற்பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வு மாட்சியிற் பிண்டம் படலம் ஓத்துச் சூத்திரம் என்னும் யாப்பு நடைபடக் கோத்தலாம். உலகத்து நூல் செய்தலாவது, அவ்வகை நூற்கப்படுதலின் நூலெனப் பட்டது. இனி ஒரு சாரார் நூல் போலச் செப்பஞ் செய்தலின் நூலென்ப"

(தமிழ் உரைநடை, வல்லிக்கண்ணன், பாரிநிலையம் முதல்பதிப்பு 2010 பக்கம் 15)

இந்த வழிலேயே பழகிவிட்டதால், வித்வான்களும் புலவர்களும் கடினமான நடையில் எழுதவே விரும்பினார்கள். அப்படி எழுதுவதுதான் தங்கள் புலமையை புலப்படுத்தும் என்று கருதினார்கள்.

'நான் ஏறிய வண்டி நடுராத்திரி மதுரை சேர்ந்தது' என்ற சாதாரண விஷயத்தைச் சொல்லவந்த ஒரு மகாவித்துவான், 'நான் போந்த நீராவித் தொடர் வண்டி நள்ளிரவில் நான் மாடக்கூடலினை நண்ணிற்று' என்று எழுதி வைத்தார்.'

இம்மாதிரியாக எழுதும் மனோபாவம் குறித்து டி.கே.சி. அவர்கள், கல்கி அவர்களின் 'கணையாழியின் கனவு' என்னும் நாவலுக்கு எழுதிய முகவுரையில் மிகவும் அழகாக எடுத்துரைக்கிறார்கள்.

"ஆங்கில பாஷையைக் கற்கும் போது, வார்த்தை எங்கே? வார்த்தை எங்கே? என்று ஒரேயடியாய் வார்த்தை மோகத்தில் முழுகிப் போனவர்கள், தமிழ்ப் பாடங்களில் & மூலத்திலும், உரையிலுமே & தங்களுக்கு முன் தெரிந்திராத வார்த்தைகளையும் முடிவுகளையும் கண்டார்களோ இல்லையோ, உடனே அந்த வழக்கொழிந்தபாஷையைமனனம்பண்ண ஆரம்பித்து அதிலேயே எழுதவும் புகுந்து விட்டார்கள். இந்த அரும்பத அகராதிக் கோவையைக் கண்டு தமிழ் மக்கள், தமிழ்ப் பண்டிதர்கள்கூட, 'அடடா! என்ன பாண்டித்யம்! என்ன பாண்டியத்யம்!' என்று வாய் திறந்த வண்ணமாக வியக்க ஆரம்பித்து விட்டார்கள். பிறகு 'உயர்ந்த நடை வளர்ந்தோங்குவதற்குக் கேட்பானேன்?' நச்சினார்க்கினியர், பரிமேலழகர், இறையனார் அகப்பொருள் உரை ஆசிரியர் எல்லோரும் பம்மிப் போனார்கள்! 'நான் நேற்று இங்கு வந்தேன்' என்று எழுதுவது வந்தது. 'கடைக்குப் போய் வேட்டி வாங்கி வந்தேன்' என்று சொல்ல முடியாது; 'கூலம் குறுகிக் கூறை கொணர்ந்தேன்' என்றுதான் எழுத முடியும். ஆடு அல்ல, யாடுதான். ஆறு அல்ல யாறுதான், மரம் அல்ல, மரன்தான். நான் என்பது கொச்சை யான் என்பது அழகு வாய்ந்தது. ஆசிரியர்களே இந்த தாளத்தில் நடந்தார்கள் என்றால் மாணவர்களுடைய நடையைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? எல்லாம் தாராக் கோழி சேற்றில் நடக்கிற தத்தக்கப் புத்தக்க நடையாக முடிந்தது. தமிழில் செய்வதற்காகத்தான் என்ற நோக்கம் போய், தாங்கள் மனனம் பண்ணின அரும்பத

அகராதியைப் புரட்டிப் புரட்டிக் காட்டுகிற பகட்டுத் தொழிலாக மாறிவிட்டது."

"வசனநடை கண்ட வல்லாளர்" என்று சிறப்புப் பெற்றிருந்த யாழ்ப்பாணம் க.ஆறுமுக நாவலரின் முயற்சி பிழையறத் தமிழ் எழுதப்பட வேண்டும் என்ற நோக்கம் அவரிடம் இருந்தது. எளிய முறையைத்தான் கையாண்டிருக்கிறார். அதனை கீழே குறிப்பிட்டிருக்கும் நடையிலிருந்து அறியலாம்.

"நாமெல்லாம் மனைவி, மைந்தர் முதலிய சுற்றத்தார்களுடனே கூடியிருந்தாலும், வேளாண்மை வியாபாரம் உத்தியோகம் முதலிய லௌகீகங்களைச் செய்தாலும், சிவநிந்தை, வேதாகம நிந்தை, கொலை, களவு முதலிய பாவங்களை வெறுத்து, இரக்கம் முதலிய புண்ணியங்களை உடையவர்களாய், நமக்கினிய கடவுளுடைய திருவடிகளை நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும் மறவாமற்சிந்தித்து வழிபட்டு வர வேண்டும். ஐயையோ, இப்படிச் செய்யாது போவோமாயின், நாம் எவ்வுயிர்களுக்கும் ஏகநாயகராயிருக்கிற கடவுளுடைய ஆணையினாலே மறுமையிலே எவ்வளவு பெருந்தண்டனை அடைவோம்!"

சென்ற நூற்றாண்டின் முதல் பாதியில், தமிழ்நாட்டில் 'தமிழ் உரைநடை மன்னர்' என வியந்து பாராட்டப்பெற்றவர் சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள். 'தமிழ் நடை கற்றவர்க்கு மகிழ்ச்சியினைத் தருமாறு பிழையில்லாத தூய திருத்தமான செந்தமிழ் வளங்கெழுமி மிளிர' வேண்டும் என்பது இவரது கொள்கையாகும். 'பேசுகின்றபடியே உரையாட்டுகள்' எழுதப்படுவதை அவர் ஆதரிக்கவில்லை. தற்காலத் தமிழ் எழுத்தாளர்களின் போக்கை அவர் கண்டிக்கத் தவறவில்லை.

"இயற்கையில் மக்கள் மிகவும் சிதைத்துப் பேசுந்தமிழ்ச் சொற்கள் நூலுள் அங்ஙனமே வருதல் அருவருப்புக்கு இடமாய் நூன்மாட்சிக்கு வழுவாகும். இங்ஙனஞ் சொற்களையும் பொருள்களையுந் தூயவாக்கி வகுத்தலே நூல்யாக்கு முறையென்பதனைச் சிறிதும் ஆய்ந்து பார்ராத இஞ்ஞான்றைக் கதைநூற்காரர்கள்,வடசொல்லும்ஆங்கிலச்சொல்லுங்கொச்சைத் தமிழ்ச் சொல்லும் விரவிய மிகச்சீர்கெட்ட நடையில் அவை தம்மை வரைந்து, நூன் மாட்சியினைப் பாழ்படுத்துகின்றனர். நாளேற நாளேற அறிவுஞ் செயலுஞ் சீர்திருந்தி வளர்தற்கு ஏற்ற உயர்ந்த முறையில் எழுதப்படுங் கதை நூல்களையே பயிலல் வேண்டுமல்லாமல், இத்தகைய வழூஉக் கதைகளைப் பயிலல்

நன்றாகாது" என்று அடிகளார் அறிவித்துள்ளார்.

'தனித்தமிழ் சுவை மிகுந்து' வருமாறு எழுதிய அடிகள் நீளம் நீளமான வாக்கியங்களை அமைப்பதிலும் ஆர்வம் காட்டினார். ஒரு வாக்கியம் ஒரு பெரிய பாரா ஆகவும் வரும்; சில சமயம் ஒரு பக்க அளவுக்குக்கூட வளரும். வாக்கியம் இயல்பாக முடியக்கூடிய இடத்தில் அதனை முடியவிடாது 'ஸெமிக் கோலன்' (அரைப் புள்ளி)களை உபயோகித்து 'கூட்ஸ் வண்டி'த் தொடர் மாதிரி வெகு நீண்டதாகப் பண்ணுவதில் அவர் மகிழ்ச்சி கண்டார் என்றே தோன்றுகிறது.

'சொல்லின் செல்வர்' என்ற சிறப்புப் பட்டம் பெற்றவர் பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை. அவருடைய தமிழ்நடை அந்நாட்களில் மிகப்பலரைக் கவர்ந்திருந்தது. கம்பராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் அவர். அதனால் கம்பனின் கவிதை வரிகள் அவருடைய உரைநடையில் சரளமாகக் கலந்து ஓடும்.

"பூஞ்சோலைகளில் பளிங்கு போன்ற பந்துகளை வீசிப்பிடித்துப் பாவையர் விளையாடுகின்றனர். அரங்குகளில் நடன மாதர் கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்லக் களிநடம் புரிகின்றார். இத்தகைய இன்பம் நிறைந்த அணிவீதியில் கோமுனிவர் உள்ளே செல்கின்றார். மஞ்செனத் திரண்ட மேனியும் கஞ்சமொத்தலர்ந்த கண்களும் வாய்ந்த இராமன் அவர் பின்னே செல்கின்றான். பொன் மேனி வாய்ந்த இலக்குவன் அவன் பின்னே போகின்றான்." (தமிழ் உரைநடை வல்லிக்கண்ணன், பாரிநிலையம், பக்கம் 52&57)

பண்டித நடையில் எழுதிய போதிலும், திரு.வி.கலியாண சுந்தரனார் நடை மற்றவர்களின் நடையிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகிறது. பேசுவது போல் எழுத வேண்டும் என்ற கருத்துக்கு மாறாக எழுதுவது போல பேசுவது என்ற கொள்கை உடையவராக இருந்ததால் தனது நடை வெகு கடினமானதாக ஆகிவிடாமல் அவர் கவனித்துக் கொண்டார்.

"வீட்டை இன்ப ஒளி வீசுமாறு செய்யும் தெய்வ மணிவிளக்கல்லவோ பெண்? மனைவி வெறும் கலவிக்கு மட்டும் உரிய ஒருத்தியல்லள்; அவள் தாயுமாவள்; உடன் பிறந்தவளுமாவள்; மகளுமாவள்; கடவுளுமாவள்; எல்லாம் அவள், அவளிடத்து எல்லா இயல்புகளும் உள்ளன. இவையெல்லாஞ் சேர்ந்த ஒருத்தியே மனையில் வாழத்தக்கவள் என்க."

இவ்வளவு அழகாக எழுதிச் செல்லும் திரு.வி.க. இடைக்கிடை தனது பண்டிதத்தனத்தைக் காட்டி விடுவதும் இயல்பாக

இருந்தது. அச்சமயங்களில், "இல்வாழ்க்கை நடத்தவும் பிள்ளைகளைத் தக்கவழியில் வளர்க்கவும், சமயம் நேர்ந்துழி வேறு பல துறைகளில் இயங்கிக் கடனாற்றவும் பெண் மக்கள் பலதிறக் கலைஞானம் பெறுதல் இன்றியமையாமை" என்ற ரீதியில் நடை புரண்டோடும்.

பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை, தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு, முருகன் அல்லது அழகு, முடியா? காதலா? சீர்திருத்தமா?போன்ற பல நூல்களை திரு.வி.க. இயற்றியுள்ளார்.

பண்டிதர், புலவர், பள்ளிக்கூடம், கல்லூரி, யுனிவர்சிட்டி, பட்டப்படிப்பு ஆகிய இவையெல்லாம் டி.கே.சி.க்குப் பிடிக்காத விஷயங்கள். ஆனாலும் அவர் மனம் நிறைந்து பாராட்டிய பண்டிதர் புலவர் ஒருசிலர் உண்டு. அவர்களில் ஒருவர் மகாமகோபாத்யாய டாக்டர் உ.வே.சாமிநாதையர். "தமிழ் நாட்டினர் தம் கருத்தை எளிதில் அறிந்து கொள்ள வேண்டும் என்பதை எழுதுபவர்கள் மனத்திற் கொண்டு எழுதுவதுதான் பயனை அளிக்கும்" என்று சாமிநாத அய்யர் அவர்கள் ஓரிடத்தில் குறிப்பிட்டிருக்கிறார். தனது அனுவபங்களை எல்லாம், தான் கண்டு பழகிய மனிதர்களைப் பற்றி எல்லாம் அவர் சிறுசிறு கட்டுரைகளாக எழுதியிருக்கிறார். 'என் சரித்திரம்' என்று சுயசரிதை வாயிலாகவும் அவர் எத்தனையோ விஷயங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

"நானும் என் தகப்பனாரும் மயூரத்தில் மகாதானபுர அக்கிரகாரத்தில் ஓரன்பருடைய வீட்டுத் திண்ணையிலிருந்து பேசிக் கொண்டிருந்தோம். பிற்பகல் 3 மணி இருக்கும், வீதி வழியே ஒருவர் நடந்து வந்தார். அவரைக் கண்ட என் தகப்பனார் எழுந்து 'பாரதியாரவர்களா?' என்று கேட்கவே வீதியிற் சென்ற அவர், 'யார் அது?' வேங்கட சுப்பையரவர்களா? ஏது இவ்வளவு தூரம்?' என்று சொல்லிக் கொண்டே நாங்கள் இருவரும் இருந்த திண்ணைக்கு வந்து அமர்ந்தார். உடனே என்னுடைய தந்தையாரின் கட்டளைப்படி அவரை நான் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன்.

வந்தவர் கோபலகிருஷ்ண பாரதியாரென்பதையறிந்த நான் மிக்க வியப்பை அடைந்தேன். அவருடைய புகழையும் நந்தனார் சரித்திரத்தின் அழகையும் உணர்ந்து ஈடுபட்டிருந்த என் இளைய உள்ளத்துக்குப் பாரதியார் ஓர் அழகிய உருவத்தை உடையவராக இருப்பாரென்ற காரணமில்லாத தோற்றமொன்று இருந்து

வந்தது. நான் கண்ட காட்சியோ அதற்கு நேர் விரோதமாக இருந்தது."

இது, சாமிநாத அய்யர் அவர்கள் தன் புலமையைக் காண்பிக்க எழுதியது இல்லை. கோபாலகிருஷ்ண பாரதியார் பற்றி அவர் எழுதியது. மிக எளிமையான இனிய தமிழ்நடைக்கு உதாரணம்.

தம் கருத்தை எளிதில் அறிந்து கொள்ள வேண்டும் என்பதை மனத்தினில் கொண்டு, தான் எழுதும் எழுத்து பொருட்செறிவு, சொல்லழகு, உணர்ச்சி, விரைவு, உண்மைப் பொலிவு ஆகிய பண்புகளைச் சேர்த்து ஒரு சிறந்த எளிய எழுத்துநடையை அளித்து, கல்கி அவர்கள் வெற்றியும் பெற்றார்.

"தேசியத்தால் தமிழ் எழுத்தாளராய் உருவாகிய கல்கி, தமது எழுத்தின் மூலம் தேசியமும் தமிழும் ஒருங்கே தழைக்கச் செய்வதை ஓர் அர்ப்பணப் பணியாகக் கொண்டார். அந்தப் பணி, நவசக்தி நாட்களில் செடியாக வளர்ந்து, ஆனந்த விகடன் நாட்களில் தருவாகி வீசிக் கிளைவிட்டு, கல்கிப் பத்திரிகை நாட்களில் பெரியதோர் ஆலாகப் படர்ந்தது" பொன்னியின் புதல்வன் என்னும் கல்கியின் வாழ்க்கை வரலாறு நூலில் சுந்தா குறிப்பிட்டிருப்பது சரியான கணிப்பேயாகும்.

"கல்கி என்ற பெயரின் கீழ் என்ன கட்டுரை வந்தாலும் என்ன கதை வந்தாலும் யாரும் வாசியாமல் விடுவதில்லை. ஆடல் பாடல் சம்பந்தமான குறிப்புகளைக் கச்சேரிகளில் ஆசிரியரோடு உடனிருந்து அனுபவித்தவர்களே சரியானபடி உணர்ந்து அனுபவிக்கக் கூடியவர்களாய் இருந்தாலும், அவை எல்லோரும் வாசிக்கும்படியாகவும் ஆனந்திக்கும்படியாகவும் இருந்தன. அரசியல் விஷயமாகப் பத்திரிகை உலகத்தின் ஜாம்பவான்களே திணறும்படியாகவும், வியக்கும்படியாகவும் தலையங்கங்கள் வெளிவந்தன. அரசியலோ, சமூகத் திருத்தமோ, சமயத்திருத்தமோ எதானாலும் சரி, உண்மைகளைப் பீரங்கிக் குண்டுகளைப் போல் வீசி எறிந்தன. அக்கினிச் சுவாலைகளைக் கக்கின. மக்கள் மனசில் இறுகிக் கிடந்த மூட நம்பிக்கைகளைத் தகர்த்து, இருளையும் ஓட்டி விட ஆரம்பித்தன." கல்கியின் தமிழ் நடைக்கு டி.கே. சிதம்பரநாத முதலியார் அளித்துள்ள நற்சான்று இது.

எல்லா விஷயங்களையும் எல்லோருக்கும் புரியக்கூடிய விதத்தில் எளிமையாகவும் சுவையாகவும் அவ்வப்போதே கொடுக்கும் திறமையும் அவருக்கு இருந்ததால், கல்கிக்கு பெருவாரியான வாசகர்களைப் பெற்றுத் தந்தது.

பேச்சுத்தமிழை எடுத்தாள்வதன்மூலம் மொழிக்கு உயிரும் உணர்ச்சியும் ஊட்ட முடியும். ஜீவனுள்ள தமிழ் நடையை உருவாக்க முடியும். பார்க்கப்போனால் கடைத்தெருவிலும் கலகலவெனப் புழங்குகின்ற தமிழ்தான் உயிருள்ள தமிழ். அதையே எழுத வேண்டும். சாதாரண ஜனங்களுக்குப் புரியாது எழுதி என்னப் பயன்? இவ்விதமான உரைநடையை 1700களிலே ஆனந்தரங்கம் பிள்ளை கையாண்டிருக்கின்றார்.

"ஆனந்தரங்கம் பிள்ளையின் உரைநடை எத்தகையது என்பதை நீங்களும் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். இதோ ஒரு உதாரணம்.

"13-4-1746 காலமே தரங்கம்பாடி சின்னதுரை பேர் விளங்கான் வந்தான். ஆள் கழுக்கு மழுக்கென்று மணலிலே பிடுங்கி எடுத்த வள்ளிக் கிழங்காட்டமாயிருக்கிறான். முகம் பரந்த முகமாய் ஆனவாகனனாயிருக்கிறான். அவன் சென்ன பட்டணத்துக்குப் போயிருந்து வந்தவன். மீனாட்சி அம்மை சத்திரத்திலே வந்து சொல்லி அனுப்பினான். அதின் பேரிலே துரை மருமகன் முசே! கற்சாமும் கப்பித்தான் (கேப்டன்) குவாடும் வந்து பேர்விளங்கானை எதிரே போய் அழைத்து வந்தார்கள்.

வருகையிலே கெவுனி வாசலிலே பதிமூன்று பீரங்கி போட்டார்கள். அதின் பேரிலே, துரை வீட்டு மெத்தை மேலே, துரை வீட்டிலே, வடவண்டை வராந்திலே சற்று நேரங்கிறங்கி அங்கிருந்து அவர்களை எதிர்கொண்டு போய் கட்டிக் கொண்டு அழைத்துப் போனார்.

அதின் பேரிலே உட்கார்ந்தாற் போலே கபே (காப்பி) கொண்டு வந்து வைத்தார்கள். கபே சாப்பிடுகையிலே துரை லோகபிரமாய் சேதி பேசிக் கொண்டிருந்தார்.

அடுப்பங்கரையில் பேசுகிற தமிழும், கிராமத்துப் பொதுச் சாவடிகளிலும், திண்ணைகளிலும், அரட்டைக் கச்சேரிகளிலும் ஜனங்கள் பேசுகிற பேச்சிலும் ஒரு நயம் உண்டு என்று உணர்ந்தவர் டி.கே.சி. அவர்கள். "உள்ளத்தில் உள்ள விஷயம் அப்படியே வாக்கில் வரும். அப்படி வரும் வார்த்தைகளுக்கு நயமும், ஜீவனும், வேகமும் உண்டு என்று எப்போதுமே எடுத்துரைத்துக் கொண்டேயிருப்பார்.

டி.கே.சி. உரைநடை பற்றி ஒரு முடிவுக்கு வந்ததை அவருடைய நண்பர்களில், ரசிகர்களில், 'வட்டத்தொட்டி' (சங்கம்) உறுப்பினர்களில் ஒருவரான எஸ்.மகராஜன் பின்வருமாறு விவரித்திருக்கிறார்:

"கருத்துக்கு ஒவ்வாத வார்த்தைப் படாடோபமும், திருகு முருகலும், சுவையற்ற கோணல்த் தமிழும் புலமை வேஷம் போட்டுக் கொண்டு நடமாடிய காலம் அது. அந்தக் காலத்தில் பள்ளி மாணவனாக இருந்த ரஸிகமணிக்கு இந்தக் கொடுங்கோன்மை எல்லாம் தாங்க முடியவில்லை. உரைநடை எப்படி இருக்க வேண்டும் என்ற ஆராய்ச்சியில் இறங்கி, சில முடிவுகளுக்கு வந்தார்கள். எடுத்துக் கொண்ட விஷயத்தை, உண்மையோடு, நேருக்கு நேர் சொல்லக் கற்றுக் கொள்ள வேண்டும். கருத்தும் சொல்லும் சுகமாய்க் கலந்து கைகோர்த்து நடக்க வேண்டும். அடுப்பங்கரையில் பெண்கள் பேசுகின்ற தமிழிலே எவ்வளவு ஆற்றலும் உணர்ச்சியும் இருக்கின்றன. நாட்டுப்புறத்திலே பட்டிக்காட்டான் பேசுகிற தமிழிலே வகைவகையான சுவையிருக்கிறதே. விஷயத்தைக் குறிபார்த்து அடித்த மாதிரியல்லவா, அவன் சொல்லிவிடுகிறான். இதையெல்லாம் தமிழ்ப்புலவர்கள் சிரத்தையோடு ஆராய்ந்து கொச்சையை அகற்றிவிட்டு, நாடோடித் தமிழிலுள்ள ரஸத்தைப் பிழிந்து தமிழ் வசனத்தில் பெய்துவிட வேண்டும். அப்போதுதான் தமிழ் எழுத்துக்கு வல்லமையும் வளமும் ஏற்படும் என்று டி.கே.சி. வற்புறுத்தி வந்தார்கள். பேச்சுத்தமிழின் வளைவு நெளிவுகளோடும், பம்மல் பாய்ச்சல்களோடும் பழகினால்தான் ஒரு எழுத்தாளனுடைய தனித்துவம் அவனுக்கே உரிய நடையில் வெளிப்படும் என்று அவர்கள் கருதினார்கள்."

(தமிழ் உரைநடை, வல்லிக்கண்ணன், பாரிநிலையம், முதற்பதிப்பு 2010 பக்கம் 46,47)

இந்த முறையில் டி.கே.சி. நடை அமைந்தன. இருப்பினும் "பாஷா ஞானம்" பற்றி டி.கே.சி. கூறும் கருத்துரை அவருடைய வசன நடைக்கு நல்ல எடுத்துக்காட்டாகத் திகழும். அது மட்டுமல்லாது அவர் கூற விரும்பும் எந்தக் கருத்தையும் எவ்வளவு அழுத்தமாக அதே சமயத்தில் ஓங்கி அடித்துக் கூறும் இயல்புடையவர் என்பதையும் தெளிவுபடுத்தும்.

"பாஷாஞானம் என்பது ரொம்பவும் அபூர்வமான காரியம். இது விஷயமாக மேல் நாட்டாரும் ரொம்ப ரொம்பத் திண்டாடி இருக்கிறார்கள்.

ஆங்கிலபாஷை இன்னது என்று தெரிய ஜான்ஸனுக்கு அநேக வருஷம் ஆயிற்று. பல வருஷங்கள் கழித்துத்தான் ஆங்கில பாஷையின் உண்மையான பாவம் அடிசன் எழுதிய கட்டுரைகளில் இருக்கிறது என்று தெரிய வந்தது. தான் எழுதியது எல்லாம் 'கக்காபுக்கா' பாஷைதான் என்றும் தெரியவந்தது.

முன்னாலே போகிறவன் அடிபிசகிக் கீழே விழுந்தால் பின்னால் போகிறவனுக்குத் தீவர்த்தி பிடித்த கணக்கு என்று சொல்வார்கள். ஆனால் ஆங்கில பாஷை சம்பந்தமாக அப்படிச் சொல்ல இடமில்லை. ஏனென்றால், பின்னால் வந்த ரஸ்கினும் அடிபிசகி விழுந்தார். செடி, கொடி, களிமண் எல்லாவற்றையும் வாரிப் போட்டுக் கொண்டு தன்னை இன்னார் என்று காட்ட முன்வந்தார். கடைசியில் இதெல்லாம் தவறு; 'பேசுகிற பாஷையில்தான் எழுத வேண்டும்; பாஷையின் நயம் பாவம் எல்லாம் அப்போதுதான் கைவரும் என்று அழுத்தமாய்ச் சொல்லி விட்டார்!'

இப்படியாக ஜான்ஸனும் ரஸ்கினும் வாக்குமூலங்கள் கொடுத்தும் ஆங்கிலேயருக்கு அவ்வளவாகப் பிரயோசனம் இல்லாமல்தான் போயிற்று! பத்து வருஷமாகத்தான் பேச்சு முறையில் எழுத வேண்டும் என்று எழுத்தாளர் எல்லோரும் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். என்றாலும் யூனிவெர்சிடிகளில் பழைய சொக்கனே சொக்கன்தான் என்று பெர்னாட்ஷா சொல்கிறார்.

ஆகவே, பாஷையின் நயத்தை பாவத்தை எல்லாம் சரியான முறையில் பார்த்து அனுபவிப்பவர்கள் ரொம்ப சொற்பம் மேல் நாட்டில். இங்கே அதைப்பற்றிக் கேட்கவே வேண்டாம்.

தமிழ் பாஷையைப் பற்றி யாராவது பேசும்போது எனக்குப் படுவது, அடடா, இவர்களுக்குத் தமிழை அனுபவித்த பழக்கமே இல்லாமல் போய்விட்டதே என்றுதான். 'தமிழ் பாஷையானது, அதைச் செய்துவிடும்!' என்றெல்லாம் விண்ணுக்கேற்றிப் புகழ்வார்கள். ஆனால் தமிழை அனுபவித்ததாகச் சொல்லமாட்டார்கள். படே படே கைகள் சம்பந்தமாகவும் இப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. அவர்களுக்கெல்லாம் பாஷையின் உணர்ச்சியில்லைதான்." (தமிழ் உரைநடை, வல்லிக்கண்ணன், பாரிநிலையம், முதற்பதிப்பு 2010 பக்கம் 47,48)

எளிமையான உயிருள்ள நடை வெறும் படிப்பினாலும், பயிற்சியினாலும் மட்டுமே வந்துவிடாது. பேச்சுத்தமிழின் வளைவு நெளிவுகளோடும் பம்மல் பாய்ச்சல்களோடும் பழகினால்தான் ஒரு எழுத்தாளனுடைய தனித்துவம் அவனுக்கே உரிய நடையில் வெளிப்படும். நடை என்றால் என்ன என்பதை ரசிகமணியின் கடிதங்களில் ஒன்று விளக்குகிறது.

"ஆங்கில ஆசிரியர்கள் ஸ்டைலைப் பற்றி என்ன எல்லாமோ எழுதுகிறார்கள். எழுத்தில் முக்கியமான காரியம் அதுதான் என்று சொல்லுவார்கள். ஆனால், அது எளிதில் அமைகிறதில்லை என்றும் சொல்வார்கள். ஆங்கில ஆசிரியர்களது ஸ்டைல் இன்னது, இப்படி இருக்கிறது என்றும் நமக்கு எளிதில் தெரிகிறதில்லை. ஏதோ தெரிகிறது. இருட்டுக்குள் ஆளை இனங்காணுகிற கணக்கில்தான்.

ஆனால் தமிழுக்கு வந்தால் (பண்டித உலகத்தைவிட்டு வெளியேதான்) இன்னது ஸ்டைல் என்று லகுவாய்த் தெரிகிறது. ஏன், அன்னம்மாள், தங்கம்மாளுக்கு எழுதிய கடிதத்தில் அவளுடைய தனித்துவம் வெகு ஜோராய்த் துள்ளி ஓடுகிறது. கருத்தும் சொல்லும் சுகமாய்க் கலந்து கைகோத்து நடக்கின்றன. பெண் குழந்தைகளைப் பார்த்து நாம் பயப்பட வேண்டியதாய்த்தான் இருக்கிறது. கவி என்பதற்கு வந்தால் கம்பரிடத்தில்தான் ஸ்டைல் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. தற்காலத்துக் கவியில் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களது கவியில்தான் ஸ்டைல் இருக்கிறது. கவியில் அவர்களது எளிய தூய உள்ளம் பளிங்கில் வைத்த மாதிரி தெரிகிறது. ஆனால் இந்த ஸ்டைலில் ஒரு சங்கடம் இருக்கிறது. அதாவது எழுதுகிறவருக்கு அது தெரியாது என்று சொல்லலாம். ஏனென்றால், அவருக்கே தெரியாமல் அநாயாசமாய் வருவது அது. நாம் தெருவிலோ ரோட்டிலோ நடந்து போகிறோம். (மிலிட்டரி மார்ச் அல்ல) இயல்பாக நடக்கிறோம். அந்த நடையில் நூற்றுக்கணக்கான அம்சங்கள் இருக்கின்றன. ஏன் இருக்காது! உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையும் எத்தனையோ எலும்புக்கட்டுகள், தசைகள், நரம்புகள் எல்லாம் சேர்ந்து ஒரு கணக்குப்படி ஒத்து வேலை செய்கின்றன. நாம் ஒன்றும் செய்யவில்லை என்று சொல்லலாம்.

ஆனால் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் நடையின் தனிப்பண்பை உடனே கண்டுகொள்கிறார்கள். ஆயிரம் பேர் நடந்துபோய்க் கொண்டிருக்கலாம். ஆனாலும் நம் முகத்தைப் பாராமலே நம்முடைய நடையை இனம் கண்டு கொள்கிறார்கள். நடையில் (உடம்பு சம்பந்தமாகத்தான்) எல்லோருக்கும் ஸ்டைல் வந்துவிடுகிறது. காரணம் என்ன? பாடமாக வைத்துப் பள்ளிக்கூடத்தில் நடையைக் கற்பிப்பதில்லை. ஆனால் எழுத்தில் ஸ்டைல் வரமாட்டேன் என்று சாதிக்கிறது. பள்ளிக்கூடத்துப் பயிற்சிதான் காரணம். மனுஷ தத்துவத்தை எடுத்துவிட்டு,

எந்திர தத்துவத்தை மாணவர்களுக்குள் புகுத்தி விடுகிறது. இந்த எந்திர தத்துவத்தின் கோணல்கள், முத்தி, முத்திக் கடைசியில் பரிமேலழகர் நச்சினார்க்கினியர் பண்டிதமணிகளாக முடிகின்றன.

நடையில் ஸ்டைல் இருக்க வேண்டும் என்றால் (கால் இருந்தால் போதாது) உடலுக்குள் உயிர் இருக்க வேண்டும். அதுபோல, எழுத்தில் ஸ்டைல் இருக்க வேண்டும் என்றால் (வார்த்தைகள் இருந்தால் போதாது) உள்ளத்தில் உயிர் அதாவது உண்மை உணர்ச்சி இருக்க வேண்டும்." (டி.கே.சி. மொழி நடை - ச.வே. சுப்பிரமணியன் (பதிப்பாசிரியர் கரு. அழ. குணசேகரன், பூமிநாகநாதன்,) உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு 2008, பக்கம் 61)

உண்மையான வசனம் சாதாரண மக்கள் பேசும் பேச்சில்தான் இருக்கின்றன. அது உண்மையாக இருப்பதால் உணர்ச்சியாகவும், எளிமையாகவும் இருக்கிறது. உணர்ச்சி சம்மந்தப்பட்ட மட்டில் பெண்கள் ஆடவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்பதை டி.கே.சியின் கடிதங்கள் பல வலியுறுத்திக் கூறுகின்றன.

"தமிழ்க் கவிதைக்குப் போலவே தமிழ் வசனத்திற்குமே பெருமை தேடித் தந்திருக்கிறார்கள் டி.கே.சி. பொருள் விளங்காத, பேச்சு வழக்கில் இல்லாத, கடுமையான சொற்களையும் சொல் தொடர்களையும் பெற்று பண்டிதர்கள் எழுதி வந்த பழைய உரைநடையை முற்றிலும் மாற்றி தற்கால வசன நடையைப் புதிதாக உருவாக்கின எழுத்தாளர்களில் டி.கே.சி.க்குப் பெரும்பங்கு உண்டு. சொல்ல வந்த பொருளை வார்த்தைகளால் இரட்டிப்புச் செய்யாமல் வெளிச்சம் போட்டுக் காட்டுவார்கள். பேச்சு வழக்கிலுள்ள சொற்களைத் தமிழ், வடமொழி என்ற விருப்பு வெறுப்பில்லாமல் உபயோகிப்பார்கள். நாடோடிச் சொற்களோடு கிராமியச் சொற்களும் அவர்களுக்கு ஏவல் கேட்கும். ஆங்கிலச் சொற்களையும் உபயோகிப்பார்கள். பொருளை ஐயம் திரிபுக்கு இடமின்றித் தெளிவாகவும் அழுத்தத்துடனும் எடுத்துரைப்பார்கள். அவர்கள் எழுத்துக்கள் உணர்ச்சிப் பெருக்குடனும், உல்லாசமும் உற்சாகமும் நிறைந்திருக்கும். ஒவ்வொரு வாக்கியத்திலும் அவர்கள் முத்திரையை, தனித்தன்மையைக் காணலாம். கடிதங்களிலும் கட்டுரைகளிலும் அவர்கள் "முகன் அமர்ந்து" நேருக்கு நேர் நின்று பேசுவது போன்ற பிரமை ஏற்படும்" என்று டி.கே.சி. அவர்களுடன் நெருங்கிப் பழகிய திரு.ஏ.என். மகரபூஷணம்

"உலக இதய ஒலி" இரசிகமணி நூற்றாண்டு மலரில் 'ரசிக சிகரம்' என்னும் தனிக்கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

டி.கே.சி.யைப் பொறுத்தமட்டில் தமிழ்க்கவிதையைப் பற்றி எழுதி, அப்படி எழுதியதைப் படித்து ஒருவர் கவிதையை அனுபவித்து விடலாம் என்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. எழுத்தைப் படிப்பதை விடப் பேச்சைக் கேட்பதில்தான் பயன் உண்டு என்பதில் திடமான நம்பிக்கை உண்டு. அவர் பெயரில் "இதய ஒலி, கம்பர் யார்' என்ற இந்த இரு புஸ்தகங்களும் பல தடவைகள் அவர் பத்திரிகளுக்கோ அல்லது ரேடியோப் பிரசங்கங்களுக்காகவோ எழுதிய கட்டுரைகளையும் கொண்டது.

'இதய ஒலி' - மொத்தமும் 20 கட்டுரைகள் கொண்டது. இதில் "கால் மணி நேரம் தமிழுக்கு" என்று தமிழுக்காக நம்மைச் கெஞ் சுவது போல் தோன்றுகிறது தமிழர்களே!

"மாணவர்களுக்கும் கனவான்களுக்கும் ஒரு வார்த்தை; இங்கிலீஷைப் படிக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லை. எவ்வளவு வேண்டுமானாலும் படியுங்கள். ஆனால் தமிழுக்குத் தினம் அரைமணி நேரம் ஒதுக்கி வையுங்கள். கால் மணி நேரம் படித்தாலும் போதும்; பெரிய காரியம்"

ஆம். தோழர்களே! இது தமிழ்பால் உள்ள காதலில் வந்த ஆற்றாமைதான். நம் தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதய்யர், திருச்சியிலுள்ள எஸ்.பி.ஜி. காலேஜில் தமிழின் அருமை பற்றியும், வளத்தைப் பற்றியும் பேசியபோது, அவரது இதயம் தமிழனிடம் இறைஞ்சிக் கேட்டுக் கொண்ட இதய பாஷை& தமிழின் பால் கொண்டுள்ள ஆற்றாமையின் பாஷை& இவைகளை டி.கே.சி. அவர்கள் தம் 'இதய ஒலி' கட்டுரைப் புஸ்தகத்தில் சாமிநாதய்யர் அவர்களுடன் சேர்ந்து தாமும் தம் இதயபூர்வமானப் பதிவாகப் பதிவு செய்கிறார். அடுத்தக் கட்டுரையில், நாம் கல்வி கற்ற முறையின் சீரழிவு பற்றி வேதனைப்படுகிறார்.

"மனிதனுக்கு கடவுள் எத்தனையோ சக்திகளைக் கொடுத்திருக்கிறார். விஷயத்தைத் தெரியப்படுத்த பாஷையைக் கொடுத்திருக்கிறார். ஆனால் உணர்ச்சிப் பாவங்களை பாஷை அவ்வளவாக எடுத்துச் சொல்ல உதவுவதில்லை. எடுத்துச் சொன்ன போதிலும் இதயத்தில் நிறுத்துவதில்லை, பதிய வைப்பதில்லை. சங்கீதம் சாதித்து விடுகிறது" என்று சங்கீதத்தின் மேன்மையை, உன்னதத்தை "சங்கீதமும் சாகித்யமும்" என்கிற கட்டுரை கூறுகிறது. மேலும் அவை தமிழில் இருக்க வேண்டும்.

தமிழில் இருந்தால்தான் தமிழன் அனுபவிக்க முடியும் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கைக் கொண்டிருந்தார் டி.கே.சி.

"மணி ஆய்விட்டது. அஞ்சே முக்கால் ஆய்விட்டது. எல்லோருக்கும் ஒரு பரபரப்பு. மணி ஆறும் ஆகிவிடுகிறது. இதயத்திலேயே துடிப்பு. சப்தம் என்பதே இல்லை. மலையுச்சியில் ஜோதி தெரிந்து விடுகிறது. "அரோகரா அரோகரா அண்ணாமலைக்கரோகரா&அரோகரா!அரோகரா! அண்ணாமலைக்கரோகரா!" & நாலா திக்கிலிருந்தும் ஒரே முழக்கம். வானமே வெடித்துவிடுமோ, என்னும்படி, ஹர ஒலி ஆகிய பேரலை ஒரு திக்கிலிருந்து வேறொரு திக்குக்கு உறுமிக் கொண்டு ஓடுகிறது. எதிர்த்துத் திரும்புகிறது. பக்கத்தில் மடங்கிப் பாய்கிறது. மகத்தான காட்சி. மகத்தான உணர்ச்சி அல்லவா! மக்களாய்ப் பிறந்தவர் அனுபவிக்க வேண்டியதல்லவா? திருவண்ணாமலை ஷேத்திரமும் இருக்கிறது. திருக்கார்த்திகை உத்ஸவமும் சீக்கிரத்தில் வருகிறது. செவிகுளிர "அண்ணாமலைக் கரோகரா! அண்ணாமலைக் கரோகரா" என்னும் தெய்வ ஒலியைக் கேட்கலாம்.

இது டி.கே.சி.யின் 'இதய ஒலி' என்னும் கட்டுரையின் இதய ஒலி.

இந்த நூல் டி.கே.சி.யின் வசன நடைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். தமிழ் வசனம் எப்படியிருக்க வேண்டும் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டி விடலாம்.

"அவர் எழுதும் உரைநடை தனி நடை; அதில் சிருஷ்டி யூற்று இதயத்திலிருந்து பீறிக் கொண்டு வருகிறது. தமிழ் இலக்கிய நிறைவையும் ஆங்கில வசனத்தின் கதியும் பெற்று விட்டது. அதில் இதயத் துடிப்பைக் காணலாம். கருத்தோ களங்கமற்று தெள்ளத்தெளிவுடன் தவழ்கிறது. எளிய சொற்கள் உண்மையையே பேசி தங்கள் கடமையை நிறைவேற்றுகின்றன. சொல் தொடரில் ஹிருதய ரீங்காரமே கேட்கிறது. கருத்தை மூடி வைக்கும் நீண்டவாக்கியங்கள் இந்நூலில் மருந்துக்கும் கூட கிடையாது. இதில் பண்டிதர்களில் இருண்டபாசி நடை இல்லை. இயற்கையே எழுந்து நின்று பேசுவது போலத்தான் தொனிக்கிறது அவருடைய வசன எழில் வசன லாவகம்." (டி.கே.சி. வாழ்க்கை வரலாறு முனைவர் கஸ்தூரி ராஜா. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் முதற்படிப்பு - 2008, பக்கம்.15)

அவர் எழுதியிருக்கும் "இதயஒலி" என்ற ஒப்பற்ற ஆராய்ச்சி நூல்

எவ்வளவு ருசியாய் இருக்கிறது. ஆராய்ச்சியை இவ்வளவு தெளிந்த எளிய நடையில் யாராவது இதுவரை எழுதியிருக்கிறார்களா? ஆழ்ந்த கருத்துக்கள் எவ்வளவு ஆழத்திலிருந்து வெளிவருகின்றன? இலக்கிய ஆராய்ச்சியை இவ்வளவு சுத்தமாக இவ்வளவு அழகாக ஒருவரும் இதுவரை இன்பமான தெளிந்த உரைநடையில் எழுதியதாகத் தெரியவில்லை. இதய ஒலியிலுள்ள இருபது கட்டுரைகளும் இலக்கியத் தேன்மயமாக அமைந்து இதயத்தேனை அள்ளி வருஷிக்கின்றன. தமிழ்நாட்டிலேயே மனம் ஒன்றி மலர்ந்து எல்லோரையும் தமிழ்க் கவியினிடத்தே மோகமும் வெறியும் கொள்ளச் செய்கின்றன. டி.கே.சியின் வசன நடை, பேசும் நடை - இரு இதயங்களை - உணர்ச்சிக் காந்தத்தால் இழுத்து இணைக்கும் நடை. உண்மையை ஒலிக்கும் நடை; மொழிக்கு மொழி தித்திக்கும் நடை. இதய ஒலி, இதய ஒளி வீசுகிறது. சொற்களை ஐம்புலன்களின் அனுபவங்களையும் வடித்து இலக்கியக் கோபுரம் எழுப்புகின்றன." என்று செட்டிநாட்டு இலக்கிய ரஸிகர் வி.ஆர்.எம்.செட்டியார் எழுதுகிறார் அப்புஸ்தகத்தின் முன்னுரையாக.

"மனுஷ இயல்புகளை, சமய உண்மைகளை, உலகக் காட்சிகளை - இன்னும் எத்தனையோ விஷயங்களை, கம்பர் தெய்வப் பாடல் ரூபமாகச் சித்தரித்திருக்கிறார்.

உலகக்காட்சிகளைச் சித்தரிக்கிற முறையைப் பார்ப்போம்.

உலகத்திலுள்ள கவிஞர்கள் அனேகமாய் எல்லோருமே இயற்கைக் காட்சிகளையும் செயற்கைக் காட்சிகளையும் வர்ணிக்க முயலுவார்கள். காட்சிகளை அவர்கள் எவ்வளவு அனுபவித்த போதிலும், வர்ணனைகளை வாசகர்கள் அனுபவிக்கிறார்களா என்பது சந்தேகமான காரியமே. வாசகர்களுடைய பொறுமையை அவை அனேகமாய்ச் சோதித்து விடும். தமிழில், நாட்டு வர்ணனை, நகர வர்ணனை, மலை வர்ணனை என்றெல்லாம் வர்ணனைகள் உண்டு. இவற்றுக்குள் ஒருவர் சிக்கிக்கொண்டால் பெரிய ஆபத்துதான். ஆனாலும், கம்பர் வந்து காட்சிகளை வர்ணிக்கிறதென்றால், ஏதாவது ஒரு மனுஷ பாவத்தை உள்ளே ஏற்றிவிடுவார். அது காரணமாக அவர் வர்ணிக்கும் காட்சி நம்முடன் நேர் முகமாகப் பேசுகிற பான்மைக்கு வந்து விடுகிறது. உதாரணமாக:

பனிகாலத்தில் விடியற்காலம் நாம் உலாவப்போகிறோம். புஷ்பக்கொடி ஒன்றை, சிலந்தி பின்னிய வலை பொதிந்து சுற்றியிருக்கிறதைப் பார்க்கிறோம். பனித்துளிகள் ஒட்டிய

காரணத்தால் வலை நன்றாய்க் கண்ணுக்குத் தெரிகிறது. அதை ஊடுருவிப் புஷ்பக் கொடியையும் பார்க்க முடிகிறது. இது மிக்க அழகிய காட்சி என்பதாகக் கம்பர் நமக்கு எடுத்துக் காட்டுகிறார். எப்படி? மனுஷ பாவத்தை அதோடு கலக்கச் செய்வதால்தான்.

சிலம்பி பின்னிய வலைதானோ என்று சொல்லக்கூடியதான டாக்கா மஸ்லின் போன்ற நுண் துகில் (மெல்லிய ஆடை) அந்தக் காலத்தில் உண்டு.

**நுட்சி லம்பி**
**வலந்தன நுண்துகில்**

அந்த நுண் துகிலை, சூடிய கருங்குழலார் பலர் அலங்காரமாகப் போர்த்தியிருந்தார்கள். இதை

**நுட்சி லம்பி**
**வலந்தன நுண்துகிற்**
**கள்ச்சி லம்பு**
**கருங்குழ லார்குழு**

என்கிறார். பெண்கள் குழாத்தை ஞாபகப்படுத்துவதால் சிலம்பியின் வலைக்குள்ளும், அது பொதிந்துள்ள புஷ்பக் கொடிக்குள்ளும் எவ்வளவோ அழகு ஏறிவிடுகிறது.

(நுட்சிலம்பி சிலந்தி பின்னுகிற நுட்பமாகிய வலை; வலந்து அன்ன பின்னிய மாதிரி; கள்ச்சிலம்பு தேன் வண்டுகள் சப்திக்கும்.)

ஆனால், கம்பருடைய வர்ணனா சக்தி. அரை அடி, கால் அடி, அரைப்பாட்டு, கால்பாட்டு, இவைகளைச் சொல்லிப் பார்த்தால் தெரியாது. கவியின் நாலடியையும் சேர்த்து முழு உருவமாகப் பார்த்தால்தான் தெரியவரும்."

"இன்னொரு காட்சியையும் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்:

அயோத்தியிலுள்ள ஜனங்கள் எல்லோரும் 'ராமன் முடிசூடுவான், பிறகு அலங்காரமாகப் பவனி வருவான்' என்று எதிர்பார்த்திருந்தார்கள். அது எப்படி முடிந்தது? நாடு நகரம் எல்லாவற்றையும் விட்டு விட்டு, அருமை ராமன் காட்டுக்குப் போகிறான் என்றாகி விட்டது! இதைப் பார்க்க அவர்களுக்குச் சகிக்குமா? முடியாது.

அயோத்தி நகரம் ஒரே துன்பத்தில் அழுந்திக் கிடக்கிறது. அங்கே நாம் இருந்திருந்தால், காணும் காட்சியெல்லாம் துக்கத்தில் மூழ்கியிருப்பதாகத் தோன்றாதா? மரமெல்லாம்

சோர்ந்த வண்ணமாய்த் தோன்றும். பட்சிகளும் மிருகங்களும் அப்படியே தோன்றும். இப்படித் தோன்றுவது உண்மையே. கம்பருக்கு, அந்தவேளை, கதிரவன் அஸ்தமித்ததிலும் ஒரு சோகம் தோன்றியது:

இடம், மலைப்பிரதேசம். அந்தி நேரம். மஞ்சள் வெயில் மலைச்சிகரங்களின் உச்சிகளில் மாத்திரம் தங்கி நிற்கிறது. அதுவும், கொஞ்சங் கொஞ்சமாக ஒதுங்கிவருகிறது. இதற்குள், வானத்தில் காத்திரமான நட்சத்திரங்கள் மெள்ளப் பிரகாசிக்க ஆரம்பிக்கின்றன. மேயப்போன எருமையோடு பசுவும் ஊருக்குள் மந்தை மந்தையாகத் திரும்புகிறது.

**மீன்புகழ் பெற, வெயில்**
**ஒதுங்க, மேதியோ(டு)**
**ஆன்புகக் கதிரவன்**
**அத்தம் புக்கனன்:**

சூரியன் அஸ்தகிரியாகிய கல்லும் கரடுமான மலைக்குள் பிரவேசிக்கிறான். என்ன தன்மையில் பிரவேசிக்கிறான்? ராமன் காட்டுக்குப் போவதைக் கண்கொண்டு பார்த்துச் சகிக்க முடியாத தன்மையில்தான்.

**மீன்புகழ் பெற, வெயில்**
**ஒதுங்க, மேதியோ(டு)**
**ஆன்புகக் கதிரவன்**
**அத்தம் புக்கனன்:**
**கான்புகக் காண்கிலேன்**
**என்று கல்லிடைத்**
**தான்புக முடுகினன்**
**என்னும் தன்மையால்,**

(மீன் நட்சத்திரங்கள்; புகழ்பெற விளக்கம்பெற; மேதி - எருமை; ஆன் பசு; கதிரவன் அத்தம் புக்கனன் சூரியன் அஸ்த கிரியை அடைந்தான்; கல்லிடை மலைக்குள்; முடுகினன் - விரைந்தான்.)

காட்சி கட்புலனை விட்டு அகலாது. செய்யுளில் உள்ள ஓசை செவிப்புலனை விட்டுப் போகாது. பாவமோ இதயத்தை விட்டு அகலவே அகலாது. இதுதான் கவி.

உலகக் காட்சிகள் எத்தனையோ வந்து நம் உள்ளத்தில் விழுகின்றன; ஆனால் அப்படியே மறைந்தும் போகின்றன. கம்பரோ அவைகளை வார்த்தையிலும் இசையிலுமாகக் கட்டி வைத்து என்றென்றும் நிற்கும்படி செய்து விடுகிறார். கவிஞர் செய்கிற அற்புதம் இது."

(கம்பர் யார் டி.கே.சிதம்பரநாத முதலியார் பொதிகைமலைப் பதிப்பு, வானதி பதிப்பகம் முதற்பதிப்பு 1941, 2ஆம் பதிப்பு 1981 பக்கம் 4,5,6,9,10,11)

ஆம். கம்பர் கண்ட உலகக் காட்சிதான் நண்பர்களே! எவ்வளவு அழகாக சித்தரிக்கிறார் பார்த்தீர்களா! தோழர்களே! இது மட்டுமா! அம்மக்களின் இயல்பு, அவர் காட்டும் நாடகப்பண்பு, உடல் வனப்பில் அவர்க்கு இருந்த ஆர்வம், கம்பர் கூறும் நீதி நெறி, அவர் கண்ட அவதாரத்திலும் என்று இப்படி கம்பராய் இருந்து எல்லாவற்றையும் நமக்கு காட்சிப்படுத்துகிறார் டி.கே.சி. என்றால் அது எளிதான செயலா என்ன நண்பர்களே!

"தனக்கு ஏற்பட்ட செல்வத்தினால்தான், அதாவது பொன்னினால்தான், எல்லாக் காரியங்களும் நடக்கின்றன என்று எண்ணுகிறான் இரணியன். (இரணியம் - பொன்). அதனால், எல்லாக் காரியங்களையும் தானே செய்து முடிப்பதாக எண்ணுகிறான். கடவுள் என்பது கிடையாது என்றும் சொல்லுகிறான்.

அவனுடைய மகன் பிரகலாதனோ, பிறவியிலேயே ஞானி. அவன் இரணியனைப் பார்த்து எல்லாப் பொருள்களிலும், எல்லா நிகழ்ச்சிகளிலுமே கடவுள் ஒருவன்தான் இருக்கிறான், என்றவிதமாகப் பேசுகிறான்.

ஒரு சாண் இடத்திலும் இருக்கிறான் கடவுள். கட்டடத்துக்குச் செங்கல்போல, சிருஷ்டிப் பொருள்களுக்கு அடிப்படையாயுள்ள ஒற்றைத்தன்மை வாய்ந்த அணுவில் மாத்திரமல்ல; அதை நூறு பாகமாக (சத கூறாகப்) பிரித்தால் அந்தப் பாகத்திலும் (கோணிலும்) அவன் இருக்கிறான்.

**சாணினும் உளன், ஓர்தன் மை**
**அணுவினைச் சதகூறிட் ட**
**கோணினும் உளன், மாமே ருக்**
**குன்றினும் உளன், இந்நின்ற**
**தூணினும் உளன்.**

பக்கத்தில் நின்ற தூணைச் சுட்டிக் காட்டினான். ஆனால் அதோடு நிற்கவில்லை. இரணியனிடத்திலுந்தான் கடவுள் அமைந்து விளையாடுகிறான். கடவுள் ஒருவன் கிடையாது என்று இரணியன் சொன்னபோது, அப்படி அவன் சொன்னதும் கடவுள் சொன்னதுதான் என்று உறுதியாகப் பிரகலாதன் சொல்லுகிறான்.

இந்நின்ற
தூணினும் உளன், நீசொன் ன
சொல்லினும் உளன்இத்தன் மை
காணுதி விரைவின்என் றான்.

இப்படிப் பிரகலாதன் சொன்னது சிரிப்பை உண்டாக்கிவிட்டது இரணியனுக்கு.

சாணினும் உளன், ஓர்தன் மை
அணுவினைச் சதகூறிட் ட
கோணினும் உளன், மாமே ருக்
குன்றினும் உளன், இந்நின் ற
தூணினும் உளன், நீசொன் ன
சொல்லினும் உளன், இத்தன் மை
காணுதி விரைவின்என் றான்:
நன்றெனக் கனகன்நக் கான்.

'ரொம்ப பேஷ்!' என்று இரணியன் சிரித்தானாம்.

இந்தப் பாட்டிலிருந்து அறியாமையும் ஆணவச் செருக்கும் நிறைந்த ஒரு மனுஷனையே கடவுளின் அம்சமாகக் கருதவேண்டும் என்பது தெரிகிறது. அறிவினாலும் குணத்தினாலும் ஒருவன் அபூர்வமாக விளங்கி விடுவானானால், அவனைத் தெய்வாம்சம் என்று சொல்லுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது? கடவுளையும் கடவுள்த் தத்துவங்களையும் சதா சிந்தித்துக் கொண்டிருக்கும் மனசுக்கு அந்த அபூர்வ குணங்கள் அமைந்த மனுஷன் தெய்வம் என்றே தோன்றுவது இயல்பு." (கம்பர் யார், டி.கே.சிதம்பரநாத முதலியார் பொதிகைமலைப் பதிப்பு, 2ஆம் பதிப்பு பக்கம் 48,49,50)

விஷயங்கள் கொஞ்சம் கஷ்டமானவைதானே. எனினும் அவைகளை அவருடைய தனிநடையில் லேசாக விளக்கி விட்டுச் செல்கிறார். கம்பர் யாரென்று நமக்குப் புரியவைத்து விடுகிறார். நண்பர்களே! நீங்கள் அனைவரும் படித்துக் கம்பர் யாரென்று

புரிந்து கொள்ளுங்களேன்! அவசியம் நாம் செய்ய வேண்டிய காரியம் நண்பர்களே!....

"கம்பராமாயணமும், முத்தொள்ளாயிரமும் தமிழர்கள் படித்து அனுபவிப்பதற்காகப் பிரசுரிக்கப்பட்டது. ஆராய்ச்சி செய்யவாவது அல்லது விமர்சனம் செய்யவாவது பிரசுரிக்கப்படவில்லை. ஆதலால் அவருடைய கம்ப ராமயணம் பதிப்பைப் பற்றி நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை. முத்தொள்ளாயிரத்தில் அவருக்கு உள்ள ஈடுபாட்டைச் சொல்லாமல் போனால் டி.கே.சியை பற்றி முழுவதும் பேசியது ஆகாது" என்கிறார், தம் புத்தகமாகிய ரசிகமணி டி.கே.சியில் தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்.

மிகவும் உயர்தரமான நூல்கள் சில பண்டைக்காலத்தில் இருந்து வந்து தொலைந்து போய்விட்டன. அப்படிப்பட்ட நூல்களில் முத்தொள்ளாயிரம் ஒன்று. முத்தொள்ளாயிரத்தின் ஆசிரியர் பெயர் தெரியாது. காலமும் தெரியாது. செய்யுள்களின் அமைப்பைப் பார்க்கும்போதுதான் மிகப் பழைய நூல் என்று தெரியவருகின்றன. 2000 வருடங்களுக்கு முந்தையது என்கிறார்கள். சரி போகட்டும் என்னில் நூல் முழுவதும் கிடைத்தால் போதும் என்று நினைத்தால் அதற்கும் வழி இல்லையே நண்பர்களே! நமக்கு வெறும் 108 நூற்பாக்கள்தான் கிடைத்துள்ளன. சேர, சோழ, பாண்டியர்களின் வீரம், கொடை, அழகு முதலிய அருமையான விஷயங்களை வைத்து ஒவ்வொரு அரசர் மீதும் தொள்ளாயிரம் பாட்டுக்கள் பாடியிருக்க வேண்டும் என்றால் இரண்டாயிரத்து எழுநூறு பாடல்கள் இருந்திருக்க வேண்டும். அவைகளில் நமக்கு 108 பாடல்கள்தான் மிஞ்சியிருப்பது நம் தமிழர்களின் துர்பாக்கியம்தானே நண்பர்களே!

"கூடல்ப் பெருமானைக்
கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேல்க்
கூ(டு)என்று, கூடல்
இழைப்பாள்போல்க் காட்டி
இழையா(து) இருக்கும்
பிழைப்பில்ப் பிழைபாக்(கு)
அறிந்து!"

"காராட்டு, உதிரம்தூஉய்,

அன்னை களன்இழைத்து
நீராட்டி நீங்கென்றால்
நீங்குமோ? போராட்டு
வென்று களங்கொண்ட
வெஞ்சினவேல்க் கோதைக்(கு) என்
நெஞ்சு களம்கண்ட
நோய்".

என்ற முத்தொள்ளாயிரப் பாட்டுக்கள் எல்லாம் தமிழ்நாட்டில் இன்று பிரசித்தம். பாட்டுக்களில் காணும் அற்புத பாவங்கள், சொல், அபிநயங்களை எல்லாம், பாட்டுகளுக்கு டி.கே.சி. கொடுத்திருக்கும் முன்னுரையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பாட்டுக்களை அவர்கள் கொடுக்கும் 'செட்டிங்' இல்லாமல் படித்தால் ஒன்றும் விளங்காதுதான். இந்த முற்குறிப்புகளே கவிதாலோகத்தின் கதவைத் திறந்து விடும் வழிகாட்டிகளாக இருக்கின்றன. அதன்பின்தான் கவிஞர் தங்கத்தட்டில் வைத்து நீட்டும் கவியமுதை ருசிக்க முடிகிறது. ஆம். ஆர அமர இருந்து ருசிக்க வேண்டியதைப்பற்றி இரண்டு மூன்று பக்கங்களில் சொல்ல முடியுமா என்ன?"

(ரசிகமணி டி.கே.சி. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், முதற்பதிப்பு, 1945, ஸ்டார் பிரசுரம், பக்கம் 124,125)

"சண்பக மரம் ஒன்று இருக்கிறது. அந்த மரத்தின் மீது முல்லைக்கொடியும் வளமாகப் படர்ந்து பூத்துக் கிடக்கிறது. முல்லைப் பூக்களைப் பற்றிப் பேசும்போது உள்ளே பொதிபட்டுக் கிடக்கும் சண்முகப்பூவை மறந்துவிட வேண்டியதுதான். ஒரு உணர்ச்சியை விட்டு விட்டு மேலே வந்து திகழும் மற்றொரு உணர்ச்சியையே பார்க்க வேண்டும்.

சரி, 'அற்புதம்' என்றால் என்ன? சாமானியமாய் அல்லாத காரியம் ஒன்றைக் கண்ட மாத்திரத்தில், உள்ளத்தில் எழுகிற உணர்ச்சிதான். சில வேளைகளில் எக்களிப்பு உண்டாகும். அதுவும் அற்புதத்தோடு ஒட்டும்.

அற்புதத்தைப் பார்க்க வேணுமா? எங்கே பார்த்தாலும் அற்புதந்தான்.

இருட்டிய உடன் முற்றத்திற்கு வருகிறோம். ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. செவ்வாய் கிரகத்தைப் பார்க்கிறோம். இன்ன தேதி, இன்ன நிமிஷம் உச்சிக்கு வரவேண்டுமென்று பஞ்சாங்கத்தில் சொல்லியிருக்கிறது.

அப்படியே வந்து விடுகிறது. செவ்வாய் கிரகத்தினிடம் ஏதாவது 'காலண்டர்' உண்டா? இப்படி எல்லாம் நினைத்தால் அற்புதந்தான்.

மழை பெய்கிறது. பெய்த உடனே அந்தப் பருவத்துக்குரிய எத்தனையோ புல், பூண்டுகள் தளிர்த்துப் பூத்து நிற்கின்றன. போன போன இடத்திலெல்லாம் அவைகளைக் காண்கிறோம். "அடடே! இவைகளுக்கும் 'காலண்டர்' தெரியுமோ?" என்று எண்ணுகையில் அற்புதந்தான்.

பூனையானது குட்டி போடுகிறது. அது முன்னேமேயே ஒரு நல்ல இடத்தைப் பார்த்து வைத்திருக்கிறது. குட்டி போட்டதும் பாதுகாக்க ரொம்ப வசதியெல்லாம் செய்து கொள்கிறது. ஆண் பூனை வராமலும் பார்த்துக் கொள்கிறது. இது மட்டுமா? பூனை தன் குட்டியைத் தூக்கும் சமர்த்தே சமர்த்து! குட்டியை மெதுவாகக் கௌவிப் போகிறதைப் பார்த்தால் அதிசயமாக இருக்கும். கௌவிப் பிடிப்பதில் தனியான லாகவம். சுவர்களையும், விட்டங்களையுழ் தாவிப்போய் குட்டியை மெள்ள வைத்து விடுவதும் அற்புதந்தான்.

மனுஷன் இருக்கிறான். அவனிடம் எத்தனையோ அற்புதங்கள்! சிப்பாய் தன் உயிரையே கொடுக்கப் போகிறான்! எதற்காகப் போகிறான்? இது அற்புதந்தான்!

பொய் சொல்லுவது என்று ஒரு காரியம். அது வெறுப்பான காரியம். ஆனாலும் உண்மையை மறைத்து விட வேண்டும் என்று கச்சை கட்டிக்கொண்டு கோர்ட்டுக்கூண்டில் ஏறுவான். ஏறியதும் உண்மை சொல்லுகிறதாக சத்தியம் செய்வான். அவ்வளவுதான். உண்மை அப்படியே வெளிவந்து விடும். இதுவும் ஒரு அற்புதம்.

ஸர் ஸி.விராமன் தனது ஆராய்ச்சிகளை எடுத்துச் சொல்லுகையில் ஒரே வியப்புதான். அறிகலை(சையன்ஸ்) நிபுணர்கள் நிமிஷந்தோறும் அற்புதங்களைக் கண்டு கொட்டிக் கொண்டு தானிருக்கிறார்கள்.

ஆனால் இந்த அற்புதங்கள், இப்போது நாம் நடத்தும் பரிசீலனைக்குச் சம்பந்தப்பட்டவை அல்ல. நாம் பேசப்போவது வேறு விஷயம். அது விஷயத்தோடு நிற்பதல்ல, உணர்ச்சியோடும் நிற்பதல்ல. உள்ளத்தில் உண்டான உணர்ச்சியைத்தான் (வியப்பைத்தான்) வெளியிடும் முறையைக் குறித்து நிற்பதே. அதாவது நாம் பேசப் புகுவது சையன்ஸ் அல்ல; ஆனால் 'ஆர்ட்டு.' 'ஆர்ட்டு' என்றால் அனுபவ வெளியீட்டுக் கலை என்று

சொல்லலாம். இதற்கு மட்டுமே 'கலை' என்ற வார்த்தையை உபயோகப்படுத்துவது நல்லது. சையன்ஸ்களை 'இயல்கள்' என்று வைத்துக் கொள்ளலாம். ஸைகாலஜியை 'உள இயல்' என்றும், இன்ஜினியரிங் சையன்ஸைத் 'தச்சியல்' என்று சொன்னாலும் பொருந்தும்.

இனி கலைக்கு நேராக வரலாம். ஒரு ரஸிகன் ஒரு விஷயத்தைப் பார்த்து அதிசயிக்கிறான். உள்ளத்திலே எத்தனை வருஷங்களானாலும் இருந்துகொண்டே இருக்கும் அது. அந்த ஆனந்தத்தை&அற்புதத்தை வெளியிடுகிறான். கவியாக வெளியிடுகிறான். கவி பிறந்து விட்டால் அந்த அதிசயத்துக்கு உருவம் ஏற்பட்டு விடுகிறது. உருவம் ஏற்படுவதுதான் கலை.

பரத நாட்டியத்தில் பாவங்களை முகத்தில் வெளியிடுகிறார்கள். உள்ளத்தில் உதிக்கும் உணர்ச்சிகள் முகத்தில் தெரிய வேண்டும். அப்போது பாவம் வருகிறது என்கிறோம். நாட்டிய இலக்கணத்தைப் படித்து அல்ல; கண்ணிலும், உதட்டிலும், புருவத்திலும் எல்லா அங்கங்களிலும் உள்ளுணர்ச்சி பிரவேசித்து வருகையில்தான் கலை ஆகிறது. அதுதான் 'மெய்ப்பாடு', அபிநயம்&இது ஒரு கலை.

இனி கவி. கவி என்பது தானாக வரவேண்டிய அரிய வஸ்து. உருவம் என்றால் உணர்ச்சியின் சாயல் வர வேண்டும். விஷயத்தைச் சொன்னால் காணாது. விஷயம் அல்ல முக்கியம். உணர்ச்சியும் அல்ல. விஷயமும் உணர்ச்சியும் உருவத்துக்காக உபயோகிக்கப்படும் காரியங்கள். உரம், மண், தண்ணீர் எல்லாம் எப்படி புஷ்பத்துக்காக உதவுகின்றனவோ அதே மாதிரி விஷயம், உணர்ச்சி, சிருஷ்டி செய்வதில் ஏற்படுகிற உற்சாகம் எல்லாம் சேர்ந்து உருவத்தை உண்டாக்கித் தந்தன என்றுதான் சொல்ல வேண்டும்.

தாகூரது நூல்களைப் படித்தால் இந்த உண்மை நன்றாகத் தெரியவரும். ஒரு செய்யுளை நாம் பார்ப்போம். முருகன் எழுந்தருளிய ஒரு குன்று. குன்றின் வளத்தைப் பார்த்தால் தெரியும். (எங்கள் ஊர் குற்றால மலைக்குப் பக்கம்) நானும் நண்பர்களும் குற்றால மலையில் சண்பகாடவி அருவியைப் பார்த்து விட்டு வந்தோம். நேரம் அந்திப்பொழுது! வரும்போது ஓரிடத்தில் திரும்பினோம். ஒரே வாசனை&எதனுடைய வாசனை, காட்டு மல்லிகையின் வாசனை. இப்போது நான் சொல்வது ஒரு பூர்வமான பழைய பாட்டு. பாட்டென்றால் எப்படி வர வேண்டும்? உருவம் வருகிறதா என்பதைப் பார்க்க வேண்டும்.

அந்தக் காலத்தில் 'மௌவல்' என்று காட்டு மல்லிகைக்குப் பெயர். முருகன் குன்றம் எப்படி இருக்கிறது?

மாலை மணம்கம ழ
 மௌவல் முகைவிரி யும்
பாவம் வரும். அடுத்தபடியாக,
 எந்தை குன்றம்!

இதைச் சொன்ன மாத்திரத்தில் உருவமே, அதாவது அற்புதத்தின் சாயலே வந்து விட்டது. எங்கள் இறைவன் முருகன் இப்பேர்ப்பட்ட குன்றில் அல்லவா இருக்கிறான் என்று வியந்து சொல்லும் பாவம் தெரிகிறது.

காலை மணிக்குவ ளை
 காதலர்போல் கண்விழிக் கும்
 எந்தை குன்றம்.

காதலர் ஒருவர் மற்றவரை விழுங்குகிற மாதிரி அப்படியே வெறித்துப் பார்ப்பார்கள். குவளை மலரும் அப்படிப் பார்க்கிறது! இனி -

மூங்கில்கள் அங்கே காற்றினால் அப்படியும், இப்படியுமாக வாள் வீசுவது போல ஆடும். விஷயத்தை விளங்க வைக்க வேண்டி டெனிஸனிலிருந்து ஒரு உதாரணம். டெனிஸன் இம்மாதிரி காட்சிகளைக் கண்டு அனுபவித்தவர். நன்றாகச் சொன்னார்.

"ஒரு சிறு மேகக் குஞ்சு கையை நீள விட்டு விட்டு, மரம், மரமாக மெள்ளத் தவழுகிறது"

"A tender cloud puts forth an arm and creeps from pine to pine."

எனக்குச் செய்யுளில் இருக்கும் விஷயந்தான் தெரிகிறது. கவி உருவத்தில் நயம் தெரியவில்லை. இங்கிலாந்து தேசத்துக்குப் போய் பயின்ற காரணத்தால் புரபசர் சுவாமிநாதன் அவர்களுக்குத் தெரிய வரும்.

முருகன் குன்றத்திற்கு வருவோம். அங்கே ஒரு மேகக்குஞ்சு. பக்கத்தில் நின்ற மூங்கில் காற்றில் ஆடிக் கொண்டிருக்கிறது; ஆடும்போது என்ன நேர்ந்தது?

ஆடு கழைகிழிக் கும்
 அந்தண் புயலிற் றே
 எந்தை குன்றம்!

(கழை - மூங்கில்; அந்தண் புயல் -அழகியதாயும், ஜில் என்றும் இருக்கிற மேகம்; புயலிற்றே - புயலை உடையது.)

நேரம் சாயங்காலம். ஆறு மணி. பிறைச்சந்திரன் உச்சியில் தோன்றுகிறது.

நீடு கழை மேல்
நிலா மதியம் நிற்கு மே!
எந்தை குன் றம்!

இப்போது கவியை முழு உருவத்தோடு பார்க்கலாம்.

மாலை மணங்கம ழ மௌவல் முகைவிரி யும்
எந்தை குன் றம்!
காலை மணிக்குவ ளை காதலர்போல் கண்விழிக் கும்
எந்தை குன் றம்!
ஆடு கழைகிழிக் கும் அந்தண் புயலிற் றே
எந்தை குன் றம்!
நீடு கழை மேல் நிலா மதியம் நிற்கு மே
எந்தை குன் றம்!

இந்தக் கவியில் உருவம் இருக்கிறது. அற்புத பாவம் இருக்கிறது. அபிநயம் காட்டும்போது முகத்தில் அற்புத பாவம் இருக்கிறது என்று சொல்வதுபோல.

இந்தச் சமயத்தில் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொண்டால் நலம். மேலே சொன்ன கவியில் அற்புதம் தெளிவாய் இருக்கிறது. அந்த உணர்ச்சி வெளியே வந்து துலாம்பரமாய்த் தெரிகிறது. கவிக்குள் வருகிற விஷயத்தைப் பார்த்தால் பக்தி அனுபவமும் வர்ணனை அனுபவமும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் உருவத்தைப் பார்த்தால் அற்புத பாவமே விளங்குகிறது. சண்பக மரத்தின் மீது முல்லைக்கொடி படர்ந்து ஒரே வெண்மை நிறமாய்ப் பூத்திருப்பதைப் பார்ப்பது போல் அற்புத உருவத்தை மாத்திரம் பார்க்கிறோம்.

அதிசய உருவத்தைக் காண இன்னும் ஒரு பாட்டு.

திருமூலர் என்ற பெரியார் ஒரு பெரிய விஷயத்தைத் தெளிவுபடுத்துகிறார். கடவுள் எங்கும் நிறைந்துள்ள வஸ்து. அந்த ஒரு பொருள் வானவெளியில் எவ்வளவு தூரம் எட்டிப் போனாலும் வெற்றிடம் என்பது இல்லாதபடி நிறைந்துள்ளது. மேலே போனாலும் சரி, பாதாளத்துக்குப் போனாலும் சரி.

அணுவென்று அணுவுக்குள் அணுவென்றும், இறுதியில்லாதபடி அந்தப் பொருள் செறிந்து கொண்டே போகும் தன்மையது தான். ஆனால், இப்படியே சொல்லிக் கொண்டிருந்தால் சோர்வு ஏற்பட்டு விடும். மனம் பற்றாது. அதைக் கவியில் அமைத்து விட்டாலோ ஞாபகத்தில் அப்படியே இருந்து விடும்.

மேல் நாட்டார், 'சிரியஸ்' என்ற நட்சத்திரத்தைப் பற்றி ரொம்பவும் ஆராய்ந்திருக்கிறார்கள். அதன் தூரம் எவ்வளவு என்பதைக் கணக்கிட்டார்கள். பூமி, சூரியனைச் சுற்றிக்கொண்டு வருகிறது. ஒன்பது கோடி மைல் சூரியனுக்கும் பூமிக்கும் இடையே தூரம். அதனால் சூரியனிடமிருந்து நமக்கு ஒளிவர எட்டு நிமிஷம் ஆகிறது. சில நட்சத்திரங்களிடமிருந்து ஒளி நமக்கு வருவதற்கோ ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஆகுமாம்! அப்படியானால் நட்சத்திரங்கள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன என்பதை ஒருவாறு ஊகிக்கலாம். கீழேயும், பக்கத்திலேயும் இப்படித்தான். டிண்டால் என்ற பொருளியல் ஆசிரியர் ஆல்ப்ஸ் மலை மேலே இருந்து கீழ் நோக்கிப் பார்த்தார். அந்த நேரத்தில் ஒரே மேகப்படலம் எங்கும் பரவி பூமியை அப்படியே மறைத்துக் கிடந்தது. அதைப் பார்த்தவுடன், "ஆகா! நாம் வாழும் பூமியும் நானும், என் உள்ளத்தில் எழுகின்ற அதிசயமும் கோடானு கோடி வருஷங்களுக்கு முன் உருவ வேறுபாடு, குண வேறுபாடு ஒன்றும் இல்லாத மேக பிண்டமாய்த்தானே சூரியனோடு ஒட்டிச் சுற்றி வந்திருக்க வேண்டும். இந்த மேகப் படலம் அந்த அபூர்வமான மேக மண்டலத்தை அல்லவா நினைப்பூட்டுகிறது!" என்று ஒரே அதிசயத்தில் மூழ்கி விட்டார்.

இப்போது திருமூலர். அடைந்த அதிசயத்தைப் பார்க்கலாம்.

**"ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை!**
**ஆர் அறிவார் அந்த ஆழமும் நீளமும்!**
**பேர் அறியாத பெருஞ் சுடர் ஒன்(று), அதின்**
**வேர் அறியாமை விளம்புகின் றேனே."**

தனக்குத் தெரியாததை விளக்கப் போகிறாராம்; தான் கண்டது அவ்வளவு அதிசயமான பொருள்!

இந்த விதமான ரஸங்கள் கலைகளிலே வர வேண்டும்; சிற்பம், ஓவியம், நாட்டியம், இசை&பிறகு கவி&இவைகளிலே பாவத்தோடு ரூபமாக வெளிவர வேண்டும். ரூபமாக வெளிவரவில்லையானால் கலையல்ல. வியப்பாகிய உணர்ச்சி மக்களுக்குச் சாமானியமான

காரியம், அதாவது அற்புத உணர்ச்சி சாமானியம். ஆனால் கவியில் அற்புத உருவம் வருவதென்றால் அபூர்வம்தான். தெய்வீகம்தான்.

இந்த முறையிலேயே மற்ற ரஸங்களையும் ஆராய்ந்தால் உண்மையான கவி உணர்ச்சி உண்டாவதற்கு ஏதுவாகும். கவியுணர்ச்சி மாத்திரம் அல்ல, மற்றக் கலைகளிலும் திருத்தமான உணர்ச்சி உண்டாகக் காரணமாகும்."

இது 'அற்புத ரஸம்' என்னும் ரசிகமணி டி.கே.சியின் கட்டுரைத் தொகுதியில் . வெளிவந்த முதல் கட்டுரை இயற்கையின், இறைவனின் அதிசயத் தத்துவத்தை விளக்குகிறது.

1943ஆம் வருஷம். ஆங்கிலக்கல்வி மலிந்து இருந்த நேரம். உடையில் நடையில் ஆங்கில நாகரிகம். சாயங்காலத்தில் கிளப்புகளுக்குச் செல்லும் நேரம். நண்பர்களுடன் மியூஸியம், பார்க்கு என்று போக விரும்பும் நேரம். இவை நம்முடன் காலகாலமாய் உடன் இருந்திருந்த பழக்கமும், வாழ்வு முறையே. ஒரு மயங்கிய நேரம். இவையெல்லாம் வாழ்க்கையாகாது என அறியாது அறிவிழந்த காலம் அது. இவற்றையெல்லாம் தாண்டி நமக்கு ஒரு வாழ்க்கை இருந்திருக்கின்றது என்று நினைவிழந்த நேரம். இவற்றையெல்லாம் சற்று ஒத்திப் போட்டுவிட்டு சற்றே ஒரு மாலையில் கோவிலுக்குச் செல்லலாம். அங்குபோய் சங்கீதம் கேட்கலாம். அங்கு பாடும் பாசுரங்களைக் கேட்கலாம். பிரகாரம் சுற்றலாம். தீபாராதனை முதலான வழிபாடுகளில் கலக்கலாம். இதோடு தற்காலத்து ஸயன்ஸையும் நினைவிற்கு கொள்ள வேண்டும்.

"அதாவது ஒரு சக்திதான் பேரண்டம் முழுவதையும் ஆழ்கிறது. ஒரே நியதியின்படி ஆட்டுகிறது. அதுவும் அமைதியாய் இருந்து நம்முடைய உடலின் செயல்கள், உள்ளத்தில் நிகழும் செயல்கள் எல்லாம் ஒன்று விடாமல் அந்த நியதிக்குள் நின்று விடுகிற காரியந்தான். இப்படி எங்கும் வியாபித்ததாய் அநாதியாய் நிகழ்ந்து வரும் நியதியை (ஆங்கிலத்தில் 'லா' என்பார்கள்.) நம்மவர் இறைவனது அருள் என்கிறார்கள். எல்லாம் அவனது அருள் வயத்தது என்றார்கள். அடையாள முகமாய்ப் பேசும்போது எல்லாம் இறைவனது திருவடியில் அடங்கிக் கிடப்பதுதான் என்றார்கள்.

"கோயிலில் நின்று சேவிக்கும்போது மேலே சொன்ன திருவடியைக் கொஞ்சம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு ஒரு வாரத்தில் தெரிந்து விடும். கோயில் என்றால் இன்னது,

வழிபாடு என்றால் இன்னது, பக்தி மார்க்கம் என்றால் இன்னது என்பதெல்லாம். இதை எல்லாம் நம்மவர் எவ்வளவு அற்புதமாய் வாழ்க்கையோடு ஒட்டி அனுபவித்திருக்கிறார்கள். அவர்களது ஆழ்ந்த பண்பாடுதான் என்ன! என்று அதிசயிக்கத் தோன்றும்". (நெஞ்சமே எழுந்திடு! வா! என்னும் கட்டுரையிலிருந்து டி.கே.சி. கூறியவை).

டி.கே.சியின் கருத்தைக் கேட்டால், அந்த மயங்கிய நிலையின்று மீண்டு வரலாம்.

பக்தி பண்பாட்டில் ஈடுபட்ட ஒருவர்க்கு குடும்ப வேலைநிமித்தம் கோயிலுக்குச் செல்லாது ஒரு தேக்க நிலை உண்டாயிற்று. ஏனெனில் அவர் கோவிலுக்குச் சென்று வழிபட்டு, அங்குள்ள அடியார்களிடம் தத்துவங்கள் கேட்டு இறை இன்பத்தில் திளைப்பவர். அப்படிப்பட்டவருக்கு இந்த தேக்க நிலை புத்தியில் பட்டது. உடனே எல்லா மற்ற வேலைகளையும் ஒதுக்கி வைத்துவிட்டு நாராயணன் இருக்கும் எல்லா ஸ்தலங்களுக்கும் செல்லலாம் என்று முடிவு செய்தார்.

நாடுதும்வா நெஞ்சமே நார யணன்பதிகள்
கூடுதும்வா மெய்யடியார் கூட்டங்கள்

என்று நெஞ்சம் நினைக்கையிலே, மற்றோர் எண்ணம் எழுகின்றது. எல்லா ஸ்தலங்களையும் விட முதலில் இந்தளூர்ப் பெருமாள் (சோழநாட்டு வைணவ ஸ்தலம்) இருக்கிறார். இவரை இப்போதே போய் சேவித்து விட்டு வருவோமே! என்று தோன்றுகிறது.

"சூடுதும்வா
வீதி எங்கும் கார்அகிலின் வீசுபுகை வாசம் எழும்
ஆதியிந்த ளூரான் அடி.
பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்.

பக்தரது ஆனந்தம், அவசரம், அறிவின் ஆளுமை, தாபம், எல்லாம் நிறைந்த அவரது உள்ளப் பண்பாட்டைப் பளிங்கில் வைத்துப் பார்த்த மாதிரி இப்படியாய் நிற்கின்றது.

பக்தி என்பது உண்மையான, ஆனால் தனித்துவமான தனியான உணர்ச்சி என்று உரைக்கும் நிமித்தம் "நெஞ்சமே எழுந்திடு! வா" என்று இறைபால் உள்ள வேட்கை நெஞ்சை அழைத்துச் செல்வதுபோல் கட்டுரையை அமைத்திருக்கிறார் டி.கே.சி. என்பதை நாம் உணருகிறோம் தானே நண்பர்களே!

# சமயம்

தமிழ்மக்கள் சமய உண்மையைப் பல கலைகளின் மூலம் எடுத்துரைக்கிறார்கள். அத்தகைய கலைகளை கோயில்கள் தொன்று தொட்டுப் பாதுகாத்து வருகின்றன. சமயத்தில் இரண்டு விஷயங்களை பார்க்க வேண்டும் என்கிறார் டி.கே.சி. ஒன்று தத்துவ உண்மை. அதாவது இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்றான். உயிருள்ளவையும், உயிரற்றவையும் அவனின்றி இயங்குவதில்லை. அதை எண்ணி ஆனந்தத்தில் திளைக்கலாம். அது தவிர, அதை வழிபாட்டுக்குரிய உருவமாக்கி, அந்த உருவத்தில் ஈடுபட்டு ஆனந்தம், பேரானந்தம் கொள்வது என்பது சமயத்தில் இரண்டாவது நிலையாகும். நமது மூதாதையர்கள் முதலில் கூறிய உண்மையையும், பின் கூறிய அடையாளத்தையும் முழுதாக அனுபவித்திருக்கிறார்கள்.

" தமிழ்நாட்டுக்கு நிலையாய் உள்ள செல்வங்களாகப் பல கோயில்களும் கோபுரங்களும் இருக்கின்றன. அவைகள் தங்களிடம் பொதிந்து வைத்துள்ள பண்பாடு மிக அபூர்வமானது. ஆயிரக்கணக்கான வருஷங்களாக வந்த பண்பாடுகள் கல்லுக்குள்ளே ஊறிக் கிடக்கின்றன. நம்முடைய கடமை அந்தப் பண்பாட்டுச் செல்வங்களை அந்தக் கல்லுகளுக்குள்ளிருந்து பிழிந்தெடுத்துப் பருக வேண்டியதுதான். செல்லரித்த மத சம்பிரதாயங்களின் சிறைகளாகக் கோயில்களை நாம் மதியாமல் கலைச் செல்வப் பொக்கிஷமாக நாம் கண்டு அனுபவிக்க வேண்டும்."

விஞ்ஞானத் துறையில் டி.கே.சிக்கு அளவற்ற ஆர்வமும் ஞானமும் உண்டு. சமய தத்துவத்தில் ஆங்காங்கு வருகிற மரபுகள், அடையாளங்கள் அவ்வளவையும் விஞ்ஞான பூர்வமாக உணர்ந்து வெளியிட்டார்கள் டி.கே.சி.

கம்பர் தரும் ராமாயணம், முத்தொள்ளாயிரம் போன்ற

நூல்களில் கடவுள் தத்துவமாக வருகிற பாடல்களுக்கு டி.கே.சி. கொடுத்திருக்கிற விளக்கமும் குறிப்பும் படிக்கப் படிக்கப் படிப்பவர்களின் உள்ளத்தை கனிவித்து உன்னத நிலையில் வைத்துவிடும். அப்படியே சமய சம்பந்தமான பல பாசுரங்களை எடுத்து விளக்கி உள்ள டி.கே.சி.யின் விஞ்ஞான பூர்வமான சமய ஞானம் எவ்வளவு ஆழமும் அகலமும், உடையது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

விஞ்ஞானக் கலையின் மாசு மறுவற்ற அடிப்படை உண்மைகளையும், நவீன முடிபுகளையும் தெளிவாய்த் தெரிந்த டி.கே.சி. சமய சம்பந்தமான பாசுரங்களை விளக்குகிற நயம் எங்கும் இல்லாத அற்புதத் தத்துவமாகும்.

பேராசிரியர் ஐன்ஸ்டீனுடைய தத்துவ நிலைகளைத் தெளிவாய்த் தெரிந்ததால், அவருடைய கோட்பாடுகளையும், முடிவையும் ஒன்றிரண்டு நிமிடங்களில் எளிதில் விளக்கி விட்டு தமிழ்ப்பாசுரங்களாகப் பாடுவார் டி.கே.சி. கேட்பவர்களுக்கு மெய்ஞானமும், விஞ்ஞானமும் கிடைக்கும். பெரும்பாலும், டி.கே.சியுடைய தமிழ் ஞானத்துடன் தமிழ்க்கவி சமயத் தத்துவங்கள் விஞ்ஞான கருத்தோடு விளக்குகிற திறத்தை எல்லாத் தமிழ் அறிஞர்களும் அறிவார்கள். திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் முதலிய ஆதின மடாதிபதிகள் டி.கே. சியை அடிக்கடி வரவழைத்துச் சமயம், பண்பாடு தொடர்பான பாடங்களை விளக்கிச் சொல்லக் கேட்டு ஆனந்திப்பர். திருக்கோவிலூர் ஞானியார் சுவாமிகள் சமயத்தின் உன்னத நிலைகளை அறிந்த உத்தம ஒளி ஆவார். அவர் டி.கே.சி. சொல்லும் சமய விளக்கம் கேட்டு, “முதலியார் அவர்கள் சமய உண்மையை நேருக்கு நேராகக் கண்டு, அவற்றை மற்றவர்களுக்குத் தெளிவாய்க் கூறும் பேறு பெற்றவர்“ என்று பாராட்டினார்கள்.

டி.கே.சி. அவர்கள் ஒருமுறை கன்னியாகுமரிக்குச் சென்ற பின் நாகர்கோவில் சத்திரம் ஒன்றில் தங்கியிருந்தார்கள். இவரது அறைக்குப் பக்கத்தில், பிறிதொரு அறையில் சன்னியாசி ஒருவர் தங்கியிருந்தார். அவர் யாழ்ப்பாணம் சர்.ராமநாத பிள்ளைக்கு உறவினர்; ஆனந்தகுமாரசாமிக்கு மைத்துனர். தமிழ், சமஸ்கிருதம், கிரேக்கம், ஜெர்மன் முதலிய மொழிகளைக் கற்று ஆழங்கால் பதித்த சகலகலா வல்லவர் ஆவார். இவரது அறையிலிருந்து டி.கே.சி. அறையைக் கவனிக்க இயலும். டி.கே.சி. அறைக்கு நண்பர் குழாம் வந்த வண்ணம் இருந்தனர். இவரும் கவிகளைக் கூறி அதன் அனுபவத்தை அவர்களுடன் பகிர்ந்து கொண்டிருந்தார்.

சன்னியாசியும் தன் அறையிலிருந்தே டி.கே.சி. வழங்கிய அக்கவி இன்பத்தையும், கலையழகையும் பருகிக் கொண்டிருக்கின்றார். பின் டி.கே.சியை அவரது நண்பர்கள் வரும் முன் அச்சன்னியாசி சந்தித்தார். இந்த 5 நாட்கள் தொடர்ந்து கூறிய கவிகளையும், கவிகளின் சமாதி நிலையினின்று ஆனந்தத் தத்துவத்தோடு அனுபவித்ததாகவும், அந்த அனுபவ நிலைக்கு மற்றவர்களையும் அழைத்துப் போனதைக் கண்குளிரக் கண்டு, காது குளிரக் கேட்டதாகவும், இறைவனின் தரிசனமும், ஆனந்த நடனமும் அவர் மூலம் கிடைத்து விட்டது. டி.கே.சியை ஞானபீடமாக இருந்து அன்பர்களைத் தொடர்ந்து கவிகள் மூலம் இந்தத் தெய்வத் திருப்பணியைச் செய்தல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அனைத்தும் அறிந்த சன்னியாசியே பாராட்டினார் என்னில் வேறென்ன வேண்டும்....?

1933ஆம் வருடம் மயிலாப்பூரிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் ஒருநாள் டி.கே.சி. பேசினார். அவ்வமயம் "மினனாம் என உன்னா முனம்" என்னும் சிதம்பர செய்யுட் கோவைப் பாடலொன்றை எடுத்து விளக்கி, நிலையாமையை எவ்வளவு எக்களிப்போடு தமிழ் வெளியிடுகிறது என்பதை அழகாக எடுத்துரைத்தார் டி.கே.சி அவர்கள். சமய உண்மையில் ஆனந்தம் ஒன்றுதான் குறிக்கோள் என்பதை அழுத்தம் திருத்தமாகத் தெள்ளத் தெளிவாக விளக்கினார்.

டி.கே.சியின் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துச் சாமியார் " இன்றுதான் எனக்குச் சமய ஞானமும், ஆனந்தமும் கிடைத்தது" என கண்களில் அருவியாகப் பொழியக் கூறினார். அன்றிலிருந்து டி.கே.சி. அவர்கள் எங்கு சொற்பொழிவு செய்தாலும், அந்தச்சாமியார் கேட்க வந்து விடுவார்.

ஒருதடவை தென்காசியில் முஸ்லிம் பெருமக்கள் நபிநாயகம் பெருநாள் கொண்டாடினார்கள். அதில் டி.கே.சியைப் பேசும்படி அழைத்திருந்தனர். அவரும் சென்று பேசும் பொழுது, பந்தக்காலோடு கட்டி இருந்த வாழையைச் சுட்டிக் காட்டி வாழைக்குள் இருக்கிற அற்புத சக்தியை விஞ்ஞானபூர்வமாக விளக்கி அதன் மூலம் சமய உணர்ச்சியை மிகவும் விளக்கமாகக் கூறினார். விழாவென்றாலும் விசேஷம் என்றாலும் வாழை பிரதான இடத்தை வகிக்கின்றது. வாழையைச் சுற்றி வலம் வந்து வணங்குகின்றோம். ஒரு வாழையை பூமியில் நட்டு வளர்த்தால், அதன் அருகில் அதன் வாரிசுகளை உருவாக்குகிறது. அதனருகே

அதன் குடும்ப சாம்ராஜ்யமே உருவாகி விடுகிறது. வாழை ஒரு முறைதான் குலை தள்ளும். அதன் பூவின் அமைப்பு, பயன் எல்லாம் வியப்பாக இருக்கின்றது. வாழைத்தண்டு வயிற்றுக்கோளாறுக்கு மிகவும் நல்லது. வாழை மிகவும் குளிரிலும், மிகவும் வெப்பமான இடத்திலும் வளர இயலாது. அதிக வெப்பத்தையும், அதிகக் குளிரையும் கட்டுப்படுத்திப் பாதுகாக்கும் வண்ணம் அதன் வாழைத்தண்டின் மடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இலையும், காயும் பயன் படும். இப்படி ஒரு தாவரத்தை எவ்வளவு சிந்தித்துச் சிந்தித்து இறைவன் படைத்திருக்கின்றான் என்னில் அவன் எவ்வளவு பெரிய உன்னதமான படைப்பாளி.

விழாவுக்கு வந்திருந்த முஸ்லிம் மக்கள் யாவரும் மெய்மறந்து பக்தியில் திளைத்தனர். ஜில்லா முன்சீப் முஸ்லிம் ஆதலால் விழாவில் கலந்து கொண்டார். அன்று முதல், அவர் தன் பல நண்பர்களுடன் டி.கே.சி. வீட்டிற்கு தினந்தோறும் வந்து தமிழ்க் கவிகளைக் கேட்டு ஆனந்திக்கத் தொடங்கி விட்டார்.

பாளையங்கோட்டை நூற்றாண்டு மண்டபத்தில் கிறித்தவர்கள் மகாநாடு ஒன்று நடந்தது. அதில் டி.கே.சியைப் பேச அழைத்திருந்தார்கள். அன்று, ஏசுநாதருடைய உபதேச மொழிகள் சிலவற்றை எடுத்து டி.கே.சி அவர்கள் விளக்கினார்கள். அக்கூட்டத்திற்கு தலைமை தாங்கிய பாதிரியார், (ஆங்கிலேயர்) "கிறித்தவர்கள் ஒவ்வொருவரும் ஏசுநாதருடைய போதனைகளை டி.கே.சியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவு தெளிவாய் இதயப் பூர்வமாய் அவற்றை உணர்ந்து இருக்கிறார். ஏசுநாதர் கிறிஸ்தவர்களுக்கு விளங்காமல் போய்விடக் கூடாதே என்று தான் கூறுகிறேன். வெறும் உபசாரத்திற்கு இல்லை" என்று கூறினார்.

வானமாமலை ஜீயர் சுவாமிகள், நாங்குனேரி ஜீயர் சுவாமிகள் அடிக்கடி டி.கே.சியை வரவழைத்து ஆழ்வார்களின் பாசுரங்களைக் கேட்டு இன்புறுவார்கள். டி.கே.சியிடம் கேட்கும் போதுதான் வைணவத்தின் உண்மையும், ஒளியும் தெளிவாய்த் தெரிகின்றன என இருவரும் பாராட்டிக் கூறுவார்கள்.

தன் மதம் மட்டுமல்லாது கிறித்துவத்தையும், இஸ்லாமையும் சமமாகப் பாவித்து மதித்து உண்மையை அறிந்து இருக்கின்றார் என்பது அவரது பண்பாட்டின் பயனன்றி வேறென்ன கூற இயலும்?

# தமிழிசை இயக்கம்

உலகத்தில் எண்ணிறந்த மொழிகள் இருப்பினும் தமிழுக்கென்று ஒரு தனிச்சிறப்பு ஒன்று உண்டு. மக்களின் உணர்ச்சிகளை அனுபவங்களை வெளியிடப் பயன்படும் மொழி, அதை வெளிப்படுத்தும் அனுபவங்களையும் கருத்துக்களையும் எடுத்துரைக்க வார்த்தைகளையும் தொடர்களையும் நாடுகின்றது. அதை உருவாக்குவது "சொற்களால்"தான் இல்லையா? அதை முறைப்படுத்திக் கூறுவதை 'வழக்கு' என்கின்றோம். இந்த வழக்கு என்பது வசனமாக விளையலாம். செய்யுளாகச் செதுக்கப்படலாம். எப்படி பார்த்தாலும் மொழியானது வழக்கோடுதான் சேர்ந்து வரும். இவ்வழக்கு மக்களின் வாழ்க்கையில், அவர்களது வாழ்வியலில் இருக்கின்றது. இம்மொழி என்ன செய்யும் என்றால், இறந்துபட்ட சொற்களை வகுத்து, புதுச் சொற்களை எடுத்துக் கொண்டுத் தன்னைப் புதுப்பித்துக் கொண்டே இருக்கும். இப்படி எல்லா மொழிக்கும் ஒரு வழக்கு இருக்கின்றது. தமிழும் இப்படிப்பட்ட ஒரு மொழிதான். எனினும் இதோடு தமிழில் இசையும் கூத்தும் சேர்ந்து பின்னிக் கிடக்கின்றன. ஒவ்வொரு வார்த்தையோடும் தொடரோடும் இசைப்பண்பும், தாளப்பண்பும் சேர்ந்து கிடக்கின்றன. "பிற மொழிகளில் இசை உண்டு. கூத்தும் உண்டு. ஆனால் அவை தனியாக இருக்கும். தமிழில் அபிநயமும் இசையும் பாஷையோடு பாஷையாய் சேர்ந்தே கிடக்கின்றன" என்று டி.கேசி கருத்து கூறுகிறார். மேலும் அவர் கூறுவதாவது:

தமிழில் உள்ள ஒரு பாடலைப் பார்த்தால் போதும். அது வெண்பாவோ, விருத்தமோ, கட்டளைக் கலித்துறையோ, எதுவானாலும் சரி, கருத்தையும் உணர்ச்சியையும் குழைத்துப் பிசைந்து பாவ உருவத்தோடு வழங்கும். இசையையும் பாடலில் பார்க்கலாம். அபிநயத்தையும் பாடலில் பார்க்கலாம்.

விஷயத்தையும் உணர்ச்சியையும் பாடலில் உள்ள சொற்கள் விளக்குகின்றன. உண்மைதான். ஆனால் அந்த வார்த்தைகளை விட அதிகமான நயத்தோடும் வேகத்தோடும் இசையும் தாளமும் சேர்ந்து விளக்குகின்றன.

இப்படிப் பாஷையோடு பாஷையாய் இசையும் அபிநயமும் சேர்ந்து கிடப்பது தமிழ் ஒன்றில்தான். அதனால்தான் தமிழை முத்தமிழ் என்று சொன்னார்கள் முன்னோர்கள்.

தமிழ் உண்டானபோதே இசை உண்டாகி விட்டது. அபிநயமும் உண்டாகிவிட்டது. தமிழ்ப்பாடல் ஒவ்வொன்றும் இசையோடும் அபிநயத்தோடும் இருக்கின்றன.

ஆனால் பாடல்களைப் பாடுவதை&பாடி அனுபவிக்கிறதை தமிழ் மக்கள் விட்டு விட்டார்கள். தொண்ணூறு வருட காலமாகத்தான் இந்த அலங்கோலம். இது காரணமாக, "இசை என்பது தமிழில் இல்லை, அபிநயமும் அப்படித்தான். நாடகக்கலை என்பது தமிழில் இல்லவே இல்லை" என்றெல்லாம் முடிவு கட்டிவிட்டார்கள் தமிழர்கள்.

இசையும் நடனமும் தமிழ் நாட்டில் சர்வ வியாபகம் என்பது நமது கோவில்களைப் பார்த்தால் தெரியும். நமது பாடல்களைப் பார்த்தால் தெரியும். கோவில் தோறும் நாதசுரமும் பரதநாட்டியமும் நித்திய பூஜையோடு சேர்ந்திருந்தன. பாடல் ஒவ்வொன்றும் இசைமயமாயும் நடனமயமாயும் இருக்கின்றன.

(ரசிகமணி டி.கே.சி சிதம்பர முதலியார் வித்.ல. சண்முகசுந்தரம், சாகித்திய அகாடமி, முதற்பதிப்பு 1987, பக்கம் 162)

அவ்வமயம், ஒரு நூறு வருட காலமாகவே இந்துஸ்தானி இசையும் தெலுங்கு கீர்த்தனைகளும் மேலோங்கி வந்து கொண்டிருந்தன. பாடுகிறவர்களுக்குப் பொருள் தெரியாது. கேட்பவர்களுக்கோ பொருளே விளங்காது. எனின் பாட்டின் உணர்ச்சியை எங்கே அனுபவிப்பது? ஆனால் தமக்கு விளங்கவில்லையே என்று வெளிப்படையாகச் சொல்ல அஞ்சி, அறிந்து கொண்டது போல் தலையைத் தலையை ஆட்டி, உடலை அசைத்து, ஆனந்தம் கொண்டது போல் நடித்தார்கள். இந்நிலையில் டி.கே. சிதம்பரநாத முதலியார் மட்டுமே, மிகவும் தைரியமாக பாட்டுப் புரியவில்லை என்று குரல் கொடுத்தார். தெலுங்குக் கீர்த்தனைகள் தனக்கு விளங்கவில்லை என்றும், தெலுங்கர் அல்லாதவர்களுக்கு எப்படிப் பாடல் வரி (சாகித்யம்) விளங்கும் எனக் கேட்டார். தமிழ்க் கோவிலிலுள்ள இசை, ராகம், தாளம் ஆகியவற்றைக் கேட்டு, அனுபவித்ததைக் கொண்டு,

தங்கள் மொழியில் தங்கள் உணர்ச்சிகளை வைத்து, சொற்களை யாத்து இருக்கிறார்கள். அன்னியர்களுக்கு எப்படி விளங்கும்? ஆகவே நம் மொழியில் நம் இசையில் யாத்த பாடல்களைத்தான் நாம் அனுபவிக்க முடியும்? அதை டி.கே.சி. அவர்கள் தாம் செல்லுமிடமெல்லாம் எடுத்துக் கூறினார்கள்.

இவ்வமயம் தமிழகத்தின் பெரிய செல்வந்தரும் தொழிலதிபரான ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், மன்னர்க்கிணையான செல்வமும் வளமும் நிறைந்தவராய் இருந்தார். அவர்கள் செட்டி நாட்டரசர் என்றே போற்றப்பட்டு வந்தார். இந்தியா மட்டுமல்ல, கிழக்கு ஆசியாவிலும் அவரது புகழ் பரவியிருந்தது. இவரை நாடி பல வித்வான்கள் வந்த வண்ணம் இருந்தனர். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களை செட்டியார் அவர்கள்தான் முதன் முதலாகப் பாராட்டினார். பாரே வியக்கும் வண்ணம் பல கோவில்களுக்குத் திருப்பணி செய்தவர். கல்விக்காக ஒரு பல்கலைக்கழகமே நிறுவினார். அதுதான் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஆகும். அங்கு ஒரு தமிழ்க் கல்லூரியையும், இசைக்கல்லூரியையும் கூடவே தோற்றுவித்தார்.

கல்வி, கலை, பக்தி மூன்றையும் தன்னகத்தே கொண்ட அவர் மனத்தினில் இசையில் நடக்கும் குழப்பம் பாதித்தது. தாய்மொழிப்பாடல்கள் பாடி கச்சேரி செய்ய ஆட்கள் இருக்க மாட்டார்களா என அவர் ஏங்கும்போது, டி.கே.சியின் இசை பற்றிய கருத்துக்களும், கட்டுரைகளும் அவரை வழிப்படுத்தின. அனைத்து வேலைகளையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு, செட்டியார் அவர்கள் டி.கே.சியை வந்து சந்தித்தார்கள். அவரது தமிழிசைத் தொண்டை முழு மனதோடு ஏற்றுக் கொண்டதாகவும் நடைமுறைப்படுத்துவதாகவும் செட்டி நாட்டரசர் உறுதி கூறினார்.

செட்டி நாட்டரசர் 1941 ஆம் வருடம், தேவகோட்டையில் இசை மகாநாடு ஒன்றை நடத்தினார்கள். அவர், அம்மகாநாட்டில் டி.கே.சியை தமிழிசை பற்றிச் சிறப்புரை ஆற்றுமாறு கேட்டுக்கொண்டார். டி.கே.சி. ஆற்றிய சிறப்புரையைக் கேட்ட செட்டி நாட்டரசர், மகிழ்ந்து, தமிழிசை வளர்ச்சிக்காக 30000 ரூபாய் கொடுப்பதாகவும், இது தொடர்பான நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்துமாறு டி.கே.சியைக் கேட்டுக் கொண்டார்கள்.

1942-43ல் தமிழிசை மன்றம் சென்னையில் தொடங்கியது. திருமதி. எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்கள், இசையரசு தண்டபாணி தேசிகர் போன்ற பிரபலமானவர்கள்' தமிழிலேயே இசைப்பாடல்களைப் பாடினார்கள். அந்த இசை மகாநாட்டிற்கு ரசிகமணி டி.கே.சி அவர்களை தலைமையேற்று சிறப்பு செய்யுமாறு ராஜாசர் அவர்கள் வேண்டிக் கேட்டுக் கொண்டார்கள். ரசிகமணியை ராஜா சர் அவர்கள் சென்னை எழும்பூர் நிலையம் வந்திருந்து வரவேற்று உபசரித்தார்கள்.

தமிழிசை சம்பந்தமாக டி.கே.சி. சொல்லியதைப் பாருங்கள்:

"நான் ஆடம்பரமான வெற்றொலியில் மயங்கிவிட மாட்டேன். பாடுகின்ற பாட்டின் பொருள் பாடுகிறவர்களுக்கும் தெரிய வேண்டும். கேட்கிறவர்களுக்கும் தெரிய வேண்டும். அப்போதுதான் பாட்டிலே வருகிற பாவம் தெரியும். பாட்டையும் கேட்பவர் அனுபவிக்க முடியும்.

"நம்முடைய இசைக் கலையானது உலகத்தில் எங்கும் இல்லாத சிறந்த கலை. அதை இதுவரை பாகவதர்கள் கெடுத்தது போதும். இளைஞர்கள் முன் வந்து இசைக் கலையை வளர்க்க வேண்டும். இப்போது நடமாடுகிற சங்கீதம் நம்முடைய உண்மைச் சங்கீதத்தின் போலி, கேலிக் கூத்து. அதை மீட்க வேண்டும். உண்மைச் சங்கீதம் தெய்வீக சங்கீதம் என்று காட்ட வேண்டும்.

"பதங்களை உயர்ந்த பாவ உருவத்துக்காக& தெய்வத்தன்மை வாய்ந்தது என்று அனுபவிக்கிறேன். பக்தி உணர்ச்சியோடு கிளிக்கண்ணி, சித்தர் பாடல், காவடிச்சிந்து முதலியவைகளைப் பாடினாலும் பரவசம் அடையத்தான் செய்கிறேன். ஆனால் சங்கதி, சங்கதி என்று சுரங்களைக் கொண்டு கீச்சுக் கீச்சுத் தாம்பலம் விளையாடுகிறதை ரொம்ப அனுபவித்துவிட முடியாது. அதோடு அபசுரமும், சுருதி இன்மையும் சேர்ந்து விட்டால் கேட்கவா வேண்டும்?"

(டி.கே.சி வரலாறு, ஸ்டார் பிரசுரம் 2 ஆம் பதிப்பு 1960 பக்கம் 68,69)

தமிழிசை தொடர்பாக மிகத் தீவிரமாக செயல்பட்டதாலும் ரசிகமணியின் செயல் மிகவும் சிறந்த பயனை நல்கியது. இவ்வுணர்ச்சி பாகவத உலகத்திற்கு வெறுப்பை அளித்தது. 'டி.கே.சி தமிழுடன் நிற்க வேண்டியதுதானே! அவருக்கு இசையைப் பற்றி என்ன தெரியும்' என்று கூக்குரலிடத் தொடங்கி விட்டது பாகவத உலகம். 'கல்கி' பத்திரிகை தவிர ஏனையப்

பத்திரிகைகள் பாகவத உலகத்திற்கு ஆதரவை அளித்தன. ஆனால் ரசிகமணியோ கொஞ்சமும் அசரவில்லை. மலை போல் நிலைத்து நின்றார். பாகவத உலகத்திற்கு கீழ்க்கண்டவாறு ஒரு பதிலும் அளித்தார்.

"நான் முறையாகச் சங்கீதம் படிக்கவில்லை, கச்சேரி பண்ணவும் எனக்குத் தெரியாதுதான். ஆனால் சங்கீதத்தை எனக்கு அனுபவிக்கத் தெரியும். இது விளங்குகிறது, இது விளங்கவில்லை என்கிற வித்தியாசமும் எனக்குத் தெரியும். எல்லோருக்குமே இது தெரியும். மற்றவர்கள் தெரிந்ததைச் சொல்லாமல் இருக்கலாம். என்னால் அப்படி இருக்க முடியாது" என்று சுடச்சுட பதில் கூறினார்.

மேலும் சொன்னார்: "எனக்குத் தமிழ்தான் தெரியும், சங்கீதம் இன்னதென்று தெரியாது என்கிறார்கள், தமிழ் தெரிந்ததனால் இது உண்மையான சங்கீதம், இது பித்தலாட்டமான சங்கீதம் என்று துணிந்து சொல்கிறேன். தமிழனுக்கு சங்கீதம் தமிழோடு சேர்ந்துதான் இருக்கும்! இங்கிலீஷ்காரனுக்கு இங்கிலீஷோடு சேர்ந்துதான் சங்கீதம் இருக்கும்!! பாடல் இல்லாமல் சங்கீதம் இருப்பது பாகவதர் கூட்டத்துக்குத்தான்!!! மக்களுக்கு அல்ல" என்றார்.

(ரசிகமணி டி.கே.சி சிதம்பர நாத முதலியார் ....சண்முக சுந்தரம், சாகித்திய அகாடமி வெளியீடு முதற்பதிப்பு 1987 பக்கம் 166)

இதைக் கண்ணுற்ற பாகவதர்களில் பலர் ஒருவர் ஒருவராக தமிழிசைப் பாடல்கள் பக்கம் வரத் தொடங்கினர். பலர் டி.கே.சி. சொல்வது போல் தமிழில் கீர்த்தனைகள் இல்லை என்று டி.கே. சியைக் குற்றம் சாட்டினர். மேலும், கீர்த்தனையில் சுத்தமான பக்தி இல்லை என்றார்கள். ஆனால் டி.கே.சியோ எளிதில் விடுவதாக இல்லை.

இறைவனைப் பற்றி நாயகன் நாயகி பாவத்தில் பாடி இருக்கிற பாடல்கள் உண்மையான பக்தி மயமான பாடல்கள்தாம். ஆண்டாள், மாணிக்கவாசகர், தாயுமானவர் போன்ற மகான்கள் நாயக நாயகி பாவப் பாடல்களை ஒதுக்கவில்லையே என்று கூறியதோடு நிறுத்தவில்லை ரசிகமணி அவர்கள்,

"முத்துத் தாண்டவர், மாரிமுத்தா பிள்ளை, ஆனை ஐயா, அருணாசலக் கவிராயர், கோபால கிருஷ்ண பாரதி போன்றவர்களின் நூற்றுக்கணக்கான பாடல்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அவைகளில் விழுந்த பிழைகளை நீக்கினார்கள். விரசங்களைக் களைந்தார்கள். அவைகளைக்

கீர்த்தனை (தரு)கள் என்றும், பதம் என்றும் பிரித்தார்கள். ஒவ்வொரு இசைப்பாடலுக்கும் உரிய அர்த்த பாவத்தை&நயத்தை விளக்கமாக முகப்பில் எழுதினார்கள். தமிழிசைப் பாடல்கள் என்று வெளியிட்டார்கள்.

பாடல்களைப் பார்த்த பாகவதர்கள் வாயடைத்துப் போனார்கள். டி.கே.சி. இசை உணர்விலும் அசகாயசூரனாக இருக்கிறாரே, அவரிடம் விளையாடுவது சிக்கல் என்று ஒதுங்கி விட்டார்கள்.

இன்று தமிழிசை நிலைத்து விட்டது. தமிழர்கள் எல்லோரும் உண்மையான இசையை உணர்ச்சிபாவத்தோடு கூடிய இசையைக் கேட்டு ஆனந்திக்கிறார்கள்.

ரசிகமணி டி.கே.சி. ஐந்து கோடி மக்களுக்கும் வழங்கிய நன்கொடை இந்தத் தமிழிசை. என்றென்றும் நிலைத்து நிற்கும் அழியாத சீதனம் இந்தத் தமிழிசை." (ரசிக மணி டி.கே.சி சிதம்பரநாதனார் சாகித்திய அகாடமி வெளியீடு முதற்பதிப்பு 1989 பக்கம் 167)

"ஏறக்குறைய 1943ஆம் ஆண்டு ரசிகமணி அவர்கள், "தமிழிசைப் பாட்டுக்கள்"மொத்தம்60தமிழ்க்கீர்த்தனங்களுக்குஒவ்வொன்றாக சிறு விளக்க உரையும், ஒரு விரிவான முன்னுரையும் அவர்களால் எழுதப்பட்டிருக்கின்றன. கீவளூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை என்னும் வித்வான் ராகம், தாளம், பெயர்களும் சுரக்குறிப்பும் அத்தனை பாடல்களுக்கும் எழுதியுள்ளார் என்பதை தமிழிசை அன்பர்களுக்குத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்". (தீப. நடராஜன், தமிழிசையும் டி.கே.சியும் முதல் பதிப்பு ஜூலை 2010 வெளியிடுபவர்: இரா. தீத்தாரப்பன் - முன்னுரை)

"கார தனயுல உதர பூரணமு ஸேயுசொரடு
தூர தேசமுலனு ஸஞ்சாரமு ஜோஸி -"

இது ஒரு தெலுங்கு கீர்த்தனை. ஆரபி ராகம். மிஸ்ரதாபு கார தனயுல பெண்டு பிள்ளைகளின்; உதர பூரணம் - வயிற்றை நிரப்புவதை ஸேயுசொரடு செய்யும் பொருட்டு: தூரதேச முலனு தேசாந்தரங்களில் எல்லாம்; ஸஞ்சாரமு ஜோஸி அலைந்து திரிந்து"

இவ்வாறு பதவுரை கொடுத்தாலும் பாடலை அனுபவிக்க முடியுமா? பாவங்களைத் தெரிவிக்குமா இந்தப் பாடல்? இதை இதயப்பூர்வமானதாய் உணரத்தான் முடியுமா? டி.கே.சி. அவர்கள்

கேட்கிறார்கள். 'தெலுங்கு கீர்த்தனைகளைக் கேட்க வருகிறவர்கள் தெலுங்கு படித்துவிட்டு வாருங்கள் என்று சொல்லத்தான் இயலுமா? வேறு மாநிலத்தில் போய்த் தெலுங்கு கீர்த்தனை பாடச் சொன்னால் அவர்களால் முடியுமா? வங்காளத்தில் போய்ப் பாடச் சொன்னால் அவர்கள் நம் தமிழர்களைப் போல் சும்மா கேட்டுக் கொண்டு இருக்க மாட்டார்கள் அல்லவா.

இதற்கும் டி.கே.சி. அவர்கள் நாம் கற்ற கல்விதான் தவறு என்கிறார். எது சரியானது என்று சொல்லத் தெரியாத பகுத்தறிவைக் கொடுக்காத கல்வி என்ன கல்வி என்று கேட்கிறார்? எந்தக் கல்வி உண்மையை அறியத் தடையாக இருக்கிறதோ அந்தக் கல்வி மேல் மரியாதை எப்படி வரும்?

ஒலிகளின் எண்ணற்ற, அம்சங்கள் குழைந்து நெளிந்து வட்டமிட்டு அரிய உருவங்களாக உருப்பெற்றதைக் கண்ட நம் முன்னோர்கள், அதற்குப் 'பண்' என்று பெயரிட்டார்கள். அபூர்வமான அழகும் இனிமையும் இருந்ததால் அப்படியே போற்றிப் பாதுகாத்து இறைவன் காலடியில் சேர்ப்பித்தார்கள். ஏனெனில் அதுதான் பாதுகாப்பு என்று.தமிழ்நாட்டில் ஓங்கிநிற்கும் கோபுரங்களுடன் கூடிய கோயில்களில் இப்பண்களைக் குவித்து குழைத்து சூழல்கள் மூலம் தந்தார்கள். காலை, நண்பகல், மாலை, என மூன்று வேளையிலும் நம் இதயத்தைத் தொடும். அந்த நாதஸ்வரத்தின் வழியாக வரும் சங்கீதம் ஆயிரக்கணக்கான வருடங்களாக வந்து கொண்டிருக்கிறது. அது கோயில் சன்னிதியை நிறைத்தது, பின் பிரகாரம் முழுவதும் நிறைத்து பின் நம்முடன் வீடு வந்து சேர்ந்தது. அது நம்மைச் சுற்றி சுற்றி வந்து இன்பமாக்கியது. அத்தகைய இசையை 'பக்தி' எனும் சிமிழில் வைத்துப் பார்த்தார். ஏழாம் நூற்றாண்டில், தமிழகம் வந்த சமணம் பண்ணும் சுவையும் கேட்கக் கூடாத சிற்றின்பம் என்று சொல்லித் திரிந்தபோது அப்பரும், சுந்தரரும் தமிழிசையைத் தூக்கி நிறுத்தினர்.

"சலம்பூவொடு தூபமறந்தறியேன்
தமிழோடு இசைபாடமறந் தறியேன்
நலம் தீங்கிலுமுன்னை மறந்தறியேன்
உன் நாமம் என் நாவின் மறந்தறியேன்"
என்று நாவுக்கரசரும்
"புற்றில் வாழும் அரவம் அரையார்த்தவன் மேவும் புகலூரைக்

கற்று நல்லவர் காழியுள் ஞானம் பந்தன் தமிழ்மாலை
பற்றியென்றும் இசை பாடியமாந்தர் பரமன் அடி சேர்ந்து
குற்றமின்றிக் குறை பாடொழியாப்புக ழோங்கிப் பொலிவாரே"
என்று சம்பந்தரும் பாடிப்போயிருக்கிறார்கள்.

(தமிழிசையும் டி.கே.சியும் ஆசிரியர் தீப. நடராஜன் முதற்பதிப்பு 2010 பக்கம் 6)

தொடர்ந்து பிரபந்தங்களும் பாசுரங்களும் நல்ல இசையுடன் வெளி வந்தன. தியாகையர் பாட்டு எல்லாம் சமீபத்தில் வந்ததுதானே! நம்முடைய பழமையான பண்களில் தன் பக்தியைத் தோய்த்துத் தோய்த்துக் கொடுத்திருக்கிறார். நம் பண்கள் நம்முடையது. தமிழின் பண்களுக்கு தமிழ் சாகித்யங்கள் எப்படி ஏற்காது போகும்? தமிழில் பாடினால் தியாகைய்யரின் சாபத்தை எப்படி நாம் பெறுவோம். இன்னும் விரிவாகப் போகிறார்கள் இந்த வித்வான்கள். தெலுங்குப் பாடல் வேண்டாம். எங்களுக்குப் புரியவில்லை என்று கூறுவது வேறுமொழியை துவேஷம் கொள்கிறோம் என்கிறார்கள் என்று மிகவும் வேதனைப்படுகிறார் தன் 'இதய ஒலி' என்னும் நூலில் டி.கே.சி. அவர்கள்.

"துலங்கு கல்வி
நற்குணத் தோருக்கு மெய்ஞானம் ஆகும், அஞ்
ஞானருக்குத்
தர்க்கச் சமருக் கிடமாம் காண் ரத்ந
சபாபதியே"

இது எவ்வாறு இருக்கிறது தெரியுமா! நம் தலைமுடியை நாமே காணிக்கை கொடுத்துவிட்டு, அதே முடியைச் சௌரியாகத் தலையில் பின்னிப் போடுவது போல் இருக்கிறது என்கிறார் டி.கே.சி.

நம் பண்களை எடுத்து, வேறு யாருடையதோ என்று மயங்கி, மீண்டும் பாடல்கள் அதில் இயற்றி 'நன்று நன்று' என அனுபவித்தது போல் இருக்கிறது நாம் தமிழிசையைப் பற்றி எடுத்துக் கூறுவது என்று அங்கலாய்க்கிறார் டி.கே.சி.

இந்தத் தெலுங்குப் பாடலின் ஆதிக்கத்தினால் எத்தனையோ பாடல்கள் அழிந்து விட்டன. இதை நேரில் பார்த்த தெரிந்த மகா மகோபாத்தியாய டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் அவர்கள் தமிழைப்போல் சங்கீதத்தின் பெருமையை அருமையை

அறிந்தவர்கள். அவர்களுடைய சுயசரிதையில் இவ்வாறு எழுதுகிறார்கள்.

"சங்கீதத்திலும் சாகித்தியத்திலும் வல்ல வித்துவான்கள் பலர் தமிழில் கீர்த்தனங்கள் இயற்றியிருக்கிறார்கள். பாடுவோரும், பாராட்டுவோரும் இல்லாமையால் வரவர அக்கீர்த்தனங்கள் மறைந்து போயின. ஆயிரக்கணக்கான தமிழ்க் கீர்த்தனங்கள் இந்நாட்டில் முன்பு வழங்கி வந்தன. கர்நாடக ராகங்களின் சுதிக்கு மிகவும் பொருத்தமாக அவை அமைந்திருந்தன. அன்று நான் கேட்ட அவை, இன்று இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் விட்டன". "தமிழில் கீர்த்தனங்களே இல்லை என்று கூறவும் சிலர் அஞ்சுவதில்லை. எல்லாம் சந்தேகத்திற்குரிய அறுபது வருஷத்தில் நிகழ்ந்த மாறுபாடு" (ஆனந்த விகடன் 28.01.1940)

இதைவிட நமக்கு வேறென்ன வேண்டும்?

இறைவன் கொடுத்த வரம் மொழி. அவன் என்ன நினைக்கிறானோ அதைத் தெரிவித்து விடுகின்றான். ஆனால் அதுமட்டும் போதுமானதாக இல்லை. இசையைக் குழைத்து இழைத்து எடுத்துச் செல்கின்றான். இது இதயப்பூர்வமாகப் பூரணமாகி விடுகின்றது. அப்படியே அதுவாகி மாறிப்போய் விடுகிறோம்.

பக்தன் வந்து நிற்கின்றான் நம்மைச் சேவிக்க! நந்தியே நீ இடையில் நிற்பது மறைக்கிறதாம். "கொஞ்சம் விலகிக் கொள்ளும்" என்று கடவுளே சொல்லும் பாவனையில் வந்து விடுகிறது. எவ்வளவு அருமையானது!

சற்றே விலகி
இரும்பிள் ளாய்!
சன்னி தானம் மறைக்கு தாம்!

என்று உணர்வுப் பூர்வமாய் உரைத்திட்டால், நம்மை வேறு உலகிற்கு பாவமான சங்கீதம் அழைத்துச் சென்று விடாதா? பக்தி இதயத்தில் அல்லவா அமர்ந்து விடுகிறது. சும்மாவா! இருகால்களையும் மடக்கி சம்மணம் போட்டு அமர்ந்து விடுகிறது.

இது அற்புதந்தானே! நடராஜப் பெருமாளா, தெருவில் வாரானோ என்று கமாஸ் ராகத்தில் பாடிவிட்டால், ஒரு பெண்ணின் ஆற்ற முடியாத ஏக்கத்திற்கு நாமே உள்ளாகி

விடுகிறோம். அல்லவா என்று கேட்கிறார் நண்பர்களே நம் ரசிகமணி டி.கே.சி. அவர்கள்.

வீட்டில் நடக்கும் கலியாணத்துக்குத் தனிப்பாட்டுக் கச்சேரி அமர்த்துகிறோம். மேடையில் வாய்ப்பாட்டும் வயலினும் ஏதோ ஒரு பாஷையில், சில வேளை அந்த பாஷையும் கிடையாது. அரிச்சுவடிதான் தானும் அனுபவிக்கிறதில்லை. வந்தவர்களும் அனுபவிப்பதில்லை.

கச்சேரியைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குள் அனுபவித்துக் கொண்டு பேசிய பணத்தைப் பெற்றுக் கொண்டு போகிறார்கள். மறுநாள் காலையில், தெருவிலே ஒரு பிச்சைக்காரி தன் கொட்டாங்கச்சி தம்பூரை வைத்துக் கொண்டு தாயுமானவர், அருட்பா பாம்பாட்டிச் சித்தர் பாடல் முதலிய பாடல்களைப் பாடுகிறாள். கல்யாண வீட்டுக்காரன் ஆனந்தத்தில் மூழ்கிப் போகிறான். அடடா!... கச்சேரிக்கு கொடுத்த அந்தப்பணத்தை இவளுக்கு கொடுக்கலாம் அல்லவா என்று எண்ணுகிறார்.

ஆனால் வித்வான்கள் இவள் பாட்டை ஒத்துக்கொள்ள மாட்டார்களே! இவளுக்கு 'சங்கதி சங்கதி' என்று சுரங்களைக் கொண்டு கிச்சுக்கிச்சுத் தாம்பலம் விளையாடத் தெரியாதே என்கிறார் டி.கே.சி. ஆதலால் பிறர் மதிக்க மாட்டார்கள்.

உடல்நிலையால் வழக்கறிஞர் தொழிலைத் தவிர்த்தார். ஆனால் வழக்காடும் திறமை தமிழிசைப் போராட்டத்திற்கு மிகவும் பயன்பட்டது. தன் வாதத்திறமையைக் கொண்டு பல நிலைகளிலும் இடங்களிலும், எழுத்துக்களிலும் நிரூபணம் செய்திருப்பதைக் காணலாம்.

"திருப்பாதிரிப்புலியூரில் நடைபெற்ற ஒரு விழாவில் சில தமிழறிஞர்கள் பேசினார்கள். கடைசியில் டி.கே.சி பேசினார். தலைமை வகித்த ஞானியார் சுவாமிகள், "எல்லோரும் பேசியது ஆர்க்கியுமெண்ட்! டி.கே.சி பேசியது தான் ஜட்ஜ்மெண்ட்!" என்று பாராட்டினார் என்பதையும் நாம் நினைத்து மகிழலாமே.

(தமிழிசையும் டி.கே.சியும், ஆசிரியர் தீப. நடராஜன் முதற்பதிப்பு 2010 பக்கம் 28)

# டி.கே.சி தந்த பண்பாடு

தமிழ் மொழிக்கும் தமிழர்களது வாழ்க்கைக்கும் 'பண்பாடு' என்னும் சொல் நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தமிழில் கிடையாது. வாழ்வியலின் உயர்ந்த மதிப்பீடுகளை, சுவடுகளை, பண்புகளை எடுத்துச் சொல்ல ஏற்றதொரு சொல் அக்காலத் தமிழ் திண்டாடிக் கொண்டிருந்தது. 'பண்பாடு' என்னும் சொல்லை நல்கி டி.கே.சி. தமிழ்மொழியின் ஏக்கத்தைத் தணித்தார். 'பண்பாடு' என்னும் சொல்லை அளித்த டி.கே.சி. தம் வாழ்நாள் முழுவதும் அச்சொல்லுக்கு இலக்கண இலக்கியமாகத் திகழ்ந்தார்.

அறிஞர் பெருமக்களிலிருந்து சாதாரணமானவர்கள் வரை எவராலும் அன்புடனும், பக்தியுடனும் நேசிக்கப்பட்டு வந்தவர் டி.கே.சி. அந்த அளவு அவரும் சாதாரண மக்களையும், அறிஞர் பெருமக்களையும் சமமாகப் பழகி வந்தார். அரசியலில் மாறுபட்டக் கருத்துடையவர்கள் இங்கே வருவார்கள். இலக்கியம் அவர்களை ஒன்று சேர்த்தது. தனிப்பட்ட முறையில் யாருடைய குறையையும் பொருட்படுத்தியது கிடையாது. அதை பிறரிடமும் எடுத்துச் சென்றது கிடையாது. சிறியவர்களிடமும் பெரியவர்களிடமும் அவர்களிடம் காணும் நற்பண்புகளை எடுத்துக் கொள்வதே டி.கே.சி அவர்களது கோட்பாடாகவே திகழ்ந்தது. அந்த நற்பண்புகளைப்பற்றி அவர்கள் பெரிதும் பாராட்டிப் பேசிக் கொண்டிருப்பார்கள். அதேபோல் வேறு யாராவது ஒருவர் மற்றொருவரைப் பற்றிப் பாராட்டிப் பேசும் போது அந்த புகழுக்குரியவரிடம் 'அவர் உங்களைப் பற்றி இப்படிப் பாராட்டினார்' எனச் சொல்லி மகிழ்வார். ஒவ்வொரு முறையும் சென்னை செல்லும் போது அவருக்குப் பிரியமானவர்களையும், இவர்மேல் அன்பாக இருப்பவர்களையும் சென்று பார்த்துவிட்டு வருவார். "நட்பு கிடைப்பது எளிது. அதைப் பரிபாலனம்

பண்ணுவது கஷ்டம்" அதை டி.கே.சியிடம்தான் கற்றுக் கொள்ள வேண்டும் என்று ராஜாஜி கூறுவார்.

இலக்கியத்தில் தன்னுடன் மாறுபட்ட கருத்தை உடையவர்களான பேராசிரியர் வையாபுரிபிள்ளை, ரா.பி. சேதுபிள்ளை போன்றவர்கள் வீட்டிற்குச் சென்று மணிக்கணக்கில் பேசிக்கொண்டிருப்பார். இப்படியெல்லாம் நட்பையும் உறவையும் வளர்த்து அன்பு செலுத்தி வந்தார்கள்.

### பாராட்டும் பண்பு

டி.கே.சி அவர்கள் பாராட்டும் அழகு மிகவும் தனித்தன்மை மிக்கது. இது அவர்களிடம் காணப்பட்ட அரிய பண்பாடாகும். கவிமணி தேசிய விநாயகம் பிள்ளையை எப்படிப் பாராட்டுவார்களோ அதேபோல் கோலமிடும் பெண் குழந்தையையும் பாராட்டுவார். ஒருவரை இன்னொருவருக்கு அவர் அறிமுகம் செய்யும் அழகே தனி.

ராமய்யங்கார் என்பவர் மன்னார் கோவில் • என்னும் சிறுகிராமத்தில் கம்பன் கழகம் வைத்து சிறிய அளவில் நடத்தி வந்தார். அவரை ராஜாஜிக்கு அறிமுகம் செய்யும் போது, ராமய்யங்காருக்கு கம்பன்பால் உள்ள ஈடுபாட்டைப் பலப்பட புகழ்ந்து கூறுவார். கம்பர் யோகம் செய்தவர் எனினும் நமக்கும் பலம் என்றும் கூறுவார். இந்த அறிமுகத்தால் ராஜாஜிக்கு அவர்பால் ஒரு பிரியமும் ஈடுபாடும் வந்து விடும். ராமய்யங்கருக்கோ ஒன்றும் ஓடாது. அவர் மனசு எப்படி இருக்கும்! அறிமுகம் இதோடு நிற்காது. ராஜாஜி அவர்களிடத்தில் தமக்கு எவ்வளவு மரியாதையும் அன்பும் ஈடுபாடும் இருக்கிறது என்று அவரிடம் கூறுவார்.

டி.கே.சி. அவர்களின் கம்பராமாயண முதல் பதிப்பு வந்த நேரம். 1942ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள். தமிழ்ப்பண்டித உலகமே ஆயிரம் தலைகொண்ட நாகம் போல் சீறியது. பல புலவர்களிடம் எல்லாம் கண்டனப் பாட்டுக்களை வாங்கி, டி.கே.சிக்கே அனுப்பியது. டி.கே.சி. கலங்கவில்லை. ஆனால், தமிழ் அறிஞர், ஆங்கிலப் புலமையும் கொண்டவர்; கம்பரை நன்கு அறிந்தவர். இரு மொழிகளிலும் நன்கு பேசக்கூடிய வல்லவர். முற்போக்கு இலக்கிய சிந்தனை கொண்டவர். டி.கே. சியிடம் மிகுந்த ஈடுபாடும் மதிப்பும் கொண்டவர். இவர் அந்த கும்பலில் சோர்ந்து விட்டாரே என்று மிகவும் வருத்தம். வேறு

யாருமல்ல அவர். பேரா. அ. சீனிவாச ராகவன் அவர்கள்தான். டி.கே.சிக்கு மிகவும் வருத்தம். ஒருநாள் கோவையிலிருந்து வசந்தம் என்னும் சிறு பத்திரிகை வந்தது. அதில் கும்மி பாட்டு வகையில் ஒரு பாடல் வெளியாகி இருந்தது. முதலில் அதை எஸ்.வி.எஸ். அவர்கள் படித்து விட்டு டி.கே.சியிடம் கொடுத்தார்கள். ஒரு தடவை இரு தடவை பாடிப்பார்த்தார்கள். பாட்டு ரொம்ப நல்லா இருக்கிறதே என்று கூறி யார் எழுதியிருக்கிறார்கள் எனக் கேட்டார்கள்.

'நாணல்' எனப் புனைப்பெயர் போட்டு இருக்கிறதே என்றார். 'நாணல்' என்பது நம்ம பேரா அ.சீனிவாசராகவன்தான் என்று எஸ்.வி.எஸ். கூறியதும், டி.கே.சி அவர்கள் முகமெல்லாம் ஆனந்தம் பரவியது. அ.சி.ராவிடம் ஏற்பட்ட மனக்கசப்பு வருத்தம் மறைந்து விட்டது. உடனே பாராட்டிக் கடிதம் எழுதினார்கள். தன்னைப் பார்க்க வந்தோரிடத்திலெல்லாம் ஒரு மாதத்திற்கும் மேலாகப் பாடிக் காட்டி ஆனந்தப்பட்டார்கள். கவிதை செய்யும் மாயம் இது. இது அவரது இலக்கியக் கொள்கையின் மற்றொரு பண்பு.

"டி.கே.சி. பாராட்டுதலை வெளிப்படுத்தும் முறையில் பலவகைகளை நாம் பார்க்க முடியும்.

"நேருக்கு நேராக பாராட்டுவது, பாராட்டுக்குரியவர் இல்லாத நிலையிலும் பாராட்டைத் தெரிவிப்பது, மனம் நெகிழ்ந்த நன்றிப் பெருக்கோடு பாராட்டுவது, பிறிதொருவர் கருத்தாக பாராட்டுவது" இப்படி பாராட்டுதல்களில் பலவிதங்களை டி.கே.சி கடைபிடித்து வந்திருப்பதற்கு அவர் எழுதிய கடிதங்கள் சான்றாக விளங்குகிறது. (டி.கே.சியும் பாராட்டும் பண்பும் & தீப. நடராஜன். தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் & இலக்கியமலர் 2009)

அப்போது டி.கே.சி. அவர்களின் பேரன் திரு. தீப குற்றாலலிங்கம் அவர்களுக்கு பத்து வயதிருக்கும். டி.கே.சி. அவரை அழைத்து பக்கத்து அறையில் அமர்ந்து தமிழில் ஒரு பத்தியைப் படிக்கச் சொல்கிறார்கள். அவரும் படிக்கிறார். டி.கே.சியுடன் ராஜாஜி அவர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் டி.கே.சி, "இந்த மாதிரி அழகாய் நிறுத்தி சுத்தமாக நம்மால் படிக்க முடியுமா? பேஷ்! பேஷ்! என்கிறார். இதுதான் டி.கே.சி. அவர்கள் குழந்தைகளைப் பாராட்டும் விதம். குழந்தைகளுக்கும் சந்தோஷம் பெருமைதானே வந்து அமர்ந்து விடும். பெரியவர்களுக்கும் குழந்தையின் கள்ளமில்லா பங்களிப்பை இரசிக்க முடியும்.

## விருந்தோம்பல்

டி.கே.சி. அவர்களது விருந்தோம்பல் மாதிரி உலகத்தில் எங்கும் காண முடியாது. டி.கே.சியோடு எப்போதும் பதினைந்து இருபது பேர்கள் இருப்பர். கவிகளைப் பாடி லயிக்கச் செய்து விடுவார். புதிது புதிதாக நண்பர்கள் வருவார்கள். ஏற்கனவே இருக்கிற நண்பர், வருகின்ற அன்பர், அவ்வளவு பேரையும் விசாரித்து உபசரித்து நடத்தி வைக்கிற அரிய பண்பாடு டி.கே.சிக்கே உரிய பண்பாடு ஆகும்.

எந்த வேளையில் எத்தனை பேர்கள் எதிர்பாராத விதமாக டி.கே.சி. வீட்டிற்குப் போனாலும் சரி. அத்தனை பேரையும் மரியாதை நிறைந்த, மனப்பூர்வமான, மலர்ந்த முகத்தோடு வரவேற்று, அவர்களை விருந்தோம்பி உபசரிக்கிற அற்புத இயல்பு டி.கே.சி.யின் பிறவிக் குணம்.

மலேயாவில் வாழ்ந்து வரும் அன்பர் ஒருவர் எழுதி இருப்பதைப் பாருங்கள்:

"டி.கே.சி. வீட்டு உபசாரம் என்று ஒரு பழமொழியையே சிருஷ்டித்து விடலாம். ஏனென்றால், அதைவிடச் சிறப்பாக எங்கும் யாரும் உபசரித்துவிட முடியாது. தெரிந்தவர்களானாலும் தெரியாதவர்களானாலும், படித்தவர்களானாலும், படிக்காதவர்களானாலும், பணக்காரர்களானாலும், ஏழைகளானாலும் அங்கே நிச்சயமாகச் சமதையான வரவேற்பும் விருந்தும் உண்டு. அங்குச் சென்றால் வாரக்கணக்கில்கூட அங்கேயே தங்கிவிடத் தோன்றும். பல நாட்களுக்குப் பிறகு விடைபெற்றுக் கிளம்பினாலும் "இன்னும் இரண்டு நாட்கள் இருந்துதான் போகவேண்டும்" என்று வற்புறுத்தாமல் இருக்கமாட்டார். அந்த அன்பையும் தமிழ் மணங்கமழும் சூழ்நிலையையும் பிரிந்து வருவது சாமான்யமான காரியமல்ல. விருந்தினர் இல்லாத நாள்தான் டி.கே.சி.க்கு கஷ்டமான நாட்கள். குற்றாலத்தில் டி.கே.சி. வீடு கல்யாண வீடுபோல் இருக்கும். தினந்தோறும் விருந்தினர்கள் வருவார்கள். தமிழையும் உணவையும் ஒருங்கே ஊட்டும் திருமனை டி.கே.சி. இல்லம்.

"டி.கே.சி.யைப் பார்க்கப் போகிறவர்கள் அவரோடு பணக்காரர்களும், படிப்பாளிகளும், பெரிய அந்தஸ்தில் உள்ளவர்களும் அமர்ந்திருக்கும்பொழுதுதான் பார்க்கப் போக வேண்டும் என்று நான் அடிக்கடி கூறுவேன். அப்பொழுதுதான்

அவருடைய பெரும் குணத்தையும் உபசரிப்பையும் நன்றாக அறிய முடியும். எல்லோருடனும் சமதையாக நடத்துவது மட்டுமன்றி, சாதாரண சமயங்களைவிட அந்தச் சமயத்தில் அளவுக்கு மீறிய கௌரவம் கொடுப்பார். இந்த ஒப்பற்ற - பெருந்தன்மை டி.கே.சி.யைத் தவிர வேறு எந்தப் பணக்காரரிடத்திலும், மிராசுதாரிடத்திலும் இருந்ததும் இல்லை. இருக்கப் போவதுமில்லை என்று டி.கே.சி.யை அறிந்த எல்லோரும் ஒருமிக்கக் கூறுவர்."

மேலே உள்ள வாக்கியங்களை எழுதியது மலேயாவில் வாழ்ந்துவந்த தமிழறிஞரும், தமிழன்பருமாகிற கு.அழகிரிசாமி ஆவார். ஆனால் அன்பர் சொல்லியதை ஏற்கெனவே வாயாரச் சொல்லிச் சொல்லி அனுபவிக்கிறவர்களோ டி.கே.சி.யோடு பழகிய அவ்வளவு பேருமேதான்.

ஒருநாள் இரவு எட்டுமணி இருக்கும். வித்வான் ல.ச.வும், மகராஜனும் பேசிக்கொண்டு இருக்கிறார்கள். அப்போது அம்பாசமுத்திரத்தைச்சார்ந்தமரகதசுப்ரமணியம்பிள்ளைவந்தார். மூவருடனும் டி.கே.சி. அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். மணி எட்டரை ஆகியிருக்கும். தவசுப்பிள்ளை, சங்கரன் எல்லோருக்கும் சாப்பிட இலை போட்டு விட்டனர். திரு. மரகத சுப்ரமண்யபிள்ளையோ சாப்பிட்டு வந்து விட்டேன். சாப்பாடு வேண்டாம் என்று கூறிவிட்டார். எங்கே சாப்பிட்டீர்கள் என்றதற்கு ஓட்டலில் என்றார். அவ்வளவுதான் டி.கே.சியின் முகம் சிவந்து விட்டது. "நான் என்ன செத்தா போய்விட்டேன். உயிரோடுதானே இருக்கிறேன்" என்றார் இந்தக் கோபம் கருணையால் வந்த உண்மையான கோபம்.

கம்பராமயணத்தை ஈ.வெரா. பெரியார் அவர்கள் எரித்துக் கொண்டும் எதிர்த்தும் போராடிக் கொண்டிருந்த நேரம். அப்போது அவர் குற்றாலத்திற்கு வந்திருக்கிறார்கள். இந்த செய்தியை திரு. எஸ்.வி.எஸ். அவர்கள் டி.கே.சி.க்குத் தெரிவித்தார்கள். உடனே "அடடா! நம் வீட்டிற்கு உணவருந்த அழைத்து வந்து விடுங்கள்" என்றாரே பார்க்கலாம். எஸ்.வி.எஸ்க்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. அவரோ டி.கே.சி.க்கு விருப்பமான கம்பராமயணத்தை எதிர்ப்பவர்.

"நம் ஊரைத் தேடி வந்திருக்கும் விருந்தாளியை நாமல்லவா வரவேற்க வேண்டும்" என்று உறுதியாக கூறிவிட்டார். எஸ்.வி.எஸ் அவர்கள் பெரியார் அவர்கள் தங்கியிருந்த விடுதிக்குச் சென்று டி.கேசியின் அழைப்பைக் கூறினார். பெரியாரும் டி.கே.சியின்

விருந்தோம்பலின் பண்பை மதித்து, 'மதியம் வருகிறேன்' என்று கூறி வந்து விட்டார் என்றால் பாருங்களேன் நண்பர்களே! எப்போதும் பெரியவர்கள் பெரியவர்கள்தாம். டி.கே.சி. வீட்டிற்கு கொள்கைரீதியாக மாறுபட்டு இருந்தாலும், காபிப்பொடி விற்பரிடமிருந்து கவர்னர் ஜெனரல் வரை சமமான விருந்துபசாரம்தான்.

# டி.கே.சியும் சான்றோர்களும்

- வள்ளுவர்
- பாரதி
- கவிமணி
- ராஜாஜி
- காந்தி
- மேல்நாட்டவர்கள்

# டி.கே.சியும் வள்ளுவரும்

கி.பி.1914ம் ஆண்டு முதல் கி.பி.1918 வரை முதல் உலக யுத்தம் நடந்தது. அந்த யுத்த காலத்தில் உள்நாட்டில் மிகத் தேவையான பொருட்கள் எல்லாம் ஒன்றுக்கு பத்து மடங்கு விலை ஏறின. நெல்மணிகளின் விலையைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். பீரங்கியில் பயன்படுத்தும் பொருளாக விளங்கிய பருத்தியின் விலையும் உயர்ந்தது. எனவே கரிசல்காடு பொன் தரும் பூமியாயிற்று. பித்தளை, வெண்கலம், ஈயம், இரும்பு என எல்லா உலோகங்களும் விலையேறின. பணமுடையால் தடைப்பட்ட வர்த்தகம் பணம் பெருக்கெடுத்து வியாபாரம் பெருகத்தொடங்கி விட்டது. முதுகில் சுமந்து துணிகள் விற்ற ஹாக்சர் சாயபு, நான்கே ஆண்டுகளில் ஜவுளிக்கடை சாயபு ஆனார். அடுத்த வருடம் கோடீஸ்வர சாயபு ஆக மாறினார். இப்படி மெல்ல மெல்ல செல்வம் மக்களிடையே வந்து சேர்ந்தது. இது, திருமகள் தன் செந்தாமரை மலரிலிருந்து ஒரே குதியாக குதித்து தன் அபூர்வ நடனத்தை ஆடிக்காட்டியதுபோல் இருக்கிறது என்று டி.கே.சி. கூறுகிறார். இந்த மாதிரி பல்லாயிரம் வருடங்களுக்கு முன் செல்வம் மெதுமெதுவே வந்து சேர்வதை திருவள்ளுவர் கண்டு களித்தும் வியந்தும் இருக்கிறார். இது மட்டுமா?

நாடகம் ஆடுபவரை பார்ப்பதற்கும், பார்ப்பவரைப் பார்ப்பதிலும் வள்ளுவருக்கு ஆர்வம் இருந்திருக்கின்றது என்கிறார் டி.கே.சி. அப்படியொரு நாடகம் நடக்குமிடத்திற்குச் செல்கிறார். அப்போது நாடகம் மந்தைவெளியில்தான் நடக்கும். நாடகத்தில் கதாநாயகன், நாயகி யார் வந்தாலும் தாவி கிளம்பும்படி ஒரு ஆவர்த்தி நடனம் ஆடிவிட்டுத்தான் ஆசனத்தில் அமர்வார்கள். ஒருநாள் நாடகத்திற்கு திருவள்ளுவர் எட்டுமணிக்கே வந்துவிட்டார். அவர் மட்டும்தான் இருந்தார். ஒரு அரைமணி

நேரம் கழிந்தது. ஒரு நான்கு பேர்கள் வந்து தள்ளித்தள்ளி அமர்ந்தனர். ம்...ம்... இன்னும் அரைமணிநேரம் போயிற்று நண்பர்களே! ஒரு நூறுபேர் சேர்ந்தனர். ஒன்பதரைக்கு ஆயிரம் பேர்கள் சேர்ந்துவிட்டனர். பத்து மணிக்கு பதினாயிரம்பேர் கூடிவிட்டனர். திருவள்ளுவருக்கு முன்னும் பின்னும் இருபக்கமும், கண்ணுக்கு எட்டும் தூரம், நிலாவொளியில் தலைபரப்புத்தான் தெரிகிறது. நாடகம் தொடங்கியது. ஒரு அசைவில்லை. ஆணி அடித்தாற்போல்தான் ஒரே இருப்பில் இருந்தார்கள்.

இதையெல்லாம் கண்ட வள்ளுவ மனம், என்ன? எட்டுமணிக்கு ஏதோ நாலைந்து பேர் வந்தார்கள். நேரம் கழிந்தது. பிறகு நூறு, ஆயிரம், பத்தாயிரம் என்றல்லவா கூட்டம் கூடிவிட்டது. ஆஹா! இதுபோலல்லவா செல்வமும்! மெல்ல மெல்ல பெருகுஞ் செல்வம் சிலரிடத்தில் தங்குவதும்! உண்மைதானே! செல்வமும் கூத்தாட்டத்திற்கு வந்த கூட்டமும் ஒன்றோடு ஒன்று இணைத்து பார்க்கப்படுகின்றன. இப்படிப் பார்க்கத் தொடங்கிய பின், வள்ளுவனுக்கு கூத்தாட்டத்தைப் பார்க்க மனம் ஒப்பவில்லை.

சிறிது நேரத்தில் வெள்ளி எழவும் கூத்து முடியவும் சரியாக இருந்தது. கூட்டம் கலையத் தொடங்கியது. ஒரு நொடியில் மறைந்து விட்டது கூட்டம். ஆட்டம் ஓய்ந்து ஐந்து நிமிடங்கள்தான் ஆகி இருக்கும். வள்ளுவரோ உவமான உவமேயங்களில் தன்னை இழந்திருந்தார். திரும்பிப் பார்க்கிறார். அவர் மட்டும் தனி ஆளாக இருக்கிறார். கூட்டம் வந்த சுவடே இல்லை. தனியாளாகத்தான் இவர் போக வேண்டும். ஆஹா! மெல்ல மெல்ல வந்ததென்ன? இருந்ததென்ன? மாயமாய் மறைந்தது என்ன? சிலரிடத்தில் வளர்ந்தேறி வந்த பெருஞ் செல்வம் எல்லாம் ஒரே நாளில் இவ்வாறு ஒழிந்து போவது போலத் தோன்றுகிறது. யுத்தம் முடிந்ததும் பொருளாதார நிலைமை மாறவும், திடீரென்று ஏற்பட்ட வியாபாரங்கள் சரியத் தொடங்கி, ஒன்றுமில்லாது தடயமே இல்லாது போயிற்று. இதையெல்லாம் சிந்தித்துக் கொண்டே சென்ற வள்ளுவர் தன் வீடு வந்து, இந்நிகழ்வை ஒன்றோடு ஒன்று ஒலிவடிவாய் இணைக்கிறார்.

**"கூத்தாட்(டு) அவைக் குழாத்(து) அற்றே பெருகுஞ்செல்வம்;**
**போக்கும் அதுவிளிந் தற்று" குறள் 332**

இது குறளாய் நிலையாமை அதிகாரத்தில் இரண்டாவது குறளாக நிலைத்து நிறுத்துகிறார் குறளாசிரியர்.

“பெருகுஞ்செல்வத்தின் வரத்து எப்படி என்று முதலில் சொல்லிவிட்டுப் போக்கைப் பற்றி பிறகு சொல்லுகிறார். மெல்ல மெல்ல வரத்து என்பதன் கருத்தை நான்கு சீர்களாலும், வல்லொற்று ஓசைகளிலே தயங்கி நிற்கச் செய்வதாலும் சாவகாசமாக இயங்கச் செய்து, பின்பு, போக்கு நாளாவட்டத்தில் அந்த க்ஷணத்திலேயே, இல்லாமல் ஒழிந்து போய்விடும் என்ற கருத்தை இரண்டு சீர்களில் சொல்லித் தீர்த்து விடுகிறார். மேலும் போனது மீளாது என்னும் பொருளைச் சோகம் கலந்த விளிதல்(சாதல்) என்னும் சொல் தொனிக்கச் செய்கிறது. செய்யுளை அதன் உள்ளக் கருத்தாகிய உண்மையொடு ஒட்டி ஆர அமர திரும்பத் திரும்ப ஓதுவோமாயின் உண்மையும் நயமும் புதிது புதிதாக நம் உள்ளத்தில் பிறக்கும். நவில்தொறும் நூல் நயம் போலும் என்பதன் பொருள் துலங்கும்“ என்பது டி.கே.சியின் விளக்கம்.

என்ன நண்பர்களே! வள்ளுவன் மனத்தில் டி.கே.சியா? டி.கே. சியின் மனத்தில் வள்ளுவனா? வியந்துதானே போகிறீர்கள்!

மக்களுடைய குணங்களின் அதிசயங்களை மிகவும் ரசித்தவர், அனுபவித்தவர் திருவள்ளுவர் ஏன்கிறார் ரசிகமணி. மேலும், நல்லகுணத்தைக் கண்டு அனுபவிக்கும் அவருக்கு தீயகுணத்தைக் கண்டால் வேடிக்கையாகத்தான் இருக்கும் என்கிறார் டி.கே.சி.

ஒரு செல்வந்தர். மிகவும் தாராள மனசுடையவர். தன் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவிற்கு, வைதீகர்களையும், நண்பர்களையும், சுற்றத்தார்களையும் அழைந்திருந்தார். வைதீகர்களுக்கு நல்ல விருந்தளித்து, அவர்களுக்கு ஆளுக்கு பத்துப் பத்து ரூபாய் கொடுத்தார். வைதீகர்கள் விருந்தை உண்டு விட்டு, தட்சிணையைப் பெற்றுக் கொண்டு ஒருவர் பின் ஒருவராக அச்செல்வந்தரிடம் விடைபெற்றுக் கொண்டு தெருவழியே போகின்றனர்.

அப்படிப் போகின்ற முதலாமவரை வழியில் நின்றவர் கொஞ்சம் நிறுத்துகிறார். அறுபதாவது ஆண்டு விழாவாக்கும், விருந்தெல்லாம் படுஜோரா இருந்திருக்குமே! தட்சிணை வேறு கொடுத்திருப்பார்களே! உங்களுக்கு என்ன கொடுத்தார் அவர்! என வினவினார்.

“என்னத்தைக் கொடுத்து விட்டார். இந்தப் பிச்சைக்கார பத்து ரூபாயைக் கொடுத்தார். ஒரு நூறு ரூபாய் கொடுத்திருக்கலாம். நாளைக்கே ஆண்டியாகப் போய்விடுவாரா என்ன?“ என்று பதில் கொடுத்தார் அவர்.

அவர், இரண்டாவது வைதீகரை நிறுத்திக் கேட்டதற்கு பத்து ரூபாயைக் காட்டி விட்டுச் சென்றுவிட்டார். மூன்றாமவர் வந்தார். அவரைக் கேட்டதற்கு "நூறு ரூபாய்க் கொடுத்தார் ஐயா! இந்தப் பத்து ரூபாயைக் கொண்டு நான் எவ்வளவோ காரியங்களைச் செய்வேன். இந்தப் பத்து ரூபாய் எனக்கு இப்போது நூறு ரூபாய்க்குச் சமம்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

இவரைத் தொடர்ந்து வந்தவர் மிகவும் சந்தோஷமாகக் குதித்துக் கொண்டு வந்தார். இவர் கேட்காமலேயே அவர் கூறலானார்! "லட்சரூபாய் கொடுத்தார் ஐயா! பத்து பத்து ரூபாயாக எத்தனையோ பேருக்கு கொடுத்தார். எனக்கும் கொடுத்தார். இத்தனையையும் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்திருக்கலாமே! அவருக்கு என்ன யார் கட்டாயப்படுத்தினார்கள். அவர் உள்ளத்தில் பரிவும், ஆனந்தமும் உண்டாயின. எனவே எல்லோருக்கும் கொடுத்தார்" என்று உடம்பும் உள்ளமும் பூரிக்க மேலே நடந்தார்.

உதவி பெற்றவர் குணம் உயர உயர அந்தப் பத்து ரூபாயின் மதிப்பும் உயர்ந்து விடுகிறது நண்பர்களே! பத்து காசிலிருந்து பத்து ரூபாயாகி, பத்து ரூபாய் நூறு ரூபாயாகி, நூறு ரூபாயும் லட்சம் ஆயிற்றல்லவா நண்பர்களே! ஆகவே,

"உதவி வரைத்தன்று உதவி...

பத்து ரூபாய், பத்து ரூபாய்க் கணக்கு அல்லதானே நண்பர்களே!

உதவி

செயப்பட்டார் சால்பின்

வரைத்து"

உயர்ந்த குணத்துக்கு ஏற்று, உதவி மேலே மேலே உயர்ந்து போய்க் கொண்டே இருக்கின்றது. செய்நன்றி அறியும் பாங்கு இப்படி இருக்கிறது வள்ளுவருக்கு.

உடனே வள்ளுவனிலிருந்து கம்பனுக்குப் போகிறார் டி.கே.சி. வள்ளுவன் அனுபவித்ததைக் கம்பனும் அனுபவித்திருப் பான்தானே என அங்கு ஓடுகிறார் டி.கே.சி. ஒரு நல்ல விஷயம் கிடைத்தால் எப்படியும் என்னிடம் நீ வருவாய் என்றுதானே காத்திருக்கின்றேன் என்று கம்பன் டி.கே.சியை

வரவேற்கிறான். தான் எப்படி அனுபவித்தான் என்பதை கம்பன் விவரிக்கின்றான்.

அந்தக் காலத்தில் மகாபலி என்கின்ற அரசன் அறிவில், வீரத்தில், ஒழுக்கத்தில் மிகவும் சக்திவாய்ந்தவனாய் இருந்தான். அவனது ஆற்றல் பெருகப்பெருகப் பலநாடுகள் அவனுக்குள் அடங்கியது. அவனது, புகழ் தேவலோகத்திற்கு எட்டியது. அவ்வளவுதான் தேவர்கள் அஞ்சி, மகாபலியின் ஆதிக்கம் மிஞ்சுகிறது, தயவுசெய்து அவனைத் தடுக்க வேண்டும். ராஜ்ய நிர்வாகம் உணர்ந்த ரிஷிகளிடம் ஒப்படைக்கப் போகிறானாம். இனி நாங்கள் தேவர்கள் அல்ல. மகாபலியின் அடிமைகள்" என்று விஷ்ணுவிடம் முறையிட்டனர் தேவர்கள். விஷ்ணுவிற்கும் இது சரியெனப்படவே, காசிபர் முனிவருக்கு மகனாய்ப் பிறந்தார். அழகாய் பிறக்கக் கூடாதா? குள்ளமாய், விகாரமாய்ப் பிறந்தார். நெடுமாலின் ஜாதகப்பலன் குள்ளமாகப் பிறந்தார். வடிவம் குள்ளமேயொழிய அறிவில் ஆற்றலில் ஆயகலைகளில் முதன்மையாய் விளங்குபவனாகத் திகழ்ந்தார். அவருக்குப் பெயர் வாமனன்.

பிறந்தாகி விட்டது. தேவர்களின் வாக்கைக் காப்பாற்ற வேண்டும்தானே நண்பர்களே! மகாபலியிடம் புறப்பட்டுப் போகிறார். மூன்றடி மண் கேட்கிறார். மூவிரண்டு ஆறு இஞ்ச் நிலம்தான். சரி என்று சொல்லி விடுகிறான் மகாபலி. பக்கத்தில் இருந்த கெண்டியை எடுத்து நீரை வார்த்தான். அந்த தாரையில் அப்படியே கையை நீட்டினான் வாமனன். அவ்வளவுதான்! அவனுக்கு உண்டாய் விட்டது வாமனனுக்கு, அந்தப் பிறவியின் பயன் அது. மூன்றடி மண் அளக்க ஆரம்பித்தான். வாமனம் அதன் பண்பை இழக்கத் தொடங்கியது, நண்பர்களே!

மூன்றடி ஆறடி ஆயிற்று, பார்த்தவர்கள் வாய்பிளந்து வியந்தனர்! ஆறு அடி அறுபது அடியாயிற்று. திறந்தவாய்த் திறந்தபடிதான். அச்சத்தைக் கண்கள் உமிழ்ந்தன. என்ன நண்பர்களே! உங்களுக்கும் பயம்தானே!

**கயம்தரு நறும்புனல்**
**கையில்த் தீண்டவும்**
**பயந்தவர் களும் இகழ்**
**குறளன்**

(சுயம்தரு: தடாகத்திலிருந்து வந்த; பயந்தவர்களும், பெற்றவர்களுமே)

கெண்டியினுடைய தண்ணீர் கையில்ப்பட்ட மாத்திரத்தில், பெற்றவர்களுக்கே வெறுப்பாய் உள்ள அந்தக் குள்ள வடிவம்,

“கயம்தரு நறும்புனல்
கையில்த் தீண்டவும்
பயந்தவர் களும் இகழ்
குறளன், பார்த்துஎதிர்
வியந்தவர் வெருக்கொள
விசும்பின் ஓங்கினான்”

எப்படி விசும்பில் ஓங்கினான் என்று கம்பன் சொல்ல வருகிறான்.

உயர்ந்தவர்க்(கு) உதவிய
உதவி ஒப்பவே

உயர்ந்த பண்புடையவர்களுக்குச் செய்த உதவி (மேலே குறித்த பத்து ரூபாயைப் போல) மதிப்பில் எதிர்பாராத முறையில் உயர்வது போல.

கயம்தரு நறும்புனல்
கையில்த் தீண்டவும்
பயந்தவர் களும்இகழ்
குறளன் பார்த்(து)எதிர்
வியந்தவர் வெருக்கொள,
விசும்பின் ஓங்கினான்&
உயர்ந்தவர்க்(கு) உதவிய
உதவி ஒப்பவே

குறளாசிரியருடைய நயத்தைக் கம்பர் அழகாய் அனுபவித்திருக்கிறார். அவர் மூலமாக நாமும் அனுபவிக்கிறோம். நீங்களும்தானே நண்பர்களே!

# பாரதி

எத்தனையோ கோடி பிறப்புக்கள், படைப்புகள் இருந்தாலும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனிப்பண்புடன் படைக்கப்பட்ட படைப்புகள்தான். கோபுரம் என்று ஒரு பொது வடிவமாயினும், அதன் உயரத்திலும், அகலத்திலும், மிடுக்கிலும், எடுப்பிலும் அதனதன் தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கும். சில தன்மைகள் மெனக்கெட்டு செய்தவையாக இருக்கலாம். சில நாம் அறியாமலே நடந்தவையாகவும் இருக்கலாம். அதுபோல்தான் காவியங்களிலும் புரதானமாக இருந்தாலும் சரி, வால்மீகி, ஹோமர் ஆனாலும் சரி, இதர தேசங்களுடையதாக இருந்தாலும் சரி, விஷயங்களும், கற்பனைகளும், பாவங்களும் உள்ளூறிக் கிடந்து, ஒவ்வொன்றும் அதன் தன்மையில் வியப்புற்று, தனித்தன்மை பெற்று, கோபுரங்கள் போல் நிலைத்து நிற்கும்.

சுப்ரமணிய பாரதியார் ஆங்கிலக் கவிதைகளைக் கவனமாகப் படித்தவர். உயர்ந்த கவிகளைத் தாமாகவே கற்று விஷயங்களை அறிந்து கொண்டவர். பாரதியார் அனுபவித்த ஆங்கிலக்கவியொன்றைக் காணலாம். டென்னிஸன் பிரபு என்றொரு கவிஞர் 1908

ஆம் வருடம் பிறந்தவர். அவருடைய கவிகளில் சிறந்த கவியான, தன் நண்பர் ஒருவர் இறந்து போனபோதுதான் ஆற்றொணா துயரத்திற்கு ஆளாகிப் பாடிய "இன் மை மெமோரியம்" என்ற அமரக் கவிக்கோவை என்று சொல்வார்கள். அதில் ஒரு கவி,

ஒரு துயரம் மனதைத் தாக்கினால், தொடர்பில்லாத பலதுயரங்கள் வந்து தாக்குவது இயல்புதானே நண்பர்களே! தன் நண்பன் ஆர்தர் ஹாலம் இறந்தது பற்றியான துயரம் அவர் மனதைக் கஷ்டப்படுத்துகிறது அப்போது வருடத்தில் கடைசி நாளான டிசம்பர் மாதம் 31ஆம் தேதி இரவு பன்னிரண்டு மணி. பழைய வருஷத்தின் இறுதியையும் புதிய வருடத்தின் பிறப்பையும் குறிப்பதற்காக இங்கிலாந்திலுள்ள கிறிஸ்தவக் கோயில்களில்

மணியடிப்பதுண்டு. பற்பல கோயிலிலுள்ள கோயில் மணியோசை ஒரே முழக்கமாக முழங்குகிறது. மக்கள் துயருக்கே ஆளாகி, அறிவு மயங்கி இருக்கிறார்கள். இவையழிந்து புதுவருடத்தில் அறிவும் ஆனந்தமும் தலையெடுக்கக்கூடாதா என்ற ஏக்கம்தான் கவினுருடையது.

"பழையன கழிய முழங்குங்கள்
புதியன புகவும் முழங்குங்கள்
இதயத்தை உறையச் செய்யும் உறைபனி ஒழிய வேண்டும்.
பழைய ஆண்டு ஒழிகிறது, ஒழியட்டும்
பொய் போகவும், பொய்யல்லாத, மெய் வரவும்
முழங்குங்கள்!"

இப்படிப் போகிறது ஆங்கிலக் கவியின் பொருள். டென்னிஸனுடைய கவியைப் பாரதியார் மூலத்தில் வாசித்ததும், அதில் உள்ள சோகம் பாரதியாரைப் பற்றிக் கொண்டு, ஆங்காரத்தை உண்டுபண்ணி விட்டது. இந்த ஆங்கார பாவம் தமிழ்ச் செய்யுளாக உருவம் எடுத்தது.

மக்கள் கோழையாக, உடல் சோர்ந்து, உள்ளம் உணர்வு எல்லாம் சோர்ந்து கிடக்கிறார்கள் என்று பாரதிக்குத் தோன்றுகிறது. அதைத்தும் கவி கொண்டு நாட்டை விட்டு விரட்டுகிறார்.

"வலிமை யற்ற தோளினாய்
போ போ போ"
"கிலி பிடித்த நெஞ்சி னாய்
போ போ போ!"
கீழ்மை என்றும் வேண்டு வாய்
போ போ போ"

வேண்டாதவனொருவன் வீட்டுக்குள் வந்தால் எப்படி விரட்டுவோமோ அப்படி பாரதி விரட்டுகிறார் இப்பாட்டில் என்கிறார் டி.கே.சி.

நல்ல காலம் பிறந்து, நம்மவருக்கு அறிவு மேம்பட்டு, சத்தியத்தில் ஆர்வம் தோன்றி, வீரம், ஆனந்தம், ஞானம் எல்லாம் உண்டாகி விடுகிறது. எதிர்காலத்தில் அவர்கள் கண்ணுக்கொரு விருந்தாக விளங்குகிறார்கள். கவி எப்படி வரவேற்கிறார் பாருங்கள்!

“ஒளிப டைத்த கண்ணி னாய்
வா வா வா!
உறுதி கொண்ட நெஞ்சி னாய்
வா வா வா!”

என்ற இந்தப்பாடல் மகிழ்ச்சியில் துள்ளிக்குதிக்கிறது. சிறுமை கண்டு பொங்கி, எளிமை கண்டிரங்கி, ஏறுபோல் நடைநடந்து, பொய்மைகள் அஞ்ச, பொய்ம்மை நூல்கள் எரித்து, நோய்மையற்ற சிந்தையாய் வருவாயாக எனப் பாரதத்தை அழைக்கிறார்.

“ஒரே விஷயம்தான் டென்னிஸனும் சொன்னார். பாரதியாரும் சொன்னார். சோகந்தான் பாவம். டென்னிஸனிடம் நம்பிக்கை பாவம் கொஞ்சம் இருக்கிறது. ஆனால் பாரதியார் பாவம் முற்றிலும் வேறு. உருவம், துள்ளல், தாளம் எல்லாம் வேறு. மூலத்துக்கும் பாரதியார் பாடலுக்கும் சம்பந்தமே இல்லை என்று சொல்லும்படி அவ்வளவு வேறுபட்டது. ஏதோ டென்னிஸன் எழுதிய ஆங்கிலக்கவி பாரதியாரை அந்த விஷயங்கள் சம்பந்தமாகச் சிந்திக்கச் செய்தது, அவ்வளவுதான். உணர்ச்சி எழுந்ததும், அதற்குத் தக்கபடி தமிழ்ச் செய்யுள் வந்து உதவியதும், பாவங்களின் புதுமையும் வேகமும் எல்லாம் தனி. ‘போகின்ற பாரதம்’ ‘வருகின்ற பாரதம்’ என்ற இந்த இரண்டு கவிகளும் பாரதியின் சிறந்த பாடல்களைச் சேர்ந்தவை. உண்மையான சிருஷ்டிகளே. தமிழ் மக்களின் தனியான நடனங்கள்தான்“ - என்று டி.கே.சி. தன் கருத்தும் கவியும் என்கின்ற கட்டுரையில் பாரதியாரைப் பற்றிக் கூறுகிறார். (ரசிகமணி கட்டுரைக்களஞ் சியம் - தீப.நடராசன், காவ்யா சண்முகசுந்தரம், முதற்பதிப்பு செப்டம்பர் 2006 - பக்கம் 303)

பாரதியாரைப் பாராட்டுகிறது என்பதெல்லாம், நம்முடைய இதயத்தில் குடிகொண்டிருக்கிற ஆங்காரத்தையும், அரசியல் உணர்ச்சி பற்றித்தானேயொழிய, கவிப்பண்பு பற்றியல்ல. அவர் சரஸ்வதியின் அருளால் பாடியவை என்று சொல்லக்கூடிய சிறந்த பாவங்கள் அவர் பாடல்களில் இருக்கின்றதைத் தமிழ் மக்கள் கண்டார்களா என்பதே ஐயம்தான்.

இதற்கு உதாரணமாக “கண்ணன் பாட்டுக்களை” அதிஅற்புதமான பாட்டுக்கள் என்று கூறுகிறார் டி.கே.சி. அவர்கள்.

"வெற்றி எட்டுத் திக்கும் எட்டக்
கொட்டு முரசே!
வேதம் என்றும் வாழ்க என்று
கொட்டு முரசே!
நெற்றி ஒற்றைக் கண்ண னோடே
நிர்த்த னஞ்செய் தாள்
நித்த சக்தி வாழ்க என்று
கொட்டு முரசே!"

என்ற முரசுப்பாட்டை நீங்கள் பாடிப்பாருங்கள் நண்பர்களே! டம்ம்டம்ம்என்றமுரசின்ஒலிபாட்டிலேயேகேட்கவில்லையா? எட்டுத்திசையும் பதினாறு கோணமும் எங்கும் ஒன்றாய் ஒரே ஒலிமயமாய் நிறைவது உங்கள் உணர்ச்சிக்குத் தோன்றவில்லையா? இந்தக்கவியைத் தமிழர் எத்தனை பேர் அனுபவித்திருக்கிறார்கள்? சற்று விசாரித்துப் பார்த்துச் சொல்கிறார் டி.கே.சி. நண்பர்களே! உங்கள் உற்சாகத்தை அப்படியே தண்ணீர் ஊற்றி அணைத்து விடுவார்கள் என்கிறார். இருபது வருஷமாகத் தமிழ்நாட்டில் உலாவரும் பாரதிக்கு இதுதான் நிலைமை என்கிறார்.

ஆனால் டி.கே.சியைப் பொறுத்தவரையில் நமது யோகம் நமக்கு இரு கவிஞர்கள் கிடைத்திருப்பது என்கிறார். சுப்ரமணிய பாரதியார் ஒருவர்; மற்றவர் தேசிக விநாயகம் பிள்ளை.

# கவிமணி

ஒரு கவிக்கு விஷயம் எதுவாகவும் இருக்கலாம். ஆனால் எடுத்துக் கொண்ட விஷயத்தில் ஆர்வம் இருக்க வேண்டும் என்கிறார் டி.கே.சி. அதற்கு வெறுப்போ ஆசையோ அழுத்தமாயிருக்க வேண்டும். உணர்ச்சியானது சொல், இசை, கட்டுக்கோப்பு இவைகளோடு ஒத்த உருவத்தில் வெளிவந்து விட்டதென்றால் அதுவே கவி. அது அற்புத சிருஷ்டிதான். இப்படி எழுந்த ஒரு கவிக்காக அந்த பாஷைக்குரியவருக்கு ஒரு விழாக் கொண்டாடினால் பொருத்தமே என்று மிகவும் சந்தோஷமாய்க் கூறுகிறார் டி.கே.சி. இப்படிப்பட்ட கவிகள் எத்தனையோ பாடியிருக்கிறார்கள் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையவர்கள். கவியெனில் பாரதியும் கவிமணியும் என்று பாராட்டிக் கொண்டேயிருப்பார் டி.கே.சி.

நண்பர்களே! டி.கே.சியுடன் கவிமணியின் ஒருதனிப்பாடலைப் பார்க்கலாம் வாருங்கள்!

மனிதனை இன்னான் என்று இனங்கண்டு கொள்ளவேண்டுமென்றால் இதர பிராணிகளோடு இணைத்துப் பார்த்தால்தான் புரியும். எந்தப் பிராணியாவது தன் குடும்பத்தைக் காப்பாற்ற உணவைப் பெருக்கக் குடும்பத்தையும், இனத்தையும் வளமாக வைத்திருக்கின்றதா நண்பர்களே! இல்லையே! மனிதன்தான் தன் கரத்தால் உழுது, தன் அறிவால் அத்தொழிலை வளர்த்து இருக்கின்றான். இரண்டாவதாக உள்ளத்தில் எழும் உணர்வுகளை வெளியிடுவதற்கு வார்த்தைகளை உண்டாக்கி அவைகளை இன்றும் வைத்திருக்கும் அதிசயம்தான் என்ன? ஆயிரக்கணக்கான வருடங்கள் இடையில் இருந்தாலும் இரண்டு இதயங்கள் ஒன்றாகத் துடிக்கும்படி கவிபாடினவர்களின் நாவை என்னென்பது தோழர்களே! மூன்றாவதாக துன்பத்துக்குள்ளான மக்களைப் பார்த்து அனுதாபப்பட்டு, அத்துன்பத்தின் தீர்விற்கு அறிவை செலுத்தி, அதன் பயனாக ஏற்பட்ட பயனான

தர்மங்களை எப்படிப் புகழ்வது? எல்லாவற்றிற்கும் காரணமாய் இருப்பது, மற்ற பிராணிகளிடம் இல்லாத, மனிதனிடத்தில் மாத்திரம் காண்கின்ற அறிவுதத்துவம்தான். இந்த அறிவுத் தத்துவத்தை தெய்வம் எனலாம். இந்த உண்மை எவ்வளவு அழகாக அத்வைத பாவத்தோடு தமிழின் இசை தாளங்களோடு சேர்ந்து கவியில் வருகிறது என்று பாருங்கள் நண்பர்களே!

சரஸ்வதி

“நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயஉரை கள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும் செழுங் கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்து நடம்
ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம் அடைக்கல மே”

அடைக்கலம் புகுவதற்கு சரஸ்வதியின் பாதமே தகுந்த இடம். ஏனெனில் அறிவுடையார் எல்லாம் உடையார் அல்லவா நண்பர்களே!

பிள்ளைவாள் திருவாங்கூர் ஸமஸ்தானத்தைச் சேர்ந்தவர்தான். அதைக் கண்ட மன்னவர் குடிமக்களுக்காக பலவிதங்களில் அக்கறை எடுத்துக் கொண்ட அருமையையும், தருமங்களையும் நெடுகிலும் பாடி வந்திருக்கிறார். அப்படிப்பட்ட மன்னன் எப்படி திருஅனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள திருமாலிடத்தே பக்தியில் இருக்கிறார் என்பதை கீழே வரும் வெண்பா பாராட்டி, அனுபவத்தை அளிக்கிறது என்று பாருங்களேன் நண்பர்களே!

பூவால் பசுங்கொடியும் புன்சிரிப்பால்க் கைம்மகவும்
நாவால் இளங்கிளியும் நன்கோதும் மூவாத
சீமான் அனந்தைத் திருமால் அடிமறவாக்
கோமான்தன் ஆட்சிக் குணம்”.

பசுங்கொடிகள் பூவால் ஓதுமாம்; கைம்மகவும் புன்சிரிப்பில் ஓதுமாம். ஏன்? அவைகளுக்கு நாவில்லை. ஆனால், நாவினாலேயே கிளிகள் நன்றாய் ஓதும் மன்னர் அரசு புரிவதன் சிறப்பை, என்று வெகுநயமாகக் கவி அமைந்திருக்கின்றது பாருங்களேன்!

“இந்த வெண்பாவையும் சரஸ்வதி துதியான கட்டளைக் கலித்துறையையும் அவைகளில் பொதிந்துள்ள உண்மை உணர்ச்சியையும் பாவத்தின் பொலிவையும் பார்த்தால் அவை தற்காலத்துப் பாட்டல்ல, தமிழ் உண்மையாக ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த பண்டைக் காலத்துக் கவி, அதாவது ஆயிரம் வருஷத்துக்கு முந்திக் காலத்துக் கவி,

என்றே சொல்லத் தோன்றும். கவிகளுக்குள் உள்ளக்கிடையாகக் கிடக்கும் உணர்ச்சி வசமாய் நின்று, ஆர அமர ஒருமுறைக்கு நாலுமுறை பாடிப் பார்த்தால், பாட்டின் அபூர்வமான நயமும் பெருமையும் புலப்படும். தொன்மையான கவித்திறம் நிறைந்த பாடல்களை எவ்வளவாகப் பிள்ளை அவர்கள் சுவைத்து அனுபவித்து இருக்கின்றார் என்பதும் தெரியவரும். பாடல்கள் ஒவ்வொன்றையும் இப்படி எல்லாம் ஆராய்ந்து பார்ப்பது முறைதான்" என்கிறார் டி.கே.சி. (கண்ணாரக் காண ஒரு கவிஞன் கவிமணி ரசிக மணி கட்டுரைக்களஞ்சியம், காவ்யா பதிப்பகம், முதற்பதிப்பு பக்கம் 326)

கவியைக் கேட்டமாத்திரத்தில் யாரையும் கவிபாடத்தூண்டி விடுகிறது. அது குழந்தைகளையும், பெண்களையும் தூண்டுவதை இன்றும் நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். தமிழின் அமைப்பு அப்படி இருக்கிறது. இன்றைக்கும் கவிபாடும் திறம் ஒருவருக்கு இருந்தால் தமிழ்பாஷை முன் வந்து உதவிபுரியும். தேசிக விநாயக பிள்ளை அவர்களுக்கு அப்படி உதவி புரிகிறது தமிழ். என்கிறார் நம் ரசிகமணி நண்பர்களே!

பல பிராணிகளிடம் இனத்தைப் பாதுகாக்கும் தத்துவம் ஒன்று இருக்கிறது. அதற்காக உயிரையே தியாகம் செய்கின்றன. மனுஷனும் தியாகம் செய்கிறான். தேசத்துக்காக உயிரைத் திண்ணமாய் எண்ணுகிறவர்கள் லட்சக்கணக்கானவர்கள் என்று புள்ளி விவரமே சொல்லுகிறது. இந்திய தேசம் ஒன்றென்று எண்ணுகிறவன் காஷ்மீரத்திலும் இருக்கிறான். கன்னியாகுமரியிலும் இருக்கின்றான். இவை அற்புதமான மனப்பாங்கு அல்லவா! இதைக் கொணர இராப்பகலாய் உழைக்கிறவர்கள் எத்தனையோ பேர்! கண்ணீர் விடுபவர்கள் எத்தனையோ பேர்! உயிரைக் கொடுப்பவர்கள் எத்தனையோ எத்தனையோ பேர்! இந்த உண்மைகளையும் உணர்ச்சிகளையும் அப்படியே மனசில் பதிய வைப்பது கஷ்டம். ஆனால் தமிழ்ப்பாஷை தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் கைக்கு வந்து அதைச் சாதித்துக் கூறுகிறது என்கிறார் டி.கே.சி.

"பாரில் உயர்ந்த மலை
இமயலை - அன்னை
பாரத தேவிபா ராட்டுமலை
சீரில் உயர்ந்திடும்
தேசக்கொடி - அதன்

சீராம் அணிந்தின் று
பறக்குது பார்.

ஆம் இமயமலையின் உச்சியில் இருக்கும் கொடி, அடிக்கிறது, பறக்கிறது, மடங்குகிறது, கன்னியாகுமரியையே எட்டுகிறது. இதைத் தொடர்ந்து இந்தியாவில் தியாகம், பொருளாதாரம், உற்சாகம், வணக்கம் என எல்லாவற்றையும் பேசுகிறது அக்கொடி. இறுதியில் இந்திய மக்களின் மனத்துணிவைப் பற்றி வரும் தோரணையைப் பாருங்களேன் நண்பர்களே!

"நாடு நமதாகக்
கண்ட கொ டி - அதை
நாமே அரசாள
வைத்தகொ டி
வீடு நமதென்று
வீரம்பே சி - இன்று
வெற்றி முரசறையச்
செய்கொ டி"

இப்போது நமக்கு கவிஞனின் உள்ளம், தமிழ், தாளம் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து செய்கிற அற்புதமும் இத்தகையதென்று தெரிய வந்து, 'வாழ்க தமிழ்மொழி' என்று சொல்லவும் தோன்றுகிறதல்லவா அன்பர்களே!

ஒருசமயம் திருநெல்வேலியிலே செப்டம்பர் மாதத்திலே கலைவிழா ஒன்று நடந்தது. கலைமகளுக்கு ஒரு நாளையும் கம்பனுக்கு ஒரு நாளையும் கொடுத்தார்கள். கலைமகள் தினத்தில் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும், கம்பன் தினத்தில் ரஸிகமணி டி.கே.சி.யும் தலைமையேற்றார்கள். இருவருக்கும் உபசார பத்திரங்கள் வாசித்து அளித்தார்கள்.

சாதாரணமாக கல்யாணத்திற்கு மாப்பிள்ளை போகின்றான் என்றால் மாப்பிள்ளை தோழனும் போவான். மாப்பிள்ளை மிகவும் அப்பாவியாக இருப்பான். ஆனால் தோழனோ 'பட்டாவளியாய் இருப்பான். மாப்பிள்ளைக்குச் செய்யும் உபசாரத்திற்கு இணையாகத் தோழனுக்கும் செய்வார்கள். இக்கலைவிழாவில் நான் என்ன மாப்பிள்ளைத் தோழனா? கவிமணிக்கு இன்று எவ்வளவோ உபசாரம் செய்யலாம். கவிமணியைப் பாராட்டுவதுதான் நியாயம். எனக்கேன்

இவ்வளவு? எல்லாம் அன்பின் காரியம்தான் என்று, தன் உரையில் கூறினார் டி.கே.சி.

டி.கே.சி. மாப்பிள்ளைத் தோழனுமல்ல அல்லது பட்டவாளியுமல்ல. ஆனால் கிணற்றுக்குள் வைத்த விளக்கு போலிருந்த கவிமணியை உலகறியச் செய்த பெருமை டி.கே.சிக்கு உரியது என்பது தமிழர்கள் மறக்க முடியாது. கவிமணியைப் பற்றி ரஸிகமணி எழுதிய குறிப்பு ஒன்றைப் பார்த்து விட்டால் கவிமணியை டி.கே.சி. எப்படி மதித்திருக்கிறார் என்பது தெரியவரும்.

கவி என்றால் இன்னது என்று சொல்வதற்கு இலக்கணம் கிடையாது. உலகத்தில் எங்குமே கிடையாது. யாப்பியல் இந்த விஷயத்தில் என்ன உதவியும் புரிவதில்லை. வெண்பா இது, விருத்தம் இது என்று ஏதோ சொல்ல முடியலாம்; ஆனால் கவி இது என்று சொல்லவே முடியாது. ஒரு பாஷையோடும் அதிலுள்ள சிறந்த கவிகளோடும் உண்மையான ஆர்வத்தோடு படாடோபத்தை எல்லாம் தூரத்தே விட்டுவிட்டு நெடுநாள் பழகி வருவோமேயானால் அது தெரியவரலாம். அதுவும் தாய் மொழியில் தான் தெரியக்கூடும். இதர பாஷைகளில் தெரிய முடியாது என்று ரவீந்திரர் சந்தேகத்திற்கு இடமில்லாமல் சொல்லியிருக்கிறார்.

“கவியை உணர்வதே கஷ்டம் என்றால் கவியைப் பாடுவது எவ்வளவு கஷ்டம் என்று சொல்லவும் வேண்டுமா? உலகத்தில் ஆயிரம் வருஷத்திற்கு ஒரு தடவை கவி பிறக்கிற துண்டு என்று கவியின் அருமையையும் அதன் பெருமையையும் பற்றி நன்கு ஆராய்ந்தவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இப்படிச் சொன்னது வெறும் வின்னியாசம் அல்ல; உண்மையைத் தெளிவுபடச் சொன்ன நேரான வார்த்தையே.

“உணர்ச்சியோடு, சொல், இசை கட்டுக் கோப்பு இவைகளோடு ஒத்த உருவத்தில் வந்து விட்டதென்றால் அதுவே கவி. அது அற்புத சிருஷ்டி தான். இப்படி எழுந்த ஒரு கவிக்காக அந்தப் பாஷைக்குரியவர் ஒரு விழாக் கொண்டாடினால் பொருத்தமே. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் இவ்விதமான கவிகள் எத்தனையோ பாடியிருக்கிறார்கள்.

“தேசிகவிநாயகம் பிள்ளையவர்களுடைய கவிகள் எல்லாம் எளிமையிலும் எளிமையாகப் பாடப்பட்டிருக்கின்றன. அவர்கள் வசிப்பதோ தமிழ் உலகத்திலேயே தென்கோடி என்று ஒதுக்கக்கூடிய கன்யாகுமரிப்பக்கம், மனுஷரோ ரொம்பவும் சாது. ஆடம்பரம் முற்றிலும் பூஜ்ஜியம். தலையிலே ‘தலைப்பா’ வாகச்

சுற்றிக் கொள்ள பட்டம் கிட்டம் உண்டா? கிடையாது!

"தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் பாடல்கள் தமிழ் மக்களுக்குக் கிடைத்த பெருஞ்செல்வம், அரிய செல்வம், தெவிட்டாத அமிர்தம்; ஆயுள் நாள் முழுவதுமே தமிழ் மகன் தன்னுடன் வைத்துக் கொண்டு அனுபவிக்கவேண்டிய வாடாத கற்பகப் பூச்செண்டு. வயதானவர்களை விட இளைஞர்கள் பாக்கியசாலிகள் & அறுபது, எழுபது எண்பது ஆண்டுகள் அவர்கள் இந்தக் கவிகளை அனுபவித்துக் கொண்டிருக்கலாம் அல்லவா? தமிழ் உலகம் பிள்ளையவர்களுக்கு ரொம்பவும் கடமைப்பட்டுள்ளது" என்று 'வசந்தத்தில்' எழுதியிருக்கிறார்.

ரஸிகமணியைப்பற்றி கவிமணி கூறும் குறிப்பும் அறிந்து கொள்ள வேண்டியதே. 'டி.கே.சி நம் ரஸிகரத்தினம். தமிழ்நாட்டில் தமிழ் வளர்ச்சியின் பொருட்டு வாழ்கின்ற ஒரு சிலருள் முன்னணியில் நிற்பவர் நம் டி.கே.சி என்பது யாவரும் அறிந்த உண்மையாகும்" என்று அழகாக ஒரு கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அத்துடன் டி.கே.சி யின் அறுபதாவது ஆண்டு நிறைவின் போது கவிமணி பாடிய பாட்டுக்களும் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டியவையே.

கன்னித் தமிழேபோல், கம்பன் கவியேபோல்,
மன்னும் பொதிகை மலையேபோல் - பன்னுநம்
நாடு மகிழச் சிதம்பரநாத நண்பா!
நீடுநீ வாழ்க நிலைத்து
என்னருமை நண்பா! இனியே கலைரஸிகா!
தென்னர் தமிழ் வளர்க்கும் தேசிகா! - நன்னயச்
சீலஞ் சிறந்த சிதம்பரநாத வள்ளால்
சால நீ வாழ்க தழைத்து
அன்னை தமிழ்ச் செல்விக்கு அருந்தொண்டு செய்தின்றும்
மன்னுலகில் பல்லாண்டு வாழியவே என் இனிய நண்பா!
சிதம்பரநாதா! நம் மாமுருகன்
கண்பார்த் தருளக் கனிந்து

என்பவை தான் வாழ்த்துப்பாக்கள். கவிமணியையும் ரஸிகமணியையும் தமிழன்பர் நன்றாய் அறிந்து கொள்ள இந்தக் குறிப்புகளும் பாக்களுமே போதும் தானே நண்பர்களே! (இரசிக மணி டி.கே.சி தொமு. பாஸ்கரத் தொண்டைமான் எம்.ஏ ஸ்டார் பிரசுரம். முதற்பதிப்பு 1945 பக்கம் 145 147)

# ராஜாஜி

ராஜாஜி அவர்கள் குற்றாலத்திற்கு வந்த வருடம் 1956 ஆம் ஆண்டு. அங்கு தங்குகிறார்கள். அவர்களுடன் இணைந்து மற்றவர்களும் வெளியில் நடக்கிறார்கள். ஐந்தருவிக்கு போகும் வழியில் மலை ஏறத் தொடங்குகிறார்கள். சிற்றருவிக்கும் மேலே சற்று தொலைவில் பெரிய பாறைகளால் ஆன சமவெளி இருக்கிறது. அப்படியே அங்கு தன் தோள் துண்டை உதறி விரித்து அமர்ந்து விடுகிறார். நேரமோ வெயில் கொளுத்தும் மதியம். நினைவு அலைக் குமிழிக்குள் ஆழமாகச் சென்று விட்டார். ராஜாஜி அமர்ந்த கோலம் & அப்படியே சம்மணம் போட்டு& ஒரு யோகிபோல் அமர்ந்து விட்டார்.

டி.கே.சியும் ராஜாஜியும் சந்திக்க காரணமாயிருந்தவர் 'கல்கி' ரா.கிருஷ்ணமூர்த்தி அவர்கள். ராஜாஜியின் 50 வயதில் தான் இந்நட்பு மலரத் தொடங்கியது. டி.கே.சியை காந்திக்கு அறிமுகப்படுத்தினார் ராஜாஜி. அப்போது காந்தியிடம் ராஜாஜி, "டி.கே.சி எனக்கு 50வது வயதில் நண்பர். நண்பரை விட காதலர்" என்றே அறிமுகப்படுத்தினார். ராஜாஜியோ அறிவின் கொடுமுடி. டி.கே.சி அவர்களோ உணர்வின் உன்னத உச்சம். அறிவு, உணர்வு இரண்டின் உச்சங்களின் நட்பு அக்காலத்தில் வரலாறாக மாறியது. ராஜாஜிக்கு அரசியலில் காந்தி குரு என்னில், இலக்கியத்திற்கு டி.கே.சிதான் குருவாக இருந்தார். அரசியல் வேலைகளால் மனம் சோர்வாய் இருக்கும் போதெல்லாம் டி.கே.சியுடன் வந்து தங்கி விடுவார் குற்றாலத்தில். மனதை சரி செய்து கொண்டு, புத்துணர்ச்சி பெற்றுத் திரும்புவார். இலக்கிய சர்ச்சைகளும், அறிவார்த்தமான, தத்துவார்த்தமான உரையாடல்களும் இவர்கள் இடையே ஏற்படும்போது, கூட இருப்பவர்களுக்கு நல்ல சிந்தனை விருந்தாக இருக்கும் என்று கூறுவார்கள் நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள். கலையை அனுபவித்து, ஆனந்தத்தை அனுபவிக்கும் அனுபவத்தை டி.கே.சி. அவர்கள்

ராஜாஜிக்கு நல்கினார். பல இலக்கியச் சான்றோர்கள் அவருக்கு டி.கே.சியால் கிடைத்தனர். டி.கே.சிக்கு ராஜாஜியின் அரசுத் தலைவர்கள் மகாத்மா காந்தி, நேரு, வினோபா இன்னும் பல பெரியோர்களின் நட்பு கிடைத்தது. "தமிழிசை இயக்கம்" நடத்தும் போது, டி.கே.சியை பல வித்வான்கள் கண்டனம் தெரிவித்தனர். அவரது இராமாயண நூலை எரித்தனர். ஆனால் அவருக்குத் துணையாக 'ராஜாஜி' நின்றார். கல்கியில் இதுபற்றிக் கட்டுரை எழுதினார். அதுபோல், காங்கிரஸ் கட்சியில் பெருந்தகையார் ராஜாஜி பற்றி மாற்றுக் கருத்து தெரிவிக்கும்போது, ராஜாஜியின் நல்ல இதயத்தையும் பண்பையும் பற்றி 'பத்தரைமாற்றுத் தங்கம்' என தலைப்பிட்டு கட்டுரை எழுதி, தமிழ் மக்களுக்குப் புரிய வைத்தார் டி.கே.சி. அவர்கள். அவர்களது நல்நட்பின் பண்பும் பயனும் அது.

இந்தியா விடுதலை அடையுமுன் இடைக்கால அமைச்சரவையில் ராஜாஜியும் அங்கம் வகிக்க வேண்டும் என விரும்பி நேரு, ராஜாஜியை அழைத்தபோது, அவர் டி.கே.சியுடன் குற்றாலத்தில்தான் இருந்தார். இங்கிருந்து தில்லி கிளம்பினார். 1952ல் காமராஜர் பொதுத்தேர்தலின் போது நிலமையைச் சமாளிக்க ராஜாஜி தேவை என்று தீர்மானித்து காமராஜர் குற்றாலத்துக்கு வந்து, ராஜாஜியை அழைத்துச் சென்றார். தில்லியின் கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்று இருந்தபோதும் ராஜாஜியின் உள்ளம் முழுவதும் டி.கே.சி. நினைவாகத்தான் இருந்தது என்பதை அவரது ஏக்கம் நிறைந்த கடிதங்கள் கூறின.

'முதல் தாம்பூலம்' என்னும் கட்டுரை மகாபாரத நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு எழுதினார் ராஜாஜி அவர்கள். அதைப் படித்து ரசித்த டி.கே.சி. அவர்கள், ராஜாஜிக்கு தம் மகிழ்ச்சியையும் பாராட்டையும் தெரிவித்து ஒரு கடிதம் எழுதினார். அதில் "மகாபாரதக் கதை முழுவதையும் நீங்கள் தமிழ் மக்களுக்கு எழுதலாமே" என்ற யோசனையையும் வழங்கி இருந்தார். அதுதான் 'வியாசர் விருந்து' என்று மலர்ந்தது. பின்னாளில் "சக்ரவர்த்தித் திருமகன்" என இராமாயணத்தையும் எளிய தமிழில் ராஜாஜி எழுதினார்கள். இவ்விரு செயல்களும் தன் பணிகளிலே சிறந்த பணியும் மனதிற்கு திருப்தி அளித்தன என்பதையும் அவர் உணர்ந்தார். வாய்ப்பு கிடைத்த போதெல்லாம் டி.கேசியைப் பற்றிப் பேசிப் பேசி நட்பின் ஆற்றாமையை தீர்த்துக் கொண்டார் ராஜாஜி. எதற்கும் கலங்காத அறிவின்

சிகரம், தன் நண்பர் அமரரானபோது நிலை குலைந்துதான் போனார். இதோ! டி.கே.சியின் அலைகள் அந்தப் பொதிகை மலைத் தென்றலாய் வருடும் இன்பத்தை அனுபவித்துக் கொண்டு, அந்தப் படபடக்கும் வெய்யிலில் ஆனந்தத்தின் உச்சத்தில் அமர்ந்திருக்கிறார். ஏனையோர் அவராக அதிலிருந்து வரட்டும் என்று அவர் முகம் பார்த்து காத்துக் கொண்டிருக்கிறார்கள் நண்பர்களே! அறிவும் அன்பும் கலக்கும் அனுபவம் அங்கு நடந்து கொண்டிருக்கின்றது. நண்பர்களே! எப்போது நீங்கள் குற்றாலம் சென்றாலும் பொதிகைத் தென்றல், அந்நல் நட்பின் பண்ணைப் பகரும். உணர்வீர்கள் நண்பர்களே!

பூரண ஹரியும் பூரண ரசிகமணியும்

சென்ற திங்கட்கிழமை கண்ணன் பிறந்த நாள். அந்தத் திங்கட்கிழமையே தமிழ்க் கவிதை தரும் மகிழ்ச்சியின் ரகசியம். தமிழ் வசனநடை முன்னேற்றத்தின் ரகசியம். தாளமும் ராகமம் சேர்ந்த நல்லிசையின் ரகசியம். தெய்வ பக்தி தரும் நிம்மதியின் ரகசியம். அன்பின் பரம மகிழ்ச்சி, வேஷங்களின் பொய்ம்மை, அனைத்தும் நன்றாகக் கண்ட பூரண ரசிகமணி டி.கே.சி. பிறந்த நாளும்.

ஹரியின் பூரணாவதார கண்ணனின் ஜன்ம நட்சத்திரமும், டி.கே.சி.யின் ஜன்ம நட்சத்திரமும், ஒன்றாய்ச் சேர்ந்த திருவிழாவை மகிழ்ச்சியுடன் சென்ற திங்கட்கிழமை கொண்டாடினோம். இந்தத் திருவிழாக்கள் ஞானமும் அன்பும் நாட்டில் வளரச் செய்யும்.

கண்ண பகவான் ரோஹிணி நட்சத்திரத்தில் அவதரித்தான். ரோஹிணி நட்சத்திரக் கூட்டம் சகடத்தைப் போல் இருப்பதாகக் கண்டு அதற்குப் பெயரும் சகடம் என்றே சொல்லுவது வழக்கம். வண்டியின் முக்கிய பாகம் அச்சு மரம். அச்சு மரத்துக்கு வடமொழி ‘அக்ஷ’. அதன் கீழ் பிறந்தான் கண்ணன் என்று விஷ்ணுவுக்குப் பீஷ்மாச்சாரியார் தந்து பாடிய ஆயிர நாமங்களில் ‘அதோகக்ஷஜ’ என்பதும் ஒன்று. அதாவது அச்சு மரத்தடியில் அவதரித்தான் என்று.

இந்த அச்சு மரத்தடியில் மற்றொருவர் அவதரித்தார். தமிழ்க் கவிக் காதலர் டி.கே.சி. என்று பெயரைப் பெற்ற மகான் சிதம்பரநாத முதலியார் அவர்கள். இவர்தான் ‘கல்கி’ கூட்டத்தின் குலபதியாக இருந்து பல்லாண்டு அந்தப் பத்திரிகையையும், அதை நடத்தியவர்களையும், படிப்பவர்களையும் ஆசீர்வதித்து வந்தார். அவரைக் கல்கி மறக்க முடியுமா? சிரீஜயந்தி என்றால்

கண்ணன் பிறந்த நாள். டி.கே.சி. பிறந்தநாள் என்றும் தமிழர் கொண்டாடும் நாள்.

பூரண ஹரியும் பூரண ரசிகமணியும் (ரசிகமணி கட்டுரைகள், மித்ர ஆர்டிஸ் கிரியேஷன்ஸ் 32/9 கஷ்காடுகாரை, சென்னை 24 - முதற்பதிப்பு - 2004)

# காந்தி

1946ஆம் வருடம், மகாத்மா காந்தியடிகள் சென்னை வந்திருந்தார். டி.கே.சியை ராஜாஜி அறிமுகம் செய்து வைத்தார். பரம்பொருள்கள் பேராற்றலைப் பற்றிய பாடல் ஒன்றினுக்கு ஆங்கிலத்தில் விளக்கிவிட்டு, மத்தியமாவதி ராகத்தில் பாடிக் காட்டினார். காந்தியின் உள்ளம் ஆனந்தப்பட்டு, மேலும் ஒரு பாடல் பாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். ராமனுடைய சத்திய வேட்கையை விளக்கும் கம்ப ராமாயணத்திலிருந்து இரண்டு பாடல்களை விளக்கி, சங்கராபரணத்தில் பாடிக்காட்டினார். பாடலை அனுபவித்த காந்தியடிகள் நீங்கள் இருவரும் ஒருவருக்கு ஒருவர் பொருத்தமான நண்பர்கள் எனப் பாராட்டினார். "இரண்டு உள்ளங்களை ஒன்றுபடுத்தும் அன்பின் வேகத்தில் காதலும் இருக்கிறது. பக்தியும் இருக்கிறது" என்று டி.கே.சி. கூறினார். பின் ஆழ்ந்து சிந்தித்துவிட்டு, அண்ணல் அவர்கள், நான் கம்பராமாயணத்தை மூலத்தில் அனுபவிக்க வேண்டும்" என்றார். கொஞ்சங்கூடத் தயங்காமல் பளிச்சென்று "அதற்கு நீங்கள் தமிழனாகப் வேண்டும்" என்றார் டி.கே.சி.

ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது, டி.கே.சி. ராஜாஜியின் விருந்தினராக டில்லி சென்றிருந்தார். அப்போது ஜவஹர்லால் நேருவிற்கு டி.கே.சியை அறிமுகப்படுத்தினார் ராஜாஜி. நேருவிடம் 40 நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தார். நேரு டி.கே.சியின் அறிவால், அதன் தெளிவால் கவரப்பட்டு, தன் விருந்தினராக மறுநாளைக்கு மறுநாள் மதிய உணவிற்கு அழைத்தார். டி.கே.சியும் ஒப்புக் கொண்டார். அன்றைய தினம் டி.கே.சி. நேருவின் இல்லத்திற்குச் சென்றார். அனைத்து விருந்தினரும் அமர்ந்து இருந்தனர். இவரும் அவர்களுடன் கலந்து கொண்டார். உணவு பரிமாறப்பட்டவுடன், தான் கொண்டு வந்திருந்த உணவை எடுத்து வைத்தார். நேருவிற்கு மிகவும் எதிர்பாராத ஒன்றாக இருந்தது. 'ஆர் யூ ஆர்தடாக்ஸ்'

(வைதீகமா) எனக் கேட்டார் நேரு. 'நான் இல்லை. என் வயிறுதான் ஆர்த்தடாக்ஸ்' என்று பதிலளித்தவுடன், அனைவரும் சிரித்து விட்டனர்.

1948ஆம் வருடம், வினோபா பாவே சென்னை இந்த பிரசார சபைக்கு வந்திருந்தார். அவருக்கு கல்கி, டி.கே.சியை அறிமுகப்படுத்தினார். இருவரும் மனந்திறந்து உறவாடினார்கள். பாவே ஒருபாடல் சொல்லும்படி டி.கே.சி.யை வேண்டினார்.

இரண்யன் வதை படலத்திலிருந்து ஒரு பாடலை எடுத்து விளக்கம் கொடுத்துப் பாடினார் டி.கே.சி.

"தூணில் இருக்கிறாரா நீ சொல்லும் கடவுள்" என்று இரண்யன் பிரஹலாதனிடம் கிண்டலாகக் கேட்கிறான். அதற்குப் பிரஹலாதன் பக்தியோடு பதில் சொல்கிறான். எப்படிச் சொல்கிறான்? "இந்தத் தூணில் நிறைந்திருப்பது கடவுள்தான். அது மட்டுமா? சாண் அளவு உள்ள சிறிய பொருளிலும் இறைவன் தான் இருக்கிறான். மகா மேரு மலை போன்ற மாபெரும் வஸ்துவிலும் அவனே நிறைந்திருக்கிறான். அணுவிலும் இறைவன்தான். அணுவின் உட்பகுதியாகிய கோண் என்னும் துகளிலும் அவன்தான்.

கடவுள் எங்கிருக்கிறார் என்று ஆணவத்தோடு கேட்கிறாயே, அந்த ஆணவத்துக்குள்ளும் அவன்தான் இருக்கிறான். அவன் இல்லாமல் ஒன்றும் இல்லை. நீயும் அவன்தான். நானும் அவன் தான்."

இப்படிப் பதில் சொல்கிறான் பிரஹலாதன் என்று முதலில் விளக்கம் கொடுத்தார் ரசிகமணி. தொடர்ந்து "சாணினும் உளன்" என்னும் கம்பருடைய பாடலை நிறுத்தி இசையோடு பாடினார்.

பாடலை அனுபவித்துத் திளைத்தார் வினோபா பாவே.

பிறகு சொன்னார்:

"நான் வால்மீகி, துளசிதாசர் போன்ற பலருடைய ராமாயணங்களைப் படித்திருக்கிறேன். துதிப் பாடல்கள் எவ்வளவோ பார்த்திருக்கிறேன். ஆனால் தமிழ்ப் பாடலில் உள்ள மந்திர சக்தி தனி. அது உண்மையின் சந்நிதானத்திற்கே நம்மைக் கொண்டு போய்விடுகிறது."

"கடவுள் இல்லை என்று சொல்கிற சொல்லிலும் கடவுள்தான் இருக்கிறார்" என்று சொல்ல முடிகிறதே! இப்படித் தமிழ் ஒன்றில்தான் சொல்லமுடியும். கம்பர் ஒருவர்தான் இவ்வாறு உண்மைக்குத் தெளிவு கொடுக்க முடியும்.

“கவியின் மர்மங்களை எல்லாம் நன்குணர்ந்து அனுபவித்து நீங்கள் ஆனந்தத்தில் திளைக்கிறீர்கள். அந்த ஆனந்தத்தை மற்றவர்களும் அனுபவிக்க வழங்கி விடுகிறீர்கள். தாங்கள் வெறும் ஞானி அல்ல, “ரஸக் ஞானி” என்று டி.கே.சியைப் பாராட்டினார் விநோபா பாவே.“

“நண்பர்கள் சிலருக்குத் தனிப்பாடல்கள் சிலவற்றைச் சொல்லி விளக்கிக் கொண்டிருந்தார்கள் டி.கே.சி. சாரல் காலம். இரவு எட்டு மணி இருக்கும். குற்றாலத்தில் தூறல் பொசு பொசு என்று தூறிக் கொண்டிருக்கிறது. டி.கே.சி. வீட்டுமுன் ஒரு வேன் வந்து நின்றது. அதிலிருந்து பெரியார் ராமசாமி நாயக்கர் இறங்கி வீட்டினுள் மளமள என்று வந்தார். டி.கே.சி. அவரை வரவேற்று உபசரித்தார்கள்.

தனிப்பாடல்கள் இரண்டை விளக்கிப் பாடிவிட்டு திருக்குறளிலிருந்து இரண்டு பாடல்களுக்கு விளக்கம் கொடுத்துச் சொன்னார்கள். ராமசாமி நாயக்கருக்கு வியப்புத் தாங்கமுடியவில்லை. டி.கே.சியை நோக்கிப் பெரியார் சொன்னார்: “உங்களைப்போல் ஒருவரும் சொல்லமாட்டேன் என்கிறார்களே! நானும் பெரிய பெரிய புலவர்கள் இடம் எல்லாம் குறளைக் கேட்டிருக்கிறேன். ஒருவர்கூட உங்களைப்போல் தெளிவாகச் சொல்லவில்லையே.“

“நீங்கள் குறளைச் சொல்லும்பொழுது அப்படியே அதன் கருத்து விளங்கிவிடுகிறது. அப்படி இருந்தும் ஏன் குறளை ஜனங்கள் அனுபவிக்க முடியாமல் திணறுகிறார்கள்?“

இப்படி மனந்திறந்து கேட்டார் ராமசாமிப் பெரியார்.

உடனே டி.கே.சி. சொன்னார்கள்:

“உங்களுக்கு விளங்குகிறது. நீங்கள் ஒரு லட்சியத்தில் நின்று உழைக்கிறீர்கள். உண்மையோடு உழைக்கிறீர்கள். அதனால் விளங்குகிறது. மற்றவர்கள் அப்படி ‘உழைக்கிறார்களா? உண்மையில் நிற்கிறார்களா? இல்லையே!

“நம்ம பயல்களுக்குக் கம்ப ராமாயணமே விளங்கவில்லையே? பிறகு, குறள் எப்படி விளங்கும்? ராமாயணத்தில் கதை இருக்கிறது. அது எளிதில் விளங்கக்கூடியது. அதுவே புரியவில்லை நம்மவர்க்கு. பிறகு குறள் புரியுமா?“

“குறள் புரியவேண்டுமானால் இதயத்தில் உண்மை இருக்க வேண்டும். அது லட்சிய வடிவம் பெற்று செயல்பட வேண்டும். தங்களிடம் உண்மை இருக்கிறது. லட்சியம் இருக்கிறது. செயல் வேகம் இருக்கிறது.“

"பெரும்பாலானவர்கள் அப்படி இல்லையே! தந்திரம், பித்தலாட்டம், வஞ்சகம் இவைதானே இருக்கின்றன".

அழுத்தம் திருத்தமாக டி.கே.சி சொல்லியதைக் கேட்ட நண்பர்கள் வியந்து போனார்கள். பெரியார் ராமசாமி நாயக்கரும் அசந்து போனார்.

கம்பராமாயணம் என்றால் நாயக்கருக்கு வேப்பங்காய், அதைத் தீயிட்டுக்கொளுத்த வேண்டும் என்று படை திரட்டியவர் நாயக்கர். அவரிடமே நேருக்கு நேராக, "கம்பரே விளங்கவில்லை என்றால் குறள் எப்படி விளங்கும்" என்று கேட்கிறார் டி.கே.சி. யாதொரு களங்கமும் இல்லாமல் கேட்கிறார் டி.கே.சி. அப்படியானால் டி.கே.சியின் மனம் உண்மையை அனுபவிக்கும்பொழுது மிச்சம் சொச்சம் வைக்காமல் அனுபவிக்கும். அது இது என்று லாபநஷ்டம் பார்த்து அனுபவிக்கிற வேலை டி.கே.சியிடம் இல்லை.

டி.கே.சி.யிடம் இப்படி ஒரு உணர்ச்சி, கள்ளம் கபடம் இல்லாத தூய உண்மை உணர்ச்சி இருந்ததனால்தான், டி.கே. சியின் சஷ்டியப்த பூர்த்தி விழா இலஞ்சிக் குமாரர் கோவிலில் நடைபெற்றாலும் அதில் வந்து கலந்து கொண்டார் ராமசாமி நாயக்கர்.

நாயக்கரின் தொண்டர்குழாம் தடுத்துப் பார்ததது. "முருகன் கோவிலில் வைத்து நடைபெறுகிறதே? நாம் ஏன் போக வேண்டும்" என்றெல்லாம் சொல்லிப் பார்த்தது.

"அறுபதாம் கல்யாணம் முதலியாருக்குத் தானப்பா நடக்கிறது. முருகனுக்கா நடக்கிறது" என்று தொண்டர்குழாத்துக்குச் சமாதானம் சொல்லிவிட்டு முருகப் பெருமானுடைய சந்நிதானத்திற்கே வந்துவிட்டார் நாயக்கர் (ரசிக மணி டி.கே.சி சிதம்பரநாத முதலியார் வித். ல.சண்முக சுந்தரம் சாகித்திய அகாடமி வெளியீடு முதற்பதிப்பு 1987 பக்கங்கள் 139,142)

# மேல்நாட்டவர்கள்

நண்பர்களே! நம் நாட்டவர் மட்டுமல்ல! இரசிகமணியின்பால் நம் தமிழ் நாடு கடந்த பல சான்றோர்கள் ஈடுபாடு கொண்டிருந்தார்கள்.

டி.கே.சியும், கல்கியும், சதாசிவ தம்பதிகளும் பம்பாய்க்குப் போயிருந்தார்கள். அப்போது சோபியா வாடியா (Madam Sophia Wadia) என்ற இலக்கிய மேதை டி.கே.சியை தன் வீட்டிற்கு அழைத்து, விருந்தளித்து உபசரித்தார். அவர் பிரஞ்சு தேசத்தைச் சேர்ந்தவர். பன்மொழிப் புலமையுள்ளவர். இலக்கியத்திலும், கவிதையிலும் மிகுந்த பயிற்சியுடையவர். இந்திய எழுத்தாளர் சங்கத்தின் தலைவர். ஆனால் அவருக்குத் தமிழ் தெரியாது.

திருவாசகத்திலிருந்து
"அப்பார் சடையப்பன் ஆனந்த வார் கழலே
ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார் உள்ளிருக்கும்
அப்பாலுக் கப்பாலைப் பாடுதுங் காண் அம்மானாய்"

என்னும் இப்பாடலுக்கு ஆங்கிலத்தில் விளக்கம் கூறி: பாடலைப் பாடிக் காட்டினார் பாட்டு முடிந்ததும், மீண்டும் ஒருமுறை பாடிக்காட்ட முடியுமா? பாட்டின் ஒலி இன்பம் மட்டுமே கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார் வாடியா. டி.கே.சிக்கோ உற்சாகம் கரைபுரண்டு ஓடிவிட்டது மீண்டும் ஒருமுறை பாடினார்கள்.

பாடி முடித்ததும் வாடியா "தமிழ்பாஷையிலே ஒரு அபூர்வமான மந்திர சக்தியிருக்கிறது. பாட்டின் ஒலியைக் கேட்கும் போது எனக்கு ஒரு ஆனந்த மயக்கம் ஏற்படுகிறது" என்று சொன்னார். இது டி.கே.சியின் கொள்கையின் அடிப்படைக்கு ஆதரவாக இருக்கின்றது. தமிழ்க்கவிதையில் ஓர் அபூர்வமான தாளலயம் (ரிதம்) இருக்கிறது. கிரேக்க பாஷையில் கூட இல்லாத நளினமும் துல்லியமும் தமிழ் மொழியில் இருக்கிறது. என்று ஆங்கிலப்

புலவர் வின்ஸ்லோ சொன்னாரே அதை அடிக்கடி டி.கே.சி சொல்லி வந்தார்கள். சோபிய வாடியாவின் வாக்கு இந்தக் கொள்கையை மெய்யாக்குகிறது.

1933ஆம் ஆண்டு, சென்னையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டத்திற்கு தலைமை தாங்கியவர் டி.கே.சி பேசியவரோ பிரம்மஞான சபையின் தலைவர் டாக்டர் அருண்டேல் இவர் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்தவர். இவர் மனைவியோ தமிழர், ருக்மணிதேவி. டி.கே.சியின் முடிவுரையைக் கேட்டபின் அருண்டேல் தமிழ் தெரியாது ஆனாலும் அவர் அதை அனுபவித்து ரசிக்கிறார். தன் மனைவி ருக்மணிதேவியிடம், டி.கே.சி என்றொரு மனிதனைச் சந்தித்தேன். இந்தியப் பண்பாட்டைப் பார்க்க வேண்டுமெனில் அவரைப் பார்த்தால் போதும்' என்று கூறியிருக்கிறார். பின் அருண்டேல் தம்பதியினர் டி.கே.சியுடன் நெருங்கிய உறவு கொள்ளத் தொடங்கி விட்டனர்.

சில ஆண்டுகளுக்குப் பின், குற்றாலத்தில் சாரல் காலத்தில் திருவாங்கூர் மாளிகையின் முற்றத்தில் ஒரு மரத்தடியில் நாட்கணக்கில் குற்றாலக் குறவஞ்சியைப் பற்றிக் கேட்டனர். பாடம் முடிந்ததும் ஒரு படைப்பிற்கே இது அடிகோலி விட்டது. நடன நாடகமாக உருவெடுத்து, தமிழ்ப்பண்பாட்டுக்குரல் அமெரிக்காவில் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. ருக்மணிதேவி தமிழர். எனவே ஆர்வம் இயல்பு. ஆனால் ஆஸ்திரேலிய நாட்டு அருண்டேல் இந்த பத்து நாட்களும் அப்படி அனுபவித்தார் குறவஞ்சியை! எப்படி என்று கேட்கிறார்களா நண்பர்களே!

"தமிழ்மொழி எனக்குத் தெரியாதுதான்! அதனால் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நீங்கள் தமிழ்ப்பாடல்களைப் பாடும்போது உங்களுடைய இதயம் என்னுடைய இதயத்தோடு ஒட்டி எனக்குப் பொருளை விளக்கி விடுகிறது. உங்கள் குரல் மூலமும், முகப்பொலிவின் மூலமும் கவிதையின் உட்பொருளை நான் கண்டு கொண்டேன்" என்று சொன்னார் டாக்டர் அருண்டேல். (ரஸஞ்ஞானி டி.கே.சி., எஸ் மகராஜன், வானதி பதிப்பகம், முதற்பதிப்பு மே 1990) பக்கம் 31.

சோபியா வாடியாவும் அருண்டேலும் நம் தமிழ் தெரியாத அன்னியர்கள். ஆனாலும் டி.கே.சியின் இதயஒலி அவர்களுடைய இதயத்தில் தவழ்ந்து கரைந்து விட்டது. தமிழ் தெரிந்த நம்முடைய தோற்செவிக்குள் அந்த ஒலி ஒரு மாற்றமும் நிகழ்த்த செய்ய முடியவில்லை. இதை என்னென்பது நண்பர்களே! நம் தமிழர் நிலை இது.

# டி.கே.சி ஆனந்த அலைகளில்

- கல்கி
- ஜஸ்டிஸ் மகாராஜன்
- வித்வான். ல. சண்முகசுந்தரம்
- டி.டி திருமலை
- கற்றுச் சொல்லி எஸ்.வி.எஸ்
- ராஜபாளைய ராஜாசகோதரர்கள்
- கு. அழகிரிசாமி
- கி. ராஜநாராயணன்
- வல்லிக்கண்ணன்
- தி.க.சி
- ம.பொ.சி
- கி. ரா திருமலையப்பன்

## கல்கி

கல்கி ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தி திருச்செங்கோடு ஆசிரமத்தில் பணிபுரிந்து கொண்டிருக்கும் பொழுது, 'ஏட்டிக்குப் போட்டி' 'சாரதையின் தந்திரம்' என இரு கதைகள் எழுதினார். இவற்றை டி.கே.சி. படித்தார். அவைகளில் தமிழ் வார்த்தைகள் உணர்ச்சியாய், தெளிவாய் அருவி நீர் போல் துள்ளி ஓடி ஆடுவதைப் பார்த்தார். 'தமிழில் இப்படியும் ஒருவன் எழுதுகிறாரே' என்று வியந்தேபோனார். உடனே இவ்வியப்பை டாக்டர் உ.வே. சாமிநாதய்யரிடம் பகிர்ந்து கொண்டார். சில வருடங்கழித்து கிருஷ்ணமூர்த்தி சென்னை வந்தார். தன்னைப் பார்க்காமலே பார்ப்போரிடமெல்லாம் தன்னைப் பாராட்டும் டி.கே.சியை வந்து பார்த்தார். அவர் உடனே டாக்டர் உ.வே. சாமிநாதய்யரிடம் கல்கியை அழைத்துச் சென்றார். "தமிழில் ஒருவர்தான் எழுதிக் கொண்டிருக்கிறார் என்று சொல்வேனே அந்த ஆசாமி இவர்தான்" என்று அறிமுகப்படுத்தினார். டாக்டர் ஐயரவர்கள் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து அதிசயப்பட்டுத்தான் போனார். 'எவ்வளவு உயர்வாக எழுதுகிறார். அவ்வளவு குள்ளமாக இருக்கிறார். இவர் ஒரு அகத்தியர்தான்' என்று டி.கே.சியிடம் சொல்லி மகிழ்ந்தார்.

அன்றுமுதல் டி.கே.சிக்கும் கல்கிக்கும் உள்ள உறவு வளர்பிறையாய் வளர்ந்து, வாழ்நாள் முழுவதும் சிறந்து தழைத்தோங்கியது. அவ்வளவும் அன்பு செய்த காரியம்.

இரு குடும்பங்களும் அன்பால் கலந்தன. கல்கி தனக்குரிய கடமையாய், டி.கே.சியின் பேரன் பேத்திகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ராமானுஜச்சாரியர் என்னும் ஆசிரியரை சென்னையிலிருந்து வரவழைத்துப் பாடம் கற்க ஏற்பாடு செய்தார்.

கல்கிதம் மருமகன் கோபாலனை ஆங்கிலம் கற்க டி.கே.சியிடம் அனுப்பினார். குற்றாலத்தில் கல்கி குடும்பம் டி.கே.சி. வீட்டிலும், சென்னைக்கு டி.கே.சி. குடும்பம் சென்றால் கல்கி வீட்டிலும் தங்கி தங்கள் உறவை வளர்த்துக் கொண்டனர். தமிழிசை இயக்கத்திற்கு கல்கி அப்போது டி.கே.சிக்கு உறுதுணையாக இருந்தது. கம்பராமாயணம் கல்கியில் 'கம்பர் தரும் காட்சி' என கட்டுரைகளாக பத்து ஆண்டுகள் வந்தன. தமிழ் மக்கள் அனைவரும் படித்துப்படித்து இன்புற்றனர். பின் நூலாக வெளிவந்தது. கல்கி டி.கே.சி ஆகியோரின் நட்பு அக்காலத்தில் வரலாறாகப் பாராட்டப்பட்ட நட்பு ஆகும்.

ஸ்ரீ டி.கே.சிதம்பரநாத முதலியாரைப் பற்றிக் கேள்விப்பட்டேன். திரு.பி. ஸ்ரீ ஆச்சார்யாதான் முதன் முதலில் அவரைப் பற்றிச் சொன்னார். டி.கே.சி. சிறந்த கவிதா ரஸிகர் என்றும், தமது வாழ்நாளையே கம்பராமாயண ஆராய்ச்சிக்கு அர்ப்பணம் செய்தவர் என்றும் தெரிந்தது. அவரைப் பார்க்க வேண்டுமென்ற மனோரதம் சீக்கிரத்திலேயே நிறைவேறியது. முதல்நாள் சந்திப்பில் டி.கே.சி. ஒரு கம்பன் பாட்டைச் சொன்னார். அசோகவனத்தில் சீதை ராமனை நினைந்து உருகும் கட்டந்தான்.

**"ஆழநீர்க் கங்கை அம்பி கடாவிய**
**ஏழை வேடனுக்கு, 'எம்பிநின் தம்பி, யான்**
**தோழன், மங்கை கொழுந்தி" எனச்சொன்ன**
**வாழிநண்பினை உன்னி மயங்குவாள்."**
**(அம்பி கடாவிய தோணி செலுத்திய)**

டி.கே.சி. இந்தப் பாட்டைப் பூர்வ பீடிகையுடன், ஒவ்வொரு வரியையும் ஒரு தடவைக்குப் பல தடவையாக நிதானமாகவும் மனதில் நன்கு பதியும்படியும் சொன்னார்.

அவர் சொல்லி முடித்ததும், "இந்தப் பாட்டில் ஏதாவது மாறுதல் செய்திருக்கிறதோ?" என்று கேட்டேன்.

டி.கே.சி. புன்னகையுடன், "எப்படித் தெரிந்தது?" என்று கேட்டார்.

"இந்தப் பாட்டை முன்னமே நான் படித்திருக்கிறேன். ஓரிடத்தில் ரொம்பத் தடங்கலாயிருந்து, நீங்கள் சொல்லும்போது அந்தத் தடங்கலைக் காணோம்" என்றேன்.

"ஆமாம்; ஒரு சிறு மாறுதல் செய்திருக்கிறது" என்று டி.கே.சி. சொல்லி அவருடைய புத்தகத்தை எடுத்துக் கொடுத்தார்.

"ஏழை வேடனுக்கு எம்பி நின் தம்பி நீ" என்று புத்தகத்தில் அச்சிடப்பட்டிருந்தது. இதில் 'நீ என்பதை "யான்" என்று அடித்து எழுதியிருந்தது.

இந்தச் சிறுவார்த்தை மாறுதலினால் விஷயம் எவ்வளவோ தெளிவாகி விட்டது. இதன்மேல் நான் சற்றுத் தைரியமடைந்து, "கடறாவு படல"த்தைப் பற்றிய என்னுடைய அநுபவத்தைச் சொன்னேன்.

"கடறாவு படலத்தில் நீங்கள் கஷ்டப்பட்டதில் ஆச்சரியமில்லை" என்றார் டி.கே.சி.

"ஏன்"? என்று கேட்டேன்.

"அது கம்பன் பாட்டல்ல" என்று அழுத்தமாய்க் கூறினார். அதை அவர் சொன்ன தோரணையில், யாராவது அதைக் கம்பன் பாட்டுத்தான் என்று சொல்ல முன்வந்தால் அவர்களை ஒரு கை பார்த்துவிட அவர் தயாராயிருக்கிறார் என்பது தெரிய வந்தது.

ஆனால் நான் அப்படியொன்றும் அவருடன் சண்டை பிடிக்கத் தயாராயில்லை. உண்மையில், "கடறாவு படலம் கம்பன் பாட்டு அல்ல" என்று சொன்னதும், என் தலையில் சுமந்திருந்த மூட்டைகளில் ஒரு பெரிய மூட்டை கீழே இறங்கியதாகத் தோன்றியது.

அன்றைக்குப் பிறகு நானே கம்பராமாயணம் வாசிப்பது என்பதை அநேகமாக விட்டுவிட்டேன். சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் டி.கே.சி.யைச் சந்தித்து அவரிடம் ராமாயணப் பாடல்களைக் கேட்பதுடன் திருப்பதியடைந்தேன். இதனால் நான் அடைந்த நன்மைகளைச் சொல்லி சாத்தியமில்லை. கம்பன் பாட்டல்லாத பாடல்களை வைத்துக் கொண்டு, அவற்றுக்கு அர்த்தம் செய்வதிலும், அவற்றில் ஏதாவது வெளிக்குத் தெரியாத அழகு மறைந்து கிடக்கிறதோ என்று யோசிப்பதாலும், மண்டையை உடைத்துக் கொள்ளும் அவசியம் இல்லாமல் போயிற்று.

இது மட்டுமல்ல டி.கே.சி. கம்பன் பாடல்களை & ஏன், எல்லா கவிதைகளையுந்தான் & படித்துக் காட்டும் விதமே ஒரு தனி மாதிரி. அவரிடம் கேட்ட பிறகுதான், பாடல்களை எப்படிப் படிக்க வேண்டுமென்று தெரிந்தது. அம்மாதிரி படித்தால்தான் கவிதைகளின் ஓசை இன்பத்தைப் பூரணமாய் அநுபவிக்க முடியும் என்றும் கண்டேன்.

இன்னும் உண்மையான கம்பன் பாட்டுக்களிலும் எங்கேயாவது ஒரு இடத்தில் அழகுக் குறைவோ, பொருள் . சிதைவோ

இருப்பதுண்டு. ஒரு சிறு திருத்தம் செய்துவிட்டால் அதன் அழகு பரிபூரணமாகிவிடும். அப்படிப்பட்ட திருத்தங்களை எல்லாருமே செய்ய முடியாது. வாழ்நாளெல்லாம் கவிதை ஆராய்ச்சியில் & முக்கியமாகக் கம்பன் ஆராய்ச்சியில் & செலவிட்ட ஒருவர் தான் அம்மாதிரி திருத்தங்களைச் செய்ய முடியும்.

அத்தகைய தகுதியை நான் அறிந்தவர்களுக்குள்ளே டி.கே.சி. ஒருவரிடந்தான் கண்டேன். கம்பன் பாட்டில் டி.கே.சி. ஒரு திருத்தம் செய்தாரானால், பாட்டின் அழகையும், பொருள் வளத்தையும் அது நிச்சயம் மிகுதிப்படுத்துவதாகவே இருக்கும். "கம்பன் இப்படித்தான் பாடியிருக்க வேண்டும்" என்று தைரியமாகச் சொல்லும்படி இருக்கும். டி.கே.சி. ஊகத்தினால் செய்த சில திருத்தங்களுக்கு பின்னால் கிடைத்த ஓலைச் சுவடிகளில் ஆதாரம் கிடைத்திருக்கின்றன என்றும் நண்பர்களின் மூலம் தெரிய வந்தது.

நாளாக ஆக டி.கே.சி.யின் கவிதைப் பண்பில் எனக்கேற்பட்ட நம்பிக்கையும் மதிப்பும் வளர்ந்து கொண்டே வந்தன. உண்மையான கவிதையின் உருவத்தையும் ஆத்மாவையும் நன்குணர்ந்து, அவற்றை பிறருக்கும் புலப்படும்படி காட்டக்கூடியவர் தமிழ் நாட்டிற்குள் டி.கே.சி.யைப் போல் வேறு யாருமில்லை என்று கருதத் தொடங்கினேன். டி.கே.சி.யுடன் சில காலம் பழகிய பிறகு நமது தலைவர் ராஜாஜியும் அதே அபிப்பிராயத்துக்கு வந்தார்கள். பிறகு, கேட்க வேண்டுமா? டி.கே.சி.யினால் தள்ளப்பட்ட ஒரு பாட்டைக் கம்பனே நேரில் வந்து "இதை நான்தான் எழுதினேன்" என்று சொன்னாலும், என்னால் ஒப்புக் கொள்ள முடியாது & அவ்வளவு நம்பிக்கை டி.கே.சி.யின் கவிதை உணர்ச்சியில் ஏற்பட்டது.

சென்றவருஷ ஆரம்பத்தில் நான் சிறை செல்ல ஆயத்தமானபோது டி.கே.சி.யிடம், "சிறையில் நான் எத்தனை காலம் கழிக்கும்படி இருக்குமோ, தெரியாது. அத்தனை காலமும் கம்பனை விட்டுப் பிரிந்திருக்க முடியுமா? ஒன்று, நீங்களும் சிறைக்கு வாருங்கள்; இல்லாவிட்டால், கம்பராமாயணம் ஏதாவது ஒரு காண்டம் திருத்திக் கொடுங்கள்" என்றேன்.

"ஏற்கெனவே உங்களுக்காக அயோத்யா காண்டம் திருத்தி வைத்திருக்கிறேன்" என்று சொல்லி, டி.கே.சி. எடுத்துக் கொடுத்தார்.

அந்தக் காண்டத்தில் கிட்டத்தட்ட பாதிப் பாட்டுகளுக்கு இம்மாதிரி கழித்தல் குறி போட்டிருந்தார்! கம்பன் பாட்டு

அல்ல என்பதற்கு அது அடையாளம். மற்றப் பாடல்களில் சிற்சில வார்த்தைத் திருத்தங்கள் செய்திருந்தார்.

சிறையில் சாவகாசமாக இந்தத் திருத்தங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்ய முடிந்தது. திருந்திய பாட்டுக்கும் அச்சிட்டபடி உள்ள பாட்டுக்கும் சில சமயம் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருந்தது. இத்தனைக்கும் ஒரு வார்த்தைதான் திருத்தப்பட்டிருக்கும்.

டி.கே.சி. திருத்திக் கொடுத்த அயோத்யா காண்டத்தைச் சிறையில் நான் படித்ததோடு, சில நண்பர்களுக்கும் படித்துக் காட்டினேன். இராமர் வனம் செல்கிறார் என்ற செய்தியைக் கேட்டு அயோத்தி ஜனங்கள் துயருறும் கட்டம். "மண் செய்த பாவம் இது!" என்கிறார்கள் சிலர். நமது "கண் செய்த பாவம் கடலிற் பெரிது!" என்கிறார்கள் சிலர். "ஆளான் பரதன் அரசு" என்பவர்கள் வேறுசிலர். "கையால் லிந் தடவிக் கண்ணீர் மெழுகுவார்" என்னும் சிலர் இம்மாதிரி அருமையான உணர்ச்சி ததும்பும் பாட்டுக்களை வாசித்துக் கொண்டு வந்து, பின்வரும் பாட்டையும் படித்தேன்:

"கிள்ளையொடு பூவை யழுத கிளர் மாடத்து
உள்ளுறையும் பூசையழுத உருவறியாப்
பிள்ளை அழுத பெரியோரை என்சொல்ல
வள்ளல் வனம்புகுவான் என்றுரைத்த மாற்றத்தால்"

இதைப் படித்தவுடனே, "இதென்ன மட்டமாயிருக்கிறதே!" என்று கேட்டுக் கொண்டிருந்தவர்கள் அவ்வளவு பேரும் சொன்னார்கள்! இந்தப் பாட்டுக்கு டி.கே.சி. கழித்தல் குறி போட்டிருந்தார். ஆனால் வேறு சில கம்பராமாயண ரசிகர்கள் இதைப் பிரமாதமாய்ச் சொல்வது வழக்கமாதலால், வேண்டுமென்றே அதை நான் படித்தேன். அதுவரையில் நல்ல கவிதைகளையே கேட்டுக்கொண்டு வந்தவர்களாதலால் உடனே "மட்டம்" என்று சொல்லி விட்டார்கள்! டி.கே.சி.யின் கழித்தல் குறியை அவர்களுக்குக் காட்டி மிகவும் திருப்தியடைந்தேன்.

சிறையிலிருந்து வெளியில் வந்து டி.கே.சி.யைப் பார்த்தும் "கம்பராமாயணத்திலிருந்து கம்பன் பாட்டுக்களைப் பொறுக்கி உடனே புத்தகம் போட்டுவிட வேண்டும். இந்தக் காரியத்தை நீங்கள் செய்யாவிட்டால் தமிழர்களுக்குப் பெரிய துரோகம் செய்ததாகும்" என்று சொன்னேன். இன்னும் பல நண்பர்களும்

வற்புறுத்தினார்கள். தமிழர்களுக்கு நல்லகாலம் பிறந்தது. டி.கே.சி. முனைந்து வேலை செய்யத்தொடங்கினார். மலாய் நாட்டிலிருந்து தக்க சமயத்தில் சில செட்டியார் இளைஞர்கள் தாய்நாட்டுக்கு வந்தார்கள். "புதுமைப் பதிப்பகத்"தை ஏற்றுக் கொண்டார்கள். "கம்பராமாயணம்" பாலகாண்டம் & அயோத்யா காண்டம் இதோ வெளிவந்து விட்டது. பாலகாண்டத்தில் 169 பாட்டுக்கள்; அயோத்தியா காண்டத்தில் 553 பாட்டுக்கள். அந்த இரண்டு காண்டத்திலும் உள்ள உண்மையான கம்பன் பாட்டுக்கள் இவை. டி.கே.சி. தள்ளிவிட்ட பாடல்களைப் பற்றி ஏதாவது சந்தேகம் இருந்தால் இலக்கிய ஆராய்ச்சியாளர் மற்றப் பதிப்புகளைப் பார்த்துக் கொள்ளலாம். உங்களுக்கும் எனக்கும் இந்த 722 பாட்டுகள் எதேஷ்டம். இவற்றை நன்கு படித்து அநுபவிப்பதற்கு வேண்டிய உதவிகள் எல்லாம் இப்புத்தகத்தில் இருக்கின்றன. கவிதையையும் கம்பனையும் பற்றி 45 பக்கம் கொண்ட விஸ்தாரமான டி.கே.சி.யின் முகவுரை இருக்கிறது. ஒவ்வொரு பாட்டுக்கும் முன்னுரையும் பொருள் விளக்கமும் இருக்கின்றன. "சீரும் சந்தமும்" என்ற முதல் அநுபந்தத்தில், பாட்டை எவ்விதம் படிக்க வேண்டும் என்று தெளிவாகக் கூறப்படுகிறது. இரண்டாவது அநுபந்தத்தில் டி.கே.சி.யின் திருத்தங்கள் எல்லாவற்றுக்கும் ஜாபிதா இருக்கிறது. அவற்றை வேறு கம்பராமாயணப் பதிப்புகளுடன் ஒப்பிட்டுத் திருத்தங்களின் அவசியத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

மொத்தம் 634 பக்கம்; அநேக வர்ணப் படங்கள்; எல்லா விதத்திலும் உயர்ந்த பதிப்பு. மேலட்டையின் அழகையே பார்த்துக் கொண்டிருக்கலாம். தலைமுறை தலைமுறையாக அழியாத் தமிழ்ச் செல்வமாய் வைத்துக் காக்க வேண்டிய புத்தகம். விலை ஆறு ரூபாய் போட்டிருக்கிறது. பணம் உள்ளவர்கள் ஆறு பவுன் கொடுத்தும் வாங்கலாம்.

"1942ம் வருஷத்திய கல்கி தீபாவளி மலரில், "மாலைப் பொழுதினிலே" என்ற ஒரு பாடல் வெளியாகியிருந்தது.

பாடல் ரொம்பவும் நன்றாக இருந்தது. ஆனால் பாடல் எழுதியவர் பெயர் போடவில்லை. தீபாவளி மலர் தயாரிக்க வேண்டிய அவசரத்தில் பெயர் விடுபட்டுப் போய் விட்டதோ என்று டி.கே.சி. எண்ணினார்கள்! பாட்டு அமைப்பு எல்லாம் பார்க்கையில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளைதான் எழுதியிருப்பாரோ என்ற சந்தேகம் கொண்டு டி.கே.சி எழுதிக் கேட்டதில் அவர் தாம் எழுதவில்லை என்று சொல்லிவிட்டார்.

பிறகு குட்டு வெளிப்பட்டது! அப்பாடலை எழுதியவர் கல்கியேதான் என்று!

பத்திரிகையின் ஆசிரியராக இருந்தும், தாம் எழுதுவதெல்லாம் பிரசுரிக்க உரிமையிருந்தும், டி.கே.சி. தாம் எழுதுவதை எல்லாம் பாராட்டுவதை அறிந்தும், கவிதை என்று வந்த போது டி.கே.சி. பாராட்டாமல் இருந்து விட்டால், டி.கே.சி.யின் மதிப்பீட்டில் இது கவிதையே அல்ல என்று ஆகிவிட்டால்.... இப்படியெல்லாம் பயந்து தான் கல்கி அப்பாடலுக்குத் தம் பெயரைப் போடவில்லை!

இப்படி டி.கே.சி.யின் கவிதை உரைகல் சாதாரண கல் அல்ல. அதில் தேறி வருவது என்பது கஷ்டம். அதிலும் கல்கி தேறிவிட்டார்.

ஒரு தடவை ராஜாஜி குடும்பத்தாரும், கல்கி குடும்பத்தாரும் சுமார் இருபது நாட்கள் டி.கே.சி. இல்லத்தில் தங்குவது என்று வந்திருந்தார்கள்.

அப்போது திரு எஸ்.என். சோமயாஜுலுவும் குற்றாலத்தில் தங்கியிருந்தார். சிறையிலிருந்து கடும் நோய் வாய்ப்பட்டு, விடுதலை ஆகிக் குற்றாலத்தில் தங்கியிருந்தார். பி.சி. சுப்பராஜா என்ற நண்பரும் அப்போது தென்காசியிலிருந்தார். இவர்கள் எல்லாம் கல்கி, ராஜாஜியிடம் பெரிதும் ஈடுபட்டுக் கொண்டவர்கள், கல்கிக்கு ஒரு . பாராட்டு விருந்து நடத்த வேண்டும் என்று ஏற்பாடு செய்தார்கள்.

அந்தப் பாராட்டு விருந்து டி.கே.சி. வீட்டில் நடந்தது.

விருந்துச் சாப்பாடு அன்று வெளியிலிருந்து வந்தது.

முப்பது நாற்பது பேர் விசேஷ அழைப்பின் மீது வந்திருந்தனர்.

பாராட்டுரைகளுக்குப் பிறகு பதில் அளிக்கும் வகையில் கல்கி பேசிய உரை 38 ஆண்டுகளுக்குப் பிறகு, இன்னும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

"என் வாழ்க்கையில் நான் பெற்ற பெரும் பேறு இரண்டு பெரியோர்களை என் நண்பர்களாகப் பெற்றதுதான். ஒருவர் நான் எழுதும் எழுத்தில் உள்ள குற்றங் குறைகளையே சுட்டிக் காட்டுவார். மற்றவர் அக்குறைகளை விட்டு விட்டு, குணங்களையே பாராட்டிப் பேசுவார். முதல்வர் ராஜாஜி, பின்னவர் டி.கே.சி. இவ்விருவர்களின் நட்பை எனக் களித்த ஆண்டவனுக்கு நன்றி செலுத்துகிறேன்." நான் கண்ட டி.கே.சி ஆசிரியர் எஸ்.வி.எஸ் ரசிகமணி டி.கே.சி நூற்றாண்டுமலர் 1981 உலக இதய ஒலி பக்கம் 131,132)

ஒருநாள் இரவு கல்கிக்கு கடுஞ்சுரம். இரவெல்லாம் தூக்கமில்லாது தவிக்கிறார். ஆனால் காலையில் சீக்கிரமாக எழுந்து யாரையோ வரவேற்கத் தயாராகி விட்டார். அப்போது டாக்டர் வருகிறார். கல்கியின் சுறுசுறுப்பைப் பார்த்துவிட்டு டாக்டர் தயங்கி நிற்கிறார். அவர் இறங்கியதையடுத்து ஒரு கார் வருகிறது. டி.கே.சி. அவர்கள் இறங்குகிறார். உடனே கல்கி, "டாக்டர், இனி எனக்கு உடம்பு ஒன்றும் கஷ்டப்படுத்தாது. சுரமும் இறங்கி விடும்" என்று கூற, டாக்டர் அவரைச் சோதிக்காதே திரும்பி விடுகிறார். ரஸிகமணி அவர்கள் வந்துவிட்டால் கல்கிக்கு அவ்வளவு உற்சாகம்.

எத்தனையோ டாக்டர்களாலும், மருந்துகளாலும் போக்க முடியாத கல்கி அவர்களின் பயங்கர நோய்க்கூட ரஸிகமணியின் அன்பினால் அவரிடமிருந்து ஓடிவிட்டதாக பகிரதன் அவர்கள் கூறுகிறார். மேலும் கல்கி அவர்களின் வாழ்க்கையின் ஊன்றுகோலாக ரஸிகமணி என்று கூறுகிறார்.

ஒருநாள் மாலை. கல்கியின் மனத்தில் ஏதோ போராட்டம். தாம் மேற்கொ ண்ட பணியை நல்லமுறையில் நிறைவேற்ற வேண்டுமே என்ற தாபம். அதற்குத் தாம் வணங்கும் தலைவர் பிடி கொடுக்கவில்லையே என்ற கவலை.

"முதலியார்வாள் நீங்கள்தான் ராஜாஜிக்குச் சொல்லவேண்டும். நான் சொன்னால் கேட்கமாட்டேன் என்கிறார்கள்" என்கிறார் கல்கி.

"அவர்கள் சொல்வதும் சரிதானே! இந்தப் பெரிய பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொண்டு சிரமப்படுவதில் அவர்களுக்கு இஷ்டம் இல்லை. உங்கள் நன்மையை உத்தேசித்துத்தானே அவர்கள் சொல்கிறார்கள்" என்கிறார் ரஸிகமணி.

"பாரதியாருக்கு ஒரு ஞாபகார்த்தம் செய்ய வேண்டியது அவசியம் அல்லவா? ராஜாஜி இதற்கு ஆதரவு கொடுத்தால்தானே ஜனங்கள் உற்சாகமாக நிதிஉதவி அளிப்பார்கள். ராஜாஜியும் இந்தக் காரியத்தில் ஈடுபட்டால்தான் எனக்கும் உற்சாகமாக இருக்கும். எப்படியோ எனக்கும் உற்சாகமாக இருக்கும். எப்படியோ நீங்கள்தான் ராஜாஜிக்குச் சொல்லி அவர்களை சம்மதிக்கச் சொல்ல வேண்டும்."

இப்படி ரசிகமணியும் கல்கியும் பேசிக் கொண்டிருக்கும்போதே ராஜாஜியின் கார் வருகிறது. ராஜாஜி மிகுந்த உற்சாகத்துடன் ரஸிகமணியைப் பார்த்துக் கைகூப்பி வணங்கிக் கொண்டு வருகிறார்.

வந்தவுடனே பேச்சு பாரதியார் ஞாபகார்த்த மண்டபத்தைப் பற்றித் தொடங்குகிறது. ரஸிகமணி ராஜாஜியைப் பாரதியார் ஞாபகார்த்த மண்டபப் பணியில் கல்கியின் முயற்சிக்கு ஊக்கமளிக்கும்படி வற்புறுத்துகிறார். அடுத்த கணம் ராஜாஜி ஒத்துக் கொள்கிறார்.

ராஜாஜி ஒத்துக் கொண்டதும் கல்கி அவர்களின் முகத்தில் மலர்ச்சி பொங்குகிறது.

கல்கியின் காரியங்கள் பலவற்றுக்கு இவ்வாறு ரசிகமணி உதவியிருக்கிறார்.

கல்கி அவர்கள் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்துவந்த சினேக தர்மத்தைப் பற்றி இங்கே கொஞ்சம் நினைவூட்டிக் கொண்டால் பொருத்தமாக இருக்கும்.

ரஸிகமணி டி.கே.சி. ஒருபோதும் காங்கிரஸ்வாதியாக இருந்ததில்லை. நல்ல ஜஸ்டிஸ் கட்சிக்காரர். ஆயினும் தமிழானது அவர்கள் இருவரையும் நண்பர்களாகிவிட்டது.

ரஸிகமணி அவர்கள் அமரத்வம் அடைந்த செய்த கேட்ட பின்னர் கல்கியின் வாழ்க்கையில் பெரிய மாறுதல் ஏற்படத் தொடங்கிற்று. எதிலும் அவருக்கு ஒருமாதிரி சலிப்பு ஏற்பட்டது. இனம் விளங்காத துறவு மனப்பான்மையிலேயே காலம் கடத்தி வந்தார்.

ரஸிகமணி மறைந்த ஒரு ஆண்டுக்குள் கல்கியும் மறைந்துவிட்டார். டி.கே.சி. இல்லாத தமிழ்நாட்டில் வாழ்வதற்குப் பிடிக்கவில்லையோ! அதனால்தான் ரஸிகமணி வாழும் உலகை நாடிச் சென்றுவிட்டாரோ!" என் நினைவில் ரசிகமணி பகிரதன் - உலக இதயஒலி ரசிகமணி நூற்றாண்டுமலர் பக்கம் 119)

# ஜஸ்டிஸ் மகராஜன்

அன்று, சென்னைக்கு, தென்காசியிலிருந்து ரயில் புறப்பட்டது. அந்த ரயிலைப் பிடிக்க, ஸ்ரீவில்லிபுதூரில் கோர்ட்டிலிருந்து ஒற்றை மாட்டு வண்டி கிளம்பியது. ஸ்ரீவில்லிபுதூர், ரயிலடிக்கு சென்னை ரயில் வந்து நின்று விட்டது. ஒற்றை மாட்டு வண்டியும் ரயிலடியில் வந்து நின்றது. வண்டியிலிருந்து வக்கீல் கோட்டும், டையுமாக ஓடி ஓடி வருகிறார். சரியான பெட்டியில் நிற்கிறார். ஆ! பார்க்க வந்தவரைப் பார்த்தாகி விட்டது. ஆயிரம் கேள்விகள் கேட்க வேண்டியிருக்கிறது. அவ்வளவு தேடல் அந்தப் பார்வையில். உள்ளேயிருப்பவருக்கும் பல்லாயிர விஷயங்கள் பகிர்ந்து கொள்ள இருக்கிறது. கேட்கத் தொடங்குவதற்கு முன் வாய்க்குருவியை (Whistle) ஊதிவிட்டார்கள். ரயில் இருவரையும் ஏமாற்றி விளையாடி விட்டது. பார்க்க வந்தவர் ஜஸ்டிஸ் மகராஜன். பார்க்க விரும்பியர் ரசிகமணி டி.கே.சி. இருவரும் தேடலின் தாபத்தில், பிரிந்தவரின் தவிப்பில் இருந்தனர். இந்த தாபமும் தவிப்பும் இருபது வருடங்கள் கலந்து இருந்தன. முழுமையாய் தவிப்பும் அறிவதற்குள், தேடல் முற்றுப் பெறாது நின்று விட்டது. உலக ஓட்டி சங்கை இம்முறை ரசிகமணிக்கு ஊதிவிட்டான். ஆனால் இன்று இருவருமே இவ்வுலகில் இல்லை. அவர்கள் பரப்பிய மணம் உலகில் மணந்து கொண்டுதான் இருக்கின்றது.

1924ல், பாளையங்கோட்டை அர்ச். சவேரியார் கல்லூரியில் டி.கே.சி கம்பரைப் பற்றிப் பேசியதை திரு. மகராஜன் கேட்டிருக்கிறார்கள். கம்பனைப் பற்றிப் பேசவில்லை. கம்பரையே பேச வைத்துவிட்டார்கள். கம்பனுடைய இதயத்தைத் திறந்து காட்டினார்கள். உண்மையும் உண்மையோடொட்டிய உணர்வும் நிறைந்த பேச்சு அது. எந்தவிதமான பேச்சைக் கேட்க வேண்டுமென அவர்மனம் விரும்பியதோ, அவ்விதப் பேச்சைக் கேட்டதாகவும் சொல்கிறார் மகராஜன் அவர்கள். மேலும்,

சொல் மூலம் ஒரு புதிய மறக்க முடியாத அனுபவத்தையே டி.கே.சி எனக்கு ஊட்டி விட்டார்கள். சொல்லினால் வெளியிட முடியாததை வெளியிடும் அரிய சித்து டி.கே.சியிடமிருந்ததை என் இதயம் கண்டு கொண்டு விட்டது என்று தன் நூலான "கவிதையில் விடுமுறை"யில் கூறுகிறார். (பக்கம் 87,88)

திரு. மகராஜன் அவர்கள் வக்கீல் மகராஜன் ஆனபின்தான் மீண்டும் டி.கே.சியை சந்திக்கிறார். பாளையங்கோட்டையில் 1935ல் இருந்து வந்தார். அப்போது டி.கே.சி. இந்து அறநிலைக் கமிஷனராக சென்னையில் இருந்து விட்டு வண்ணாரப்பேட்டை திரும்புகிறார். 1935லிருந்து 1938வரை ஞாயிறு தோறும் டி.கே. சியைப் பார்க்க மகராஜன் செல்வார்கள் வட்டத்தொட்டிக் கூட்டத்தில் கலந்து கொண்டு, அவர்களுடைய கலை உணர்வு தன்னுடைய உணர்ச்சித் தத்துவத்தில் போய்க் கலந்து, தன்னை வேறு ஒரு வஸ்துவாக்கி, தனக்கு வேறு ஒரு பிறவி கிட்டிய உணர்வு ஏற்படுத்தியது என்கிறார் மகராஜன். கம்பனையும் வள்ளுவரையும் எப்படி டி.கே.சி. அனுபவித்தார்கள்? தாம் அனுபவித்ததை எப்படி அனுபவிக்க வைத்தார்கள். என்பதை ஒரு ரத்தின வியாபாரி எப்படி ரத்தினத்தைப் பார்ப்பார்களோ அதையொத்தது என்கிறார் மகராஜன். ரத்ன வியாபாரியிடம் ஒரு ரத்தினம் கிடைத்து விட்டதென்றால், முதலில் முற்றத்தின் வெளிச்சத்தில் பார்ப்பார்கள். பின் திண்ணைக்கு வந்து இன்னும் அந்த வெளிச்சத்தில் பார்ப்பார்கள். பின் பக்கத்தில், இடப்பக்கம், வலப்பக்கம், பின்பக்கம், முன்பக்கம் என்று எல்லா பக்கமும் உருட்டி உருட்டிப் பார்ப்பார்கள். இப்படித்தான் டி.கே.சி. ஒரு கம்பன் பாடலையோ, தமிழ்ப் பாடலையோ, குறளையோ பார்ப்பார்களாம். "தமிழ்க்கவி மக்களைக் கஷ்டப்படுத்த வந்த கருவி அல்ல. ஆனால் மக்களை ஆனந்த மயத்தில் ஊற வைக்க வந்த தேவாமிர்தம்" என்று அடிக்கடி டி.கே.சி. சொல்வார்கள்.

டி.கே.சி அவர்கள் இலக்கிய உறவுகளுக்காக ஏங்கி ஏங்கித் தன்னந்தனியாக இருந்த காலத்தில் டி.கே.சியோடு உள்ளங்கலந்து இருந்தவர்களில், ராஜாஜி, கல்கி, பாஸ்கரத் தொண்டைமான், மகராஜன், அவரது தமக்கையார் வேலம்மாள், சோமு, வித்வான் ல. சண்முகசுந்தரம் முதலியோர் ஆவர். இறுதிகாலத்தில் மகாராஜன் அவர்கள் தன்னோடு இருக்க வேண்டும் என்று உணர்வுடன் நீதிமன்றத் தலைமை நீதிபதி ராஜ மன்னரிடம் சென்று, மகராஜன் அவர்களை தென்காசியில் முனிசீபாக போட வேண்டும் என்றுக் கேட்டுக் கொண்டார். 1949யிலிருந்து

1952 வரை அநேகமாக நாள்தோறும் தென்காசியிலிருந்து குற்றாலத்திற்குச் சென்று டி.கே.சியுடன் பலமணி நேரம் இருந்து உரையாடும் பேறு பெற்றார். 1950 ஆண்டு ஒருநாள், திவான்பகதூர் ஆவுடையப்ப பிள்ளையவர்களிடம், (டி.கே. சியில் ஒருசாலை மாணாக்கர்) “நமது தமிழ்க்கவிதை, பண்பாடு, சமயம், என்பவற்றையும் மகராஜனுக்கு உயில் எழுதி வைத்து விட்டேன். இனிக்கவலை யில்லை“ என்றார்கள். இதே அன்பும் அருமையும் மகராஜனுக்கு எழுதிய 6/6/48ல் எழுதிய கடிதம் வெளிப்படுத்துகிறது: “ஒருவனுக்கு கைநிறைய வைரங்கள் கிடைத்தன. அவைகளை வைக்கப் பெட்டகம் இல்லை, வீடில்லை, கடைசியாக அவைகள் கிடைத்தன. அப்படியானால் அவனுக்கு எவ்வளவு ஆறுதலாய் இருக்கும். அதேபோல் நானும் தமிழில் அற்புதமான பாடல்களைக் கண்டேன். கைநிறையவே இருக்கின்றன. வைக்க இடமில்லாமல் திண்டாடினேன். தாங்களும் வேலம்மாளும் ஒப்படைப்பதற்கு இருக்கிறீர்கள். எனக்கு எவ்வளவு ஆறுதல் என்று சொல்வானேன்.“

ஜஸ்டிஸ். மகராஜன் அவர்களுக்கும், அவர்களது சகோதரி வேலம்மாளுக்கும் எழுதிய கடிதங்களைப் பார்த்தால், கடிதங்கள் மூலமாக இலக்கியப் பகிர்தல்கள் எவ்வளவு ஆழமாக அகலமாகி விரிவாக நடந்திருக்கின்றது என்பதை அறியலாம்.

திரு. மகராஜன் அவர்களைப் பொறுத்தவரையில், டி.கே.சி. அவர்கள் மனிதச் சட்டை அணிந்த தெய்வம். அந்த தெய்வம் அவரை ஒரு வரம் கேட்டது.

“எனக்கு ஒரு வரம் தரவேணும். 40 ஆண்டுகளாக பலகட்டங்களில் பேசியிருக்கிறேன். பலருக்குப் பாட்டுச் சொல்லிக்காட்டியிருக்கிறேன். ஏதோ ஐந்தாறு பேர்கள் என்னுடன் கூட பாட்டை அனுபவித்தார்கள். என்று சொல்லலாம். அவர்களும் முழுதும் உணர்ந்தார்கள் என்று சொல்ல மாட்டேன். ஆகையாலே டி.கே.சி. என்று ஒருவன் இருந்தான். தமிழ் தான் உலகத்திலேயே சிறந்த பாஷை, தமிழ்க் கவியைப் போல உயர்ந்த கவி உலகிலேயே இல்லை என்று சொல்லிக்கொண்டே இருந்தான்.“ என்பதை நீங்கள் எடுத்துச் சொல்லி வரவேண்டும். அப்படி செய்தீர்களானால் 500 ஆண்டுகளுக்குப் பிறகு உலகம் இதை ஒப்புக் கொள்ளும்.“ என்று தாம் மறையும் முன்பு விடுத்த வேண்டுகோள்.“

“ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களுடன் நாற்பது ஆண்டுகளாய் நெருங்கிப் பழகியிருக்கின்றேன். தாம் கண்ட உண்மையை,

பறைசாற்றும் ஆற்றலுடையவர். அதன்படி வாழும் உரம் படைத்தவர் & அன்புக்கும் நாணயத்துக்கும் தலை வணங்குபவர் & அன்று முதல் இன்றுவரை டி.கே.சி. அவருக்குக் காட்டிய உண்மைகளை எடுத்துக் கூறி வருகிறார். அன்று எத்தனையோ எதிர்ப்புக்கு இடையே கவியது செய்து வந்த தொண்டு, பத்தாண்டுகளுக்கு முன் ரசிகமணி டி.கே.சியின் வட்டத் தொட்டி என்ற சத்சங்கத்தை உருவாக்கியது. இதன் பலனாகச் சென்னை மாநகரினுள் தமிழன்பர்களையும், மற்றவர்களையும், ஏன், அவர் ஆங்கில நூல்கள், வெளிநாட்டுப் பயணங்கள் மூலம் அறிமுகமாகிய வெளிநாட்டவர்களையும் கூட ரசிகமணி தந்த ஞானத்தைப் பருகச் செய்து விட்டார்கள். இதன் பலனாக இன்று தமிழக அரசு முழுமூச்சாக டி.கே.சி. நூற்றாண்டு விழாவைக் கோலாகலமாகக் குற்றாலத்தில் நடத்துகிறது. சென்னையிலும் நடத்தப்போகிறது" என்று டி.டி. திருமலை திரு. ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களால் தொடர்பணிகளைத் தன் உலக இதய ஒலி ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு மலரில் மகிழ்ச்சியாய் பகிர்ந்து கொள்கிறார்.(பக் 7)

# வித்வான். ல. சண்முக சுந்தரம்

1948ல் திரு. ல. ச அவர்களுக்கு (ல. சண்முகசுந்தரம் அவர்களை 'ல'னா 'சா'னா என்றுதான் அன்பாய் அழைப்பார்கள்) சென்னையிலுள்ள மாநிலக்கல்லூரியில் விரிவுரையாளராக நியமித்து உத்தரவு வந்தது. அதை அவர் ரசிகமணியிடம் காட்டினார். "என்னை சண்முகசுந்தரத்திடமிருந்து பிரிக்கப் பார்க்கிறீர்களா? அவர் வேலையில் சேரமாட்டார்" என்று கல்லூரி முதல்வருக்குத் தந்தி கொடுத்து விட்டார் டி.கே.சி. அன்று உள்ளத்தில் பாய்ந்த சந்தோஷம் இன்றுவரை முகமலர்ச்சியோடு வாழவைத்து வருகிறது. திரு. சண்முக சுந்தரம் அவர்களை" என்று டி.டி. திருமலை அவர்கள் ரசிகமணியின் ரசனையின் ரசவிதத்தைப் பற்றி தன் பதிப்புரையில் மிக வெகுவாக லயித்துப் பேசுகிறார்.)

சென்ற மாதம் நான் வித். ல. சண்முகசுந்தரம் அவர்களைச் சந்தித்தேன். இதுபற்றி வினவினேன் நண்பர்களே! "அடிசக்கை! என்னைப் பார்த்தாலே தெரியவில்லையா. இன்றோடு வயது 90 ஆகிறது எனக்கு." உற்சாகமாய் சிரிக்கிறார்.

ஆமாம்! ஒரு சிறுவயதுப் பையன் போல்தான் அங்குமிங்கும் ஓடுகிறார். எனக்கு காபி போட்டுத் தருகிறார். 'தோசை செய்து தரவா?" எனக் கேட்கிறார். அந்த சுறுசுறு சுறுப்பு..... நண்பர்களே! தென்காசித் தென்றலும், ரசிகமணியின் ரசனை இரத்தமும்தான் என்பதை நான் சொல்லித் தெரியணுமா! அன்று மட்டும் நண்பர்களே! காலை 9 மணியிலிருந்து மாலை 3 மணி வரை தமிழ்ப் பாடல்களில்.... ஏறக்குறைய முப்பது பாடல்கள் சொல்லி, அதை எழுதியும் எனக்கு கொடுத்து விட்டார்கள். அப்படியே! டி.கே.சி. பாணி இன்று அவரை தவிர, வேறு யாராலும் டி.கே.சி. போல் பாடல் பாடி விளக்கம் சொல்ல முடியாது. எனக்கு அலுப்பே தட்டவில்லை. பாடல் சொல்லிக் கொண்டிருப்பார். இடையில் டி.கே.சியுடன் இருந்த அனுபவ நினைவுகளில் மூழ்கி

விடுவார். பின் "அவரால் அடிக்கடி சொல்கிற இன்னொரு பாட்டு கேளு!' என்று பாடல் சொல்லத் தொடங்கி விடுவார். எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் இப்படித்தான் ஒல்லியாக இருக்கிறார்கள் ல.ச. அவர்கள். அந்த உடம்பில் எங்கிருந்துதான் இவ்வளவு ஆற்றலோ? இடையில் ஒரு மடக்குத் தண்ணிக்கூட குடிக்கவில்லை. ஒரு பாடலைச் சொல்லி முடிப்பார். "சுபா, எப்படி வருது பார்த்தியா" என்று அனுபவித்துச் சொல்வார் பாருங்களேன்! அவரோட அந்த மெலிந்த உடலை ஒரு ஆட்டு ஆட்டி வாய் நிறைய கேட்பார் பாருங்களேன்! அய்யோ! மீண்டும் அந்த வார்த்தை அனுபவத்திற்காக ஏங்க வைத்து விடுவார். எப்படி ரசிகமணி அந்தப் பாடலுக்கு நம்மைத் தயார் செய்வார் என்று கேள்விபட்டிருக்கிறது போல் நம்மை அதற்குத் தயார் செய்வார். அன்று கேட்ட பாடல்கள் அத்தனையும் ரத்தினங்கள்.

டி.கே.சியும் வித்.ல.சண்முகசுந்தரமும் சந்தித்த காட்சியை நாம் காணலாம் வாருங்கள் நண்பர்களே!

"1946ம் ஆண்டு வரை அவர்களைப் பார்த்து அவர்களுடன் பேச எனக்கு வாய்ப்புக் கிடைக்கவே இல்லை.

1946ம் ஆண்டு மே மாதம் என் சொந்த வேலை காரணமாக நான் செங்கோட்டைக்கு வந்தேன். செங்கோட்டையில் வேலையை முடித்துக் கொண்டு திருக்குற்றாலம் போனேன். அப்பொழுது நேரம் பிற்பகல் 4 மணி.

நேராக டி.கே.சி வீட்டிற்குப் போனேன். டி.கே.சி யின் செயலாளராக இருந்த திரு. பி.ஸி. பலராமராஜா, என்னை யார் என்று விசாரித்தார்கள். விபரம் சொன்னேன் "டி.கே.சி தூங்கிக் கொண்டிருப்பதாகவும், எழுந்தவுடன் என் வரவை அவர்களிடம் சொல்வதாகவும்" சொல்லிவிட்டு, எனக்குக் காபி கொடுக்குமாறு டி.கே.சி யின் வேலைக்காரருக்கு, திரு. ராஜா உத்தரவிட்டார்கள்.

ராமபிரானைத் தரிசிக்கப் போன குகன் போல நான் இருந்தேன். லட்சுமணன் போல, திரு. ராஜா செயல்பட்டார்.

காபியை நான் அருந்திக் கொண்டிருக்கிறேன். "டி.கே.சி எழுந்துவிட்டதாகவும், என்னை வரச்சொல்வதாகவும்" அதே ராஜா என்னிடம் வந்து சொல்கிறார். டி.கே.சி யைப் பார்க்க, அவசரம் அவசரமாக நான் போகிறேன். சதுரப்பாட்டோடு கூடிய சமமான மூன்று நாற்காலிகள். அவற்றை ஒன்றாகப் பொருத்தி வைத்த பெரிய கட்டில். அதில் பஞ்சு மெத்தை போட்டிருக்கிறது.

மெத்தையின் மேல் விரிக்கப்பட்ட வெள்ளைத் துப்படியோ, தும்பைப் பூவால் நெய்ததைப் போல தூய வெண்ணிறத்தால் கண்ணைப் பறிக்கிறது. அதில் படுத்தெழுந்த டி.கே.சி அதே படுக்கையில் சப்பணம் போட்டு உட்கார்ந்திருக்கிறார்கள். அன்னப்பறவை ஒன்று வெண்தாமரை மலரில் படுத்திருந்து எழுந்து உட்கார்ந்திருந்தால் எப்படி இருக்கும்? அப்படி இருந்தது டி.கே.சி உட்கார்ந்திருந்த கோலம்.

நான் அவர்களைப் பார்த்த உடனேயே 'வணக்கம்' என்று கும்பிட்டேன். "என்னை உங்களுக்குத் தெரியாது. உங்களை எனக்குத் தெரியும். நீங்கள் எழுதி வரும் கம்பர் தரும் காட்சியையும் முத்தொள்ளாயிரத்தையும் படித்துக் கொண்டிருக்கிறேன். அவை நன்றாக இருக்கின்றன" என்று சொல்லிக்கொண்டே, அவர்கள் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டேன். எதிரில் போட்டிருக்கும் நாற்காலியில் கூட உட்கார எனக்கு விதரணை இல்லை.

அவர்கள் உறங்கி எழுந்து உட்கார்ந்திருக்கும் படுக்கையில் அவர்களை ஒட்டியே நான் உட்கார்ந்து விட்டேன். என்னுடைய பட்டிக்காட்டுத் தனத்தைப் பற்றி, டி.கே.சி கொஞ் சங் கூட அலட்டிக் கொள்ளவில்லை. அள்ளிப் பருகுவது போல என்னை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டே, "அப்படியா! முத்தொள்ளாயிரத்தைப் படித்தீர்களா! விளங்கிவிட்டதா! கம்பர் பாடல்களையும் அனுபவித்தேன் என்கிறீர்களே! பேஷ், பேஷ், பேஷ்! நான் எழுதுவது ஒன்றும் தமிழ்ப்புலவர்களுக்கு விளங்குவதில்லை. கம்பரே விளங்கமாட்டேன் என்கிறாரே அவர்களுக்கு!" என்று ஆனந்தத்தோடு சொன்னார்கள்.

"நான் ஒன்றும் பள்ளிக்கூடத்தில் படித்ததில்லை. வாசிக்கவும் எழுதவும் வீட்டில் படித்துக் கொண்டது தான். என்னுடைய ஊர் சிறுபட்டிக்காடு. கோவில்பட்டிபக்கம். அங்கு பெரிய பள்ளிக்கூடமும் இல்லை பெரிய படிப்பாளிகளும் அங்கு இல்லை. தானாகப் படித்துத் தானாகத் தான் எதையும் தெரிந்து கொள்ள முடியும். எங்கள் பக்கத்து ஊரில் வாசகசாலை ஒன்றிருக்கிறது. நீங்கள் எழுதிய புத்தகங்களை அதில் வாங்கி வைத்திருக்கிறார்கள். அங்குதான் நான் புத்தகங்கள் எடுத்துப் படிப்பது வழக்கம். உங்களுடைய முத்தொள்ளாயிர விளக்கத்தையும் அங்குதான் படித்தேன். படிக்கப் படிக்க உருகி விடுகிறேன் நான். 'மல்லல் நீர் மாந்தைய:ர்' என்னும் பாடலில் வரும், 'திலகம் கிடந்த திருநுதலாய்' என்னும் பகுதிக்கு நீங்கள் கொடுத்திருக்கிறீர்களே

விளக்கம்! அது 'சொல்லுக்குச் சொல்' என்கிற கணக்கில் அர்த்தத்தையா காட்டுகிறது? இதயத்தின் உண்மையான சாயலை & அதாவது ஒரு பெண்ணின் சஞ்சலத்தையும் தவிப்பையும் அல்லவா காட்டுகிறது? உணர்ச்சிதான் வாழ்க்கை, வாழ்க்கை தான் உண்மை. அதை காட்டிவிடுகிறீர்கள் நீங்கள்.

உண்மையில் வெறுமனே சும்மா இருக்க முடியாது. அது கலைகளாக அவதாரம் எடுத்துக் கொண்டே இருக்கும். உண்மையானது கலைகளாக அவதாரம் எடுக்க எது ஒத்துழைக்கிறதோ, அது தான் நாடகப் பண்பு, இந்த நாடக இயல் அல்லவா உங்களுடைய விளக்கத்தில் அப்படியே பூத்துக் குலுங்குகிறது" என்று தான் சொன்னேன்.

கொட்டிக் தீர்க்க வேண்டும் என்று பல அடக்கி வைத்திருந்தவற்றை, மள மளவென்று கொட்டித் தீர்ப்பதைப் போல, டி.கே.சி.யிடம் சொல்லிவிட்டேன்.

மேலே குறிப்பிட்ட சொற்களில் ஒன்றிரண்டு மாறி இருக்கலாம். ஆனால் கருத்தில் யாதோரு மாற்றமுமில்லை. டி.கே.சி - யை முதன் முதல் சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கும் போது எனக்கு வயது இருபது. டி.கே.சி. படித்த படிப்போ அளவற்றது. கல்விக் கடல் என்று தான் அவர்களைச் சொல்ல வேண்டும். அவர்களுடைய செல்வாக்கைப் பற்றியோ, புகழைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. பாரத தேசம் முழுவதும் அவர்களுடைய புகழ் கம கம என்று மணந்தது.

வயதைப் பார்த்தால் டி.கே.சி.&க்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை. அவர்கள் அருகில் கூடப் போவதற்கு அருகதை அற்றவன் நான். அவர்களுடைய கல்வி, பதவி, புகழ் இவற்றை வைத்துப் பார்த்தால், இவற்றில் எதுவுமே இல்லாதவன் நான். அப்படி இருந்தும் என்னைத் தன்னவனாக ஏற்று, தன்னோடு என்னை உட்கார வைத்து, நான் சொல்வதை எல்லாம் கேட்டுப் பரவசப்பட்டுத் துள்ளினார்கள். மனிதர்களின் மண்டை முழுவதையும் குடைத்து குடைத்து அரித்துக் கொண்டிருக்கிற வேற்றுமை என்னும் நஞ்சு, எதையும் கொன்றுவிடும். அது விரும்பி உண்ணும் ஆகாரம் மனுஷர்கள் தான். அன்பு, பொறுமை, மரியாதை, பக்தி, உண்மை எல்லாவற்றையும் அந்த நஞ்சு சுட்டெரித்துப் பொசுக்கிவிடும். தன்னையே அது கொல்லும். உடம்பை, மனசை, உணர்ச்சியை எல்லாவற்றையுமே அது சாம்பலாக்கிக் கரைத்துவிடும். மனைவியையே, அவள் நமக்குக் கீழ்தான் என்று வேறுபடுத்தி அதிகாரம் செய்ய வைக்கும் இந்த நஞ்சு, வேறு எதனை வைத்துப் பார்க்கும்?

உலகம் முழுவதையும் அபார வேகத்தோடு சதா சுற்றிக் கொண்டிருக்கும் இந்த நஞ்சு நம் உணர்ச்சிகளின் ஒவ்வொரு அம்சத்திலும் உட்கார்ந்திருக்கிறது. ஆனால், டி.கே.சி யிடம் மட்டும் இந்த வேற்றுமை என்னும் கொடிய நஞ்சு துளிக்கூட இல்லையே! அது ஏன்? இது ஒன்றுதான் எனக்கு விளங்கமாட்டேன் என்கிறது. வயதாக வயதாக, டி.கே.சி யைப் பற்றி நான் நினைக்கிறபொழுதெல்லாம், எனக்கு இது ஒன்று தான் விளங்காத புதிராக இருக்கிறது.

என்னைப்பற்றிக் கள்ளங் கபடமில்லாமல் தான் சொல்லியதை ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்த டி.கே.சி அப்படியே என்னை அள்ளி அணைத்து ஆலிங்கனம் பண்ணுவதைப் போல என்னையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். உடனே சொன்னார்கள்.

"முத்தொள்ளாயிரத்தைப் படித்து விட்டீர்களே! அது உங்களுக்கு விளங்கி விட்டதே! 'திலகம் கிடந்த திருநுதலாய்' என்பதிலுள்ள நாடகப் பண்பை எப்படி அனுபவித்துவிட்டீர்கள்! தமிழ்ப் புலவர்களுக்கு விளங்கமாட்டேன் என்கிறது! பெரிய பெரிய ஸ்காலர்களுக்கும் விளங்கமாட்டேன் என்கிறது! ஆனால் உங்களுக்கு எளிதாய் விளங்கி விட்டது. "கவியை அனுபவிப்பதற்கு அதிகாரிகளே, தாய்மார்களும், பள்ளிக்கூடம் போய்ப் படிக்காதவர்களுந்தான்" என்று நான் சொல்லிக்கொண்டு தான் இருக்கிறேன். நான் சொல்வதைக் கோமாளித்தனம் என்று நினைக்கிறார்கள். அவர்களுக்கு எப்படி உண்மை புலப்படும்? உங்களையும், •உங்களைப் போன்றவர்களையும் பார்த்தால் அல்லவா புலப்படும்?"

இந்த விதமாக என்னை ரசிகமணி பாராட்டிக் கொண்டிருக்கிற பொழுது, ராஜாஜி அங்கு வந்தார்கள். டி.கே.சி யின் விருந்தினராக ராஜாஜி ஒரு வார காலம் அங்கு தங்கி இருக்கிறார்கள். இது விபரம் எனக்கு எப்படித் தெரியும்? சந்தடி இல்லாமல் ராஜாஜி அங்கு வந்த தைப் பார்த்தேனோ இல்லையோ, திகைத்து விட்டேன் நான்.

படுக்கையில் உட்கார்ந்திருந்த டி.கே.சி பளிச்சென்று எழுந்து பிரம்பு நாற்காலியில் வந்து அமர்ந்தார்கள். அவர்கள் பக்கம் போட்டிருந்த இன்னொரு நாற்காலியில் என்னை உட்காரச் சொன்னார்கள்.

ராஜாஜியோ பெரிய சாய்வு நாற்காலியில் வழக்கமாக, டி.கே.சி உட்காரும் சாய்வு நாற்காலியில் வந்ததும் உட்கார்ந்து

கொண்டார்கள். அப்பொழுது ராஜாஜியிடம் என்னை டி.கே.சி அறிமுகப்படுத்திய அற்புதத்தை இதோ பாருங்கள்.

"இவர்கள் சண்முகசுந்தரம். கோவில்பட்டிப் பக்கத்தைச் சேர்ந்தவர்கள். பள்ளிக்கூடமே போகாதவர்கள். "என்னை உங்களுக்குத் தெரியாது. உங்களை எனக்குத் தெரியும். நான் புதுசு" என்று சொல்லித் தன்னை தானே அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். சண்முகசுந்தரம் இளைஞர்தான். ஆனால் இவர்களுடைய அனுபவத்தையும் உணர்ச்சி வளத்தையும் பார்க்கிற பொழுது நாம் தான் இவர்களுக்கு இளைஞராகிவிடுகிறோம். கோவில்பட்டி வட்டாரம் ஒரே கரிசல் மண். பருத்தி விளைவதற்கு ஏற்ற இடம் என்று சொல்லுவார்கள். தமிழ் விளைவதற்கும் அது தான் ஏற்ற இடமோ என்று சொல்லத்தோன்றுகிறது. கவிக்குள்ளும், தாளத்திற்குள்ளும், நாடகத்திற்கு உள்ளுமே நீண்ட தூரம் சென்று, ஆழங்காணமுடியாத பகுதிகள் ஒவ்வொன்றின் உள்ளும் இறங்கி, கை நிறைய தொள்ளாயிரம் விளங்கி வருகிறது! கம்பர் விளங்கி விட்டார்! வேறு என்ன வேண்டும் தமிழுக்கு? தமிழ் அநாதை இல்லை. சண்முகசுந்தரம் இருக்கிறார்கள்"?

அன்புமயமான கருணையோடும், புனிதமான பெருந்தன்மையோடும், டி.கே.சி என்னைப் பற்றிச் சொல்லிய சொற்களை நினைக்க நினைக்க இன்னமும் நான் கிளுகிளுப்படைகிறேன். என்னைப் பற்றி எனக்கே நம்பிக்கை இல்லாமல் இருந்தது. ஒன்றுக்கும் லாயக்கற்றவன் நான் என்று உலகமே என்னைத் தீர்மானித்துவிட்டதாக நான் எண்ணி இருந்தேன். அந்த எண்ணத்தை எல்லாம் & என்னுடைய அவநம்பிக்கையை எல்லாம் ஏன், என்னுடைய கவலை, பயம், அழுக்கு எல்லாவற்றையுமே அமுதமழை பொழிந்து கழுவிவிட்டது, டி.கே.சியின் ஆனந்தமயமான அன்பு.

ஒய்யாரம் மிக்க வானளாவிய அவர்களுடைய மனசு எவ்வளவு பெரிய மனசு, அடடா! அப்படி ஒரு உள்ளத்தை விசாலமான உள்ளத்தை என் வாழ்நாளில் நான் பார்த்ததே இல்லை. ஆனால் ஒன்றை நான் சொல்ல வேண்டும். இப்படியெல்லாம் டி.கே.சி என்னை அன்பால் அரவணைத்தார்களே! அப்பொழுது அதன் அருமை எனக்குத் தெரியவில்லை. இருபது வயதுப் பையன்தானே நான்? என்ன தெரிய முடியும் என்னால்? அவர்கள் பாராட்டப் பாராட்ட நான் கூசிக் கூசிப் பின் வாங்கினேன். அது ஒன்று தான் என்னால் செய்ய முடிந்தது. நாளாக, நாளாக அவர்களுடைய அன்பு வானம் கவிவது போல என்னை வந்து வளைக்கிறது. "நம்மை ஒரு பொருளாக இந்த உலகில் எண்ணியவர் ஒருவர் கூட இல்லையே! ஆனால், எப்படி எல்லாம் நம்மை மதித்து

டி.கே.சி நம்மை உபசரித்தார்கள்!" என்று நினைக்கிறேன். படை எடுத்து வருவது போல் என்னை நோக்கி அவர்கள் அன்பு பாய்ந்து வருகிறது. அனுபவிக்க முடியாமல் திக்குமுக்காடுகிறேன். அன்பின் வேகத்தையும் நெருக்குதலையும் சமாளிக்க யாருடைய கையை நான் பிடிப்பது? டி.கே.சி தான் இல்லையே?

"அம்மென் இணர
அடும்புகாள் அன்னங்காள்
நம்மை மறந்தாரை
நாம் மறக்க மாட்டோமால்"

அன்பின் தாக்குதலைத் தாங்க முடியாமல் எத்தனையோ உள்ளங்கள் இப்படி அலறி அலறியவர்கள் தான் துணை.

அம்பாசமுத்திரத்தில் வைத்து 1955ம் ஆண்டு முதல் முதல் நடைபெற்ற டி.கே.சி நினைவு நாள் விழாவில், வித்வான், ல. சண்முகசுந்தரம் பாடிய பாடல்களில் சில.

**1. வீணையோ மாங்குயிலோ**
**வெண்சங்கோ மாணிழையார்**
**பாணி தவறாத**
**பல்லியமோ - பேணுபெரும்**
**மோகன வாச்சியமோ**
**முத்தமிழ் சேர் நற்கவிக்கு**
**வாகனமாய் வந்த**
**குரல்**

**2. சைவம் தழைக்கத்**
**தமிழ்தழைக்கப் பண்பாட்டின்**
**மெய்ம்மை தழைத்து**
**விரிந்தோங்கப் - பொய்மை எலாம்**
**தாம்அகல வந்தான்**
**சடைமுடிமேல்த் திங்களான்**
**நாமம்டி. கே.சிஎனக்**
**கொண்டு**

(உலக இதய ஒலி ரசிகமணி டி.கே.சி நூற்றாண்டுமலர் 1981 பக்கம் 14,15,16,17 பக்கம் 103)

# டி.டி. திருமலை

வாழ்க்கையின் அடிப்படை ஆனந்தம் தான் என்பதை நம்நாட்டு மாமுனிகள் தெரிந்து கூறினார்கள். ஆனால் அச்சத்தின் மேலீட்டால் தன்னம்பிக்கை இழந்து இயற்கை அன்னை கொடுத்த சுதந்திரத்தை நாம் ஒருவரை ஒருவர் சுரண்டுவதற்குப் பயன்படுத்தி விட்டு, வாழ்க்கை ஒரு போராட்டம் என்றும் துன்பக் கடலென்றும் கூறி வருகிறோம். நம்முன்னோர்களான மகரிஷிகள் இதை நாம் உணரவில்லையே எனத் தவித்தார்கள். உபதேசம் செய்தார்கள். ஆனாலும் மக்கள் அறியவில்லையே என கதறியும் பார்த்தார்கள். இந்த ரிஷிகள் வழிவந்த ரசிகமணியின் பேச்சிலும் எழுத்திலும் இதைக் காணலாம். தமிழிசைக்கு வரப்பிரசாதமாகக் கிடைத்த தமிழும் தமிழ் பாட்டும் கலைகளும் அவனை ஆனந்த சாகரத்தில் மிதக்க வழிவகுக்கும் என்பதை உணர்த்தினார்.

கவியைக் கடவுள் அவதாரம் என்று வைணவம் கூறியிருக்கின்றது. இக்கவியை பக்தியுடன் அணுகினால் நம் வாழ்க்கையில் பொய் மறைந்து உண்மை நிலவும், இருள் அகன்று ஒளி பிறக்கும், அறிவுத்திறம் மாய்ந்து நித்தியம் ஆட்கொள்ளும் என்பதை ரசிகமணி கவிகளை எடுத்துச் சொல்லியும் சத்தியவாழ்க்கை வாழ்ந்தும் அன்பைச் சொரிந்து நமக்குத் தொண்டாற்றினார். அவர் சொன்ன 'ரசனை', வாழ்க்கையை விட்டுத் தப்புவது அல்ல. வாழ்க்கை என்னும் குதிரையின் பிடரியைப் பிடித்து அடக்கி சவாரிசெய்ய உதவும் எளிய இனியதிறவுகோல். அவர் பரப்பிய உண்மைத் துகள்கள் நம் தமிழ்நாடு முழுதும் சுற்றிச் சுற்றிப் பறந்து கொண்டு இருக்கிறது. நம்மைக் காப்பாற்றும் அதற்குச் சிரம் தாழ்த்தி கைகூப்பி வணங்குவோமாக!" என்று டி.டி. திருமலை இதயம் திறந்து பகிர்ந்து கொள்கிறார்.

மேலும், ஜஸ்டிஸ், மகராஜன் அவர்கள் என்னை 1946&இல் டி.கே.சியிடம் ஞானஸ்னானம் செய்து வைத்தார். இவ்வாறு கிடைத்த அருள் என்னுடன் திரு.ல.ச.வையும் சேர்த்து வைத்திருக்கிறது. டி.கே.சிக்குத் தொண்டாற்றுவதில் எனக்கு வழிகாட்டியாக இருக்கும் அவர் இம்மலரை உருவாக்கித் தந்ததில் கிடைக்கும் பரம சந்தோஷத்தை எப்படி வாயாலும் வார்த்தையாலும் கொட்டுவேன்!

மகாத்மாகாந்தி, மகரிஷி விநோபா, ரசிகமணி இவர்கள் ஆசியால் உற்ற நண்பர்களும் அரிய வாய்ப்புகளும் கிடைக்கும் பேறு பெற்றவன்.

ரசிகமணி டி.கே.சி நாமம் வாழ்க! அவர் பாதம் பணிந்து இம்மலரைச் சமர்ப்பிக்கிறேன்.

- என்று டி.டி.திருமலை, தன் உலக இதயஒலி ரசிகமணி டி.கே.சியின் நூற்றாண்டு மலரில் தன் மனம் திறக்கிறார்.

"நான் எத்தனையோ பேர்களை டி.கே.சியிடம் அறிமுகப்படுத்தியிருக்கின்றேன். ஒவ்வொருவருமே தாம் முன் கண்டியறியாத ஒரு அழகையோ, உண்மையையோ டி.கே.சியிடம் கண்டுவிட்டதாக என்னிடம் உணர்ச்சியோடு சொல்வார்கள். 1946ல் நான் ஸ்ரீவில்லிபுத்தூரில் முனிசீபாக இருந்தபோது 'உலக இதய ஒலி' ஆசிரியராக இருக்கும் நண்பர். டி.டி.திருமலையைக் குற்றாலத்திற்கு அழைத்துச் சென்று டி.கே.சியிடம் அறிமுகப்படுத்தினேன். பத்து நாட்கள் ரசிகமணியோடு நண்பர் திருமலை தங்கி உறவாடிய பிறகு நண்பர் திருமலை சத்தியத்தின் தரிசனத்தையே தான் கண்டு கொண்டதாக என்னிடம் பூரிப்போடு சொன்னார்கள். அது முதற்கொண்டே நண்பர் திருமலை டி.கே.சியின் அரிய பக்தராக மாறிவிட்டார். 'உலக இதய ஒலி' என்ற பத்திரிக்கையை டி.கே.சி.யின் உபதேசங்களை பிரசாரம் செய்வதற்காகவே அவர் தொடங்கினார். என்று சொன்னால் குற்றமில்லை. சென்ற 12 ஆண்டுகளாக வெளிவந்த 'உலக இதய ஒலி' மலர்களைப் படித்தவர்கள் நான் சொல்வது உண்மை என்று உணர்வாகள்".

- என்று ஜஸ்டிஸ் எஸ். மகராஜன் அவர்கள், 'உலக இதயஒலி ரசிகமணி டி.கே.சி நூற்றாண்டு மலர் வாழ்த்துக்களில் கூறுகிறாார்.

உண்மைதான். திரு. டி.டி. திருமலை அவர்கள் இலக்கிய சான்றோர்கள் அனைவரும் சென்னையில் இருப்பதால், நீதிபதி எஸ். மகராஜன் அவர்களின் ஆலோசனையின் பேரில்

மதுரையிலிருந்து சென்னைக்கு குடிபுகுந்தார். காந்தியோடு இலக்கியமும் வளர்த்தார். 'மல்லிகை' என்றும் இலக்கிய அமைப்பு ஒன்று நடத்தினார். வருடாவருடம் டி.கே.சி. விழா நடந்தது. திரு. திருமலை மறைந்த பின்னும், அவரது நிறுவனமான காந்தி கல்வி நிறுவனம் அதை ஆண்டுதோறும் எடுத்து நடத்தி வருகிறது. நிறுவன இயக்குநர் திரு. அண்ணாமலை திருமதி. டாக்டர் பிரேமா, நிறுவனத் தலைவர் திரு. க. மோகன், திரு. விப்ர நாராயணன், சரவணன், நித்யானந்தம் ஆகியோரால் டி.கே.சி. விழா தொடர்ந்து நடத்தப்பட்டு வருகின்றது.

# கற்றுச்சொல்லி எஸ்.வி.எஸ்

1981ஆம் வருடம். ஆகஸ்ட் 23ஆம் நாள். ரஸிகமணி டி.கே.சி. அவர்களுக்கு நூற்றாண்டு விழா. தமிழக அரசு குற்றாலத்தில் நாள் முழுவதும் கொண்டாடியது. அதற்கு முந்தின நாள் "நான் கண்ட டி.கே.சி" என்னும் நூலைக் கொணர்ந்து எல்லோரையும் அதிசயப்படச் செய்து விட்டார் என்று டி.கே.சி. அவர்களின் பேரன் தீப. நடராஜன் அவர்கள் இன்னமும் அந்த வியப்பு மாறாது கூறுகிறார். அப்படியொரு அன்பின் காரியம் அது. ஒருமாத காலத்திற்குள் இப்படியொரு புத்தகத்தை உருவாக்கி எடுத்து வருகிறார் என்னில் அது அன்பின் அழகுதானே. வேறென்னவாக இருக்க இயலும்.

"எஸ். வேங்கட சுப்ரமண்யம். வயது 19. இண்டர்மீடியாட் படித்தவர். தமிழிலும் இலக்கியத்திலும் ஆர்வமுள்ளவர். அவ்வப்போது இங்கு வந்து பேசிக்கொண்டிருப்பார்" & இப்படி தமிழறிஞர் மு. அருணாசலம் அவர்கள் டி.கே.சிக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். இந்த அறிமுகம் டி.கே.சி.யின் அணுக்கத் தொண்டராக அடிகோலியது. "கம்பர் தரும் காட்சி" கட்டுரைகளை டி.கே.சி. சொல்லச் சொல்ல எழுதி எழுதிச் சிவந்த கரங்கள் எஸ்.வி.எஸ், அவர்களின் கரங்கள். டி.கே.சியுடன் இருந்து கம்பனை அனுபவித்தவர். அவரிடம் கம்பனைக் கற்றவர். அதை அப்படியே அடுத்தவர்க்கு அழகாகச் சொல்லுவார்கள். அதனால் தன்னைக் "கற்றுச் சொல்லி" என்றுக் கூறிக் கொள்வார்.

டி.கே.சிக்கும் அண்ணிக்கும் நல்ல துணையாக இருந்தார். அவரது பேரன்களுக்கு நல்ல சகோதரராய், நண்பராய் இருந்தார்.

டி.கே.சி. அவர்களுக்கு ஒருமுறை அம்மை (வைசூரி) போட்டிருந்தது. அம்மை போட்டிருந்த சமயம் யாரும் நலம் விசாரிக்கக் கூட வரமாட்டார்கள். அவ்வளவு பயம் அதனிடம்.

மேலும் அம்மன் சம்பந்தப்பட்டது என்று மிகவும் பக்தியாகவும் இருப்பார்கள்.

அந்தநோய் காரணமாக, டி.கே.சி. அவர்கள் வெப்பம் தணிக்க ஒருநாளில் 4 முறை அல்லது 5 முறை பச்சைத் தண்ணீரில் குளிப்பார்கள். டி.கே.சி. அவர்கள் மிகவும் பலமிழந்து இருந்தார்கள். அவரை கைத்தாங்கலாகத் தாங்கி பிடித்து, ஒரு மரஸ்டூலில் உட்கார வைத்து, பச்சைத் தண்ணீரை மொண்டு மொண்டு தலையில் ஊற்றி குளிப்பாட்டுவார் எஸ்.வி.எஸ். பிறகு உடல் முழுவதும் துண்டினால் ஒற்றி ஒற்றித் தண்ணீரை எடுப்பார். துடைக்கக் கூடாது. அப்போது அவர் இளைஞர்தான். இக்காரியத்தை மிகவும் பொறுப்பாக எவ்வித தயக்கமுமின்றி செய்தார். எஸ்.வி.எஸ். பயப்படவில்லை. தனக்குத் தொற்றிக் கொள்ளுமோ என்று சிறிதளவும் எண்ணவில்லை. இவரது தொண்டிற்குப் பயந்து அந்நோய் ஓடிவிட்டது.

இச்சம்பவத்தை நினைக்கும் போது, எனக்கு டி.கே.சி. அவர்கள் தன் மகனின் நண்பன் காந்திமதி நாதனுக்கு, அவன் உடல் நலமில்லாத போது செய்த பணிவிடை நினைவில் வருகின்றது. அப்போது ஒரு தந்தை மகனுக்குப் பணிவிடை செய்த காட்சி. இப்போது ஒரு மகன் தந்தைக்கு ஆற்றும் பணி. அன்பும் அக்கறையும் இணைந்தே இருக்கும். அன்பின் வெளிப்பாடுதானே அக்கறை. இல்லையா நண்பர்களே! வண்ணதாசன் கூறும் “அன்பு நம்மை எப்போதும் பத்திரப்படுத்தும் தானே” என்பது உண்மைதானே நண்பர்களே!

எஸ்.வி.எஸ். அடிப்படையில் இலக்கியதாகம் உள்ளவர். வாழ்வில் முன்னேற வேண்டும் என்னும் துடிப்புக் கொண்டவர். படிப்படியாக அவரது இலக்கிய ஆர்வம் பொங்கிப் பெருகி வசந்தம் இதழில் கட்டுரையாய் கரைசேர்ந்தது. கல்கியில் ஆசிரியராய்ச் சேர்வதற்கு அது உதவியாய் இருந்தது.

டி.கே.சியில் இணைந்தவர், அவரது இதயமாகிய கல்கியில் கலந்தார் என்று சந்தோஷமாய்ச் சொல்லலாம்தானே நண்பர்களே! (பொதிகை முனிவர் டி.கே.சி. கலைமணி பாஸ்கரத் தொண்டைமான்.)

# ராஜபாளைய ராஜா சகோதரர்கள்

(பி.சி. பாலகிருஷ்ணராஜா, பி.சி. பலராமராஜா)

திரு. பி.சி. பாலகிருஷ்ணராஜா, தென்காசியில் மரக்கடை வைத்திருந்தார்கள். 1944ஆம் வருடத்திலிருந்தே தினந்தோறும் குற்றாலம் சென்று டி.கே.சி. சொல்லும் பாடல்களைக் கேட்டு ரசித்து அனுபவித்து வந்தார்கள்.

டி.கே.சியின் வாழ்க்கை அதிசயமானது, அற்புதமானது, எவ்வளவு புண்ணியம்&யோகம் செய்திருக்க வேண்டும். ஒருவன் ஆனந்தமயமாய் இருக்க, அந்த ஆனந்தத்தை மற்றவர்களை எல்லாம் ஆனந்தத்தில் திளைக்க வைக்கும் ஒரு பணி யாரால் செய்ய முடியும்? அந்த நடமாடும் தெய்வமாக வாழ்ந்து வழிகாட்டிய டி.கே.சி ஒருவரால்தான் முடியும். அதற்கு அவர்கள் கள்ளங்கபடமற்ற குழந்தை உள்ளந்தான் காரணம்.

எத்திக்கும் போற்றும் ராமன் திருக்கதையை தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து&நித்தமுமே . அம்புவியில் மக்கள் அமுதம் அருந்த வைத்த டி.கே.சி.யின் பணியே பணி.

டி.கே.சி. அவர்கள் வெளியூர் பயணம் செய்யும் போதெல்லாம் ரயிலடி சென்று அவர்களை வழி அனுப்புவதும் திரும்பி வரும் போது அவர்களை வரவேற்பதும் என் வாழ்க்கையின் லக்ஷியமாக கருதி வந்தேன். என்கிறார் பாலகிருஷ்ணராஜா தன் கட்டுரையில் உலக இதய ஒலி ரசிகமணி நூற்றாண்டு மலர் 1981)

கற்றுச் சொல்லி எஸ்.வி.எஸ். டி.கேசியை விட்டு கல்கிக்குச் சென்றிருந்த சமயம். அவருக்கு உதவிசெய்ய ஆள் தேவைப்பட்ட நேரம். பாலகிருஷ்ணராஜாதான் வருவதாகக் கூறினார்கள். ஆனால் அப்போதுதான் சினிமாத்தொழிலில் அவர்கள் கால் வைத்த நேரம் அதனால் அவரது அண்ணன் பி.சி. சுப்பராஜா கொஞ்சம் தயங்கினார்கள். ஆனால் பாலகிருஷ்ண ராஜாவோ தன் சகோதரர் பலராமராஜாவை தனக்குப் பதில் அனுப்பினார்கள்.

அந்த மாந்தருள் மாணிக்கத்திடம் பணியாற்றும் பாக்கியம் பலராமராஜாவிற்குக் கிடைத்தது. டி.கே.சியின் கடைசி எட்டு ஆண்டுகள் அவரிடமே இருந்து வந்தார்.

“அந்த மாந்தருள் மாணிக்கத்திடம் என் இதய தெய்வத்திடம் நடமாடும் தமிழ் தந்தையிடம் பணியாற்றும் வாய்ப்பு எனக்கு கிட்டாவிடினும் என் இனிய சகோதரர் பலராமராஜாவுக்கு அந்த வாய்ப்புக் கிட்ட நான் காரணமாக இருந்தேன் என எண்ணி மன மகிழ்ந்தேன். விதிப்பயன் என்ற ஒன்று உண்டல்லவா? அது யாரை விட்டது.

அன்று ஐயா அவர்கள் நிழலில் இருந்து பணியாற்றிய என் சகோதரர் பல பெரிய உயர்ந்த மனிதர்களுடன் பழகும் வாய்ப்பு கிட்டி தொழில் துறையில் முன்னேறி ஆண்டவன் அருளால் ஐயா அவர்கள் நல்லாசியாலும் உன்னத நிலைக்கு வந்திருப்பது பார்த்து எங்களை வாழ வைத்த தெய்வத்தின் திருஅருள் தான் என்று நான் எண்ணி எண்ணி இறுமாப்பு அடைகிறேன்.

முதல் தினம் என் சகோதரரை ரசிகமணி வீட்டிற்கு அழைத்துப் போனேன். அன்று ராஜாஜி கல்கி அனைவரும் வந்திருந்தார்கள். இரவு சாப்பிடும் சமயம் எங்களை கூட இருந்து இரவு உணவு அருந்தச் சொன்னார்கள். புது இடம். தம்பி கொஞ்சம் கூச்சப்பட்டுச் சாப்பிடாமல் இருந்தார். தம்பி குமாரஸ்வாமி சிறு பையன். “ஏன் இவர் இப்படி சாப்பிடுகிறார்“ என்று கேலி செய்தார். நாட்கள் ஓடின. ரசிகமணி அவர்களின் தத்துப்பிள்ளை ஆய்விட்டார் என் சகோதரர் பலராம்.“

“ரசிகமணி அவர்கள் தமிழுக்காக வாழ்ந்தார்கள். சிந்தனைத் தெளிவோடு நெஞ்சுறுதியோடு எளிமைப் பண்போடு கர்மவீரராக தியாக யோகியாக தம் லக்ஷிய வேள்வித் தீயை அணையாமல் காத்து தமிழ் வாழ ஓர் இலக்கணம் வகுத்தவர் டி.கே.சி.

ரசிகமணி டி.கே.சி. என்பது ஒரு தனிமனிதரின் பெயர் மட்டும் அல்ல அது சில கோட்பாடுகளின் கருவூலம். தத்துவங்களின் பெட்டகம். தமிழ் அகராதியில் இடம்பெற்று விட்ட டி.கே.சி. என்ற சொல் கடமையுணர்வு கட்டுப்பாடு, ஒழுக்கம், தன்மான உணர்ச்சி, விருந்தோம்பல், வாய்மை, எளிமை, விசுவாசம், நேர்மை, நாணயம் போன்ற அவரது லட்சிய வாழ்வின் நெறிகளையே குறிக்கும்.

டி.கே.சி. என்ற உயர்ந்த மனிதர் உன்னத தமிழ் தந்தை உத்தம மனிதர் மறைந்து விட்டாலும் டி.கே.சி. என்ற உயர்ந்த லட்சியம் உன்னத தத்துவம் உத்தமத் தமிழ் தொண்டு மறையவில்லை.

மறைய விடக்கூடாது. நெஞ்சிருக்கும் வரை நினைவிருக்கும். அந்த நினைவினில் டி.கே.சி. உருவிருக்கும்." (உலக இதய ஒலி டி.கே.சி. நூற்றாண்டு மலர் 1981 பக்கம் 151,152)

தங்களை வாழ வைத்த தெய்வம் என்று போற்றுகிறார் பி.சி. பாலகிருஷ்ணராஜா அவர்கள்.

பி.சி. பலராமராஜா என்ன சொல்கிறார் என்று பார்ப்போம் நண்பர்களே!

ரசிகமணி வாழ்வின் கடைசி எட்டாண்டுகள் அவர்களிடம் பணியாற்றிய பாக்கியம் பெற்றவர். அவரது வாழ்க்கையின் உச்சகட்டமும் அந்த எட்டாண்டுகள்தாம். தமிழ்நாட்டில் அல்லாமல் வடக்கில் தமிழர்களாக வாழ்ந்த பெரிய நகரங்களில் தமிழ் நறுமணம் பரப்பியது இந்த எட்டாண்டுகளில்தான்.

தில்லி, பம்பாய், கல்கத்தா, நாக்பூர் இங்கெல்லாம் சென்று அங்குள்ள மக்களுக்கு தமிழையும் ரஸஞானத்தையும் பரப்பிய நாட்கள் அந்த எட்டாண்டுகளில்தான்.

சாந்தினிகேதனில் தமிழ் நூல் நிலையத்தை நிறுவி விஸ்வபாரதி சர்வகலா சாலையில் தமிழுக்கு இடம்பிடித்து உரையாற்றியதும் அந்த காலத்தில்தான்.

இந்த முக்கியமான நாட்களில் நான் அவர்களிடம் இருந்து கற்றுக்கொண்ட அனுபவங்கள் பல.

ரஸிகமணி டி.கே.சி. அவர்களிடம் பழகிய அனைவரும் கவிதை ரஸனையைப் பற்றி பெரிதும் அறிந்து கொள்ள வாய்ப்புண்டு. ஆனால் கூடவே இருந்த என்னைப்போன்றவர்களின் கண்நோக்கம் கவிதைகளோடு அவர்களுக்கு பல துறைகளிலும் இருந்த ஆர்வமும் ஆற்றலும் வியக்கத்தக்கவைகளாக இருந்திருக்கிறது என்பதுதான்.

டி.கே.சி. அவர்கள் இல்லத்தில் விருந்தினர் இல்லாத நாள் அல்லது ஒருவேளை கிடைப்பது மிகவும் அரிதான காரியம். அப்படி எப்போதாவது சந்தர்ப்பம் கிடைத்தால் எனக்கும் பேரன் தீப.நடராஜனுக்கும் அவர்களிடம் பலதரப்பட்ட கேள்விகள் கேட்க நேரம் கிடைக்கும்.

எங்களுக்கு மற்ற டி.கே.சி. அபிமானிகளுக்கு கிடைக்கும் தமிழ் கவிதைகளை ரஸிக்கும் வாய்ப்பைவிட ஆங்கில கவிதைகள், கதைகள், கட்டுரைகள் அவர்கள் வாசித்து விளக்கம் கூறும் வாய்ப்பு கிடைக்கும்.

பழக்க வழக்கங்கள் சிலருக்கு மனோதத்துவ ரீதியில் பதிந்து யார் என்ன விளக்கம் சொல்லி உண்மையை எடுத்துரைத்தாலும்

மனதில் ஏறாது. அதேபோல் ஒரு விஷயத்தை படிக்கும் போது நமக்கும் அப்படி இருக்குமோ என்று சந்தேகம் வந்துவிட்டால் அது நிஜமாகவே பட்டுவிடும் என்பது ஒரு நியதி.

இந்த நியதியை மிக அழகாக கையாண்ட ஆங்கில ஆசிரியர் ஜெரோம் கே. ஜெரோம் எழுதிய Three men in a boat புஸ்தகத்தை எங்களுக்கு வாசித்துக் காட்டி ஒரே வேடிக்கை உலகிற்கு அழைத்துச் சென்று ரஸிக்க வைப்பார்கள்.

அப்புத்தகத்தைப் படித்துக் காட்டு முன் எங்களை அதை ரஸிக்கவைக்க நம் நாட்டு நிகழ்ச்சி ஒன்று சொல்லி தயார் செய்து கொண்டார்கள்.

திருநெல்வேலியில் அறுபது வருஷங்களுக்கு முன்னால் முதல் முதலில் முத்தையாபிள்ளை என்பவர் ஒரு சைக்கிள் வாங்கினார். அன்னாருக்கு நாளடைவில் சைக்கிள் முத்தையாபிள்ளை என்று பட்டப்பெயர் ஏற்பட்டு பிரபல்யமானவர்.

அந்தக் காலத்தில் சைக்கிள் மதறாஸில் அடிசன் கம்பெனி வெள்ளைக்காரனிடம்தான் வாங்க வேண்டும்.

அவர் வாங்கிய சைக்கிள் பழையதாகப் போய்விட்டதால் சென்னைக்கு போய் பழைய சைக்கிளை கொடுத்துவிட்டு புது சைக்கிள் ஒன்று எடுக்க அடிசன் கம்பெனிக்கு போனார்.

அடிசன் கம்பெனி துரை முத்தையா பிள்ளைக்கு புதிய ராலே சைக்கிள் கொடுத்து வெள்ளோட்டம் விடச் சொன்னார். சைக்கிள் முத்தையாபிள்ளை சைக்கிளில் ஏறினார். அந்த வண்டி ஒரு ஓரமாக இழுத்து அவரால் ஓட்ட முடியாமல் கீழே விழுந்து காலை ஊன்றிக் கொண்டார்.

கம்பெனிக்காரர் வேறு ஒரு புதிய சைக்கிளை கொடுத்தார். சைக்கிள் முத்தையா பிள்ளைக்கு இந்த சைக்கிளும் அதே தகராறு செய்தது. எனவே புதிய சைக்கிளில் கோட்டம் இருக்கிறது என்று முத்தையா பிள்ளை சொன்னார்.

துரை அந்த புதிய சைக்கிளை தான் வாங்கி ஏறினார். அது அழகாக இதமாகப் போனது.

எனக்கு நன்றாகத்தானே இருக்கிறது. நீங்கள் மட்டும் ஏன் சைக்கிளில் கோட்டம் இருக்கிறது என்று சொல்கிறீர்கள் என்று முத்தையா பிள்ளையைப் பார்த்துக் கேட்டார்.

முத்தையா பிள்ளைக்கு கோபம் வந்து விட்டது. "வேய் துரையே திருநெல்வேலி சீமையில் முதலில் சைக்கிள் வாங்கியவன் நான். அதற்காக எனக்கு சைக்கிள் முத்தையா பிள்ளை என்ற அடைமொழிப் பெயர் பெற்றவன். அப்பேர்ப்பட்ட நான் சொல்லுகிறேன். நீங்கள் கொடுத்த இரண்டு புதிய சைக்கிளிலும் கோட்டம் இருக்கிறது. நீங்கள் இல்லை என்கிறீர்களே" என்றார்.

துரைக்கு சட்டென ஒரு யோசனை தோன்றி முத்தையா பிள்ளையின் பழைய சைக்கிளை வாங்கி ஏறி சவாரி விட்டார். துரை தடால் என்று கீழே விழுந்துவிட்டார்.

பிறகு தெரிந்தது சைக்கிள் முத்தையாபிள்ளை பல ஆண்டுகளாக கோட்டம் நிறைந்த சைக்கிளில் ஏறி சவாரி செய்து பழக்கப்பட்டு புதிய சைக்கிளை அவரால் ஓட்ட முடியவில்லை என்று. இதைப்போலவே பலருக்கு மூளைக்குள் ஏதாவது ஒன்றை விட்டு ஒன்று நினைத்துக் கொண்டு அதுவே சரி என்று நிச்சயித்துக் கொண்டு வாழ்க்கையில் அவஸ்தைப்படுவார்கள்.

அதைப்போலவே ஜெரோம் கே.ஜெரோம் எப்படி எப்படி யார் யார் எந்தெந்த விதமாக அவஸ்தைப்படுகிறார்கள் என பலே ஹாஸ்யமாக எழுதிய கட்டுரைகள் எங்களுக்கு விளக்கம் சொல்லுவார்கள் டி.கே.சி. அவர்கள்.

ஆங்கிலக் கவிதைகளும் எங்களுக்கு அழகாக விளக்கம் சொல்லி படிக்க வைப்பார்கள்.

நானோ டி.கே.சி. பேரன் நடராஜனோ பள்ளிக்கூடம் சென்றவர்கள் இல்லை. ஆங்கிலம் பள்ளிக்கூடத்தில் படித்தவர்களும் இல்லை.

டி.கே.சி. அவர்கள்தாம் எங்களுக்கு ஆங்கிலம் கற்பித்தார்கள். அவர்கள் கற்பிக்கும் பாணி முற்றிலும் மாறுபட்ட பாணியாக இருக்கும்.

கி,நி,சி,ஞியில் இருந்து ஆரம்பித்தோ C+A+T= CAT பூனை என்றோ கற்பிக்க ஆரம்பிக்கவில்லை.

எடுத்த எடுப்பிலேயே ஹிந்து பத்திரிக்கையை எடுத்து விளக்குவார்கள். அதையே படிக்கச் சொல்லுவார்கள். நாளடைவில் மொழிபெயர்க்கச் சொன்னார்கள். அர்த்தம் தெரியாத ஆங்கில வார்த்தை வந்தால் ஆங்கிலத்திலே அப்படியே எழுதச் சொல்லி விடுவார்கள்.

மறுநாள் அதற்கு அர்த்தம் சொல்லி விளக்குவார்கள். இப்படியே நாங்கள் ஆங்கிலம் ஓரளவு கற்றுக்கொண்டோம்.

தான் அனுபவித்து ரஸிக்கும் தன்மையை பிறரிடமும் காணத் துடிப்பார்கள். மிகவும் எளிமையை விரும்பியவர்கள். செட்டான சுத்த வாழ்க்கையை வாழ்ந்தவர்கள். விருந்தினரை உபசரிப்பதில் உள்ள மகிழ்ச்சி உலகத்தில் வேறு ஒன்றும் இல்லை என்பதைக் கண்டவர்கள். அப்பேர்பட்ட ஒரு ரஸஞானி விட்டுச் சென்ற செல்வங்கள் ஏராளம். அவற்றை ரஸிப்பதே நாம் அவர்களுக்குச் செய்யும் தொண்டு.

# கு. அழகிரி சாமி

1943ஆம் வருஷத்தில் அக்டோபர் அல்லது நவம்பர் மாதம் தென்காசியிலிருந்து குற்றாலத்திற்கு நடந்து சென்று, டி.கே.சியைச் சந்திக்கின்றார். கு. அழகிரிசாமி, அவரிடம் அறிமுகப்படுத்திக் கொள்கிறார்.

(பக்கம் 10,11)

"தென்காசியிலிருந்து வருகிறேன். சப்&ரிஜிஸ்தரார் ஆபிசில் கிளார்க் வேலை பார்க்கிறேன். தமிழில் ஆர்வம் உடையவன். தங்கள் நூல்களை விரும்பிப் படிப்பவர்களில் ஒருவன்" என்று என்னை அறிமுகம் செய்து கொண்டேன்.

பின்பு ஊரும் பேரும் விசாரித்துத் தெரிந்து கொண்டு, தமிழ்க் கவிதையைப் பற்றிப் பேசத் தொடங்கும்போது, பக்கத்தில் இருந்த பாரதியார் புத்தகத்தைக் கையில் எடுத்தார்.

**திக்குத் தெரியாத காட்டில் - உன்னைத் தேடித்தேடி இளைத்தேனே!**

இந்தப் பாட்டை நாதநாமக்கிரியை ராகத்தில் பாவத்தோடு, உயர்ந்த அனுபவ ரசனையோடு பாடத்தொடங்கினார். பாட்டின் முழுக் கருத்தையும், தம்முடைய விமர்சனைத்தையும் அழகாகக் கூறிவிட்டு, இரண்டாவது முறை மிகுந்த ஈடுபாட்டுடன் பாடத் தொடங்கினார். நான் வந்து உட்கார்ந்த அரைமணி நேரத்திற்குள் இந்தப் பாட்டையும், மற்றும் பல தமிழ் பாட்டுக்களையும் உற்சாகத்துடன் பாடியதையும், அதைப்பற்றிப் பேசியதையும் பார்த்த போது, தமிழனிடத்தில் அவருக்க இருந்த ஈடுபாட்டை & மோகத்தை & வெகு சீக்கிரத்திலேயே உணர்ந்து கொண்டேன்.

அதன் பின் தற்காலத் தமிழகத்தின் வசன இலக்கியங்களைப் பற்றிப் பேசினோம். அநேக தமிழ் எழுத்தாளர்களின் எழுத்துக்களைப் பற்றிக் கேட்டேன். சிலவற்றைப் படிக்கவில்லை

என்று சொன்னார். சிலவற்றைப் பற்றி அவர் தெரிவித்த சில கருத்துக்கள் என் கருத்துக்கு மாறுபட்டும் இருந்தன.

அதன் பின், பேச்சு கம்பரைப் பற்றித் திரும்பியது, கம்பராமாயணத்தில் அவர் செய்திருக்கும் மாறுதல்களைப் பற்றியும் பேச்சு வந்தது. அப்பொழுது டி.கே.சி. சொன்னதாவது:

“மற்றத் தமிழ் பாடல்களில் குறைகள் இருந்தால் அவற்றைத் திருத்தி, நல்ல பாடல்களாக்கி அனுபவிக்கிறோம். ஆனால், கம்பர் பாடல்கள் குறையில்லாதவை. அவற்றைத் திருத்த வேண்டிய அவசியமே இல்லை. நான் கம்பராமாயணப் பாடல்களில் திருத்தம் செய்வதாகச் சொல்லுகிறார்கள். அது தவறு. இடைக்காலத்தில் கம்பராமாயணத்தில் சில பிழைகள் வந்து புகுந்து விட்டன. அந்தப் பிழைகளை ஒதுக்கி, நாம் கம்பரை அனுபவிக்க முயல்கிறோம். கம்பருடைய பாடல்களின் அசல் உருவத்தைக் கண்டு பிடிப்பதே நம்முடைய முயற்சி. இதைத் திருத்தம் என்று சொல்லுவது எப்படி?“

**வன்மையில்லை ஓர் வறுமையின்மையால்**

என்று தொடங்கும் கம்பருடைய பாடலில், கடைசி வரி, “வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்“ என்று இருக்கிறது. இதை “ஒண்மை இல்லை பல் கேள்வி ஓங்கலால்“ என்று டி.கே.சி. திருத்தினார். இந்தத் திருத்தத்தின்படியே, பிற்காலத்தில் அகப்பட்ட ஒரு ஓலை ஏட்டப் பிரதியில் பாடல் காணப்பட்டது என்று சிலர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். டி.கே.சியும் இந்தச் செய்தியைச் சொன்னார். & “இது போல ஒவ்வொரு பாட்டின் அசல் உருவத்துக்கு நாம் போகிறோமே ஒழிய, பாட்டுக்களைத் திருத்தவில்லை“ என்பார்.

இவ்வாறு தொடங்கி நட்பு, எப்பொழுது மாலைவரும் எனக்காத்திருந்து, தினந்தோறும் அலுவலகம் முடிந்தவுடன் டி.கே. சியைப் பார்க்கப் போய்வருவார். ஞாயிறு அன்று சொல்லவே வேண்டாம். அவர்கள் வீட்டில்தான் உணவு எல்லாமே. அவருடன் கிடைத்த அனுபவங்களை இங்கு பகிர்ந்து கொள்கிறார் நண்பர்களே! நாமும் அவருடன் அனுபவிப்போம்.

“தமிழன்தான் தமிழை அனுபவிக்க முடியும்; அதே போலத் தமிழன் தமிழைத்தான் அனுபவிக்க முடியும். ஆங்கிலக் கவியைப் படித்துத் தமிழன் அனுபவிப்பதாகச் சொல்லிக் கொள்ளுவதோ, தமிழ்க் கவிதையை ஆங்கிலேயன் படித்து அனுபவிக்க

முடியும் என்று சொல்வதோ வெறும் சவடால்தனம்" என்று டி.கே.சி. எண்ணிறந்த தடவைகள் எழுத்திலும் பேச்சிலும் தெரிவித்திருக்கிறார். பிற பாஷையின் சொற்களைப் புரிந்து கொள்ள முடியுமே ஒழிய, அனுபவிக்க முடியாது என்று அவர் கூறுவார். ஒருநாள் டி.கே.சி.யுடன் நானும் வேறு சிலரும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த பொழுது அவர் சொன்னார்:

"ஊரூராய்த் திரிந்தேன்" என்ற இரண்டு தமிழ்ச் சொற்களைச் சொல்லும்போது. அந்தச் சொற்களில் அடங்கியுள்ள துயர பாவத்தைத் தமிழனால்தான் புரிந்து கொள்ள முடியும். தமிழை நன்றாகப் படித்திருந்தாலும் பிற மொழிக்காரனால் இந்தச் சொற்களில் ஒலிக்கும் துயர பாவத்தை அனுபவித்துவிட முடியாது. இதோபோல ஆங்கிலத்தில் வரும் உணர்ச்சி மிக்க சொற் கோவைகளை ஆங்கிலேயனால்தான் அனுபவிக்க முடியுமே ஒழிய, நம்மால் முடியாது."

எல்லாப் பாடங்களையும் தமிழ் மொழியிலேயே தமிழ் மக்களுக்குக் கற்பிக்க வேண்டும் என்று வற்புறுத்துவார் டி.கே.சி. ஆங்கிலக் கவிதைகளைக் கூடத் தமிழில் கற்பிக்க வேண்டும் என்பார். ஆங்கிலத்தில் கவிதைகளைப் படித்துக் காண்பித்து, அவற்றிற்குத் தமிழிலேயே விளக்கம் கூறவேண்டும் என்பது அவர் கருத்து. இது சம்பந்தமாக டி.கே.சி. தெரிவித்த ஒரு செய்தியைக் கூறுகிறேன்.

பல வருஷங்களுக்கு முன் திருநெல்வேலி ஹிந்துக் கல்லூரியில் பாடத் திட்டங்களைப் பற்றி ஆலோசிக்கும் குழு ஒன்று கூடியது. அதில் ஆங்கில நாட்டு அறிஞர்கள் சிலரும் இருந்தனர். டி.கே.சி.யும் இருந்தார். ஆங்கில இலக்கியத்தைத் தமிழில் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று டி.கே.சி. கூறியதும், அந்த ஆங்கில அறிஞர்கள், "அது எப்படி முடியும்?" என்று கேட்டனர். உடனே டி.கே.சி. கூறியதாவது:

"ஏன் முடியாது? லத்தீன் கவிதைகளையும் கிரேக்கக் கவிதைகளையும் லத்தீன் விளக்கத்துடனும் கிரேக்க விளக்கத்துடனுமா நீங்கள் படித்தீர்கள்? உங்கள் தாய் மொழியாகிய ஆங்கில விளக்கத்துடன்தானே படித்தீர்கள்? அதுபோல, ஆங்கிலக் கவிதைகளைத் தமிழ் விளக்கத்துடன்

எங்களால் ஏன் படிக்க முடியாது? தமிழில் படித்தால் தான் எளிதில் விளங்கிக் கொள்ள சாத்தியமாக இருக்கும்.

இந்த வார்த்தைகளை அந்த அறிஞர்களால் மறுத்துக் கூற முடியவில்லை.

## தமிழில் தான் முடியும்

டி.கே.சி மற்றும் ஒரு விஷயத்தை அழுத்தமாகச் சொல்லுவார்: இந்த உணர்ச்சியை, இந்த உருவ அமைப்பில், இந்த பாவத்துடன் தமிழில்தான் தெரிவிக்க முடியும். கவிதைக்கு உகந்த பாஷை தமிழ்," இவ்வாறு எத்தனையோ சந்தர்ப்பங்களில் கூறியிருக்கிறார். அது மட்டுமின்றி, "தமிழ் செய்கிற காரியம் அது!" என்று, தமிழை வானளாவப் புகழ்வார். இவ்வளவு ஈடுபாட்டுடன், கனவிலும் நனவிலும் தமிழ் அனுபவத்தில் தோய்ந்து கிடக்கும் அறிஞர்கள் ஒரு சிலர்தான் இருக்க முடியும். அநேகருக்கு அளவு கடந்த தமிழ்ப் பற்று இருக்கும். ஆனால் டி.கே.சி. யிடம் இருந்ததைப் போன்ற அளவு கடந்த தமிழ் வெறியை அவர்களிடம் காணமுடியுமா என்பது சந்தேகமே. "தமிழுக்கு வாய்த்த அரும் புதல்வன்" என்று வெ.ப. சுப்பரமணிய முதலியாரைப் பாராட்டினார் டி.கே.சி. அதே சொற்களைக் கொண்டே டி.கே.சி.யையும் பாராட்ட வேண்டும்.

**எல்லோரும் அனுபவிக்கலாம்.**

தமிழ்க் கவிதைகளைப் படித்தவர்களும் பண்டிதர் களுமே அனுபவிக்க முடியாது என்று வெகு காலமாகப் "படித்தவர்கள்" காட்டிய பூச்சாண்டியை வெற்றிகரமாக முதல் முதலில் ஒழித்துக் கட்டியவர் டி.கே.சி.தான். தமிழ்க் கவி நம் இதய உணர்ச்சியோடு ஒட்டி வருவது. புரியக்கூடிய ஒன்றினால் தான் உணர்ச்சி ஊட்ட முடியும். நல்ல தமிழ்க் கவி நம் எல்லோருக்குமே புரியும் நாம் எல்லோருமே அனுபவிக்கலாம். பெண்கள், குழந்தைகள், படித்தவர்கள், படிக்காதவர்கள் எல்லோருமே அனுபவிக்கலாம். நான் எளிய விளக்கம் கொடுத்து, வெளியிட்ட முத்தொள்ளாயிரத்தை வீடுகளில் பெண்கள் தாங்களாகவே படித்து அனுபவிக்கின்றனர். இவ்வளவு எளிய காரியத்தைப் பிரம்மாண்டமான தென்று பயமுறுத்தி வந்திருக்கின்றார்கள்" என்ற டி.கே.சி. கூறினார்.

**டி.கே.சி. கூறிய ஒரு முக்கியமான நிகழ்ச்சியை இங்கே குறிப்பிடுகிறேன்.**

செட்டி நாட்டில் ஒரு ஊரில் டி.கே.சி. பிரசங்கம் செய்து கொண்டிருந்த போது, "அரவம் கரந்ததோ" என்று தொடங்கும் தனிப்பாடலைப் பற்றிப் பேசினார். நாயகளைப் பிரிந்த தலைவி, இரவில் கண் விழித்துக் கொண்டு அமர்ந்திருக்கிறாள். அவன் இல்லாத காரணத்தால், இரவு நீண்டுகொண்டே போவது போலத் தோன்றுகிறது. என்றாவது விடியுமா என்ற சந்தேகமே வந்து விட்டது! சூரியன் என்ன ஆனான்? அவனைப் பாம்பு விழுங்கிவிட்டதா? அல்லது அவன் ஏறிவரும் தேரின் அச்சு முறிந்து குதிரைகளும் கயிற்றை உருவிக்கொண்டு ஓடி விட்டனவா? அதுவும் இல்லையென்றால்...

அரவம் கரந்ததோ,
அச்சு மரம்இற்றுப்
புரவி கயிறுருவிப்
போச்சோ? - இரவிதான்
இரவிதான் - சூரியன் தான் என்ன ஆனான்?

மேற்கண்ட வரிகளைத் தலைவியின் உள்ளக் குமுறல் ஒலிக்கும் படியாக டி.கே.சி. திரும்பத் திரும்பப் பாடினார். "என்ன ஆனான் அந்தச் சூரியன்?" என்று சொல்லிவிட்டு, "இரவிதான்" என்று மீண்டும் பாடத் தொடங்கியதும், கூட்டத்திலிருந்த ஒரு சிறுவன்.

"செத்தானோ?"

என்றான். டி.கே.சி. திகைத்துவிட்டார். அந்தப் பையனுக்கு அந்தப் பாட்டுத் தெரியாது. மிகவும் சிறு பையன். ஆனால், பாட்டில் ஈடுப்பட்டுக் கேட்டுக்கொண்டதால், 'செத்தானோ?' என்ற சொல்லை அவன் அறியாமலே அவன் வாய் கூறிவிட்டது. பாட்டிலும் அதே சொல்தான் இருக்கிறது!

அரவம் கரந்ததோ?
அச்சு மரம்இற்றுப்
புரவி கயிறுருவிப்
போச்சோ? - இரவிதான்
செத்தானோ? வேறுவழிச்
சென்றானோ? பாங்கி! எனக்(கு)
எத்தால் விடியும்
இரா?

"தோழி! எனக்கு எப்படி இந்த இரவு விடியப் போகிறதடி!" என்று கதறுகிறாள் தலைவி.

கவிதையை யாருமே அனுபவிக்க முடியும் என்பதற்கு இந்த நிகழ்ச்சியும் ஒரு நல்ல உதாரணம்.

நிற்க.

'ரஸிகமணி' என்று டி.கே.சி.க்குப் பட்டம் கொடுத்தது நூற்றுக்கு நூறு பொருத்தமானது. தமிழை மட்டும்தான் ரஸித்தார் என்பதில்லை. நல்ல சாப்பாடு, நல்ல சங்கீதம், நல்ல சத்திரம் - இப்படி ஒவ்வொன்றையுமே தன்னை மறந்த ஈடுபாட்டுடன்

ரஸிப்பதில் டி.கே.சி. இணையற்றவர். ஏதேனும் உணவைப் பற்றி டி.கே.சி. இரண்டொரு வார்த்தைகள் சொன்னாலே போதும், அந்த உணவை நினைத்து நமக்கு நாக்கில் ஜலம் ஊறிவிடும். அவருடைய சொற்கள் அவ்வளவு உணர்ச்சி மிக்க சொற்கள். அவர் ரஸித்துத் தலையாட்டுவது பார்க்க வேண்டிய ஒரு காட்சி. நடுநடுவே 'பேஷ்' என்பதும், 'பலே!' என்று மெதுவாகவும் ஒரே தட்டாகவும் கைதட்டுவதும் அவர் ரஸிக மணி என்பதை நமக்கு ஞாபகப்படுத்திக் கொண்டேயிருக்கும்.

கவிதை உலகில், கம்பராமாயணம், திருக்குறள், கலிங்கத்துப் பரணி, திருவாசகம், ஆண்டாள் பாசுரங்கள் முதலியவற்றிலிருந்து, பாரதியார் கவிதைகள், அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து, நாடோடிப் பாடல்கள் வரை சிறந்த பாடல்களையெல்லாம் அனுபவிக்கப் பிறருக்குச் சொல்லுவார்.

டி.கே.சி.யின் தமிழ் நடை மிக மிக எளியது; சிறு குழந்தைகளும்கூடப் புரிந்துகொள்ளக் கூடியது. அடுக்கு மொழிகளோ, அலங்கார வார்த்தைகளோ போட்டு விஷயத்தை அமுங்கடிக்காமல், நேரடியாகப் பேசுவது போல இருக்கும் அவருடைய தமிழ்நடை பாட்டுகளுக்கு விளக்கம் கூற இதுவே லட்சிய நடை என்றாலும் தப்பில்லை.

கட்டுரைகளை அவர் மிகமிகச் சுருக்கமாகவே எழுதுவார்; கட்டுரையில் ஒன்று அல்லது இரண்டு பாட்டுக்களைப் பற்றித்தான் கூறுவார். அதிகமான பாட்டுக்களைப் பற்றித் தான் கூறுவார். அதிகமான பாட்டுகளைப் போட்டால், சாதாரண வாசகர்கள் திணறுவார்கள் என்பது அவர் கருத்து, அதே போல, பிரசங்கம் செய்வதும் சுருக்கமாகவே இருக்கும். அதிகமாகப் போனால், அரை மணி நேரம் பேசுவார். அவ்வளவு தான். ஒரு பாட்டை அவர் ரஸனையோடு திரும்பத் திரும்பப் பாடி விளக்குவார்; பாடுவார். பிரசங்கம் கேட்பவர்களுக்குப் பாட்டு மனப்பாடமாகிவிடும்.

டி.கே.சி. கவி எழுதுவதில்லை. "நமக்கு கவி எமுதவாவரும்? கவி என்பது பெரிய காரியம். நாம் தான் இங்கிலிஷ் படித்துக் குட்டிசுவராய்ப் போய் விட்டோமே" என்பார். ஆனால் அவர் இளமையில் பாட்டுகள் எழுதுவது உண்டென்று பின்பு அறிந்தேன்.

## தமிழிசை இயக்கம்

தமிழிசை இயக்கத் தந்தை டி.கே.சி. தான் என்ற கூறுவார்கள். தமிழிசையைப் பரப்பும் கருத்து அநேகருக்குப் பலகாலமாக இருந்து வந்திருக்கலாம். ஆனால் முதல் முதலில் அதைப் பிரபலமாக்கியவர் டி.கே.சி. தான். முதல் தமிழிசை மகாநாட்டுக்குத் தலைமை தாங்கியவர் டி.கே.சி. என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன்.

## தனி செல்வாக்கு

டி.கே.சி. ஒரு மிராசுதார். இவரைப் போன்ற மிராசுதார்கள் இருக்கிறார்கள். இவரைப் போன்று பி.ஏ.பி.எல். பேரறிஞர்கள் என்று பிரபலம் பெற்றவர்களும் இருக்கிறார்கள். ஆனால் டி.கே.சிக்கு இருந்த தனிச் செல்வாக்கு பிரம்மிக்கத்தக்கது.

தமிழ் இலக்கிய சம்மந்தமில்லாத பெரும் பணக்காரர்களும், பெரிய உத்தியோகஸ்தர்களும் கூட இவரிடம் அளவு கடந்த மரியாதை வைத்து சிஷியர்களைப் போலப் பழகுவார்கள். மந்திரிகளோ, திவான்களோ ஜமின்தார்களோ, லக்ஷாதிபதிகளான வியபாரிகளோ குற்றாலத்துக் போனால் டி.கே.சி.யின் தரிசனமே அவர்களுடைய முதல் வேலையாக இருக்கும், இதற்கு முக்கியமான காரணம் அவரிடம் காணப்பட அரிய பயன்பாடுதான்.

## உபசாரம்

'டி.கே.சி. விட்டு உபசாரம்' என்று ஒரு மொழியையே சிருஷ்டித்துவிடலாம். ஏனென்றால் அதை விடச் சிறப்பாக எங்கும் யாரும் உபசரித்துவிட முடியாது. தெரிந்தவர்களாலும் ஏழைகளாலும் அங்கு எல்லோருக்கும் நிச்சயமாகச் சமதையான வலவேற்பும் விருந்தும் உண்டு. அங்கு சென்றால் வாரக்கணக்கில் கூட அங்கேயே தங்கி விடத் தோன்றும். பல நாட்களுக்குப் பிறகு விடைபெற்றுக் கிளம்பினாலும், ("இன்னும் இரண்டு நாட்களுக்குப் பிறகு விறைப்பெற்றக் கிளம்பினாலும்,) "இன்னும் இரண்டு நாட்கள் இருந்து தான் போக வேண்டும்" என்று டி.கே.சி வற்புறுத்தாமல் இருக்கவே மாட்டார் அந்த அன்பையும் தமிழ் மணம் கமழும் சூழ்நிலையையும் பிரிந்து வருவது டி.கே.சிக்குக் கஷ்டமான நாள். குற்றாலத்தில் 'சீஸன்' சமயத்தில் டி.கே.சி. வீடு கல்யாண வீடுபோல் இருக்கும். தினந்தோறும் விருந்தினர்கள்

வருவார்கள். தமிழையும் உணவையும் ஒருங்கே ஊட்டும் திருமனை டி.கே.சி.யின் இல்லம். இங்கே ஒரு தமிழ்ப்பாட்டு ஞாபகத்துக்கு வருகிறது.

சிவகிரி என்ற ஜமீன் திருநெல்வேலி ஜில்லாவில் இருந்தது. சிவப்பிரகாசம் என்பது ஜமீன் தாருடைய பெயர். அவர் தமிழில் மிகவும் ஈடுபாடு கொண்டவர். புலவர்களை வரவேற்று உபசரிப்பவர். அவரைத் தேடிப் புலவர்களை வரவேற்று உபசரிப்பவர். (அவரைத் தேடிப் புலவர்களை வரவேற்று உபசரிப்பார்.) அவரைத் தேடிப் புலவர்கள் சென்றால், ஒரு கையிலே சாப்பாடும், ஒரு கையிலே தங்க நாணயங்கள் கட்டிய முகப்புமாக வரவேற்புரைகளைக் கூறிக்கொண்டே அவர் எதிர் கொண்டு அழைக்க வருவாராம். இது அவருடைய இயற்கையாம் & இவ்வாறு ஒரு புலவர் பின் கண்ட அழகான வெண்பா மூலம் பாராட்டினார்.

ஒரு கையிலே அன்னம்,
ஒரு கையிலே சொன்னம்,
வருகையிலே சன்மான
வார்த்தை - பெருகுபுகழ்
சீமானாம் எங்கள்
சிவப்பிரகா சத்திரிவன்
கோமானுக்கு உள்ள
குணம்

டி.கே. சியை நினைக்கும்போதெல்லாம் எனக்கு இந்த வெண்பா ஞாபகத்துக்கு வரும்.

டி.கே.சி.யைப் பார்க்கப் போகிறவர்கள், அவரோடு பணக்காரர்களும், படிப்பாளிகளும், பெரிய அந்தஸ்தில் உள்ளவர்களும் அமர்ந்திருக்கும் போதுதான் அவருடைய பெருங் குணத்தையும், உபசரிப்பையும் நன்றாக அறிய முடியும். எல்லோரையும் சமானமாக நடத்துவது மட்டுமின்றி, சாதாரண சமயங்களைவிட அந்தச் சமயத்தில் அளவுக்கு மீறிய கௌரவமும் கொடுப்பார். இந்த ஒப்பற்ற பெருந்தன்மை டி.கே. சியைத் தவிர வேறு எந்தப் பணக்காரரிடத்திலும், மிராசுதாரிடத்திலும் இருந்ததாகக் கேள்விப்பட்ட தில்லை.

தோற்றம் முதலியவை

டி.கே.சி. சுமாரான உயரமுடயவர். பொன் போன்ற மேனி; கூர்மையான கண்கள்; கூரிய முக்கு; அழகான பொன் வெள்ளை

மீசை; கம்பீரமான பார்வை; வெண்ணிறக் கதராடை; நெற்றியில் ஒரு சந்தனப்பொட்டு, எப்போதும் இதே தோற்றத்தில் தான் டி.கே.சி. காட்சியளிப்பார். அவருடைய கையெழுத்து, கூட்டெழுத்தாக இல்லாமல் தனித் தனியாக இருக்கும் முதல் வகுப்புப் படிக்கும் பையன்கூட எளிதில் வாசித்துவிடலாம். கவிகளை வசனம் போலப் படிப்பதை டி.கே.சி. அறவே வெறுப்பார். அவர் சுத்தமான கர்நாடக ராகங்களில்தான் பாட்டுகளைப் பாடிக்காண்பிப்பார். கவியின் ஒரு வரியைக் கூட வசனம் போல வாசிக்க மாட்டார். நாதநாமக் கிரியை, வசந்தா, ஆனந்த பைரவி, அடாணா, பைரவி, காம்போதி, தோடி முதலிய பல ராகங்களில், சுத்தமாக பாவத்துடன் பாடல்களை பாடுவார்.

தற்காலப் பள்ளிக் கூடங்கள் அறிவைக் கெடுத்து விடுகின்றன என்பது டி.கே.சி. யின் நிச்சய தீர்க்க கருத்து. சர்வகலாசாலைகளையும் பள்ளிக் கூடங்களையும் இடித்துத் தள்ள வேண்டும் என்றே கூறுவார். புத்திக்கே சம்பந்தமில்லாத விஷயங்களைக் குழந்தைகளின் மூளையில் புகுத்தி, அவர்களுடைய அறிவையும் ரசனையும் பாழடித்து விடுகிறார்களே என்று வருந்துவார். டி.கே.சி. தம் பேரப் பிள்ளைகளையும் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பவில்லை. வீட்டில் தான் அவர்களுக்கு கல்வி போதித்தார்.

# அன்னப்பறவையும் கி. ராஜநாராயணனும்

ராயங்கல ஸ்ரீ கிருஷ்ணராஜ நாராயணப் பெருமாள் ராமானுஜன் என்னும் கி. ராஜ நாராயணன் என்னும் கி.ரா., டி.கே.சியை முதலில் சந்தித்தது, திருச்சி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கால்ப் போகும் ஒரு சாலையோரத்தில், ஒரு குதிரை வண்டியில்தான். திருச்சிராப்பள்ளியில், ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்காலப் போகும் ஒரு சாலையோரத்து மரநிழலில், கு. அழகிரிசாமி, இரா. அண்ணாச்சி கறு.கந்தசாமி செட்டியார், லாயல்மில் நடராஜன் இத்தனைபேரும் உட்கார்ந்து, அன்றைக்கு வானொலியில் கு.அ. வாசிக்கப்போகும். கவிதையைப் படித்துக் கொண்டிருக்கும்போது ஒரு குதிரை வண்டி அவர்களைக் கடந்து போனது. அதில் ரசிகமணி உட்கார்ந்திருந்தார். அதைப் பார்த்தது அழகிரிசாமிதான். மாற்ற யாவரும் அதுக்குமுன் டி.கே.சி.யை பார்த்தது இல்லை. டி.கே.சி. என்று அழகிரிசாமி சொன்னதும் அனைவருமே எழுந்திருந்து அந்த வண்டிக்குப் பின்னால் குழந்தைகள் போல் ஓடி, வண்டி நின்றதும் வணங்கி நின்றார்கள்.

'டி.கே.சி. சிவப்பாய் இருப்பார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அந்த 'செகப்பு நிற' முகத்தில் ஜரிகை வெள்ளியாய் மினுக்கும் கொத்து மீசையும் காக்கை இறகு போல்க் கருத்த புருவமும், நிறத்துக்கு ஒத்ததான சந்தனப் பொட்டும், வெளேர் என்ற உடுத்த உடுக்கையும் கனத்த ஆண்குரலும், நேர்மையான கண்களும் பார்த்ததும் அப்படியே மனசில் பதிந்து போனது. என்று கி.ரா. தன் அன்னபறவை என்னும் டி.கே.சி பற்றிய நூலில் குறிப்பிடுகிறார்கள்.

இதன்பின் சில ஆண்டுகள் கழித்தே, வித்.ல. சண்முகசுந்தரம் மூலமாக குற்றாலம் சென்று டி.கே.சியை பார்க்கிறார்கள். டி.கே.சி அவரை 'நாயுடு' என்றே அழைப்பார். இவரை வைஷ்ணவர் என

பெயரால் அறிந்து உடனே பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் பாடலை முதலில் சொல்லி விளக்கினார். அன்றுமுதல் அடிக்கடி டி.கே.சியுடன் அமர்ந்து பாடல்கள் கேட்ட பின் கி.ரா. சுற்றலில் கேட்டலே ஆனந்தம் என்று டி.கே.சியுடன் பாடல்கள் கேட்டு, உள்வாங்கி, அவருக்கு இணையாகப் பகிர்ந்து கொள்வார். கி.ரா. இதனால் டி.கே.சிக்கு மிகவும் விருப்பமுடையோராகத் திகழ்ந்தார்.

டி.கே.சி. காலத்தில் அவரது பேரன்களின் அறிவு, இலக்கிய வளர்ச்சிக்கு, எவ்வாறு கல்கி உதவினாரோ, அதுபோல் டி.கே. சியின் மறைவிற்குப் பின் டி.கே.சியின் பேரனான தீப. நடராஜன் அவர்களைத் தனியே விட்டுவிடாது, அடிக்கடி இடைசெவலிருந்து குற்றாலம் வந்து விடுவார். பரிவோடு உறுதுணையாகவும், உற்ற தோழராகவும், வழிகாட்டியாகவும் இருந்தார். இலக்கியம் பக்கம் திசைதிருப்பினார். லியோ டால்ங்ஸ்டா, செகாவ், பால்ஸாக், மாபஸான், விக்டர் யூகோ, அலெக்ஸாண்டர் குப்ரின், ஒஹென்றி போன்ற பல படைப்புகளை அறிமுகம் செய்தார். இதெல்லாம் டி.கே.சியுடன் பழகிய பண்பாடுதான் என்று உறுதியாய்ச் சொல்ல முடியும்.

டி.கே.சி. போல் கிராவும் கடிதங்களின் படைப்புகளாலேயே உருவாகி விட்டவர். எந்தச் சூழ்நிலையையும், சுலபமாக எடுத்துக் கொள்ளும் பாங்கு, எந்தக் கருத்தையும் அவரது அணுகுமுறையில் விளக்கும் விதத்தால் ஒளிரச் செய்து விடுவார்.

கவியில்லாதவற்றை விலக்கி, கவிகளை எடுத்தாண்டதால் மனிதருள் அன்னப்பறவையென கி.ரா. டி.கே.சியைக் கூறுவார். அதுபோல் "அன்னப்பறவை" என்னும் நூலை டி.கே.சியின் முழுப் பரிமாணத்தையும் விளக்கும் வகையில் செய்து இருக்கிறார்.

எந்தக் கூட்டத்தில் கி.ரா. அவர்கள் பேசினாலும், டி.கே.சி.யோடு தொடர்பு படுத்தித்தான் முதலில் தொடங்குவார். டி.கே.சியை மறக்காது எடுத்துச் சென்று கொண்டிருக்கும் பண்பாளர்.

# "நல்வழிக்காட்டிய பேரொளி" வல்லிக்கண்ணன்

'தமிழ்ப் பண்பாடும் தமிழ்க் கவியும் ஒப்பற்ற வஸ்துக்கள்' & இப்படி உறுதியாகச் சொன்னார் ரசிகமணி டி.கே.சி.

தமிழ்ப் பண்பாட்டையும் நல்ல தமிழ்க் கவிதைகளையும் மிகவும் அனுபவித்து வியந்த உள்ளம் அவருடையதுதான். ரசித்து வியந்து பாராட்டியவற்றை மற்றவர்களும் அனுபவித்து மகிழ வேண்டும் என்று ஆசைப்பட்ட விசால மனம் அவருக்கு இருந்தது.

அதனால் அவர் தமிழ்க் கவிதைகளில் ஈடுபடக் கூடியவர்களிடம் கவிதை பற்றியும் தமிழ் பற்றியும் தமிழ் பண்பாடு குறித்தும் வியந்தோதினார். அவற்றைப் பிறர் ரசித்து அனுபவிப்பதைக் கண்டு ரொம்பவும் சந்தோஷம் அடையும் இயல்பைப் பெற்றிருந்தார் ரசிகமணி.

கவிதையின் ஜீவனைப் புரிந்து கொண்டு அதன் நயங்களை உணர்ச்சியோடு எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றிருந்த ரசிகமணி, தமிழ்க்கவிதை குறித்தும் தமிழ் பண்பாடு பற்றியும் 'பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே' என்று கருத்துக் கொண்டவர் போல், என்றும் எப்போதும் அவை குறித்தே பேசி மகிழ்ந்தார்; ரசிக நண்பர்களை மகிழ்வித்தார்.

திறமை கண்டவிடத்து அதை ஏற்றுப் பாராட்டும் பெரிய மனதை ரசிகமணி பெற்றிருந்தார். பாராட்ட வேண்டயவர்களைப் பாராட்ட வேண்டிய நேரத்தில் பாராட்ட வேண்டும் என்கிற மனம் பெரும்பாலோரிடம் காணப்படுவதில்லை. பண்பாட்டில் உயர்ந்த சான்றோர்கள் வளர்த்த நற்பண்பு இது. தமிழ்ப் பண்பாட்டின் உறைவிடமாகத் திகழ்ந்த ரசிகமணி அவர்கள் பாராட்டப்பட வேண்டியவர்களை மனமாறப் பாராட்டத் தயங்கியதேயில்லை.

அதே போல, கண்டிக்க வேண்டியவற்றையும், கண்டிக்கப்பட வேண்டியவர்களையும் அழுத்தமாகக் கண்டிக்க அவர் பின்வாங்கியதுமில்லை.

தமிழ்ப் பிள்ளைகளின் அறிவுக்கு ஊறு செய்த கல்வி முறையை அவர் வன்மையாகக் கண்டித்தார். பள்ளிக்கூடங்களையும், பிள்ளைகளின் மனவளர்ச்சிக்குத் தடையாக இருக்கிற கல்வி முறையையும் அவர் தீவிரமாக எதிர்த்தார். தற்காலக் கல்வித் திட்டமும் கல்வி நிலையங்களும் அறிவியலையோ அறிவையோ வளர்க்கத் துணை புரியவில்லை. என்று ரசிகமணி அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூறினார்.

"நேருக்கு நேராகப் படித்தால்தான் படிப்பு. வார்த்தைகளைக் கொண்டு ஏற்படுவது அல்ல. அப்படிப் படிப்பு ஏற்பட்டால், பள்ளிக் கூடத்தில் பிள்ளைகள் ஒரு மணி நேரத்துக்கு மேல் இருந்து தொலைக்க வேண்டாம்! 'டெக்ஸ்ட் புக்'குகள் சையன்ஸைச் சொல்லிக் கொடுத்து விடுமா?

"பள்ளிக்கூடங்கள் சையன்ஸையே கற்பிக்கவில்லை. கற்பிப்பது எல்லாம் அப்பாவி மாணவர்களின் மண்டைக்குள் வார்த்தைகளைத் திணிப்பதுதான். எல்லாம் அறிவை, பகுத்தறிவைக் கெடுக்கிற காரியம்! பெயர்களையும் சூத்திரங்களையும் பாராமல் படித்து அப்படியே பரீட்சைப் பேப்பரில் கொட்டிவிடுகிற காரியம்.

"எல்லாத் தவறும் எங்கே இருக்கிறது என்றால், அடிப்படையிலேயே இருக்கிறது! நேர்முகமான கல்விமுறை இல்லாததால்தான் இத்தனை வினையும்!"

இவ்விதம் உண்மைகளை எளிய வார்த்தைகளில், நேருக்கு நேர் பேசுவது போல், பழகு தமிழில் எடுத்துச் சொன்னவர் ரசிகமணி.

வார்த்தைகள் மீது மோகம் கொண்டு படாடோபமாகப் பேசியும் எழுதியும் வந்த பண்டிதர்களையும் அவர் பரிகசித்தார்; கண்டித்தார். எதற்கும் தமிழ்ப் பெயரும் தமிழ்ச் சொற்களும் பொருத்தப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறவர்களையும் டி.கே.சி. எதிர்த்தார்.

"பெயர் தமிழ்ப் பெயராக இல்லை என்ற காரணத்தால் தின்னாமல் விடுவதா, கையில் உள்ள ஹல்வாவை!" என்று கேட்டார் ரசிகமணி.

"வார்த்தைகளுக்காக அலைந்து நிற்கிற காரியம் பரிதாபமான காரியமே! சூரியனுக்குத் தக்க பிரதிபதம் கிடைக்காமல் போனால் அப்பாவிகள் கண்ணை இறுக மூடிக் கொள்வார்கள்! பாஷை உண்டாவதற்கு முன்னும் ஆதிமனிதன் சூரியனை இனம் கண்டு அனுபவித்துக் கொண்டான். ஏன், நம்முடைய கண் முன்னாலேயே பட்சிகள் சூரியனை இனங்கண்டு கொள்கின்றன.

சந்தோஷத்தால் பாடவும் செய்கின்றன. அகராதிக்காக ஆனந்தமாகப் பாடுவதைப் பறவைகள் ஒற்றிப் போடவில்லை! நம்முடைய கலைச்சொல் ஆக்கக்காரர் என்றால் கண்ணை மூடிக் கொண்டு 'கப்சிப்' என்று இருந்து விடுவார்!"

இவ்வாறு 'கிண்டல்' (பரிகாச) தொனியில் பேசுகிற & எழுதுகிற திறமையையும் வளர்த்தவர் ரசிகமணி.

"பாஷை என்றால் மக்கள் உள்ளத்தில் நிகழ்வதை வெளிப்படுத்துவததான். கோபமோ ஆத்திரமோ, சோகமோ, கருணையோ, மனசில் உண்டானால் அதை அப்படியே வாய் திறந்து மனிதன் சொல்லால் சொல்லி விடுகிறான். அவ்வாறு சொல்லுவதே வசனம்" என்று வலியுறுத்திய அறிஞர் அவர்.

அப்படி உள்ளத்தின் ஒளியை வாக்கினிலே ஒளியாக ஏற்றிக் காட்டியவர் டி.கே.சி. இலக்கியப் பிரியர்களுக்கு நல்ல வழியைக் காட்டிய பேரொளி அவர். தமிழ்ப் பண்பாட்டின் பெருமையையும் தமிழ் கவிதையின் சிறப்பையும் வியந்து பாராட்டி அவர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு ஆன 'இதய ஒலி' என்ற நூல் என்னை வசீகரித்த உயர்ந்த புத்தகங்களுள் முக்கியமானவற்றில் ஒன்று ஆகும்.

## தி.க.சி

1941ஆம் ஆண்டில் வல்லிக்கண்ணனின் அறிமுகம். அவர்கள் வீட்டில் ரசிகமணியின் "இதய ஒலி" புத்தகம் இருந்தது. அதைப் படித்தேன். அதன் தனித்துவமான நடையில், அந்த எளிமையில் கவர்ந்திழுக்கப்பட்டேன். வல்லிக்கண்ணனுக்கு டி.கே.சியின் வசன நடைபால் அத்துணை ஈடுபாடு இருந்தது. நான் அவர்களைப் பார்க்க போக வேண்டும் எனக் கூறினேன். உடனே வல்லிக் கண்ணனும், நானும், இன்னொரு நண்பர் வேலாயுதமும் கிளம்பினோம். திருநெல்வேலி சிறுபூந்துறையிலிருந்து தாமிரபருணி ஆற்றில் இறங்கி நடந்து, லு மைல் தூரத்திலுள்ள வண்ணாரப்பேட்டை சென்றோம். அங்கு டி.கே.சியை அவர்கள் வீட்டில் சந்தித்தோம். "தமிழ்க் கவிதைகள்" தங்களிடம் கேட்க வந்திருக்கின்றோம் என்றதும், அவர்களுக்கு அப்படியொரு ஆனந்தம். நாற்காலி போட்டு அமரச் சொன்னார்கள். முதலில் 'இதய ஒலி' புத்தகத்திலிருந்து சில விஷயங்கள் பேசினார்கள். 'எது கவிதை' என்றும், கவிஞரின் இதயத்திற்குள் நுழைந்து கவிஞனின் இதயமாகவே மாறி, கவிதையை எப்படி அனுபவிப்பது? ரசிப்பது என்று கற்றுக் கொடுத்தார் அந்த ரஸஞ்ஞானி ரசிகமணி. கம்பராமாயணத்திலிருந்து சில பாடல்கள், தனிப்பாடல்கள், குற்றாலக் குறவஞ்சி முக்கூடற்பள்ளு என்று பல பாடல்களை அனுபவித்தோம். அன்றைய 1 ½ மணிநேர அனுபவம்தான் இன்னும் எனக்கு எது கவிதை என்று கண்டுணர்ந்து, ரசிக்கக் கற்றுக் கொடுத்திருக்கின்றது. அவர் பாடும் வசந்தா ராகம் மிகவும் உள்ளத்தைக் குழைய வைத்துவிடும். அவர் சொல்லி, எல்லோரும் அனுபவித்த பாடலில் ஒன்று இன்னமும் பசுமையாய் என்னுடன் தங்கி நிற்கின்றது.

**"உள்ளம் மெள்ள மெள்ள**
**முருகனை நினைந்து உருகுதே!**
**முத்தம் கருகுதே!, கண்ணீர் பெருகுதே!**
**உச்சிக்கு ஏறி காமப் பித்தம்**
**கிறுகிறு வென்று வருதே!"**
**-அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து.**

பாடலை முதலில் பாடிக் காண்பித்து விடுவார். பின் பாடலை வரிக்குவரி அனுபவித்து நம்மை அனுபவிக்கச் செய்வார். நான் குற்றாலத்திற்கோ, தென்காசி வீட்டிற்கோ அவரைப் பார்க்கச் சென்றதில்லை. திருநெல்வேலி, பாளையங்கோட்டையில் எங்கு அவர் பேசினாலும் போய் கேட்டு விடுவேன். அவரிடம் மேட்டுக்குடித்தன்மை கிடையாது. யாவரையும் தமிழராய் ஒரே நிலையில் நிறுத்தி அழகுபார்த்தார். எனக்கு ஒரு ஆற்றாமை. நான் பிரசித்திப்பெற்ற டி.கே.சி. வீட்டுத் தோசையை ருசி பார்த்ததில்லை என்பதுதான். அவர்கள் காலத்திற்குப்பின் நடந்த அவருடைய பிறந்தநாள் விழாவிற்கு இதுவரை நான் சென்றதில்லை. ஆனால் டி.கே.சி. அவர்களது பேரன் திரு. தீப. நடராஜனுடன் நெடுங்காலத் தொடர்பில் இருக்கின்றேன். சுபாஷிணி! அவர் கம்ப ராமாயணத்தை மட்டும் ரசித்தவர் அல்ல. அவர் ஒரு சிறந்த கல்வியாளர். அவருக்கு மெக்காலேயின் கல்விமுறை பிடிக்கவில்லை. சமூக சீர்திருத்தவாதி. பண்பாளர். பெண்களைப் போற்றி மதிக்கத் தெரிந்தவர். பண்பாடு என்ற சொல்லைத் தமிழுக்குத் தந்தவரே அவர்தான். தமிழிசையை ஆழமாக ஆதரித்தவர். எல்லாவற்றையும் தாண்டி அவர் ஒரு முழு மனிதன். ஆம். ரசிகமணி டி.கே.சி. ஒரு பூரணமான மனிதன். அன்றே நான் அவரிடம் 'தீட்சைப்' பெற்று விட்டேன். இன்றுவரை அவரது ஒளி வழி நான் இலக்கியத்தை இரசிக்கின்றேன். நீங்களும் தமிழை அனுபவியுங்கள். எழுதுங்கள். வாழ்த்துக்கள் சுபாஷிணி! **தி.க.சி.யின் வார்த்தைகள்.**

திரு. தி.க.சி. அவர்களை நேரில் சந்தித்தபோதும் சரி, தொலைபேசியில் பேசியபோதும் சரி, சந்தோஷத்தைத்தான் எனக்கு அள்ளிக் கொடுத்தார். அப்படியே டி.கே.சி.யின் பண்பாடு அதில் தெரிந்தது. டி.கே.சியின் அலையில் ஆனந்தமாய் இருக்கும் தி.க.சியைத்தான் நான் சந்தித்தேன்.

"நீங்கள் மறக்க முடியாத நபர் என யாரைக் குறிப்பிடுவீர்கள்?" ரசிகமணி டி.கே.சியை நேரில் சந்தித்துப் பேசியதைத்தான் சொல்லனும். புதுமையும் பன்முக ஆளுமையும் கொண்ட தமிழறிஞர் என்கின்ற வகையில் ரசிகமணி மீது எனக்கு மிகுந்த மதிப்புண்டு. 1940ஆம் ஆண்டு, கல்கி, ராஜாஜி ஆகியோர்களின் துணையுடனும் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் ஆதரவுடனும் ரசிகமணி பேரார்வத்துடன் ஆரம்பித்த இயக்கம்தான் "தமிழிசை இயக்கம்". தமிழிசையால் மக்களை ஒன்றுபடுத்தலாம் என்பதே ரசிகமணியின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும். என்னைச் செதுக்கிய சிற்பி டி.கே.சி. ஆவார்.

"என்னைப் பொறுத்தவரையில் விமர்சனம் ஆக்கப்பூர்வமாக இருக்க வேண்டும். படைப்பாளியைக் கண்டனம் செய்து மட்டம் தட்டி மகிழக்கூடிய அழிவு வேலை விமர்சனம் கூடாது. என்பதில் உறுதியாக இருப்பவன்.

"நான் ஒரு எளிய தோட்டக்காரன். எல்லாச் செடிகளுக்கும் தண்ணீர் பாய்ச்சுவேன். மலர்கின்ற செடி மலரட்டும். எந்தச் செடியும் கருக எனக்கு மனம் இடம் தராது. நிறைய படைப்பாளிகளை உருவாக்குவதே எனது நோக்கம்."

("மானுடநேயத்தை, இலக்கியப் பலத்தில் இசைத்துக் கொண்டிருக்கும் இலக்கியத்தந்தை - தி.க.சி. - நேர்காணல் 'உயிர் எழுத்து' - இதழ் பிப்ரவரி 2011)

ஒரு தமிழ் இலக்கிய மாணவன் என்ற முறையிலும், தமிழ் எழுத்தாளன் என்ற வகையிலும் ரசிகமணி டி.கே.சி. அவர்களின் ஆளுமை, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு அவர்களின் அரிய பங்களிப்பு இவை பற்றி, எவ்வளவோ கூறலாம்.

என்னைப் பொருத்த அளவில் ரசிகமணி அவர்களைப் பற்றிச் சில சொற்கள்....சில வார்த்தைகள்...

தமிழ்க் கவிதையை, எப்படி அணுக வேண்டும், எப்படி ரசிக்க வேண்டும் என்பதை என்னைப் போன்ற இளைஞர்களுக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன்பே, கற்றுக் கொடுத்த மாபெரும் ஆசான் ரசிகமணி டி.கே.சி. அவர்கள்.

தமிழ்ப் பண்டிதர்கள், கம்பன் முதலியோரின் கவிதைகளை பதவுரை பொழிப்புரை, சொல்லி சாரமற்ற கவிதை ரசனையை வளர்த்து வந்த காலகட்டத்தில், ரசிகமணி அவர்கள் மிகவும் புதுமையாகவும், வித்தியாசமாகவும் தமிழ்க் கவிதையை எப்படி ரசிக்க வேண்டும், ஒரு கவிஞனின் இதய ஒலியை எப்படியெல்லாம்

கேட்க வேண்டும் என்று தமிழ் மக்களுக்கு இடையறாது எடுத்து விளக்கியவர் ரசிகமணி டி.கே.சி. ஆவார். இந்த வகையில், ஒப்பாரும், மிக்காரும் இல்லாத ஒரு 'மேதை' என்று தயங்காமல் டி.கே.சி. அவர்களைக் கூறலாம்.

அமரர் ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கள் ரசிகமணியை 'ரஸஞ் ஞானி' என்று வரையறை செய்தது சாலப் பொருத்தமாகும்.

தமிழ்க் கவிதையில் மட்டும் அன்றி, இசை, நடனம், ஓவியம், சிற்பம் போன்ற கவின் கலைகள் அனைத்திலும் பேரார்வம் கொண்ட ஒரு பன்முக வித்தகராகத் திகழ்ந்தார் ரசிகமணி.

இன்றைய தமிழ்க்கல்வி முறையில் டி.கே.சி. அவர்களுக்கு கடுமையான அதிருப்தியும் கோபமும் உண்டு. இளைய தலைமுறையினரின் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் 'அது' பெரும் இடையூறாக விளங்குகிறது எனவே, அதில் அடிப்படையான மாற்றங்கள் வரவேண்டும் என்று ரசிகமணி விரும்பினார். இந்த வகையில் டி.கே.சி. தலைசிறந்த கல்வியாளராகத் திகழ்ந்தார். டி.கே.சி.யின் கல்விக் கொள்கை மிகவும் வரவேற்கத்தக்கது.

1941-ல் இருந்து அவருடைய இதய ஒலி, கம்பர் யார், அற்புத ரஸம் முதலிய பல நூல்களையும், பத்திரிகைகளில் வெளிவந்த கட்டுரைகளையும் படித்து ரசித்தவன் என்ற முறையில், தற்காலத் தமிழ்க் கட்டுரையாளர் வரிசையில் ரசிகமணி டி.கே.சி. அவர்களுக்கு ஒரு தலையாய இடம் உண்டு என்பது என் கருத்து.

தற்காலத் தமிழ் வசன நடையைப் பேச்சு வழக்கிற்கு மிக அருகில் கொண்டு வந்து, தமிழ் உரைநடைக்கு உயிர்ப்பும், உயர்வும் அளித்தவர் ரசிகமணி டி.கே.சி. ஆவார். அவரது வசன நடை தனித்துவமிக்கது. வாசகர் மனதில் ஆழமாகப் பதியக் கூடியது; எளிமையும் இனிமையும் வாய்ந்தது.

டி.கே.சி. அவர்களின் 'மனித நேயம்' மிக உன்னதமானது. அவர், ஜாதி, மத, இன, பேதங்களுக்கு அப்பாற்பட்ட பெரிய இதயம் படைத்தவர். தமிழ் மொழி, தமிழ்க்கலை, இலக்கியம், பண்பாடு இவற்றில் ஆர்வம் உள்ள எந்த மனிதன், எந்த நேரத்தில், அவரை அணுகினாலும் அவனிடம் தமிழ்க் கவிதையின் பல்வேறு சுவைகளை அற்புதமாக எடுத்துரைக்கும் ஆற்றல் வாய்ந்தவர், இப்படிப்பட்ட தலைசிறந்த கவிதா ரசிகரை என் வாழ்நாளில் இதுவரை நான் கண்டதில்லை.

ரசிகமணி அவர்கள் கவிதை பற்றிய கதாகாலட்சேபக்காரரோ, பழைய பஞ்சாங்கமோ அல்லர். அவர் ஒரு பகுத்தறிவுவாதியாகவும்,

விஞ்ஞானியாகவும் திகழ்ந்தார்.

சமூக நீதிக்காகவும் முன்னேற்றத்திற்காகவும், சமத்துவத்திற்காகவும் வாழ்ந்த பெரியவர் அவர். இவை அவரது வாழ்க்கைத் தத்துவமாகவே விளங்கின.

"தமிழ்க் கவிதையில் உருவமே பிரதானம்" என்ற கொள்கையை வலியுறுத்தி வந்தார். இதில் கருத்து மாறுபாடு கொண்டோரும் கூட, எந்தக் கலை வடிவத்திலும், உள்ளடக்கம் மட்டுமின்றி உருவமும் மிக முக்கியமானது என்பதை உணரச் செய்தவர் ரசிகமணி டி.கே.சி. ஆவார்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் கவிதை நயத்தை என்னைப் போன்றவர்களுக்கும் தமிழ் உலகம் முழுமைக்கும் மிகச் சிறப்பாக அறிமுகப்படுத்தியவர்கள் ரசிகமணி டி.கே.சி. அவர்கள். இது டி.கே.சி. அவர்களுடைய இலக்கிய வாழ்வில் மிகச் சிறந்த பணிகளில் ஒன்றாகும்.

(ரசிகமணி கட்டுரைக் களஞ்சியம், தொகுப்பாசிரியர், தீப. நடராஜன், காவ்யா சண்முக சுந்தரம், முதற்பதிப்பு செட் 2006 பக்கம் XIII, XIV, XV)

"இன்றைய நுகர்வுக் கலாசார சூழ்நிலையில், ரசிகமணி அவர்களின் வாழ்வும் படைப்புகளும் தமிழ் மக்களை மேன்மையான நிலைக்கு இட்டுச் செல்லும். தற்காலத்தமிழ் கலை, இலக்கிய வரலாற்றில் எந்தத் துறையை எடுத்துக் கொண்டாலும் ரசிகமணி டி.கே.சி. அவர்களின் சீரிய பங்களிப்பை எவரும் புறக்கணிக்க இயலாது. தமிழ்ப் பண்பாட்டுத்துறையில் தனி முத்திரை பதித்தவர் ரசிகமணி டி.கே.சி. நான் சொல்வதெல்லாம் முற்றிலும் உண்மை சுபாஷிணி! வெறும் புகழ்ச்சியில்லை" என்று அழுத்தம் திருத்தமாக ஒரு வாக்குமூலமாகவே டி.கே.சி.யைப் பற்றி என்னிடம் கூறினார்.

ரசிகமணி டி.கே.சி. அவர்கள் படைப்பாளிகளையும், சகமனிதர்களையும் சிறிய விஷயமாக இருந்தாலும் நன்கு பாராட்டுவார். அவர் பாராட்டும் விதத்தில் எதிரில் உள்ளவர்க்கு பாராட்டுப் பெறுபவர்மேல் பெருமதிப்புக் கூடிவிடும். இதே பண்பைத்தான் தி.க.சி. அவர்களிடம் நாம் காணலாம். நம் டி.கே.சி.யிடம் 'தீட்சை' பெற்றவராயிற்றே&இலக்கியத் தந்தை தி.க.சி.

# ம.பொ.சி

'1946ஆம் ஆண்டு இறுதியில் அல்லது 1947ஆம் ஆண்டு ஜனவரியில் இருக்கலாம்" என• வித்வான். ல. சண்முக சுந்தரம் அவர்களை நான் இந்த நூலுக்காக தரவுகள் சேகரிக்கச் சென்றபோது என்னிடம் இப்படிப் பேசத் தொடங்கினார்.

அப்போது, சென்னையில் கந்த கோட்டம் என்னும் கந்தசாமி கோயிலில் ஒரு சிறுவிழா. அறநிலையத்துறை அமைச்சர் திரு. வேங்கடசாமி நாயுடு விழாவிற்குத் தலைமை தாங்கினார். காங்கிரஸ் தலைவர் திரு. காமராஜர், பேராசிரியர் திரு. தே.பொ. மீனாட்சி சுந்தரம், ரசிகமணி டி.கே.சி. சிலம்புச் செல்வர் ம.பொ.சி. ஆகியோர் பேச்சாளர்கள்.

ரசிகமணி டி.கே.சி. அவர்கள் 20 நிமிடங்கள்தான் பேசினார்கள். பக்தி, பண்பாடு, வழிபாடு, சமயம் ஆகியவற்றில்தான் பேச்சு.

டி.கே.சி. பேச எழுந்தார். அந்த அறையின் சாளரத்தைச் சுற்றிக் காண்பித்தார். எதிரே என்ன தெரிகிறது பாருங்கள். கோபுரம் தெரிகிறது. கோயிலும் தெரிகிறது. கோயில் எப்பொழுது உண்டானது என்று தெரியாது. ஒரு 300 அல்லது 500 வருடங்கள் இருக்கலாம். ஆனால் அதுவல்ல விஷயம். பண்பாடும் பக்தியும் அல்லவா கோபுரமாக எழுந்து நிற்கின்றது. விண்ணை நோக்கி நிமிர்ந்து நிற்கும் கோபுரம் கல்லையும், மண்ணையும் சுண்ணாம்பையுமாக ஒட்டி நிற்கின்றது? நம் பண்பாடு, பக்தி, நம்பிக்கை, முன்னேற்றம் எல்லாவற்றிலுமல்லவா அது எழுந்து நிற்கின்றது. இல்லையென்றால், ரயிலில் போகும்போது தெரிகின்ற கோபுரத்தில், உடனே நம் கைகள் இரண்டும் உயர்ந்து கும்பிடுமா? உடம்பும் உள்ளமும் உருகி அல்லவா நிற்கின்றது. இப்படியொரு தொடக்கம் தொடங்கி பக்தி பற்றியும், பக்திக்கு உருவம் கொடுக்கும் தமிழ்பற்றியும் விளக்கத் தொடங்கினார்.

"இங்கிருந்து ஐந்து மைல் தொலைவில் இருக்கிறது திரு ஒற்றியூர். அங்கு ஒரு கோயில். பெரிய கோயில்தான். மூர்த்திக்கு

தியாகராஜப் பெருமாள் என்று பெயர்".

"தேரேறிப்பவனி வருகிறார் பெருமான். பக்தர் பரவசத்தில் மிதக்கிறார்கள். இதயத்தில் உள்ள பெருமானை பூப்போல எடுத்து தோளில் வைத்து ஆடுவது போல் ஆனந்தத்தில் திளைக்கிறார்கள். தன்வசம் இல்லாமல் அவன் வசம் ஆகிவிட்டார்கள் எல்லோரும்.

"அப்படி எல்லாம் அடிக்கடி வசம் அழிந்து பரவசப்பட்டிருக்கிறார் ராமலிங்க அடிகள். காதல் துறையில் வைத்து ஒரு பெண் சொல்வதாக தன் அனுபவத்தைச் சொல்கிறார் ராமலிங்க அடிகள்".

"முருகப் பெருமானின் தந்தையாகிய தியாகேசப் பெருமான் (சேயை அருளும் திருஒற்றி தியாகப் பெருமான்) பவனியைக் கண்ட என்னையே இழந்து விட்டேன் என்று தோழியிடம் பெண் சொல்வதாகப் பாடல்."

"தன்னுணர்வே போன நிலையில் சூழ நின்ற வட்டம் பற்றிய நினைவு இருக்கவா செய்யும்? வீட்டைப் பற்றியோ தாய் தந்தையர் பற்றியோ ஞாபகம் எப்படி வரும். "தன்னையே இழந்த நிலை. அதுதான் பரவசநிலை" இப்படி விளக்கம் கொடுத்து பாடலைப் பாடினார்.

**சேயை அருளும்**
**திருஒற்றி தியாகப்**
**பெருமான் வீதி**
**தனில்**
**தூய பவனி**
**வரக்கண்டேன். சூழும்**
**மாதர் தமைக்கா**
**ணேன்,**
**தாயை மறந்தேன்**
**அன்றியும் என்**
**தனை யும் மறந்தேன்**
**தலைப்பட் டேன்;**
**ஏ என் தோழி**
**என்னடி, நான் இன்ப**
**மயமாய் நின்றது**
**வே.**

மூன்று நான்கு தடவை இருக்கும். நிறுத்தி நிறுத்தி, அழுத்தி அழுத்திப் பாடிப் பாடி அனுபவித்தார் ரசிகமணி பாடலை.

“ராமலிங்கர் அனுபவமும் ஆனந்தமும் அப்படியே நம் கண்முன் நிற்கின்றன. காரணம் இதுதான், எதிரில் இருக்கிறதே கோவில் அதுதான். கோவில், கோபுரம், தேர், திருவிழா இவைகளில் நாம் இருக்கிறோம். கடந்த முப்பதினாயிரம் வருஷத்திய நம் அனுபவமும் ஆனந்தமும் சேர்ந்தே கிடக்கின்றன அவற்றில்“ என்று முத்தாய்ப்பு வைத்தார் டி.கே.சி.

விழாவில் கலந்து கொண்டவர்களுக்கு ஒரே ஆனந்தம். டி.கே.சி. மாதிரியே அவர்களும் பாடலை அனுபவித்தார்கள். தலைவர் வெங்கடசாமி நாயுடுவாலும், பெருந்தலைவர் காமராஜராலும் வாய்திறந்து பாராட்ட முடியவில்லை. டி.கே.சி.யை. ஆனால் மனம் திறந்து பாராட்டினார்கள். அதை அவர்களுடைய முகத்தில் பூத்த இன்பநிலை எடுத்துக் காட்டியது.

திருவாளர் டி.பி. மீனாட்சி சுந்தரமோ தம் பேச்சு முழுவதையும் ரசிகமணியைப் பாராட்டும் போக்கிலேயே கொண்டு போனார்.

இனி சிலம்புச்செல்வர் ம.பொ.சி. அவர்களோ தன்னையே இழந்துவிட்டார்கள். ராமலிங்கர் நிலைக்கே ஆளாகி விட்டார்கள். திருவாளர் ம.பொ.சி. அவர்கள் மிகமிக இளைத்துப் போயிருந்தார்கள் அந்த வேளை விடுதலைப் போராட்ட வீரசிங்கமாகிய ம.பொ.சி. அவர்கள் வெஞ்சிறைக் கொடுமையால் வெளுத்துப்போய், களைத்துப் போய் சோர்ந்திருந்தார்.

“இதுவல்லவா நான் வணங்கும் தெய்வத்தமிழ், இந்தத்தமிழை (டி.கே.சி.யின் தமிழைத்) தான் என்னுள் கனவு கண்டு கனவு கண்டு இன்புறுகிறேன்“ என்று அந்த நிலையிலும் ரசிகமணியின் பேச்சை மனதாரப் பாராட்டினார்.

சென்னையில் கல்கி ஆசிரியர், திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் வீட்டில் தங்கி இருந்தார் ரசிகமணி. விழா முடிந்த மறுநாள் காலை பத்து மணிக்கெல்லாம் ம.பொ.சி. அங்கு வந்தார். முதல் நாள் டி.கே.சி. பேசியதை வெகுவாகப் பாராட்டினார்.

“பேஷ், பேஷ், எப்படி அனுபவிக்கிறீர்கள் தமிழை, உணர்ச்சியோடு ஒட்டி கவியை அனுபவிக்க உங்களைப் போல் ஒருவரைத் தேடித்தான் பிடிக்க வேண்டும் தமிழ்நாட்டில் என்று டி.கே.சி. சொன்னார்கள்.“

சிலப்பதிகாரத்திலிருந்து சிலபாடல்களை ம.பொ.சிக்கு ரசிகமணி சொன்னார்கள். கதையோடு கூடிய நீண்ட அகவல் பாடல்களை அல்ல. ஆற்றுவரி, கானல்வரி, குன்றக்குரவை, ஆய்ச்சியர்குரவை,

கந்துவரி, வேட்டுவவரி என்று பல விருத்தப்பாடல்கள் உண்டு. அருமையான தமிழிசையும், நடனஜதியும் நிறைந்த பாடல்கள் அவை.

சுமார் மூன்று மணிநேரம் கேட்டு அனுபவித்தார்கள் ம.பொ.சி. விடைபெறும் போது நாளையும் வருகிறேன் என்று சொல்லிப் போனார்கள்.

அப்படியே தொடர்ந்து ஒருவாரம் வந்து பாடல்களைக் கேட்டு அனுபவித்தார்கள் ம.பொ.சி. எட்டாவது நாளும் வந்து பாடல் கேட்டு அனுபவித்து விட்டுப் போகும் ம.பொ.சி.யிடம் டி.கே.சி. சொன்னார்கள்" இன்று ஞாயிற்றுக்கிழமை. வருகிற வியாழக்கிழமை குற்றாலம் போகிறேன். அன்று என்னுடன் நீங்களும் வருகிறீர்கள்" என்று.

திரு. ம.பொ.சி. அவர்களை அழைத்துப்போய் ஒரு மாத காலமாவது விருந்தினராக வைத்திருந்து அவர்கள் உடல்நிலையைத் தேற்றி விட வேண்டும் என்று டி.கே.சி.க்கு ஒரே ஆசை. ஆத்திரமும் கூட. ஆனால் ம.பொ.சி. அவர்களோ "நீங்கள் குற்றாலம் போகும்வரை இங்கு வந்து பாடல் கேட்கிறேன். குற்றாலத்துக்கு பின்னொரு முறை வருகிறேன். இப்பொழுது சென்னையில் முக்கியமான வேலைகள் இருக்கின்றன" என்று சொல்லி விட்டார்கள்.

சொன்னது சொன்னபடியே டி.கே.சி. குற்றாலம் புறப்படும் நாள் வரை கல்கி வீட்டுக்கு வந்து தமிழையும், கவியையும் அனுபவித்தார்கள். அப்படியே நான்கு மாதம் கழித்து மே மாதம் குற்றாலத்துக்கும் வந்தார்கள். ம.பொ.சி. அவர்களுக்கு ஒரு தனி ஜாகை ஏற்பாடு செய்து கொடுத்தார்கள் டி.கே.சி.

தினந்தோறும் காலை, மாலை அருவி நீராடல் வேளா வேளைக்குப் பக்குவமான, அறுசுவை உணவு, டாக்டர் அண்ணாமலைப் பிள்ளை அவர்களின் சோதனையும், மருத்துவமும். தமிழ்க்கவி இன்பத்தில் திளைத்தல் இப்படியாக அமைந்தது. இரண்டு வாரத்தில், ம.பொ.சி. அவர்களின் உடல்நிலை சீராகிவிட்டது.

ஒருநாள் மாலையில் ஐந்தருவிச் சாலையில் டி.கே.சி.யும் ம.பொ.சி.யும் நடந்து போனார்கள். கவி, கலை, தமிழ் சம்பந்தமாகப் பேசியபடியே நடந்து போனார்கள். அப்பொழுது ம.பொ.சி. கேட்டார்கள். "பச்சைக் குழந்தையும் அனுபவித்து ஆனந்திக்கும்படி லட்டு லட்டாய் எடுத்துக் கொடுக்கிறீர்கள் பாடல்களை. அரிய பெரிய தத்துவங்களையும் அப்படியே

கொடுக்கிறீர்கள். அப்படி இருந்தும் தமிழ்ப்புலவர்கள் ஏன் உங்களை வெறுக்கிறார்கள்“ என்று.

கடகட வென்று சிரித்தபடியே டி.கே.சி. சொன்ன பதில் இதுதான் “தமிழ்ப் புலவர்களைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும் நாம். நீங்கள் தமிழை அனுபவிக்கிறீர்கள். ஆனந்தத்தில் திளைக்கிறீர்கள். கவியை அனுபவித்து ஆனந்த பரவசத்தில் திளைக்கும் உங்களைப் பார்த்து நானும் ஆனந்தம் பெறுகிறேன். இந்த ஆனந்தத்தை விட்டுவிட்டு புலவர்களை நோக்கி ஏன் வருந்த வேண்டும் நாம்.“

“நீங்கள் ஒருவர் போதும், உண்மையாக அனுபவிக்கிறவர் ஒருவர் இருந்தால் போதும். ஆயிரம் பண்டிதர்கள் ஒன்று சேர்ந்தாலும் அசைக்க முடியாது தமிழை“. உணர்ச்சியோடு இப்படிச் சொல்கிற பொழுது அவர்களுடைய முகத்திலும் கண்ணிலும் ஒரு அற்புத ஒளியே சுடர்விட்டுப் பிரகாசித்தது. அதைப் பார்த்து அப்படியே புல்லரித்துப் (விதிர் விதிர்த்து) போனார் சிலம்புச் செல்வர்.

உற்ற நண்பர்கள் பலரிடமும் டி.கே.சி.யின் நம்பிக்கையையும், உறுதியையும், தெளிவையும் எடுத்துச் சொல்லி வந்தார் திரு. ம.பொ.சி. சிலம்புச் செல்வர்.

# கி.ரா. திருமலையப்பன் பார்த்த டி.கே.சியின் மூன்று முகங்கள்

டி.கே.சி. முதலில் ஒரு தேர்ந்த இரசிகன். அதன்வழி மாமனிதன் ஆக மடைமாற்றம் பெறுகிறார். இவை இரண்டின் அடிப்படையில் தெளிந்த ஞானியாகி விடுகிறார்.

சட்டம்படித்து வழக்கறிஞர் ஆன டி.கே.சி கையில் கம்பராமாயணம் அமர்ந்து, தன்னை இனங்கண்டு அனுபவிக்குமாறு வேண்டிக்கொண்டு நீங்காத அமர்வை அவரது இதயத்தில் இடம்பிடித்துக் கொண்டு விட்டது. எல்லாம் கம்பனின் மாயம். கம்பரைக் கண்டவுடன், இலக்கியக் கடலில் மூழ்கி மூழ்கி உண்மையான முத்துக்களைத் தெரிந்தெடுக்கக் கற்றுக்கொண்டேன். கண்டதும் மட்டுமல்லாது அனுபவித்தார். அனுபவித்தது மட்டுமல்லாது அதை, அந்த ஆனந்தத்தை நமக்கு அள்ளி அள்ளிக் கொடுத்தார்.

அந்த ஆனந்தத்தின் கொடைதான் அவரது பேச்சு, கட்டுரைகள், கடிதங்கள் ஆகும். டி.கே.சியின் பேச்சைக் கேட்டவர் ஒருசிலரே அவர்களது "மலரும் நினைவுகளை நாம் கேட்கும் போது, அந்நாளில் நாம் பிறக்காமல் போய்விட்டோமே என ஏக்கம் நம்மைக் கவ்விக் கொள்ளும். கிட்டதட்ட 60 ஆண்டுகளுக்கு முன் எழுதியவை டி.கே.சி.யின் கடிதங்கள். ஆனால் இப்பவும் நாம் வாசிக்கப் புதியதாய் அன்றலர்ந்த முல்லையாய் மணமாய் புத்துணர்வாய் இருக்கின்றன. இதன் காரணம் உண்மையின் அடிப்படையில் எழுதிய எளிமையும் தெளிவும் ஆகும். "அவை எல்லாம் கலை அந்தஸ்து பெற்றவை. படிக்கப்படிக்கத் தெவிட்டாத இலக்கிய இரத்தினங்கள்" என்றும் ஜஸ்டிஸ் எஸ். மகாராஜனின் கூற்று ஒன்றே போதுமே! வேறு யார் சொல்ல வேண்டும் அன்பர்களே!

வாழ்க்கை என்பது ஆனந்த மயமானது என்ற எண்ணம் கொண்ட டி.கே.சி. யாம் பெற்ற இவ்வின்பம் வையகம் பெறுக என்ற நன்னோக்கோடு பிறரிடம் பகிர்ந்து கொண்டார். அதேசமயத்தில் & அது நிலையில்லாதது என்ற பேருண்மையையும் தெரிந்தவர்.

வாழ்க்கையின் தத்துவத்தையும் ரகசியத்தையும் புரிந்து கொண்ட டி.கே.சி. அவர்கள் திருமூலரையும் உணர்ந்தவர்கள். அதனால் எவ்வித சலனமும் சஞ்சலமும் கொள்ளாமல் ஆனந்தமயமாகவே வாழும் மெய்ஞானியான மாமனிதராக ரசிகமணி விளங்கினார். “கர்த்தர் நல்லவர் என்பதை ருசித்துப் பாருங்கள்“ என்று பைபிளில் ஒரு வசனம் இருக்கின்றது. அருமையான வசனம். சத்தியமான வசனம். “தமிழ்க்கவிதைகள் சுவையானவை என்பதை ரசித்துப் பாருங்கள்“ என்று சொல்லி நம்மை அழைக்கிறார் டி.கே.சி.“ என்ற அவருடைய சொல் உண்மை. வெறும் புகழ்ச்சியில்லை என்கிறார் திரு. கி ரா. திருமலையப்பன் அவர்கள்

‘ரசிகமணி டி.கே.சி
நம்மவர்க்குத் தமிழ்க் கவிதைப்
பசிஎடுக்க வைத்துதவும்
குற்றாலப் பத்யன்றோ’ - தொ.மு.சி. ரகுநாதன்

# டி.கே.சியுடன் சில நினைவுத் தடங்கள்

- கலைமணி தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்
- மீ. ப. சோமு
- ஜெயபால்
- டி.கே. தீத்தாரப்பன்
- தீப. நடராஜன்
- டி. குத்தாலிங்கம்
- அ. தீத்தாரப்பன்
- ஜி. சி பட்டாபிராமன்
- ஸ்ரீவி. ப. இராஜாராம்
- நரேந்திர குமார்
- சுந்தா

# பொதிகை முனைவர் டி.கே.சி – கலைமணி பாஸ்கரத் தொண்டைமான்

கிட்டத்தட்ட முப்பது வருஷத்துக்கு முன் திருநெல்வேலி இந்து கலாசாலையிலே நான் ஒரு மாணவன். ஒருநாள் மாலையிலே கல்லூரி மண்டபத்தில் டி.கே.சி.யின் பேச்சு. மாணவர்களும் பெரியோர்களும் நிறைய இருந்து பேச்சைக் கேட்டனர். பேச்சு, கவிச் சக்கரவர்த்தி கம்பனது கவிதையைப் பற்றி. ராமனுக்குப் பட்டம் சூட்டத் தீர்மானித்து விட்டார் தசரதர். சிற்றரசர்களும் மந்திரக் கிழவர்களும் ஒத்துக் கொண்டு விட்டார்கள். அவர்களுக்கு எல்லாம் ஒரே எக்களிப்பு இதே செய்தியை, கோசலையின் தாதிப் பெண்கள் நால்வரும் கேட்கிறார்கள். அதைக் கோசலையிடம் சொல்ல விரைகிறார்கள்; ஓடுகிறார்கள். அவர்கள் நிலையை வர்ணிக்கிறார் கம்பர். அதைச் சொல்கிறார்கள் டி.கே.சி. விஷயத்தைத் தெளிவாக்கி விட்டு பாட ஆரம்பித்தார்கள்.

“ஆடு கின்றவர்
பண்அடை இன்றியே”

என்று.

அப்போது என் பக்கத்தில் இருந்த பள்ளி மாணவன் ஒருவன் ‘கொஞ்சம் வெளியே போய் வருவோமா?” என்றான். ‘இல்லை, நீ போய்வா’ என்றேன் நான். சரியென்று போய் விட்டான். கல்லூரிக்கு வெளியே உள்ள காப்பி ஹோட்டலுக்குப் போய் காப்பி சாப்பிட்டுவிட்டு, வெற்றிலை பாக்கெல்லாம் போட்டுவிட்டு, கொஞ்ச நேரம் வெளியில் நின்றவர்களிடம் அரட்டையும் அடித்துவிட்டு, அரைமணி நேரம் கழித்துத் திரும்பவும் ஹாலுக்குள் வந்தான். வந்தால் ரஸிகமணி டி.கே.சி. அவர்கள் அப்போதும்.

"ஆடு கின்றவர்
பண்அடை இன்றியே"

என்று ஆடிக்கொண்டே பாடிக் கொண்டிருப்பதைத்தான் கேட்டான். எத்தனை தரம்தான் அந்தப் பாட்டை & அந்தப் பாட்டை என்ன? அந்தப் பாட்டின் முதல் இரண்டு அடிகளைத்தான் திரும்பத்திரும்ப சொல்லிக்கொண்டிருந்தார்கள்! அதைக் கேட்ட நானும், திரும்பத் திரும்ப அவர்களுடன் சேர்ந்து பாடிக் கொண்டே இருந்தேன். வீட்டுக்குத் திரும்பினாலும், படுக்கையில் படுத்தாலும் இரண்டு அடிகளும் திரும்பத் திரும்ப நாவிலே நடமாடிக் கொண்டே இருந்தன, இரவு முழுவதும் இது அருவி ஆடும் அனுபவம்தானே!

இது நடந்தது 1925ல்

பத்து வருஷம் கழிந்தது ஒருநாள் மத்தியானம் டி.கே.சி. அவர்கள் வீட்டில் நானும் எங்கள் 'வட்டத்தொட்டி' அன்பர்கள் சிலரும் தங்கியிருந்தோம். எல்லோரும் ஒன்று ஒன்றரை மணிக்குச் சாப்பிட உட்கார்ந்தோம். சாதாரணமாக டி.கே.சி. அவர்களுடன் சாப்பிட உட்கார்ந்தால், சாப்பிட்டு முடிய ஒரு மணி நேரத்துக்குமேல் ஆகும். அன்று சாப்பாடு முடிகிற சமயத்தில் டி.கே.சி. பாடல் பாட ஆரம்பித்து விட்டார். காதலால் வாடுகிறாள் ஒரு பெண் - காமன் அவள்மீது மலர்க் கணைகளை ஏவுகிறான். அவளுக்கோ இந்தக் காமன் பேரிலே ஒரே கோபம். ஆனால் சில தினங்களில் அவள் காதல் கை கூடிவிடுகிறது; காதலனை அடைந்து விடுகிறாள். காதலனோடு கூடிய பின், காமனைத் துச்சமாக எண்ணிப் பேசுகிறாள், பாடுகிறாள். பாட்டு வந்தது; பாடுகின்றார்கள் டி.கே.சி.

எய்ய வந்த காமா!
    இனி உனக்கு வேலை இங்கென்?
உய்ய வந்தான் தன்னோடு
    உறவானேன் & பையவே
தேரைவிட்டு வெண் கரும்பைத்
    தின்றுவிட்டு செய் வந்த
போரை விட்டுப் பூ முடித்துப்
    போ!

பாடினார்கள் இந்தப் பாட்டைப் பல தடவை ரஸிகமணி. சாப்பிட்ட கையெல்லாம் நன்றாக உலர்ந்து போவதையும் அறியாமல் கேட்டுக் கொண்டேயிருந்தோம் எல்லோரும். பரிமாறிக் கொண்டிருந்த அண்ணியும் நின்றே கேட்டார்கள் அத்தனை நேரமும். கடைசியில் அண்ணி சொன்னார்கள். 'சரி & இன்னும் ஒரு பாட்டு வரட்டும். அதற்குள் டிபன் தயாராகி விடும். இந்த இலையை எடுத்துவிட்டு டிபனுக்கு இலை போடுகிறேன்' என்று. எவ்வளவு ரஸமான பேச்சு! என்னடா என்று கடிகாரத்தைப் பார்த்தால் மணி மூன்றரைக்கு மேலாகி இருந்தது அப்போது. ஒரு அநுபவம். இது நடந்தது 1935இல்.

# டி.கே.சி சில நினைவுகள்

மீ.ப. சோமு

திருநெல்வேலியில் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு "தேசிய வாலிபர் சங்கம்" என்ற இளைஞர் கூட்டம் நெல்லை ஜில்லா காங்கிரஸ் கமிட்டி ஆபீஸில் அதன் ஆதரவில் பணி செய்து வந்தது. இந்தச் சங்கத்தில் 1938ஆம் ஆண்டில் "பாரதியார் விழா" டி.கே.சி. அவர்களின் தலைமையில் தாஸ் மைதானத்தில் நடைபெற்றது. சங்கத்தில் என்னோடு துணை உறுப்பினர்களாக இருந்த நண்பர்கள், அன்றையக் கூட்டம் ஒரே இலக்கியமாக இருக்கும் என்றே எதிர்பார்த்தார்கள். தெய்வ பக்தி நிரம்பிய தொண்டர்கள் சிலர் "டி.கே.சி. இன்று பாரதியாரின் கண்ணன் பாடல்களை விளக்குவார்கள்" என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் நடந்தது என்னவோ வேறு!

நிகழ்ச்சிகள் தொடங்குவதற்கு முன்னால் இரண்டுபேர் எழுந்து "நாட்டு வணக்கம்" பாடினார்கள். உடனே தலைமை உரை ஆரம்பம் ஆயிற்று. ஆச்சரியம் என்னவென்றால், டி.கே.சி. அவர்களும் அதே "நாட்டு வணக்கத்தை"யே தாமும் பாடினார்கள். ஒரு சிறு - இல்லை - பெரும் மாறுதலுடன்.

"வந்தே மாதரம் என்போம்!" என்று "வந்தே மாதரத்தில்" அழுத்தம் கொடுத்துத்தான் எல்லோரும் பாடுவார்கள். ஆனால் டி.கே.சி. அவர்களோ,

"வந்தே மாதரம் என்போம்" என்று அந்த "என்போ"மில் உணர்ச்சியோடு அழுத்தம் கொடுத்துப் பாடினார்கள். உடனே சொன்னார்கள்.

இந்தப் பாட்டு எழுந்த காலம், நம் நாட்டில் "வந்தே மாதரம்" என்று சொன்னாலே வாய்ப்பூட்டுப் போட்ட காலம். அந்த வாய்ப்பூட்டை ஒரு அசைப்பு அசைக்கிறார் பாரதியார்.

"என்போம்."

வந்தே மாதரம் என்று நாங்கள் சொல்லத்தான் செய்வோம்.

அட அந்நியனே, உனக்கு அதன் அர்த்தம் தெரியவா செய்யும்? அர்த்தத்தைச் சொல்லுகிறோம் கேள்.

**எங்கள்**
**மாநிலத் தாயை**
**வணங்குதும் என்போம்!**
**வந்தே மாதரம் என்போம்!**

நீ என்ன எங்களைச் சொல்லக்கூடாது என்று கண்டிப்பது? அப்படித்தான் சொல்லுவோம் நாங்கள்.

வந்தே மாதரம் என்போம்!

இந்தப் பாடலைப் பாடி முடித்தார்களோ இல்லையோ, அங்கே கூடியிருந்த நூற்றுக்கணக்கான மக்களுக்கும் அப்படியே ஒரு வெறி உண்டாகி விட்டது! "வந்தே மாதரம்!" என்று கூட்டத்திலிருந்து ஒரு குரல் கம்பீரமாக எழுந்தது. அவ்வளவுதான்; எத்தனையோ நூறு குரல்கள் ஒன்றுசேர்ந்து ஏக காலத்தில் "வந்தே மாதரம்!" என்று ஆரவாரித்தன!

ஆயிரம் சொற்பொழிவுகளினால் உண்டாக்கக்கூடிய ஒரு வெறியை, ஐந்து நிமிஷத்தில் ஊட்டி விட்டது ரஸிகமணி டி.கே.சி. அந்தப் பாட்டுக்குச் சொன்ன விளக்கம்.

## உலகில் ஒருவராகத் தோன்றியவர்

ஜெயபால்

இப்படித்தான் டி.கே.சியைப் பற்றி ராஜாஜி கூறினார். ராஜாஜியின் அபிமானியாக இருந்த ஜெயபால் என்பவர் டி.கே.சி.யைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன் டி.கே.சியுடன் அபிமானியாக மாறிப்போனார். ராஜாஜி இரண்டாம் இடத்திற்குப் போய்விட்டார்.

"டி.கே.சி.யின் பெரிய சேவை, கம்பரை யாரும் செய்யாத விதத்தில் இனம் காண்பித்தார் என்பது பொதுவான எண்ணம். எப்படி காந்திஜியின் பெரிய சேவை இந்தியாவுக்கு சுதந்திரம் வாங்கித் தந்தது என்ற எண்ணம் மேலோங்கி நிற்கிறதோ அதே மாதிரி.

இரண்டுமே தவறு. காந்திஜியின் பெரிய சேவை இயந்திர பூதத்தின் பிடியிலிருந்து மனிதனை விடுவித்து மனித அவயவங்களுக்கும் உள்ளத்துக்கும் இசைந்த சுரண்டலற்ற பொருளாதார முறையை உலகுக்கு காண்பித்ததும், தேச அளவிலும் அஹிம்சா மார்க்கத்தை அமுல்படுத்த வழி செய்ததுமே.

டி.கே.சி.யின் மிகப்பெரிய சேவை கவிதை என்றால் என்ன? இலக்கியம் என்றால் என்ன? என்பதை முதலில் உலகுக்கு சரியாக சொல்லியதே.

அருவ விஷயங்களில் கண்டுபிடிப்புகளுக்கு பருப் பொருள்களில் கண்டுபிடிப்புகளை விட கூர்த்த மனம் வேண்டும். ஐன்ஸ்டீனின் கண்டுபிடிப்பை விட ப்ராய்டின் கண்டுபிடிப்பு அதிக சிரமம்.

மனித இயல்புகளையும், உயர்ந்த விஷயங்களையும் எவரிடமும் காணாத எளிமை இனிமையோடு அவரால், சொல்ல முடிந்தது. தன்னுடைய பேச்சுகள், எழுத்துக்கள் மூலம் வார்த்தைகளால் விவரிக்க முடியாத அளவுக்கு மானசிக இன்பத்தை அள்ளிக் கொடுத்ததில் இந்த நூற்றாண்டில் அவருக்கு இணை யாருமில்லை;

அநேக பகுதிகள் உலகின் எந்த பாஷை இலக்கியத்திலும் இந்த மாதிரி இல்லையோ என்று சொல்லத் தோன்றும்.

மானிட வாழ்வின் ஜீவநாடி அன்பு. அவருடைய கடித இலக்கியத்தில் ('டி.கே.சி யின் கடிதங்கள்') தன்னுடைய இருதயத்தையே நண்பர்களுக்கு பிய்த்து எடுத்து கொடுப்பதை பூரணமாக உணர முடியும்; இதை உணர முடியுமேயொழிய தமிழிலேயே கூட நம் சொந்த வார்த்தைகளால் இன்னொருவரிடம் எடுத்துச் சொல்ல முடியாது. வேறு பாஷையில் ஓரளவு உணர்ச்சியுடனாவது மொழி பெயர்த்து விடலாம் என்பது முடியாத காரியம்.

இப்பேர்ப்பட்ட டி.கே.சி யின் கருத்துக்கள் அவர் உயிரோடிருந்த காலத்திலிருந்த சிறிய வட்டத்துக்குள்ளேயே சுற்றிக் கொண்டிருக்கிறது. டி.கே.சி மறைந்து சுமார் இருபத்தைந்து வருடங்களாகிறது. புதிய தலைமுறையினருக்கு அவரைப்பற்றி தெரியவே தெரியாது. மற்ற மொழிகளைப் பார்க்கும் போது தமிழின் வளர்ச்சி குன்றிக் கொண்டிருக்கிறது. சுதந்திரத்திற்குப் பின் கல்வி திறந்து விடப்பட்டிருந்திருக்கிறது. வருஷா வருஷம் ஆயிரக்கணக்கான மாணவர்கள் உயர்நிலைப்பள்ளிகளை விட்டும் கல்லூரிகளை விட்டும் வெளிவருகிறார்கள். டி.கே. சியின் நூல்களை பாடப்புத்தகங்களாக வைக்க வேண்டாம். பள்ளி வாசகசாலைகளிலும் இடம்பெற வகை செய்வோம்; தமிழகமெங்கிலும் உள்ள பொது வாசகசாலையில் கண்டிப்பாக இடம் பெற வழிசெய்வோம். முதுநிலை பட்டதாரிகளுக்கு ரெபிரன்ஸ் புத்தகம் ஆக படிக்க வகை செய்வோம் (சிலைகள் வேண்டாம் ஞாபகச் சின்னங்கள் வேண்டாம். பெயர் வைத்தல் வேண்டாம்). இந்த சின்ன கைங்கர்யத்தை மட்டும் செய்துவிட்டாலே போதும் டி.கே.சியின் எழுத்துக்கள் தொட வேண்டிய உள்ளங்களை தொட்டு உருவாக்க வேண்டிய ஆட்களை உருவாக்கி விடும்; தமிழ் வளர்ச்சியைப் பற்றியோ தமிழின் எதிர்காலத்தைப் பற்றியோ எந்தவித ஐயப்பாடும் வேண்டியதில்லை. எண்ணற்ற டி.கே.சியின் பேச்சுக்கள், கடிதங்கள், கட்டுரைகள் இன்னும் பதிப்பாகவில்லை; ஏற்கனவே வெளிவந்த புஸ்தகங்களும், முக்காலே முண்டாணி வாசகசாலைகளில் கிடையாது; புஸ்தகக் கடைகளில் பல வருஷங்களாக கிடையாது. டி.கே.சி அன்பர்கள் இந்த கைங்கர்யத்தை சந்தோஷமாக செய்ய முன் வர வேண்டும். இதைச் செய்வது தமிழுக்குச் செய்யும் உபகாரமல்ல. நாம் நமக்கு அடுத்த தலைமுறையினரை கவனித்தோமானால் அடுத்த தலைமுறை அதற்கடுத்த தலைமுறையை கவனிக்கும். தமிழும்

குன்றாமல் நெடுங்காலம் வளர்ந்துகொண்டே போகும்." (உலக இதய ஒலி ரசிகமணி நூற்றாண்டுமலர், 1981 பக்கம் 99, 100)

நண்பர்களே! தமிழ் அன்பர்களே! திரு. ஜெயபால் அவர்களின் வேண்டுகோள்! சென்றமாதம் அவரை அவரது மொத்த துணிவியாபாரக் கடையில், துணிகளுக்கிடையில் சந்தித்தேன். "உன் அப்பா திருமலைதான் டி.கே.சி புகழை ஓயாது சொல்லிக் கொண்டு இருந்தார். நீங்களும் அந்தக் காரியத்தைச் செய்யுங்கள். அதுதான் நாம் அவருக்குச் செய்யும் கைங்கர்யம்" என வேண்டிக் கொண்டனர். அவர் உணர்வில் நான் கலந்து அப்படியே கரைந்து நின்றேன் அப்போது.

# என்னை உருவாக்கிய உத்தமர்

## - டி.கே. தீத்தாரப்பன்

விருந்தோம்பலில் அவர்கள் சடையப்ப வள்ளலை ஒத்தார்கள் என்று சொன்னால் உண்மை. உபசாரமல்ல. அவர்கள் வீட்டில் எந்நாளும் விருந்து நடந்து கொண்டிருக்கும். எப்போதும் அவர்கள் இல்லத்தில் இரண்டு தவசிப் பிள்ளைகள் உண்டு. என்றாவது விருந்தினர் இல்லை என்றால் அவர்கள் மனமும், அருமை மனைவியார் பிச்சம்மாள் அண்ணி மனமும் சோம்பிவிடும். 1915-ம் வருடம் வண்ணார்பேட்டையில் வக்கீல் தொழில் ஆரம்பமானது முதலே அவர்கள் வீட்டில் நாலைந்து உறவினர் பிள்ளைகள் தங்கிப் படித்து வருவார்கள். பின் இலக்கிய நண்பர் சிலர் வருவார்கள். வ.உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் அடிக்கடி வந்து, இருவரும் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபடுவர். மதிய உணவு நேரத்தில் 10,12 பேர்கள் உணவருந்துவார்கள்.

காலை நண்பர்கள் வந்தால் சிற்றுண்டி, காப்பி சாப்பிடச் சொல்வார்கள். பின் கம்பராமாயணம் தொடரும். இடை, இடையே தேவாரம், திருவாசகம், திருவள்ளுவர், நந்திக் கலம்பகம், வரும். மணிக் கணக்கில் உரையாடல் நடந்து கொண்டிருக்கும். வந்த நண்பர்களும் தம் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வார்கள். பகல் 1.30 மணிக்கு பிச்சம்மாளண்ணி அவர்கள் சாப்பிடும் நேரத்தை நினைவுபடுத்துவார்கள். இதற்கிடையே 12.30 மணிக்கும் சில அன்பர்கள் வந்து குழாத்துடன் சேர்ந்து கொண்டிருப்பர். அத்தனை பேருக்கும் பிச்சம்மாளண்ணியின் அக்ஷய பாத்திரம் அறுசுவை உண்டி அளிக்கும். திடீரென பலர் வந்தாலும் உணவு இருக்கும் - அப்படியொரு தெய்வ கடாக்ஷம் - பிச்சம்மாளண்ணி அவர்கள் மனத்தில், கையில் இருந்தது. உண்டியும் அளித்து, மனதுக்கும் இலக்கிய விருந்து அளிக்கும்

பேராற்றல் பெற்றவர்கள் டி.கே.சி. அவர்கள். அவர்கள் பள்ளித் தோழர் வக்கீல் ஆவுடையப்பிள்ளை அவர்கள் இந்த அதிசயப் பான்மையை கம்பரும், சடையப்ப வள்ளலும் ஒரே உருவாக கடவுள் நமக்கு உதவியுள்ளார் என்று பெருமிதத்துடன் பேசுவார்கள். அவர்கள் இந்தப் பாட்டை டி.கே.சி.யின் பக்தர்கள் முன் அரங்கேற்றினார்கள்.

"கம்பரும் வெண்ணெய் நல்லூர் வள்ளலும்
கலந்து பேசி
இம்பரில் பிறக்க எண்ணி
இருவரும் ஒருவராக
உம்பரின் தேவதேவை
ஒருவரும் கசிந்து கேட்க
செம்பதுமத் தோன் செய்தான் சிதம்பர
நாதமாலை."

சங்க நூல்களையே போற்றி அநுமானித்து வந்த பலர், கம்பராமாயணம், முத்தொள்ளாயிரம், கலிங்கத்துப்பரணி முதலிய பல காவியங்களை ஒதுக்கி வந்தார்கள். டி.கே.சி. அவர்கள்தான் அப்படி ஒதுக்கி வைக்கப்பட்ட நூல்களை, காவியங்களைத் தமிழர் சமுதாயத்தில் பிரகாசிக்கச் செய்தார்கள். முக்கியமாக கம்பராமாயணம் தமிழுலகத்தில் சிங்காதனம் வகிக்கச் செய்த பரம பக்தர் டி.கே.சி. ஆவார்கள். 1925, 1926-ல் முதல் முதல் திருநெல்வேலியில் தான் முன்னின்று இந்துக் கல்லூரியில் கம்பர் விழா நடத்தினார்கள். வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாரவர்கள், மு. இராகவ ஐய்யங்காரவர்கள், நாகர்கோவில் சிவராம பிள்ளை அவர்கள் முதலியோர் விழாவில் பங்கேற்று சிறப்பித்தார்கள். இப்பொழுது கம்பர் கழகம் எல்லா மாவட்டத்திலும் உள்ளது. கம்பர்விழா நெடுகிலும், டில்லி, பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களிலும் நடந்து, கம்ப ராமாயணத்தின் மகிமையைப் பறைசாற்றி வருகின்றன. இந்த மாபெரும் எழுச்சிக்கு முதல் வித்திட்டவர்கள் ரசிகமணி டி.கே.சி. அவர்களே. நலிவுற்றிருந்த பல அருங்கலைகளையும் பிரகாசிக்கச் செய்த கலைமாமணி டி.கே.சி. ஆவார்கள்.

கவிஞர் ஆயிரம் வருஷத்துக்கு ஒருமுறைதாம் வருவர் - ஆனால் டி.கே.சி. சொன்னார்கள்&நம் பாக்கியம் இந்த நூற்றாண்டில் நம்மிடையே இரு கவிஞர்கள் - சுப்பிரமணிய பாரதி, தேசிக

விநாயகம்பிள்ளை ஆகிய இருவர் தோன்றியுள்ளார்கள் என்று. ஆனால் கவியை ரசிக்கும் ரசிகர் இரண்டாயிரம் வருடத்திற்கு ஒருவர்தாம் தோன்றுவர். இங்கிலாந்து நாட்டில் ஜான்சன் என்ற பேரசனுக்கு பாஸ்வெல் (ஙிஷீஉஷ்மீறீ) என்ற ரசிக மேதை தோன்றினான். அப்படி அவதரித்தவர்கள்தான் நம் ரசிகமணி டி.கே.சி. அவர்கள் கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கு. இந்த நூற்றாண்டில் தமிழர்களாகிய நாம் பாக்கியசாலிகள். இரு கவிமணிகளும், ஒரு ரசிகமணியும் நம்மிடையே இந்நூற்றாண்டில் தோன்றி, தமிழ், தமிழ் பண்பாடு வளப்பமுறச் செய்தனர்.

# பண்பாடு தந்த பண்பாளர்
## - தீப. நடராஜன்

பண்பாடு என்னும் சொல் இன்று வெகு சாதாரணமாக எழுத்திலும் பேச்சிலும் இடம்பெறும் சொல். அது ஏதோ பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக தமிழோடு பழகி வந்த சொல் போல எளிமையும் அழகும் சக்தியும் கொண்டு வழக்கில் நிற்கிறது.

இப்படிச் சொல்வதைக் காட்டிலும் 'தமிழ்ப் பண்பாட்டோடு ஒட்டிய சொல் என்று பண்பாடு பற்றிச் சொல்வோமானால் எளிதாக உணரமுடியும்.

தமிழ்மொழிக்கும்,தமிழர்களது வாழ்க்கைக்கும் இன்றியமையாத 'பண்பாடு' என்னும் சொல் நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தமிழில் கிடையாது.

வாழ்க்கையின் உயர்ந்த லட்சியங்கள், அழகுகள் இவைகளை எடுத்துச் சொல்ல ஏற்றதொரு தனிச்சொல் இல்லாமல் திண்டாடிக் கொண்டிருந்தது தமிழ்மொழி. பண்பாடு என்ற சொல் வந்து தமிழ் மொழியின் ஏக்கத்தைத் தீர்த்து வைத்தது.

ரசிகமணி டி.கே.சி. அவர்கள் தமிழ் இலக்கிய உலகத்திலும், கலை உலகத்திலும் பிரவேசித்த பின் அவர்கள் தமிழுக்கு அளித்த அருஞ்சொத்து 'பண்பாடு'.

பண்பாடு என்ற சொல்லலை நமக்குத் தந்த ரசிகமணி அவர்கள் வாழ்நாள் முழுவதும் தமது ஒவ்வொரு செயலிலும் சொல்லிலும் பண்பாட்டை விளக்கிக் கொண்டிருந்தவர்கள்.

கம்பர், தமிழ் இவ்விரண்டு வார்த்தைகளோடு 'பண்பாடு'ம் அடிக்கடி டி.கே.சி. அவர்களால் எடுத்தாளப்பட்ட சொல்லாகும். பண்பாட்டை விளக்கி கட்டுரைகள் எழுதவோ, மேடைகளில் உரையாடவோ செய்யவில்லை ரசிகமணி அவர்கள். ஒவ்வொரு நாளும் அதை வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காண்பித்தார்கள்.

"மனுஷ வாழ்க்கை அபூர்வமான சரக்கு. பேரண்டத்தில் இந்தச் சரக்குத்தான் உயர்ந்தது என்று சொல்லலாம். ஆனால், கல்லைப் பிசைந்து கனிரஸம் பிழிவது போலத்தான் அந்தச் சரக்கை நமக்கு ஆக்கிக் கொள்வது" என்று கூறுகிறார்கள் ரசிகமணி டி.கே.சி.

"பூரண ஹரியும் பூரண ரசிகமணியும் என்று டி.கே.சி. பற்றி தாம் எழுதியக் கட்டுரைக்குத் தலைப்புத் தந்திருந்தார்கள் ராஜாஜி. எந்த நிலையில் நோக்கினாலும் பூரண வாழ்க்கை வாழ்ந்தவர்கள் டி.கே.சி. ஒருவர்தாம் என்று சொல்ல வேண்டும்.

அவர்கள் எப்போதும் மகிழ்ச்சியோடு இருந்து வந்தவர்கள். அவர்களைச் சுற்றி இருந்தவர்களும் அந்த மகிழ்ச்சியை அடைந்தார்கள்.

மல்லிகையின் நறுமணம் சுற்றுப்புறம் எங்கும் பரவி மணப்பதுபோல் ஒரு ஆனந்த நிலை அவர்கள் தொடர்பால், அவர்கள் உறவால், அவர்கள் பண்பாட்டால் எல்லாருக்கும் சித்தித்தது.

கல்லைப் பிசைந்து கனிரஸம் எடுத்த வாழ்க்கைதான் அவர்களது வாழ்க்கை, அந்தக் கனிரஸம்தான் அவர்கள் மூலம் நாம் பெற்ற பண்பாடு.

# அருமைத் தாத்தாவின் பெருமையே பெருமை

## T. குத்தாலிங்கம்

'மலையிலருந்து அருவி விழுகிறது,' வரும் சிலர் மனதிலிருந்து கண்ணிலிருந்து வழியும் நீரையும் பார்த்து வேதனையை புரிந்து தக்க சன்மானம் கொடுத்து அனுப்புவார்கள். வேலைக்காரனிடம் விவசாயக் காரியங்களைக் கேட்டு, அவன் எந்த அளவு விவசாயக் காரியங்களில் முன்னேற்றம் அடைந்துள்ளான் என்பதை அறிந்து மகிழ்வதுண்டு. குற்றாலம் வந்து தங்கியிருந்த காலங்களில் அடிக்கடி வயல், தோப்புகளைப் பார்த்து வருவதுண்டு. சின்ன விஷயங்களையும் ஊன்றி கவனிப்பார்கள். அதைப்பற்றி சொல்லுவது தத்துவமாகவே இருக்கும்.

கார்த்திகை மாதம் குற்றாலம் கோவிலில் சோமவாரக் கட்டளை நடத்துவதுண்டு. அது சமயம் தானும் கோவிலுக்கு வந்து வழிபடுவதுண்டு. பிரசாதம் எல்லோருக்கும் கிடைத்தா என்று பார்வையிடுவதும் உண்டு. கூட்டங்களில் பேச்சாளர்களை அறிமுகம் செய்வது சிறப்பாக இருக்கும். அவர்களை உயர்த்திப் புகழ்வதில் தனக்குள்ள மகிழ்ச்சியைக் காட்டுவார்கள்.

கம்பராமாயணம் நூல் வெளியீடு விழா நடைபெற்றது. பல்வேறு இடங்களிலிருந்து பலதரப்பட்ட மக்கள் குழுமியிருந்தார்கள். மாநில் முதலமைச்சர் ராஜாஜி அவர்கள் தலைமை தாங்கினார்கள். சான்றோர்கள் சொற்பொழிவாற்றினார்கள். தலைமை உரையில் ராஜாஜி அவர்கள் பேசும்போது குறிப்பிட்டது, "என்னுடன் ஆங்கிலேயர் ஒருவர் பிரயாணம் செய்தார். ஸ்டேஷனில் மாதுளம்பழம் விற்றது. கூடையில் அந்தப் பழங்கள் அடுக்கப்பட்டு மேலே சில பழங்கள் நான்காகப் பிளக்கப்பட்டு தன்னுடைய அழகை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. செக்கச்செவேல் என்று மாதுளம் பழம் ஒட்டியிருக்கும். ஆங்கிலேயர் மாதுளம் பழம் வாங்கினார். அதைப் பிரித்து சுவைத்துப் பார்க்கிறார். இனிப்பைப் பருக முடியவில்லை. மேலும் அந்தப் பழங்கள்

வீணாகாது சுவைக்க வேண்டும் என்று எண்ணி, பழங்களை வாங்கி ஒரு தட்டில் அதன் முத்துக்களை உதிர்த்து கையில் கொடுத்தேன். ஒவ்வொன்றாக சாப்பிட்டு அனுபவித்தார். அதுபோன்று கம்பராமாயணம் எத்தனையோ பேர்கள் கையில் இருக்கிறது. விளக்கமும் கேட்டு வருகிறோம். ஆனால் T.K.C. அவர்கள் கையாளும் முறை மாதுளம் பழத்திலிருந்து முத்தை உதிர்த்து சாப்பிடுவது போன்று, கம்பராமாயணப் பாடலில் முத்தான கருத்தை எடுத்துக் கொடுக்க நாம் அதை சுவைத்து மகிழ்கிறோம்."

T. குத்தாலிங்கம் என்பவர் டி.கே.சி.யின் தமையனார் குத்தாலிங்க முதலியாரின் மூத்த பேரன்.

# ரசிகமணி அவர்களைப் பற்றி ஒரு சில விஷயங்கள்

- அ. தீத்தாரப்பன்

ரசிகமணி அவர்களின் ஒரே புதல்வனான ஜி.சி. தீத்தாரப்பனும் (தீபனும்) நானும் ஐந்து வயது முதல் ஒன்றாய் கூடி வாழ்ந்தவர்கள். 1916-ல் வண்ணார்பேட்டையில் உள்ள பிள்ளைகள் படிக்க கொக்கிரகுளம்தான் வரவேண்டும். அந்த முறையில் நானும் தீபன் அவர்களும், பாலர் வகுப்பில் இருந்தே ஒன்றாய் படித்து வந்தோம். பள்ளி முடிந்ததும் மாலை 7 மணி வரை இருவரும் வண்ணார்பேட்டையில் இருப்போம். வீட்டில் டி.கே.சி. அவர்களும், அண்ணியும் தீபன் அவர்களை செல்லையா என்றும் என்னை அய்யாத்துரை என்றும்தான் கூப்பிடுவார்கள். எனது திருமணத்திற்கு டி.கே.சி. அவர்களும், அண்ணியும் வந்திருந்து நடத்தியதோடு, மாப்பிள்ளைத் தோழனாக தீபன் இருந்ததும் நான் இன்றும் போற்றும் விஷயம். தீபன் அவர்களுக்கு சங்கீதத்தில் அளவிலா ஈடுபாடு. எனினும் நாங்கள் இருவரும் வட்டத் தொட்டி நிகழ்ச்சிகளில் தவறாமல் கலந்து கொள்வோம்.

வட்டத்தொட்டி நிகழ்ச்சிகளில் அரிய விஷயங்களை ரசிகமணி அவர்கள் அணுகும் முறையும் அதை அனுபவிக்கும் விதமும், தனித்தன்மை வாய்ந்தது என்பதை யாவரும் அறிவர். நிகழ்ச்சி ஆரம்பிக்கும் முன் வயிற்றுக்கும் சற்று ஈயும் வகையில் ஏதாவது ஒரு பண்டம் எல்லாருக்கும் பரிமாறப்படும். தேன்குழல் பரிமாறும் தினங்களில் அதனுடைய சுவையை விமர்சனம் செய்து இதன்கிட்டே உங்கள் பிஸ்கட் வருமா என்பார்கள்.

ஒருநாள், 'முருகன் எங்கும் பரவி உள்ளான். அதை அவனுடைய மயில் நமக்கு காட்டுகிறது. ஆனால் அதன் முடிவான எல்லையை யாரும் கூற முடியாது. இதை அருணகிரிநாதர் வெகு அழகாக

காட்டுகிறார் பாருங்கள்' என்று சொல்லி "கையை உடைய மலை போன்ற எட்டு திக்கு கஜங்களும், கயிலை, நிடதம், இமயம், ஏமகூடம், மந்தரம், நீலகிரி, விந்தம், கந்த மாதனம் என்ற எட்டு மலைகளையும் அதற்கு மேலும் கண்ணுக்கு எட்டாத அண்ட முகட்டிற்கும் அப்பால் தோகை விரிக்கப்படுகிறது என்பதை

- எட்டுங் குலகிரியெங்கும் வீட்டோட
  வெட்டாதவெளி மட்டும்
  புதைய விரிக்கும் சுலாபமயூரத்தானே.

என்ற இந்தப் பாட்டைப் பாடி சொல்லி உணர்த முடியாத ஒரு எல்லையை கவி என்ன அழகாக சொல்லிவிட்டான் பாருங்கள் என்று சொல்லி ரசித்தார்கள்.

ரசிகமணி அவர்கள் இயற்கையை ரசித்தார்கள். எளிய விஷயங்களை ரசித்தார்கள். ஆடலை ரசித்தார்கள். பாடலை ரசித்தார்கள். ரசனையே மூச்சாக வாழ்ந்தார்கள். அவர்களைப் போய் ஒரு ரசிகன் இனி தமாஷ் உலகத்திற்கு என்று கிடைக்கப் போகிறார் என்று ஏங்கி நிற்கின்றேன்.

## ரசிகமணி என்னும் தெற்கத்திக்காரர்

- இரா. நரேந்திரக்குமார்

ரசிகமணிக்கு தாவர இயல் மிகவும் பிடிக்கும். குற்றாலத்துப் பொதிகை மலையில் இரண்டாயிரத்துக்கும் அதிகமான தாவர, மூலிகை வகைகள் இருப்பதை அடிக்கடி சொல்லுவார். ‘ஆற்றோரத்தில் இருக்கும் புன்னை மரத்து விதைகள் நெடுந்தூரம் நீரில் மிதந்து சென்று இனப்பெருக்கம் செய்யும் வகையில் சுமந்து செல்லும் தோணி போல அமைக்கப்பட்டிருப்பதே பருப்பைச் சுற்றியிருக்கும் மேல் தோடு’ என்பார் டி.கே.சி.

திருநெல்வேலி மாவட்டத்தினுள் அந்தச் சமயத்தில் இருந்த திருவல்லிபுத்தூரில் பிறந்த ரசிகமணி, அவ்வூரின் கோபுரத்தை ஓமந்தூரார் மூலமாகத் தமிழக அரசின் இலச்சினையாக்கி உலகறியச் செய்தார்.

அதைப் போன்றே, தன் சொந்த ஊரான தென்காசியில் உள்ள காசி விஸ்வநாதர் கோயிலின் கொடிமர மண்டபத்திலுள்ள கலைச் செல்வத்தையும் உலகின் பார்வைக்குக் கொண்டு வந்தார்.

திருநெல்வேலிக்கார ரசிகமணியின் பணி அத்துடன் முடியவில்லை. பிரபல ஓவியரான மணியத்தை சென்னையிலிருந்து வரவழைத்து, தன் குற்றாலம் வீட்டில் பத்துப் பதினைந்து நாட்கள் தங்க வைத்தார். காலையில் தென்காசிக் கோவிலுக்குச் செல்லும் மணியம் சிலைகளை ஓவியமாக வரைந்துவிட்டு இரவில் குற்றாலம் திரும்புவார். 1946&ல் ‘கல்கி வடிவத்தில் வெளிவந்த கல்கி பொங்கல் மலரில் ரசிகமணியின் ‘தென்காசிச் சிற்பங்கள்’ கட்டுரை மணியத்தின் பத்து ஓவியங்களுடன் வெளியானது. ஒரே ஒரு இதழ் மூலம் தென்காசிச் சிற்பங்கள் உலகின் பார்வைக்கு எட்டின.

இந்தச் சித்திரங்கள் ஏற்படுத்திய பரபரப்பு வேறொரு காரியத்தைச் செய்தது. திருநெல்வேலி மாவட்டம் கிருஷ்ணபுரம் கோயில் சிற்பங்களை முதல்முதலாக 1948ல் அமரர் சில்பி வரி கோட்டுப் படங்களாக (லிவீஸிமீணீசஷீ ஷிளீமீமீநீலீமீவ) வரைந்தார்.

“புதுடில்லியை நூறு கோடி ரூபாய் செலவழித்துக் கட்டியிருக்கிறார்கள். எல்லாம் செங்கல்லும், சுண்ணாம்பும்தான். இயற்கை அழகு என்பது ரொம்ப ரொம்பக் குறைவு. குதுப்மினார், செங்கோட்டை மாளிகை எல்லாம் பார்த்தேன். மனுசனையும் அவன் ஆணவத்தையும் சிறப்பித்துக் காட்டுபவை அவை. கடவுளைச் சுட்டிக் காட்ட வேண்டுமானால் தமிழ்நாட்டுக் கோயில்களைத் தான் பார்க்க வேண்டும்.“

“உணர்ச்சியோடு பார்த்துவிட்டால், பாண்டியன், பக்தி, பாடல் எல்லாம் தென்காசியில் இருக்கின்றன; வேறு எங்கும் இல்லைதான் என்று சொல்லத் தோன்றும்“ என்கிறார் டி.கே.சி.

கவிதையின் துடிப்பை அறிவதில் வல்லவர் ரசிகமணி. ‘மகராஜப் பிரபு’ என்கிற கட்டுரையில் திருக்குற்றாலத்தை அடுத்துள்ள வல்லம் கிராமப்பண்ணையார் புகழைக் குடியானவன் ஒருவன் வாழ்த்தும் அழகான பாடலைக் குறிப்பிடுகிறார்.

**பூவரசங் கட்டை வெட்டி**
**புது மரக்கால் உண்டு பண்ணி**
**மாசாமாசம் படி அளக்கும்**
**வல்லத்தையா மகராசன்.**

‘இதைப் பாடின ஆசாமிக்கு நன்னூல் தெரியாது. தொல்காப்பியம் தெரியவே தெரியாது. ஆனால் தமிழ் தெரியும்‘ என்கிறார் டி.கே.சி. ஏன்.? ரசனை!

டி.கே.சி. சொல்கிறார்: “கால்த் துட்டுக்கு குதிரையும் வேணும் & அது காற்றாய் பறக்கவும் வேணும்“. இந்தப் பழமொழியைத் தமிழன் சொல்லச் சொல்ல வாயில் ருசி உண்டாகும். சொல்லும் போது ‘கால்த்துட்டுலே லேசான அழுத்தம். குதிரையில் ஜாஸ்தி அழுத்தம். ‘அது’ தாழ்ந்த சுரம். லகானைப் பிடித்து நிறுத்தி விடுகிறது. ஏன்? காற்றாய் பறக்க வேண்டும் அல்லவா? ‘பறக்கவும் வேண்டும்‘ என்பதில் ரொம்ப ஜாஸ்தி அழுத்தம். இந்தச் செப்பல் ஓசைகள்தான் (ஸிலீஹ்மீலீனீ) வாய்க்கு ருசியைக் கொடுக்கிறது. செப்பலோசை வந்து பேராசையின்

ஆத்திரத்தை அழகா நையாண்டி பண்ணுகிறது." வெண்பா, விருத்தம், கட்டளைக் கலித்துறை, தாழிசை வகையிலான பாக்களை ரசிகமணி இயற்றுவதுண்டு. "பக்தி உணர்ச்சியோடு கிளிக்கண்ணி, சித்தர் பாடல், காவடிச் சிந்து முதலியவைகளைப் பாடினாலும் பரவசம் அடையத்தான் செய்கிறேன். ஆனால், சங்கதி, சங்கதி என்ற சுரங்களைக் கொண்ட கீச்சுக் கீச்சுத் தாம்பாளம் விளையாடுகிறதை ரொம்ப அனுபவித்து விட முடியாது" என்று பேசும் ரசிகமணி "கணக்கிலிருந்து பிறந்தது மேல்நாட்டுச் சங்கீதம்; உணர்ச்சியிலிருந்து பிறந்தது நம்முடைய சங்கீதம்" என்பதை உணர வைக்கிறார்.

'தமிழில் நாடகம் ஏதேனும் உண்டா'? என்ற கேள்விக்கு ரசிகமணி சொன்னாராம். 'அனேக விசயங்கள் தமிழில் வெறும் நாடகமாகவே இருக்கின்றன. குறவஞ்சி நாடகம் இருக்கவே செய்கிறது.

'தெய்வமாக்கலை' எனத் தன்னால் புகழ்ப்பெற்ற பால சரஸ்வதியின் நடனத்தைத் தன் வீட்டில் கல்கி, ராஜாஜிக்கு நடத்திக் காட்டினார் ரசிகமணி. (கபிஸ்தலம் மூப்பனார் ஏற்பாட்டில் குற்றாலம் ஸ்கார்ப்பியன் ஹாலிலும் நடந்தது) அதுவே 'சிவகாமியின் சபதம்' சிவகாமியின் காதாபாத்திரத்துக்கான உந்துதலைக் கல்கிக்கு வழங்கியது. கல்கியின் எழுத்து மூலம் தானே மகாபலிபுரம் என்பது மாமல்லபுரம் ஆனது. ரசிகமணியுடன் குற்றாலத்தில் தங்கியிருந்த போது . அருவிக் கரையிலும் மலைச்சாரலிலும் தான் பார்த்த காட்சிகளை சிவகாமியின் சபதம் நாவலில் கல்கி குறிப்பிட்டிருப்பார். 'நெட்டையும் குட்டையான இலையே இல்லாத ரத்தச் சிவப்புப் பூக்களைக் கொண்ட புரச மரங்கள். . .

ராஜாஜி, கல்கி, எம்.எஸ். சுப்புலட்சுமி, சதாசிவம் என ஒருபுறமிருக்க, ரசிகமணியுடன் நட்புக் கொண்டு வாழ்வையே இலக்கியமாக்கிக் கொண்ட பல திருநெல்வேலிக்காரர்களை எண்ணிப் பொறாமை கொள்ளத்தான் முடிகிறது.

தமிழறிஞர் வெ.ப. சுப்பிரமணிய முதலியார்

திருநெல்வேலியைச் சேர்ந்த நீதிபதி மகராஜன்

ரசிகமணிக்கே தெரியாமல் நூலெழுதிச் சமர்ப்பித்த பாஸ்கரத் தொண்டைமான்

'சொல்லின் செல்வர்' ராசவல்லிபுரம் ரா.பி. சேதுப்பிள்ளை.

செய்துங்க நல்லூர் & விட்டலபுரத்தைச் சேர்ந்த பி. ஸ்ரீ. ஆச்சார்யா.

பி.ஸ்ரீ.யின் ஒன்றுவிட்ட தம்பி மகரபூஷணம் (வழக்கறிஞர்) பெருமாள் சன்னதி தெரு திலி. சந்திப்பு.

ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், திருநெல்வேலி (வீரராகவபுரம்)

கடையநல்லூர் புதுக்குடியில் பிறந்த வகுப்புத்தோழர் ஆவுடையப்ப பிள்ளை (வழக்கறிஞர், வண்ணாரப்பேட்டை)

தென்காசி சார்பதிவாளர் அலுவலக எழுத்தராகப் பணியாற்றிய பிரபல எழுத்தாளர் கு. அழகிரிசாரி & கி.ராஜ நாராயணன்

இந்துக் கல்லூரி பேராசிரியர் அ.முத்துசிவம்

'சுந்தா' எனப்படும் எம்.ஆர். மீனாட்சி சுந்தரம் (திருநெல்வேலி மேலநத்தம்)

'நந்தவனம்' நாவல் எழுதிய மீ.ப. சோமு (மீனாட்சிபுரம் திலி. சந்திப்பு)

ல. சண்முக சுந்தரம் (திருநெல்வேலியிருந்து சென்றால் இடைசெவலின் இடது பக்கம் உள்ள நாச்சியார்புரம்)

இந்துக் கல்லூரி, தமிழ்த் துறையில் பணியாற்றிய அருணாசலக் கவுண்டர்

திருநெல்வேலியில் புத்தகக் கடை நடத்திய ஆண்டியப்ப பிள்ளை.

இவர்களோடு தூத்துக்குடியில் பணியாற்றிய பேரா. அ. சீனிவாச ராகவன் எனப் பெயர் பட்டியல் நீண்டு கொண்டே வந்து வாக்காளர் பட்டியல் ஆகிவிடும். ரசிகமணி ஒருமுறை சொன்னார். "திருநெல்வேலி என்றால் சிந்து பூந்துறை, வீரராகவபுரம், வண்ணாரப்பேட்டை, பாளையங்கோட்டை முதலான இடங்களுக்குச் சவாரி செய்து தமிழையும் கலைகளையும் பற்றி நண்பர்களுடன் பேசி காலை 4 மணி நேரத்தையும் கடத்தலாம். ஸ்ரீ வைகுண்டத்தில் சவாரியெல்லாம் முன் கட்டுக்கும் பின் கட்டுக்கும்தானே".

'குற்றால முனிவர்' என்றழைக்கப்பட்ட ரசிகமணி டி.கே.சி. பொதிகை மலையில் வாழ்ந்தார். நாள்தோறும் தமிழ் வளர்த்தார். 'பொருநை' எனப்படும் தாமிரபரணிக் கரையான திருநெல்வேலியில் 'வட்டத்தொட்டி' அமைத்தார். கடல் பெருக்கை விஞ்சி நின்றது அங்கே தமிழ்ப் பெருக்கு. கம்பனோடு வாழ்ந்தார். கம்பனில் ஆழ்ந்தார். 'தெய்வத்துக்கு மிஞ்சி ஒன்று உண்டென்றால் அது கம்பன்தான்' என்பார். அதனால்தான் 'கிட்கிந்தா காண்டம் & நாடவிட்ட படலத்தில்' அனுமனுக்குத் தென்திசை செல்லும் வழியைக் கூறும் சுக்கிரீவன் கூற்றாகக் கம்பன் பாடுகின்றான்.

‘தென் தமிழ்நாட்டு அகன் பொதியின் திரு முனிவன்
தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்
என்றும் அவன் உறைவிடம் ஆம் ஆதலினால்
அம்மலையை இறைஞ்சி ஏகி
பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும்
திரு நதி பின்பு ஒழிய நாகக்
கன்று வளர் தடஞ்சாரல் மயேந்திரமா
நெடுவரையும் கடலும் காண்டிர்.’

# ஜி.சி. பட்டாபிராமன்

1944ஆம் ஆண்டு ஒருநாள் சென்னையிலிருந்து தென்காசிக்கு புறப்படும் ரயில் முதல்வகுப்பு பெட்டியில், சுமார் இருபது வயது மதிக்கத்தக்க ஓர் இளைஞன் பரபரப்புடன் ஏறி, அமர்கிறான். அங்கு ஏற்கனவே ஒருவர் அமர்ந்து இருக்கிறார். முதல்வகுப்புப் பெட்டி என்பதால் இவர்கள் இருவரைத் தவிர வேறு யாரும் இல்லை. தனக்கு எதிரே அமர்ந்திருக்கும் உருவத்தின் அழகு ஒளியை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ஆனாலும், மீண்டும் மீண்டும் பார்க்கத் துடிக்கும் முகம். அவரையே பார்த்துக் கொண்டு வருகிறான். நேரம் கடக்கின்றது. அவர் அவனிடம் கேட்கிறார். “என்ன என்னையே பார்த்துக் கொண்டு இருக்கிறாய்“ “எங்கு படிக்கிறாய்“ என்று வினவினார். தான் லயோலாக் கல்லூரியில் படிப்பதாகவும் விடுமுறையில் திருச்சிக்குச் செல்வதாகவும் பதில் கூறினான். “அப்படியா! சரி! கம்பர் ராமாயணம் படித்திருக்காயா“ என்று கேட்கிறார். ‘இல்லை’ என்றவுடன் அவருக்கு அவ்வளவு சந்தோஷம். “பேஷ்! பேஷ்! உன் மூளையை நான் .... வேண்டிய வேலை மிச்சம். கேள்! என்கிறார். அவனோ! ஐயா! எனக்கு பாடல்கள் புரியுமா! தெரியாதே....என்று தயங்க..... “உனக்குத் தமிழ் தெரியுமல்லவா“ அப்படியானால் இதுவும் விளங்கும் வா“ என கம்பனை முதலில் யார் என காட்டினார். இரவு முழுவதும் ஆனந்தத்தின் ஒளியால் பாராயணம் நிறைந்து வழிந்து கொண்டிருந்தது. திருச்சி வந்ததும் பிரியா விடை தரும் நிலையை அடைந்து விட்டனர் இருவரும். எல்லாம் கம்பனின் கவி செய்த மாயம்!

ரயிலில் அமர்ந்திருந்தவர் நம் ரசிகமணி டி.கே.சி பின், வந்து ஏறியவர் ஜீசி. பட்டாபிராமன்.

1944&ல் ஏற்பட்ட தொடர்பு அவருடைய கடைசி நாட்கள் வரை தொடர்ந்திருந்தது. அவர் என்னைத் தன் மகன் போல் கருதினார். அன்பை என்மீது அள்ளிக் கொட்டினார். எங்கள்

குடும்பம் முழுவதையும் அவர் அன்பு ஸ்வீகரித்தது. அவரும் அடிக்கடி திருச்சி மதுரை வந்து தங்குவார். நானும் அடிக்கடி குற்றாலம் சென்று அவருடன் தங்குவேன். அண்ணியின் கையால் தயாரிக்கப்பட்ட அமுத உணவை அனுபவித்து சாப்பிட்டிருக்கிறேன். நான் சந்திக்கும் போது பல விஷயங்களைத் தெளிவாகச் சொல்வார். தமிழ் பாட்டுக்கள் மட்டுமின்றி கலை, சிற்பம், சங்கீதம் முதலியவைகளைப் பற்றிப் பேசுவார். நான் ஊருக்குப் போனதும் கடிதம்மூலம் அதை சுருக்கி எனக்கு எழுதுவார். அப்படி என்னிடம் பல கடிதங்கள் உள்ளன. அடையமுடியாத பொக்கிஷமாகிய அவர் எழுத்துமூலமே நான் உங்களுக்குத் தருகிறேன்.

சங்கிதத்தைப் பற்றி எங்களுக்கு ஏற்பட்ட வாக்குவாதத்தின் சாரத்தை வெகு அழகாக கடிதத்தின் மூலம் சுருக்கி எழுதுகிறார். "ராகம் பாடும்போது கெண்டியை வைத்துக் கொண்ட சுண்ணாம்புக் கோலம் போடுவது போன்றது" கைலாகவத்தைக் கண்டு அனுபவிக்கிறோம். ஆனால் சாகித்தியத்திற்கு வரும்போது பாவத்தை எதிர்பார்க்கிறோம். உள்ளிருக்கும் உணர்ச்சியே சங்கீதத்திற்கும் ரூபம் கொடுக்கிறது."

மற்றொரு கடிதத்தில் எழுதுகிறார். "ஆனாலும் அபூர்வராகங்கள் என்றும், ஹிந்துஸ்தானி ராகங்கள் என்றும் ஊடே வந்து நம்முடைய சங்கிதத்தின் தெளிவைக் கெடுக்கத்தான் செய்கிறது. ஹிந்துஸ்தான் சங்கீதம் என்று சுத்தமாக பாடட்டும். குற்றம் இல்லை. ஆனால் இவைகளை நம்மடைய ராகங்களோடும் பக்திரஸமான பாடல்களோடும் சேர்க்கிறதென்றால் சங்கடமான காரியம்தான். இதனால் சங்கீதத்தின் உயிரை அறிந்து கொள்ளவில்லை பாகவதர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். ரஸம், சாம்பார், வற்றல்க்குழம்பு, பாயஸம் இவைகளில் ஸெண்டுகளைச் சேர்த்தால் எப்படி இருக்கும்!" இந்தக் கடிதங்களைப் படித்த பிறகு டி.கே.சி.யுடன் யாரும் சண்டை போட முடியாது.

ரசிகமணியின் தமிழார்வத்தைப் பற்றி எல்லோரும் அறிவார்கள். ஆனால் கலைகளைப் பற்றிய அவரத அனுபவம் பலருக்குத் தெரிவதில்லை. அவர் தன் அனுபவத்தை அழகாக எடுத்துச் சொல்வார். நடராஜரைப் பற்றிய அப்பர் பெருமானின் அழகிய பாடல்.

பனித்த சடையும்
பவளம் போல் மேனியும்

பால் வெண்ணீறும்
குனித்த புருவமும்
கொவ்வைச் செவ்வாயும்
குமிண் சிரிப்பும்
இனித்தம் கசிய
எடுத்த பொற்பாதமும்
காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும்
வேண்டுவதே இந்த
மாநிலத்தே.

இப்பாடலைத் தனது திருத்தங்களுடன் தனக்கே உரிய பாணியில் பாடி நடராஜ தத்துவத்தை விளக்கம் தந்து மணிக்கணக்கில் பேசுவார். இதையே தமிழ் அறியாத மக்களுக்காக தமிழ் கல்ச்சர் 1953 ஏப்ரல் இதழில் தனி நாயக அடிகளின் சொல்லுக்கு இணங்கி ஆங்கிலத்தில் வெகு அழகாக எழுதியிருக்கிறார். அடிக்கடி நான் அவரைச் சந்திக்கும் போது இதைப் பற்றிப் பேசுவார். அவர் பேச்சின் சாராம்சம் சில நாட்களில் அவர் எனக்கு எழுதும் கடிதத்தில் வரும். ஆட்டத்தில் ஒரு சுழற்சி. அந்த சுழற்சியில் அங்கங்களெல்லாம் எந்த நிலையில் நிற்கும் & மிதந்து நின்ற மாதிரி & அப்படி நிற்கின்ற பிம்பத்தின் அங்க அமைப்பு காரணமாகத்தான் நடராஜ பிம்பத்தை மேல்நாட்டு பிம்பங்களுக்கு மேலாக சொல்லுகிறார்கள். மேல் நாட்டவராவது அனுபவித்து சொல்லுகிறார்கள். நம்மவர் செய்த புண்யம்தான் அது. மேல்நாட்டாருக்கு நேர் மாறான நிரக்ஷரகுக்ஷிகள் நம்முடையவர்.

இன்னொரு கடிதம் 'ஸ்காட்ஸ்மென்' ஆசிரியரும் அப்ஸர்வர் ஆசிரியரும் நடராஜமூர்த்தியின் அழகைக் கண்டு வியக்கிறார்களே! நாம் அதிசயிக்க வேண்டி இருக்கிறது.

They are full of whirling movement; yet are perfectly poised என்று சொல்லும் ஆசிரியரை நாம் ரொம்பவும் பாராட்ட வேண்டும். 'அப்ஸர்வர்' ஆசிரியரை சிதம்பரம் கோவிலுக்கு தீக்ஷிதராகவே நியமித்து விடலாம். ஏன், அவர்தான் வழிபாடு நடத்த தகுதி வாய்ந்தவர். மற்ற தீக்ஷிதர்கள் எல்லாம் அல்ல என்று உறுதியாகச் சொல்லலாம். நடராஜமூர்த்தியிடம் போகாதீர்கள் என்றுகூடச் சொல்லலாம். நடராஜமூர்த்தியின் பிம்பத்தை அவர்கள் என்ன செய்திருக்கிறார்கள். தங்கத்தட்டை வைத்து

மூடி வைத்திருக்கிறார்கள். அபிஷேகம் செய்யும் ஆறு நாட்களில் மாத்திரம் அபிஷேகம் செய்யும்போது பிம்பத்தை பார்க்க முடியும். தீக்ஷிதர்களது ஊனக் கண்ணுக்கு தங்கம்தான்.அதாவது ரூபா, அணா, பைசாதான் தென்படுகிறது. நடராஜமூர்த்தியின் அழகும் அண்டபிண்ட சராசரங்களை ஆட்டும் திருக்குறிப்பும் தென்படவில்லை", & எழுத்திலேயே இவ்வளவு ஆவேசம் இருந்தால் நேரில் பேசும்போது எப்படி இருக்கும்? அதை நேரில் கண்டு அனுபவித்தவர்கள்தான் அறியக்கூடும். நம்மவர்கள் நமது கலைகளை ரசிக்கவில்லையே என்று மனம் நொந்து பேசுவோம். அதை அழுத்தமாகவும், தைர்யமாகவும் சொல்வர். பாஸ்கரத் தொண்டைமான் நமது கலைகளுக்கு செய்த சேவையின் மூலகாரணம் ரசிகமணியின் கலை ஆர்வமே!

# டி.கே.சி. என்னும் ஆனந்த தத்துவம் - ஸ்ரீவி. ப. ராஜாராம்

ரசிகமணி டி.கே.சி. என்றாலே நமக்கு ரசனைத்தத்துவம்தான் நினைவுக்கு வரும். ரசனை உணர்வை உலகிற்கு உணர்த்திய ஒப்பற்ற மகான் டி.கே.சி.

வாழ்க்கையைப் பூர்ணமாய் அனுபவித்து ரசித்து, ருசித்து மற்றவர்களையும் ரசிக்க வைத்த ரசிகமணியேதான் டி.கே.சி.

எங்கு காணினும் ஆனந்தம் (மகிழ்ச்சி) என்று வாழ்ந்தவர். கிடைத்தற்கரிய மனிதப்பிறவியை மகத்துவமாய் வாழ்ந்து காட்டிய மாகலைஞன் டி.கே.சி.

வாழ்க்கை ரசிப்பதிலே முழுமை பெறுகிறது என்பது டி.கே.சி. கொள்கை. இந்த ரசிப்பை (ரசனையை) கவியில், கலையில், சிற்பத்தில், ஓவியத்தில், கோலத்தில், அன்பு காட்டுவதில், நட்பில், சாதாரண நிகழ்வுகளில், அறிவியலில், பக்தியில், விருந்தோம்பலில் என எல்லாவற்றிலும் கண்டு அனுபவித்தார்கள். இதை எல்லோரும் அனுபவிக்கலாம். ரசிக்கலாம் இதற்காக வாழலாம் என்பதே டி.கே.சி.யின் தத்துவம்.

டி.கே.சி.யின் பார்வையே தனித்துவமானது, ரசனைமயமானது, உணர்ச்சிமயமானது அவர்களின் ஞானப்பார்வை மிகமிக நுட்பமானது. வாழ்வில் சிறிய விஷயங்களிலிருந்து பெரிய தத்துவத்தை கண்டறியும் தத்துவப்பார்வை அது.

ஒவ்வொன்றிலும் ஆனந்தத்தை (மகிழ்ச்சியை) உணர்ந்த ரசனைப் பார்வை அது.

ரசிகமணி அவர்கள் வாழ்க்கையைப் பார்த்த, நேசித்த, தத்துவ தரிசனத்தை அவர்களின் கடிதங்களிலும், கட்டுரைகளிலும் காணலாம். அங்குதான் அவை பொதிந்துள்ளன.

வாழ்க்கையை உற்றுநோக்கும் இயல்பில் டி.கே.சி. ஆத்மஞானியாய், வாழ்வியல் ஞானியாய், சிலநேரம் தீர்க்கதரிசியாய் நமக்கு காட்சி அளிப்பார்கள்.

தான் என்ற எண்ணம் இல்லாது பக்தி செலுத்தினால் உள்முகமாய் பார்வையைச் செலுத்தினால் இறைத் தத்துவத்தை உணரலாம் என்பது ஆன்மீகம்.

ரசிப்பதிலும் தன்னிலிருந்து விலகி நின்று உள்ளபூர்வமாய் உண்மையான உணர்வோடு உற்று நோக்கினால் ஒவ்வொன்றையும் பூர்ணமாய் ரசிக்க முடியும் என்பது டி.கே.சி.யம் (டி.கே.சி. தத்துவம்.)

# தில்லியில் தமிழ்க் கொண்டல்
## "சுந்தா"

எதை எதையோ பற்றிப் பாட்டு எழுதியவன், ரசிகமணியின் தில்லி வருகை பற்றி எழுதாமல் இருப்பேனா? எழுதினேன். அவர் சொன்னது போலவே பயப்படாமல் படிக்கலாம்:

செந்தமிழ் கொண்டல் அவர்
தில்லிக்கு வந்திருந்தார்;
வந்த கொண்டல் உருமாற்றி
வைத்திட்டார் இந்நகரை.

தமிழ் மாரி பெய்ததிலே
தில்லி எலாம் தமிழ் வெள்ளம்;
யமுனை நதி பொருனை என
இனம் மாறி ஓடியது.

இக்கரையில் தமிழ்ச் சோலை,
அக்கரையில் தமிழ்ச் சோலை;
இக்கரைக்கும் அக்கரைக்கும்
இணைந்தோடும் இசைத் தோணி.

கரையோர மண்டபத்தில்
கம்பர் கவி பாடுகிறார்;
உரைக்கின்றார் வள்ளுவனார்
ஓங்கியதோர் கோயிலிலே.

## தமிழாக வாழ்ந்த ரசிகஞானி ரசிகமணி டி.கே.சி

காவ்யா சண்முகசுந்தரம்

ரசிகமணி டி.கே.சி. அவர்கள் ஒரு மகா ரசிகர்.
இயற்கையை ரசித்தார்.
இறைவனை ரசித்தார்.
இலக்கியத்தை ரசித்தார்.
எளிய விஷயங்களையும் ரசித்தார்.
எதையும் விட்டு வைக்கவில்லை.
எம்.எஸ். சுப்புலெட்சுமியின் இசையாகட்டும்
பாலசரஸ்வதியின் நாட்டியமாகட்டும்
தனம்மாளின் வீணையாகட்டும்
பிச்சைக்குட்டி புலவரின் வில்லாகட்டும்
கம்பர் முதல் கவிமணி வரை
தோசை முதல் மீசை வரை
இவர் ஒரு கலா ரசிகர்தான்
எழுதுவார் - பேசுவார் - பாடுவார்.
குற்றாலத்தில் பல அருவிகள் உள்ளன.
இவரும் ஒரு அருவி - தமிழருவி.
இதில் நீராடியவர்கள் ஏராளம்.
கல்கி, ராஜாஜி, ம.பொ.சி., திரு.வி.க.
எனப் பட்டியல் நீளும்
அவர்கள் அரசியல்வாதிகளாக இருக்கலாம் - இலக்கியவாதிகளாக இருக்கலாம் - கலாவாதிகளாக இருக்கலாம்.

இவர் இலக்கியம் மட்டும் பேசினார்.
இவருக்குப் பாட்டு வரும்; பாவம் வரும்;
தாளம் வரும் - எல்லாம் தமிழாக வரும் -
அதுவும் அழகாக வரும்.
கம்பன், தேவாரம், திருவாசகம், ஆண்டாள்,
காரைக்கால் அம்மையார், கலிங்கத்துப்பரணி,
முத்தொள்ளாயிரம், பாரதியார், கவிமணி,
நாட்டப்புறப் பாடல்கள் என இவரது ரசனை
விரிந்தவண்ணம் சென்றது.
இவர் பேசும் போது நாக்கு பேசும் - வாய் பேசும்
அடர்ந்த நெற்றிப்புருவம் பேசும் - மீசை பேசும்
அவரது உள்ளமே நம் உள்ளத்தோடு பேசும்.

தமிழன் என்று சொன்னார்
தலை நிமிர்ந்து நின்றார்
தமிழுக்காக வாழ்ந்தார்
தமிழாகவே வாழ்ந்தார்

எனினும் எப்பொழுதும் ரசிகஞானியாகவே விளங்கினார்.

(ரசிகமணி ரசனைத்தடம், தொகுப்பாசிரியர், பேராசிரியர். முனைவர். சண்முகசுந்தரம், காவ்யா வெளியீடு, முதற்பதிப்பு, 2009)

உலக இதய ஒலி ரசிகமணி நூற்றாண்டு மலர், சிறப்பு ஆசிரியர், வித்வான். ல. சண்முகசுந்தரம் 1981)

## டி.கே.சி வாரிசுகளின் தமிழ்ப்பணி

திரு. தீப. நடராஜன், அ. தீத்தாரப்பன் T. குத்தாலிங்கம், கி .ரா. திருமலையப்பன், ஆகியோர் ரசிகமணி டி.கே.சியின் குடும்பத்தார். அவரது பேரனான திரு. தீப. நடராஜன் தமிழில் பல கட்டுரைகள், எழுதி வருகிறார்கள். ' கவிதையும் ஆனந்தமும்' என்கிற கட்டுரைத் தொகுப்பு வழங்கியிருக்கிறார்கள். அதில், தம் தாத்தாவுடன் நெருங்கிப் பழகியவரைப் பற்றிப் பகிர்ந்து கொண்டு இருக்கிறார்கள். மேலும் தம் தாத்தாவிடமிருந்து சீதனமாகக் கிடைத்த ஆனந்தத்தை அடுத்தவர்கட்கு அள்ளிக் கொடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். டி.கே.சி. பற்றிய கட்டுரைகளை திரு. கி.ரா. திருமலையப்பன் தங்கள் தாத்தா பாணியிலேயே கட்டுரையில் எழுதி வருகிறார். 'ரசனை' என்னும் இதழில் தொடர்ந்து படித்து வருகின்றேன். டி.கே.சியின் தங்கை வழிப் பேரனான திரு. தீத்தாரப்பன் அவர்கள் தாத்தாவின் வழியில் நின்று வள்ளுவரை அப்படியே அனுபவிக்கிறார். திருக்குறள் பேரவையில் முக்கிய பதவி •வகிக்கிறார். பல இடங்களுக்கு சொற்பொழிவு ஆற்றித் தமிழ்த் தொண்டாற்றி வருகிறார்கள்.

திரு. தீப நடராஜன், திரு. தீப. குறறாலலிங்கம், மற்றும் அனைத்து குடும்பத்தாரும், ரசிகமணியின் ஒவ்வொரு பிறந்தநாளையும் குற்றாலத்தில் மிகவும் சிறப்பாக கொண்டாடி வருகிறார்கள். பல தமிழ்ச்சான்றோர்களை அழைத்து, அன்று தமிழ்க்கவிகளை, டி.கே.சி.யின் ரசனையைச் சொல்லிச் சொல்லி அனுபவிக்கிறார்கள், நல்விருந்தும் உண்டு என்பதில் ஐயம் வேண்டாம்.

நண்பர்களே! அவர்கள் பணி சிறப்பாகத் தொடர நாம் நம் வாழ்த்துக்களைத் தெரிவிப்போம். இவ்வருடப் பிறந்ததினக் கொண்டாட்டம் செப்டம்பர் 8 ஆம் தேதி நடக்க விருக்கின்றது.

வாழ்க! வளர்க!! தொடர்க!!! அவர்கள் பணி!!!

- பொருளள வட்டம் ஓர் இலக்கிய ஊட்டம் இங்கு சேர்க்கூடு

# பொருநை வட்டம் ஓர் இலக்கிய ஊட்டம்

நண்பர்களே! உங்களை நான் 70 ஆண்டுகளுக்கு முன் அழைத்துச் செல்லப் போகிறேன்.

பொதிகை மலையெழில் அழகி குற்றாலத்தில் நல்ல சாரலில் மேலும் எழிலாய்த் திகழ்ந்து கொண்டிருந்தாள். அருவிகளில் வெள்ளமாய் ஓடியாடி நர்த்தனம் செய்து கொண்டிருந்தான். இதை அனுபவிக்க வந்தவர்களின் வெள்ளம் அலைமோதிக் கொண்டிருந்தது. ஐந்தருவிக்குச் செல்லும் அலையில் பர்ணசாலை போன்றொரு வீட்டில் இலக்கிய அனுபவ வெள்ளம் பெருக்கோடிக் கொண்டிருந்தது. அங்கு கூடியிருந்தோர் அதை அள்ளி அள்ளிப் பருகித் தம்மை மறந்த நிலையில் இருந்தனர். அவ்வீடு நோக்கி ஒரு காபிப் பொடி வியாபாரி தன் வியாபார நிமித்தம் அப்பர்ணசாலை வாயிலில் நின்றார். கையிலோ கமகமக்கும் காபிப்பொடி. இந்தக் காபிப் பொடி மணம் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த பெரியவரை அழைத்தது.

உடனே அவரும் "வாருங்கள்!வாருங்கள்!" என வரவேற்று அமரச் சொன்னார். அவர் ஆனந்தமாய் வரவேற்ற விதம், அவ்ரை அப்படியே ஆட்கொண்டு விட்டது. அவரும் அங்கே அமர்ந்தே விட்டார்... அங்கு தமிழ்க் கவிதைத் தேனைப் பருக அள்ளி அள்ளி அளித்துக் கொண்டிருந்தார் அந்தப் பெரியவர். வந்து அமர்ந்தவரோ தன் காபிப் பொடியின் மணத்தை மறந்தார். வியாபாரத்தைத் துறந்தார். கவிதை அனுபவத்தில் திளைத்துப் போய்விட்டார். அவர்தான் மன்னார்குடியைச் சார்ந்த ராமய்யங்கார் ஆவார். காபிப்பொடி விற்க வந்தவரிடம்

தமிழ்க்கவிதைகளை விற்றவர், அவரை ஆட்கொண்ட அந்தப் பெரியவர் தாம் குற்றாலக் குறவஞ்சியை, கம்பனை இன்னும் பலப்பலத் தமிழ்க் கவிகளை 'எப்படி அனுபவிப்பது' என்னும் ஆனந்தத்தின் பேரானந்தத்தையும் கற்றுக் கொடுத்தக் குற்றாலக் குறுமுனி "ரசிகமணி டி.கே.சி" ஆவார்.

அதிலிருந்து சற்றே முன்னோக்கி சில 30 ஆண்டுகள் தாண்டி வாருங்களேன்.

திருக்குற்றாலப் பொதிகைச் சாரலினிடையே வெளிப்பட்டு 70 கி.மீ. தூரத்தில் உள்ள திருநெல்வேலி டவுண் மேலரத வீதிக்கு வாருங்களேன். அங்கு மற்ற வீடுகளிலிருந்து மாறுபட்டு வித்தியாசமாய், ஒரு மாளிகை. சில படிகள் ஏறினால் ஒரு விசாலமான கிராதிக் கதவு. அதன் வடப்பக்கம் உயரமாக விதானத்துடன் கூடிய ஒரு மாடத்துடன் கூடிய மேடை. அப்போது அந்த மேடையில் ஒரு கம்பீர புருஷர் வந்து தன் தரிசனம் தருவார். 64 பாளையங்களின் பிரதிநிதிகளும் கப்பத்துடன் வந்து காத்திருப்பார்கள். இராஜபுதனத்து விசேஷக் குதிரைப்படை வரிசையாக அணிவகுத்து இரவும் பகலும் காவல் நிற்கும். இது அரண்மனை வீடு. மேலத்தெருவில் இருப்பதால் மேல அரண்மனை வீடு. மதுரை நாயக்க மன்னர்களின் பிரதிநிதியாகத் தென்நாட்டை ஆண்ட தளவாய் அரங்கநாத முதலியார் வீற்றிருந்து தர்ம ஆட்சி செய்த அரண்மனை இன்று வாசலில் காவலுக்கு குதிரைகளோ கப்பம் கட்டும் பாளையப் பிரதிநிதிகளோ கிடையாது. மேடையும் காலியாக இருக்கின்றது. மேல அரண்மனை என்னும் பெயர் மட்டும் இருக்கின்றது. ஆனால் பாளையப் பிரதிநிதிகளுக்குப் பதிலாக தூர தூர இடங்களிலிருந்தெல்லாம் தமிழறிஞர்களும் புலவர்களும் ஞாயிறுதோறும் சாரிசாரியாக வருகிறார்கள். இடப்பக்கம் நடு சந்து இருக்கின்றது. சித்தர் தெரு என்று பெயர். அதிலே நடந்து அரண்மனையின் கடைசிப்பகுதிக்கும் போகிறார்கள். முடிவில் ஒரு வாசல் இருக்கின்றது. தமிழகம் என்று பெயர் காணப்படுகிறது. பக்கத்தில் ஒரு கரும் பலகை தொங்குகிறது. அதில் அடுத்து வரும் ஞாயிற்றுக்கிழமையை தேதியோகி குறிப்பிட்டு, அதுபற்றிய விவரங்கள் அறிவிக்கப்பட்டு இருக்கிறது.

வாருங்கள்! நண்பர்களே! இதோ! இதுதான் அக்கரும்பலகை:

# பொருநை இலக்கிய வட்டம்

21/12/03 ஞாயிறு காலை 11 மணிக்கு
*1000 ஆவது கூட்டம்
திரு. சிவ.காந்தி _ நீதிநெறி விளக்கம்
திரு. ச.கண்ணபிரான் _ குறுந்தொகை
திரு. பழனியாண்டி _ திருமந்திரம்
திரு. க.சரவணப்பெருமாள் _ திருக்குறள்
சிறப்பு விருந்தினர்
எழுத்தாளர் திரு.கல்பனா சென்னை
அனைவரும் வருக!

இம்மேல அரண்மனை வீட்டிற்கு சித்தர் தெரு வழியாக ஒரு பாத்திர வியாபாரி சைக்கிளில் பாத்திரங்களை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்ய வந்தார். ஞாயிற்றுக்கிழமைகளில் வாசல் பக்கம் வந்து நின்றார். அப்போது கம்பீரமான உயரத்துடன், எடுப்பான மீசையோடு வந்திருந்தவர்களை கவனித்து, அவர்களை உபசரித்துக் கொண்டிருக்கும்போது, அவ்வியாபாரியையும் பார்த்து விட்டார். அவ்வளவுதான், மிகவும் அன்போடு அவரருகே வந்து உள்ளே அமரச் சொன்னார். வியாபாரியோ, வியாபாரம் காரணமாக உள்ளே வர இயலாது, தமக்குத் தமிழ் மீது மிகவும் ஆர்வம். இங்கே விரிவாக்கம் தருகின்ற அறிஞர்களின் சொற்பொழிவு அருமையாக இருக்கின்றது என்று மிகவும் மனமகிழ்ச்சியாய்ப் பகிர்ந்து கொண்டார்.

வியாபாரியை வரவேற்று அமரச் சொன்னார் ரசிகமணி டி.கே.சி. அவர்கள் அண்ணன் மகள் வழிப்பேரன் புரவலர் தளவாய் திரு.டி.இராமசாமி அவர்கள் தாம். தாத்தாவின் வழி வந்த பண்பாடு அப்படியே அவரிடம் ஒட்டிக்கொண்டு இருக்கின்றது.

'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்' என்று ஞாயிறைப் போற்றி, வாரத்தின் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் இவ்விலக்கிய வட்டம் நடைபெற்று வருகின்றது.

தோன்றின விதத்தைக் கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள். சேதுபதி பாண்டித்துரை தேவரின் அவையிலே எப்படி தோன்றியதோ அதே விதமாகத் தோன்றியது.

பாண்டித்துரை தேவர் அவையில் திருநாராயண ஐயங்கார், சாமி ஐயங்கார், சுந்தரேசுவர ஐய்யர், அரங்கசாமி ஐயங்கார்,

சிவகாமியாண்டார், மு.இராகவ ஐயங்கார், பூச்சி சீனிவாச ஐயங்கார் என்பவர்கள் அவைப் புலவர்களாக விளங்கினார்கள்.

"அழகர் ராசு என்ற புலவரிடம் இளமை தொட்டுத் தமிழ் பயின்ற பாண்டித்துரைத் தேவர், திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அதிகாரமாக, தம் அவைப் புலவரிடையே தொடர்ந்து விரிவுரை ஆற்றிவந்தார். இவ்வாறே கம்பராமாயணம், பெரியபுராணம், போன்ற பேரிலக்கியங்களில் ஒன்றேனும் காஞ்சி புராணம், திருவிளையாடற் புராணம் ஒன்றேனும் வேறு சிலவகை பிரபந்தமேனும் படிக்கப் பெற்றும் பொருள் ஆராயப் பெற்றும் நாளும் தவறாது, தேவரவர்களின் திருமுன்பு நடந்தேறுவது வழக்கம். இஃதன்றி, ஈற்றெழுத்துக் கவிகள் கூறுவதும், பாடற் பொருள் கூறச் செய்தும் அடிக்கடி நடைபெற்று வந்தன. இவையாவும் பாடமான கவிகள் மறவாதிருக்கும் புலமை பெறுவதற்கும் முன்னோர் கையாண்ட முறைகளே. (செந்தமிழ் வளர்த்த தேவர்கள் 16&77).

இந்த முறைகள் தான் நிஜமாக தமிழ் வளர்க்கும் முறைகள். இதுதான் சங்க நடைமுறை.

திருநெல்வேலி டவுண், மேலரதவீதியில், மேல அரண்மனையிலும் 1984ம் வருடம் நவம்பர் மாதம் 4&ம் தேதி இதே முறையில் ஒரு சங்கம் பிறந்தது; தமிழ் பெருமகனார் நான்கு பேர் அவையாகக் கூடியிருந்தார்கள். கோவில் சந்நிதிகளில் பெரிய கடோத்கஜ மீசையுடன், கை கூப்பி, ராஜகம்பீரமாக நிற்கும் மன்னர்களின் சிலைகளைப் பார்த்திருப்பீர்களே & அதே ராஜகம்பீர புருஷர் முன்னிலையில், பாரதியின் விநாயகர் பாடலைப் பாடிவிட்டு தமிழை ஆராயப் புகுந்தார்கள்.

அன்று ஞாயிற்றுகிழமை. பொருநை இலக்கிய வட்டம் என்ற பெயரில் வருணிக்கரையில் தமிழ்த்தாய், புத்திளம் குழந்தையாகப் பிறந்த தினம். "ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்" என்று சிலம்பு போற்றுகிறது அல்லவா? அது இரண்டாயிரம் வருடம் கழித்து, இப்படி ஞாயிற்றுக்கிழமை தமிழ்த்தாய் மறுபிறப்பு எடுக்கப் போகிறாள் என்பதை தீர்க்கதரிசனமாக "கவி" உணர்ந்ததினால்தான்!

ஞாயிற்றுக்கிழமை பிறந்த குழந்தை இன்று குமரியாக வளர்ந்து மாநிலம் பயனுற வாழ்ந்து, ஆயிரமாவது ஞாயிறை தொட்டு நிற்கிறாள். ஆயிரம் ஞாயிற்றுக்கிழமைகள் தொடர்ந்து, ஒரு வாரம் விடாமல், பொருநை இலக்கிய வட்டம் கூடி தமிழாராய்ந்து ஆறாவது தமிழ்ச்சங்கமாக புகழ் பரப்பிக் கொண்டிருக்கிறது.

ஆதி சங்கங்கள் மூன்று, வக்ரநந்தியின் சங்கம் நாலு, பாண்டித்துரை&பாஸ்கர சேதுபதிகளின் சங்கம் ஐந்து, புரவலர், தளவாய் இராமசாமி அவர்கள் தோற்றுவித்த இந்தச் சங்கம் ஆறாவது.

நாலு பேரில் ஆரம்பித்த இந்தச் சங்கத்தின் வட்டத்திற்கு இன்று அறுபது பேருக்குக் குறையாமல் வருகிறார்கள்.

இவ்விலக்கிய வட்டமும், ரசிகமணி அவர்களின் வட்டத்தொட்டி போல் இலக்கிய ஆய்வுகளும் நடந்து கொண்டிருக்கின்றன.

இதையொட்டி திரு. டி. தளவாய் இராமசாமி அவர்களே நம்மிடம் பகிர்ந்து கொர்ளகிறார்கள். நண்பர்களே! வாருங்கள் கேட்கலாம்!

"வரகவி வள்ளல்" தெய்வத்திரு.தி.சு.ஆறுமுகனார் அவர்கள், தாம் இயற்றிய "குறுக்குத் துறைக் குறவஞ்சி" நூலுக்கு விளக்கம் சொல்லி வந்தார்கள். அதனுடன் "குற்றாலக் குறவஞ்சி" நூலையும் ஒப்பிட்டுப் பேசினார்கள். அந்தக் "குற்றாலக் குறவஞ்சி"யில் ஒரு செய்தி:

சிங்கன் தன்னுடைய உதவியாளனை அனுப்பி, எந்த எந்த இடங்களில் என்ன என்ன பறவைகள் மேய்ந்து கொண்டிருக்கின்றன? அவற்றின் குணாதிசயங்கள் எப்படி? என்பவற்றை அறிந்து வருமாறு சொன்னான். பல இடங்களுக்கும் சென்ற விவரம் சேகரித்து வந்த உதவியாளன், எல்லா விவரங்களையும் சிங்கனிடம் சொன்னான்! அதில் 'ஆல்' என்ற பறவை பற்றிக் குறிப்பிடும்பொழுது, அந்தப் பறவை சதா காலமும் வானில் மிகுந்த உயரத்தில் பறந்து கொண்டே இருக்கும் என்றும், அதனுடைய இனப்பெருக்கம் கூட வானில் பறந்து கொண்டே நடக்கும் என்றும் சொன்னான்.

இந்தச் சிறப்புமிக்க ஆல் பறவை இனம் இன்று முற்றிலும் அழிந்து விட்டதாக ஆறுமுகனார் சொன்னார்கள். அப்போது எ.உ.சுவாமி நாதன் அவர்கள், "நெல்லைப் பகுதியிலே ஒரு பழமொழி சொல்வார்கள் சதா சர்வ காலமும் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருப்போரை "ஏன் ஆலாய்ப் பறக்கிறாய்?" என்று கேட்பார்கள். அந்தப் பழமொழி இந்த "ஆல்" பறவையில் இருந்து தான் வந்திருக்குமோ?" என்று கேள்வி எழுப்பினார்கள். இதைக் கேட்டு அன்பர்கள் அனைவரும் மகிழ்ச்சியடைந்து, எ.உ.சுவாமிநாதன் அவர்களைப் பாராட்டினார்கள். இப்படி எத்தனையோ விஷயங்கள் அவ்வப்போது, இடம் பெற்றிருக்கின்றன.

ஏறக்குறைய 70 நூல்களுக்குமேல் ஆய்வுசெய்யப்பட்டிருக்கின்றன. ஆண்டு மலர்களும், இசை மலர்களும், இவ்வட்டத்திலிருந்து வெளி வந்திருக்கின்றன.

இவ்வட்டத்தின் மாண்பினைக் கேள்விப்பட்டு பொருநை வட்டத்திற்கு ஒரு ஞாயிறன்று சென்றிருந்தேன். அங்கு வந்திருந்த அனைவரும்கற்றறிந்தபெரியோர்கள்.முதலில்என்னைவரவேற்றது மறையாப் புன்னகை அணிந்த சிரிப்பின் உறைவிடம் ரசிகமணி அவர்களின் திருஉருவப்படம்தான். அவர்தான் பிரதானமாக இருக்கிறார். பலபெரிய அரிய சான்றோர்கள் திருமுருக கிருபானந்தவாரியார் போன்ற தமிழ்ச்சமயச் சான்றோர்களும் காலடி வைத்த இடம். மிகவும் மரியாதை கலந்த பக்தியுடன் நான் சென்று அமர்ந்து அன்றைய கூட்டத்தின் அனுபவத்தைப் பெற்றேன். செவிக்கு மட்டுமல்லாது நாவிற்கும் அருமையான தேநீர் அனைவருக்கும் வழங்கினார்கள். கூட்டம் முடிந்ததும், தளவாய் அவர்கள் வீட்டிற்குள் அழைத்துச் சென்று அண்ணி அவர்களையும் மருமகள் மற்றும் பேரன் பெயர்த்தி என அடுத்த தலைமுறையையும் அறிமுகப்படுத்தினார். விருந்துபசரித்த விதம், சற்றும் ரசிகமணி அவர்களின் பேரர் நீப.நடராஜன் அவர்கள் குடும்பத்தினருக்கு சற்றும் குறையவில்லை. எங்கள் குடும்பப் பண்பாடு, இது எங்கள் தாத்தா எங்களுக்கு அருளிய தாய்வீட்டுச் சீதனம் எனக் காண்பித்து விட்டார்கள். ரசிகமணி அவர்களுக்கு ஒரு பிச்சம்மாள் அண்ணியெனில் தளவாய் அவர்களுக்கு ஒரு சிவஞான வடிவு அண்ணி என்றே கூறலாம். நண்பர்களே! இது வெறும் உபசார வார்த்தையல்ல. முற்றிலும் சத்தியவாக்கு நண்பர்களே!

மொழி என்பது இயற்கை உணவு என்றால், இலக்கியம் என்பது சமைத்த உணவு ஆகும். பிள்ளைக்கு அன்னையும் கணவனுக்கு மனைவியும் வாய்க்கு ருசியாகவும் வயிற்றுக்கு உகந்ததாகவும் பார்த்துப் பார்த்துச் சமைத்துப் பரிமாறும் உணவுபோல படிப்பவர்க்குப் பயனுள்ளதாகவும் சுவையுள்ளதாகவும படைப்பாளி படைத்து வழங்குவது சிறந்த இலக்கியம் ஆகிறது.

"கல்வி கரையில கற்பவர் நாள்சில"

"கற்றது கைம்மண் அளவு
கல்லாதது உலக அளவு"

என்ற முதுமொழிகளுக்கு ஏற்ப இலக்கிய மகா சமுத்திரத்தில் எண்ணற்ற இலக்கிய முத்துக்கள் குவிந்து கிடக்க, அவற்றில்

தக்கனவற்றைப் பொறுக்கியெடுத்துப் படித்துப் பயன்பெறுவது சாதாரண வாசகருக்கு மூச்சுமுட்டும் செயலாகிவிடுகிறது. இந்தச் சிரமமான நிலையில் கைகொடுத்து உதவவே இலக்கிய வட்டங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இலக்கியம் என்பது படிப்பவர் சுவைப்பதற்காக என்பதை எடுத்துக்காட்டி, சிறந்த தமிழ்க் கவிதைகளைத் தெரிந்தெடுத்து, அக்கவிதைகளில் அமைந்துள்ள பாவம் எப்படி உயிரோட்டத்துடன் இயங்கி நம் உள்ளங்களில் ஊடுருவுகிறது என்பதை நமக்கு முதன்முதலில் உணர்த்தியவர் ரசிகமணி டி.கே.சி. அவர்கள். வட்டத்தொட்டியின் வாயிலாக பெரியவர், சிறியவர், படித்தவர், படிக்காதவர், செல்வந்தர், சாமானியர், அலுவலர், அடியவர் என அத்துணைப்பேர்க்கும் கவியின் ருசியை வாரி வழங்கிய வள்ளல் ரசிகமணி.

அந்த வள்ளல் ஆரம்பித்துவைத்த செவிச் சுவையகத்தைப் பின்பற்றி இன்று பல இலக்கிய வட்டங்கள் இயங்கி வருகின்றன. அவை அத்தனையிலும் உயர்வானதாகப் பொருநை இலக்கிய வட்டம் திகழ்கிறது என்பது அனுபவபூர்வமாக அறிந்த உண்மை. ஒருவாரம் கூட விடுதல் இல்லாமல் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் கூடுவதும் சிறந்த இலக்கியங்களை ஒன்றன்பின் ஒன்றாக முறையாக முழுமையாக கேட்பாளர்களாக வருகைதரும் வேட்பாளர்களுக்கு வழங்குவதும் பொருநை இலக்கிய வட்டத்தின் தனிச்சிறப்பாகும்.

ஓராயிரம் கூட்டங்களை நடத்தி ஏராளமான இலக்கியங்களைத் தாராளமாக ஊட்டி அவ்வாறு ஊட்டுவதால் “இலக்கிய ஊட்டம்” என்று போற்றும் வண்ணம் இலங்கும் பொருநை இலக்கிய வட்டம் அதன் புரவலர், அவர்க்குத் துணையான நிர்வாகிகள், விரிவுரையாளர்கள், நுகர்வோர்களின் ஒத்துழைப்பால் நூறாயிரம் கூட்டங்கள் கண்டு இலக்கிய உலகில் தனிச் சாதனை புரியும், இது கதையல்ல நிஜம்!

வெண்பா

ரசிக மணிபேரர் ராமசாமி என்னை
வசியம் புரியவைத்தார் வட்டம் - ருசியை நான்
கண்டறிந்தேன்! ஞாயிறு காலை பொருநைதனைச்
சென்றடைந்தேன் இன்பம் சேர்ந்தேன்.

- கி.ரா. திருமலையப்பன்

ஆறு முகனார் அரங்கசாமி நாதரிவர்
கூறும் இலக்கியங்கள் கொள்வதினும் - வேறே
இனிய பொருளேதும் இவ்வுலகில் இல்லை
நனிமகிழ் வெய்தினேன் நான்.

- கி.ரா.திருமலையப்பன்

# டி.கே.சி.யும் முத்தொள்ளாயிரமும்

தமிழ்நாட்டில் பண்டைக்காலம் அரசு புரிந்து வந்த அரசர்கள் மூவர்; சேரர், சோழர், பாண்டியர். மூன்று அரசர்களும் தங்கள் குலதர்மமாகவே கருதித் தமிழைக் கற்று வந்தார்கள். அதைவிடத் தமிழ்ப் புலவர்களைப் பாராட்டி ஆதரித்து வந்தார்கள். அரசர்களுடைய கல்வியையும் தமிழ் ஆர்வத்தையும் கண்டு அனுபவித்து வந்த புலவர் ஒருவர் அவர்களுடைய வீரம், கொடை, அழகு முதலிய குணங்களில் ஈடுபட்டு அவைகளை விஷயமாக வைத்து அருமையான முறையில் பல கவிகள் பாடினார். "கவி ஒன்றே ஒரு பாஷையின் உயர்வை எடுத்துக்காட்ட வல்லது" என்று மகாமகோபாத்யாய சாமிநாத ஐயர் அவர்கள் சொன்னார்கள். ரொம்பவும் உண்மை. கவிகள் அவ்வளவு அருமையும் அழகும் வாய்ந்தன. ஒவ்வோர் அரசர்மீதும் தொள்ளாயிரம் கவிகள். ஆகவே மூன்று தொள்ளாயிரம் அல்லது இரண்டாயிரத்து எழுநூறு கவிகள் கொண்டுள்ள நூல், முத்தொள்ளாயிரம்.

பழைய உரையாசிரியர்கள் முத்தொள்ளாயிரத்தைப் பற்றி அடிக்கடி பேசுகிறார்கள். சமீபகாலம் வரையும் நூல் வழக்கத்தில் இருந்து வந்ததாகவும் தெரிகிறது. ஆனாலும் எப்படியோ தொலைந்து போய்விட்டது.

உயர்தனிப்பண்பு வாய்ந்த நூல்களுக்கு அதாவது ஆங்கிலத்தில் கிளாஸிக்ஸ் என்கிற நூல்களுக்கு ஆபத்தெல்லாம் அவைகளின் எளிமையும் ஆழமுந்தான். முத்தொள்ளாயிரம் உண்மையான உயர்தனிப்பண்பு வாய்ந்த நூல். எளிமையும் ஆழமும், பிற்காலத்தில் ஏற்பட்ட படோடோபப் புலமைக்கு ஒவ்வாத காரணத்தால் நூல் ஒதுங்கி ஒதுங்கி ஒழிந்து போய் விட்டது; நிற்க.

பிற்காலத்தவர் ஒருவர் சுமார் முந்நூறு நானூறு வருஷங்களுக்கு முன் "புறத்திரட்டு" என்ற பெயரோடு ஒரு தொகைநூலைத்

தொகுத்தார். சமயம், கல்வி, போர், காதல் முதலான விஷயங்களைப் பற்றியுள்ள பாடல்களைப் பல நூல்களிலுமிருந்து பொறுக்கித் தொகுத்தார். ஏதோ நல்ல வேளை, அவரிடம் முத்தொள்ளாயிர ஏடு இருந்தது. அதிலிருந்தும் சில பாடல்களைத் தமிழர் செய்த புண்ணியத்தால், நூலில் சேர்த்துக் கொண்டார். அப்படிச் சேர்த்துக் கொண்ட பாடல்கள் நூற்றெட்டு. இரண்டாயிரத்து எழுநூறு மணிகளில் நமக்கு மிஞ்சியவை நூற்றெட்டுத்தான்.

இந்த நூற்றெட்டுப் பாடல்களையும் முப்பது வருஷத்துக்கு முன் 1905ஆம் வருஷம் மதுரைத் தமிழ்ச்சங்கம் அச்சேற்றி வெளியிட்டது. அந்த வெளியீடு இல்லாமல்ப் போயிருந்தால் முத்தொள்ளாயிரத்தைப் பற்றி நாம் பேச வேண்டிய அவசியமேயிராது.

இப்போது அந்தப் பாடல்களில் சிலவற்றைப் பார்க்கலாம்:

ஒரு நாட்டின் வளத்தைப் பார்த்து யாரும் அனுபவித்து விடலாம். ஆனால் அந்த அனுபவத்தை உண்மையான பாவம் வரும்படிச் சொல்வது கஷ்டம். கவியாகச் சொல்லுவதோ எவ்வளவோ கஷ்டம்.

சேரநாடு மலையாளநாட்டை உள்ளடக்கியது. நீர் வளத்திற்கு அதை ஒப்பிட்டுச் சொல்லக்கூடிய நாடு உலகத்தில் இல்லை என்று சொல்லலாம்.

சில மாதங்களுக்கு முன் கன்னியாகுமரியிலிருந்து திருவனந்தபுரம் போகும் பாதை வழியாகக் காலை நேரத்தில் பயணம் போக நேர்ந்தது. இருபக்கங்களிலும் ஏரிகளும், குளங்களும், வயல்களுந்தான். வயல்கள் எல்லாம் பயிராகி ஒரே பச்சையாய் இருந்தன. ஆனாலும் இடையிடையே இரண்டொரு வயல்கள் பயிராகாமல் கிடந்தன. அந்த வயல்களில் தண்ணீர் கட்டி நிறைந்திருந்ததால் செந்தாமரைகளும் வெண்தாமரைகளும் பூத்து அலங்காரமாய்க் கிடந்தன. இவைபோக வேறு சில வயல்க்கிடங்குகளில் செவ்வாம்பல்ப் புஷ்பங்கள் செக்கச் செவேல் என்று பூத்திருந்தன; கண்ணை எடுக்க முடியாதபடி அவைகள் அவ்வளவு அழகாய் இருந்தன. அவைகளுக்கு இடையே நீர்வாழும் பறவைகள் சிலவும் உலாவிக் கொண்டிருந்தன. இந்தக் காட்சிகளை மனசில் வைத்துக் கொண்டு செய்யுள் ஒன்றைப் பார்க்கலாம்.

அள்ளல் என்றால் செழித்த சேறு, பழனம் என்றால் வயல்:

"அள்ளல்ப் பழனத்(து) அரக்காம்பல் வாயவிழ"

மெள்ளச் சப்தம் யாதொன்றும் இல்லாமல் ஆம்பல் மலர்ந்தது

என்ற பாவத்தை 'வாயவிழ' என்ற இதமான வார்த்தைகளைக் கொண்டு வெளிப்படுத்துகிறார் புலவர்.

ஒரே சிவப்பாய் இருந்த ஆம்பலை அக்கினிச் சுவாலையோ என்று சொல்லத் தோன்றுகிறது. தண்ணீரே தீப்பற்றிக் கொண்டது என்று சொல்லவும் தோன்றுகிறது.

"அள்ளல்ப் பழனத்(து) அரக்காம்பல் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட(து) எனவெரீஇ, - புள்ளினம்"

பயந்து பக்ஷிகள் என்ன செய்தன? குஞ்சுகளின் இறகுகளில் அந்தத் தீயானது பற்றிவிடுமே என்று எண்ணிக் குஞ்சுகளை இறக்கைகளால் தம்மோடு அணைத்துக் கொண்டன. சேரனுடைய நாட்டில் பயம் என்றால் இந்தப் பயம் ஒன்றுதான். மற்றப்படி எல்லாம் அமைதிதான். சேரனை நச்சிலை வேல்க் கோதை என்று சொல்லி வீரத்தைப் பாராட்டுகிறார். "கோதை" என்பது சேரனுக்கு உரிய பெயர்களில் ஒன்று. இப்போது வெண்பாவைப் பார்க்கலாம்.

"அள்ளல்ப் பழனத்(து) அரக்காம்பல் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட(து) எனவெரீஇ, - புள்ளினம் தம்"
கைச்சிறகால்ப் பார்ப்பொடுக்கும் கௌவை உடைத்தரோ
நச்சிலைவேல்க் கைக்கோதை நாடு"

கூடல் இழைக்கிறதில் முத்தொள்ளாயிர ஆசிரியர் கூறுகிற முறையைப் பார்ப்போம்.

பெண் ஒருத்தி பாண்டியனைக் கண்டு மோகம் கொண்டு விடுகிறாள். அவனைத் தன்னிடம் எப்படியாவது வரச்செய்யுமாறு, தோழியைத் தூது போக அனுப்பி விட்டாள். இதற்கிடையில், தான் அனுப்பிய தூது பலிக்குமோ பலிக்காதோ என்ற பயத்தினால் நாயகிக்கு நெஞ்சு பதைபதைக்கிறது. "நாம் சாமானியப் பெண்ணாச்சே; அரசனல்லவா அவன்? நம்மிடத்தில் எங்கே அவனுக்குக் கருணை உண்டாகப் போகிறது? சரி, இருந்தாலும், கூடல் இழைத்துக் குறி பார்ப்போமா" என்று மணலில் கூடல் வட்டம் வரைவதற்குக் கையை நீட்டுகிறாள்.

நீட்டி, "மதுரையாகிய கூடற்பதிக்கு அல்லவா அவன் அரசன்? கூடற்பகுதியிலுள்ள ஜனங்களுக்கெல்லாம் தெய்வம் போன்ற காப்பாளன் அல்லவா? அவன் என்னை வந்து அணைவானா?

அணைவான் என்பது உண்டென்றால், கூடலே நீ கூடுவாயாக!" என்றாள், இதை,

"கூடற் பெருமானைக்
கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேல்,
கூ(டு) என்று -"

சொல்லச் செய்து விட்டு, பிறகு கூடல் இழைக்க ஆரம்பித்த நாயகி அதை இழையாது நிறுத்தி விடுகிறாள் என்று சொல்லுகிறார் கவி.

" - கூடல்
இழைப்பாள் போல்க்காட்டி
இழையா(து) இருக்கும்?"

என்று முடித்து விடுகிறார். இப்படி ஒன்றை ஆரம்பித்து அதைச் செய்யாது நிறுத்தியதற்குக் காரணம் யாதென்றால், வட்டங்கள் பொருந்தாமற் போகுமானால் நாயகன் வராமற் போய்விடுவான் என்பதே. அது அவனை வரவொட்டாமல் தடுத்து விடாதுதான். ஆனாலும், அவள் மனசில் தடுத்துவிடும் என்றே படுகிறது, அந்தக் காரணத்தைக் கவி நாலாவது அடியில்க் குறிக்கிறார்:

"பிழைப்பில்ப் பிழைபாக்(கு)
அறிந்து"

இப்போது வெண்பாவின் முழு உருவத்தையும் பார்ப்போம்:

"கூடற் பெருமானைக்
கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேல்
கூ(டு) என்று - கூடல்
இழைப்பாள்போல்க் காட்டி
இழையா(து) இருக்கும்
பிழைப்பில்ப் பிழைபாக்(கு)
அறிந்து."

இந்தக் கவிக்கு உயிராகிய கருத்து, பாண்டியன் தன்னைக் கூட வேண்டும் என்று நாயகி எண்ணுகிற பாவந்தான். முதல் இரண்டு அடிகளிலும் 'கூடல்' என்ற சொல்லைத் திரும்ப திரும்ப உபயோகித்து இந்த பாவத்தைத் தொனிக்கச் செய்கிறார் புலவர். 'கூடற் பெருமானை' என்று நகரத்தைக் குறித்துவிட்டு, மறுபடியும் 'கூடலார்' என்று நகரத்தாரைக் குறிக்க வந்தது. மேலே சொன்ன தொனி அழுத்தம் பெறுவதற்காகச் செய்த உத்தியாகும். இந்த உண்மை முதல் இரண்டு அடிகளையும் கொஞ்சம் பாடிக்கொண்டே இருந்தால், யாவருக்கும் புலப்பட்டு விடும்.

மூன்றாவது அடியில், 'இருக்கும்' என்று ஏதோ எல்லாவற்றையும் சொல்லி ரீமுடித்து விட்டதுபோலப் பாவனை காட்டுகிறார் புலவர். மாறான எண்ணம் நாயகிக்குத் திடீரென்று உண்டாகி விட்டது என்ற குறிப்பைக் காட்டும் பொருட்டுக் கடைசி அடியைத் துண்டாகத் தனித்து நிற்கச் செய்துவிடுகிறார். நாயகி திகைத்துப் போய் உட்கார்ந்திருக்கிற பாவம் செய்யுளிலேயே அமைந்து கிடைக்கிறதல்லவா?

இந்த முத்தொள்ளாயிரக் கவியை இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்பே புலவர் பாடினார். அரங்கேற்றும் சமயத்தில், பாண்டி மன்னனும், அவனைச் சூழ்ந்துள்ள புலவர் குழாமும், உண்மையான கவி வெறிகொண்டு எவ்வளவோ அனுபவித்திருப்பார்கள். இன்றும் நாம் அனுபவிக்கிறோம். தமிழ் உணர்ச்சி இருக்கும் வரையும், தமிழர்கள் அனுபவிப்பார்கள்.

(ரசிகமணி கட்டுரைக் களஞ்சியம், தொகுப்பாசிரியர் தீப. நடராஜன், காவ்யா சண்முக சுந்தரம் முதற்பதிப்பு & செப் 2006 பக் 226,227,228,238,236,237)

## டி.கே–.சியின் கடிதங்கள்

(ரசிகமணி டி.கே.சி அவர்கள், 27 பேருக்கு எழுதிய கடிதங்களை, டி.கே.சி அவர்களின் பேரன் திரு. தீப.நடராஜன் அவர்கள் துணை கொண்டு வரும் தலைமுறையினருக்கு ஒரு ஆவணமாய் திகழும்படி ஒரு செம்பதிப்பாய் அழகிய வடிவில் நேர்த்தியாய் முழுத்தொகுப்பாக, உயிர்மை பதிப்பகத்தின் வெளியீடாக கவிஞர். மனுஷ்ய புத்திரன் கொணர்ந்த இப்பணி பார் போற்றும் பெரும் பணியாகும். உண்மையே உபசாரமில்லை)

சென்னை

22.08.11

தி.சுபாஷிணி
மகாலிங்கபுரம்
சென்னை-34.

எனதருமை நண்பர்களுக்கு வணக்கம்.

நினைத்த மாத்திரத்தில் தகவல் பரிமாற்றம் நிகழும் இந்நிலையிலும் கைநிறையத் தபால் எடுத்துவரும் தபால்காரரின் வருகை எப்போதும் நமக்கு மகிழ்ச்சிதானே! நீங்களும் அதை அனுபவிக்க வேண்டும் என்று இக்கடிதத்தை உங்களுக்கு எழுதுகின்றேன்.

நண்பர்களே! அப்போது நம்மை ஆங்கிலம் ஆட்சி செய்த நேரம். அதன் வலிமையில் நம்மை மறந்த நேரம். தமிழில் ஒன்றும் இல்லை என்று சொல்லிக் கொண்டிருந்ததை மறுக்காது மயங்கிக் கிடந்த நேரம். ஆங்கில மோகம் அப்படி கட்டி வைத்திருந்த நேரம். அந்த மாயையை மயக்கத்தை மரணிக்கச் செய்து, தமிழின் அழகை வல்லமையை நம் ரசிகமணி எடுத்துரைத்தார்.

கவி, கலை, கல்வி ஆகியவைகளில் எதுவாகட்டும் அவைகளை நேருக்கு நேராகச் சொல்லி ஒரு சிலருக்குத்தான் விளங்க வைக்க முடியும்; அதை அப்படியே அனுபவிக்கச் செய்ய முடியும். ஒரு கூட்டம் முழுவதையும் அனுபவத்தில் கொண்டு வர இயலும் என்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. இதன் அடிப்படையில் அவர் மேடைப்பேச்சை அவ்வளவாக விரும்பவில்லை. தமது தனிக்கொள்கைகள் என்று கட்டுரைகளும் இல்லை. தனித்தனியாக எழுதிய கவிதை விளக்கக் கட்டுரைகள் அதிகம். அவைகளில் ஆங்காங்கே சிலவற்றைச் சுட்டி காட்டுகிறார். ஆனால் ரசிகமணி, தன் கடிதங்களில், பல கொள்கைகளையும், வாழ்க்கை நோக்கத்தையும் எடுத்துரைப்பதாக இருக்கிறது. இவை பல கோணங்களில் விரிவடைகின்றன. கவிதை, பண்பாடு, கல்வி, சமயம் எனப் பல்துறை சார்ந்த விளக்கங்கள் அவர் கடிதத்தில் இருக்கின்றது.

சிறு கூட்டத்தினர்க்குப் பேசி விளக்குவதே அவர்கள் விரும்பிச் செய்த இலக்கிய ரஸனைப் பணியாக இருந்து வந்திருக்கிறது. அந்தக் கூட்டத்தாரை 'சத்சங்கம்' என்று அன்போடு பாராட்டிச் சொல்லுவார்கள் ரசிகமணி.

டி.கே.சி. அவர்கள் தாம் அனுபவித்ததை, தாம் கண்ட உண்மையை, ஒத்து உணரும் அன்பர்களிடம் பகிர்ந்து கொண்டார்கள். அந்த அன்பர்கள் அதில் ஈடுபட்டு அனுபவிப்பதைப் பார்த்து அவர்கள் ஒரு நிறைவும், மகிழ்ச்சியும் அடைந்தார்கள்.

அப்படி ஒத்து அனுபவிப்பவர்கள் மத்தியில் உரையாடும் போது அவர்களுக்கு உத்ஸாகம் கரைபுரண்டு ஓடும். அதனால் பல அரிய உண்மைகளும், அனுபவங்களும் அவர்களிடமிருந்து விளக்கம் பெற்று வரும்.

அதேபோன்று அந்த உற்ற நண்பர்களுக்குக் கடிதம் எழுதும்போதும் டி.கே.சி. அவர்களின் அனுபவங்களும் உண்மை விளக்கங்களும் உணர்ச்சியோடு கொப்பளித்த வண்ணம் வெளிப்படும்.

நண்பர்கள் டி.கே.சி. அவர்களுக்குக் கடிதம் எழுதும் போது ஒரு சந்தேகத்தையோ அல்லது தாம் அனுபவித்து ரஸித்த ஒரு விஷயத்தையோ எழுதிவிடுவார்கள் சில சமயம்.

அந்தக் கடிதத்துக்குப் பதில் டி.கே.சி. அவர்களிடமிருந்து வரும்போது அதில் பல அரிய உண்மைகளுக்கு விளக்கமும் டி.கே.சி. அவர்களின் தனித்த பார்வை தரும் ஒளியும் பிரகாசித்துக் கொண்டிருக்கும்.

"அந்தக் கடிதங்கள் எல்லாம் இன்று சாகா வரம் பெற்ற இலக்கியங்களாகத் திகழ்கின்றன."

(ரசிகமணி டி.கே.சி. கடிதங்கள் - முழுத்தொகுப்பு - தொகுப்பாசிரியர் - தீப. நடராஜன் உயிர்மை பதிப்பகம். முதற்பதிப்பு 2010 பக்கம் 276)

அவைகள் 'டி.கே.சி. யார்' என்று தமிழ்ச் சமுதாயத்துக்குச் சொல்லிக் கொண்டிருக்கின்றன.

ரசிகமணி அவர்களின் ஒரே மகன் தீத்தாரப்பன் எழுதிய கடிதங்கள் 'அரும்பிய முல்லை' என்னும் பெயருடன் முதன்முதலில் வெளிவந்தது. பின் 1961ஆம் ஆண்டு "ரசிகமணி டி.கே.சியின் கடிதங்கள்' என்று பாஸ்கரத் தொண்டைமான் அவர்களால் கொண்டு வரப்பட்டது. இதைத் தொடர்ந்து சென்னை வட்டத் தொட்டி வெளியீடாக ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களும், 'ரசனை ஒலி' என்னும் தலைப்பில் திருச்சி நண்பர் ஜி.ஸி. பட்டாபிராம் அவர்களும் ஒரு தொகுப்பு வெளியிட்டிருக்கிறார். தொண்டைமான் அவர்களுடைய புதல்வி 'பேசும் கடிதங்கள்' என்று ஒரு சிறுதொகுப்பு வெளியிட்டிருக்கிறார்.

"ரசிகமணியவர்களுக்கு எழுத்தைவிடப் பேச்சிலேதான் ஆர்வமும் நம்பிக்கையும் அதிகம். இதய ஒலி, கம்பர் யார், அற்புத ரசம், கம்பர் தரும் காட்சி என்று அவர்கள் எழுத்தின் பட்டியல் நீண்டாலும்கூட, அவர்கள் பேசிய பேச்சுக்களுக்கு ஈடு கொடுக்க முடியாது. ஆனால் அவர்களுடைய கடிதங்கள்

அந்தக் குறையை நீக்கிவிடும். டி.கே.சி.யின் ஆழ அகலங்களையும், அவரது ஆளுமையையும் அவரது கடிதங்களிலேதான் காண முடியும் என்று ஜஸ்டிஸ் மகராஜன் அவர்கள், தீர்மானமாய் சொல்வார்கள். நீதியரசரே சொல்லிவிட்ட பிறகு வேறு யார் என்ன சொல்ல முடியும்?" - ராஜேஸ்வரி நடராஜன் (ரசிகமணி டி.கே.சி. கடிதங்கள் - முழுத்தொகுப்பு - உயிர்மை பதிப்பகம் - தொகுப்பாசிரியர் தீப. நடராஜன் முதற்பதிப்பு 2010 பக்கம் 31)

நண்பர்களே! இவ்விடம் க்ஷேமம். க்ஷேமத்திற்குப் பதில். மாடு கன்று போட்டதா? மிகவும் சௌக்கியமாக வந்து சேர்ந்தேன். புண்ணாக்கு விலை இங்கு அதிகமாகிவிட்டது! நெல் விலை குறைந்து விட்டதா? எனக் கடிதம் எழுதினால், பார்த்துவிட்டு, எறிந்து விடலாம். ஆனால் நம் ரசிகமணி கடிதங்களோ கலை அந்தஸ்து பெற்றவை. ஒரே ஹாஸ்யமும், உல்லாசமும், உணர்ச்சியுமாய், படிக்கப் படிக்கத் திகட்டா இலக்கியப் பரல்கள். டி.கே.சி. கடிதம் எழுதுவதைக் கைகொண்டபின்தான் 'கடித இலக்கியம்' என்று ஒன்று தமிழ் நாட்டில் பிறந்தது என்றால் அது மிகையாகாது. தென்காசித் தமிழில் சொல்ல வேண்டுமெனில் 'இது உபசாரவார்த்தை இல்லை உண்மையே'. ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் கடிதங்கள் எழுதியே இலக்கியங்களை உயர்த்தினார்களாம் நண்பர்களே!

நீதியரசர் மகராஜன் அவர்கள் முன்னுரையிலிருந்து

"இலக்கிய மணம் வீசுகின்ற, புகழ் பெற்ற பல ஃபிரெஞ்சுக் கடிதங்களையும் ஆங்கிலக் கடிதங்களையும் நான் ஆழ்ந்து படித்து அனுபவித்திருக்கிறேன். ஆனாலும், ரசிகமணியின் கடிதங்களில் உள்ள எளிமையும் நுணுக்கமும், உல்லாசமும், நகைச்சுவையும் கலைப்பாங்கும் தத்துவ ஆழமும், ஆனந்தமும் நான் ஃப்ரெஞ்சு அல்லது ஆங்கிலக் கடிதங்களில் கண்டதில்லை.

ரசிகமணியின் கடிதங்கள் ஒவ்வொன்றும் நேருக்குநேர் நின்று பேசும். யாருக்கு எழுதுகிறார்களோ அந்த ஆளைத் தம் கண்முன் நன்றாய் இருத்தி வைத்துக்கொண்டு ரசிகமணி அவரோடு இயல்பாக உரையாடுவார்கள். ஆகவே, அவர்களுடைய கடிதங்கள் அற்புதமாக அமைந்து விட்டன. உண்மையில், நானே

அவர்களிடம் அடிக்கடி சொல்வதுண்டு. "நீங்கள் பல தமிழ் நூல்களை எழுதியிருக்கிறீர்கள்; ஆனால், உங்கள் உணர்வுகளின் ஆழ அகல உயரங்களையும், உங்கள் ஆளுமையையும் (personality) உங்கள் கடிதங்கள் காட்டுவதுபோல் நீங்கள் எழுதிய நூல்கள் காட்டவில்லை" என்று.

"உண்மையில், இப்போது வெளியிடும் இந்தக் கடிதங்களைப் படித்தால் அவர்கள் உயிருடன் இருந்து, நம்மோடு உறவாடிக்கொண்டும், உரையாடிக் கொண்டும் இருப்பது போன்ற பிரமை நமக்கு ஏற்படுகிறது. டி.கே.சி. கடிதங்களில் உள்ள ஒவ்வொரு சொல்லிலும் எழுத்திலுமே பொருள் முட்டித் ததும்பிக்கொண்டு நிற்கிறது; அபாரமான தெளிவும் உணர்ச்சியும் ஒளியும் இருக்கின்றன. வெறும் கொச்சைப் பேச்சை வைத்துக் கொண்டு இந்த மாதிரி ஜாலவித்தைகள் பண்ணிவிட முடியாது. ஆண்டுக்கணக்கிலே பேச்சுத்தமிழின் உயிர்நிலையை அறிந்து, அதன் மர்மஸ்தானத்தை உணர்ந்து, அனுபவித்து, அந்த அனுபவத்தால் பெற்ற மொழியறிவைக் கலைப்பாங்கோடு கையாளக் கற்றுக்கொண்டதால்தான் டி.கே.சி.யினுடைய எழுத்துத் தமிழுக்கு, பேச்சுத் தமிழின் இயல்பான சீலமும் வன்மையும் உயிர்த்துடிப்பும் கிட்டியிருக்கின்றன.

அதோடு, டி.கே.சி.க்குத் தம்மிடம் ஒத்த உள்ளம் படைத்த அன்பர்களிடம் கவிதையையும் சமயத்தையும் பற்றிப் பேசுவதிலே எவ்வளவு ஆனந்தம் இருந்ததோ அவ்வளவு ஆனந்தம் அவர்களுக்குக் கடிதம் எழுதுவதிலேயும் இருந்தது.

ஒரு பருவத்தில், மூச்சு விடுவது எவ்வளவு அவசியமோ கடிதம் எழுதுவதும் அவ்வளவு அவசியமாக ஏற்பட்டு விட்டது அவர்களுக்கு. அவர்களே ஒரு கடிதத்தில், "நாளுக்குநாள் என்ன படுகிறது என்றால் - ஆகாரம், காற்று, தண்ணீர் இவைகளைப் போலவே கடிதங்களும் இன்றியமையாத காரியம் என்பதாக" என்று சொல்லியிருக்கிறார்கள். தனிமையில் இருக்கும்போதும் உறக்கம் வராத போதும், காலை 3.30 மணிக்குக் கூட சஹிருதயர்களுக்குக் கடிதம் எழுதி, மன நிறைவு பெற்றார்கள். இந்த நூலிலுள்ள 78-ஆவது கடிதம் கீழக்கண்டவாறு முடிகிறது:-

"என்னுடன் இருந்த நண்பர்களும் எல்லாருமாக நேற்றுப் புறப்பட்டுப் போய்விட்டார்கள். தங்கள் அண்ணியும் குற்றாலமும் ஆழ்வார் குறிச்சிக்குப் போயிருக்கிறார்கள். தங்கம் தென்காசி; ஆகவே, நான் இனிது இனிது ஏகாந்தம் இனிது என்று, சிவமே என்றிருக்கிறேன். பலராமும் துணைக்கு இருக்கிறார். அருவிச்

சத்தம் ஒன்று மட்டும் கேட்டுக் கொண்டிருக்கிறது. மற்றப்படி நிச்சப்தம். மணி காலை 3.30."

பத்து அல்லது இருபது பக்கங்கள் கொண்ட நீண்ட கடிதங்களைக் குற்றாலத்தில் இருந்துகொண்டு எழுதும் வாய்ப்பு ரசிகமணிக்கு இருந்தது. வேலையினால் அலைமோதிக் கொண்டிருந்த எனக்கோ அந்தக் கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுத வாய்ப்பு கிடைப்பதில்லை. இதைப் பற்றி 21-09-1949-ல் டி.கே.சி. சீவில்லிபுத்தூருக்கு எனக்கு எழுதிய கடிதம் பேசுகிறது:-

"கள்ளுக்கடைகளை அடைத்துவிட்டார்கள். ஆனால், அன்பைப் பகிஷ்கரிக்கவில்லை. கம்பர் சொல்லுகிறபடி, கள்ளும் அன்பும் ஒரே தன்மையானவைதான். அவைகளுடன் பழகுவது பிசகு விடமுடியாத பழக்கமாய் விடுகிறது. சீவில்லிபுத்தூரிலிருந்து கடிதம் வந்துகொண்டே இருக்க வேண்டும். அல்லாத பக்ஷம் நாள் வெறித்தோடிப் போகிறது. ஆனால், ஆசைக்கும் ஒரு அளவு வேண்டும்."

"டி.கே.சி.க்குக் கம்பர் கவிதையிலும் தமிழ் மொழியிலும் இருந்த பக்தியானது வெறித்தனத்தை அடிப்படையாகக் கொண்டது அல்ல; ஆழ்ந்த நிதானத்தையும் உள்ளுணர்வையும் மொழி நுணுக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டது. அவர்கள் மரணப்படுக்கையில் இருந்த போது, என்னை அழைத்து, "உங்களிடம் ஒரு வரம் கேட்கிறேன். நீங்கள் ஒன்றைச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். தமிழர்களையும் சொல்ல வைத்துக் கொண்டே இருக்க வேண்டும். எதைச் சொல்ல வேண்டும்? 'டி.கே.சி. என்று ஒருவன் இருந்தான், அவன் சொல்வான், உலகத்திலேயே தமிழைப் போன்ற உயர்ந்த மொழி வேறு ஒன்றும் இல்லை, உலகத்திலேயே கம்பனைப் போன்ற உயர்ந்த கவிஞன் வேறு ஒருவரும் இல்லை, என்று சொல்லுவான். இதைத் தமிழர்கள் சொல்லிக்கொண்டே இருக்கட்டும். 500 ஆண்டுகள் அல்லது 1000 ஆண்டுகள் கழித்தாவது உலகமெல்லாம் இதை ஒப்புக் கொள்ளும்" என்று சொன்னார்கள். அவர்களுடைய அசைக்க முடியாத நம்பிக்கையை ஒரு கடிதம் (25-1-50) கீழ்வருமாறு எடுத்துச் சொல்கிறது.

"வருகிற வழியில் விருதுநகர், மதுரை, திண்டுக்கல் முதலிய ஸ்டேஷன்களில் இளைஞர்கள் "ஆட்டகிராப்" நோட்புஸ்தகங்களையோ, வாங்கிய புதுப் புஸ்தகங்களையோ கொண்டு வந்து என் பெயரை எழுதச் சொன்னார்கள். எல்லாவற்றிலும் என் அனுபவத்தை எழுதிக் கொடுத்தேன்.

தமிழனுக்குத்
தமிழே
துணை
என்பதைத்தான் எழுதினேன்."

"தமிழனுக்குத் தமிழே துணை&ஏதோ படாடோபச் சொல் என்றுகூட எண்ணிவிடலாம். இது உண்மைதான் என்பதை அறிந்து கொள்வதற்கு (26-1-50) இன்று ஒரு நல்ல சந்தர்ப்பம்.

பத்திரிகை ஒவ்வொன்றும் "சுதந்திர மலர்" என்று துலாக்கணக்கில் கடுதாசிக் கட்டுகளை வெளியிட்டிருக்கின்றன. அவ்வளவும் இப்போது இங்கே என் மேஜையை நெளித்துக் கொண்டிருக்கின்றன. இவ்வளவும் ஒரு மனுஷனது மூளைக்குள்ச் செல்லுமானால், மூளை கெட்டுவிடும். அதோடு தேசமும் கெட்டு விடும். பிறகு தெரியவரும் தமிழ்தான் துணை என்கிற காரியம்."

ரசிகமணி கடிதங்கள் - முழுத்தொகுப்பு - ஜஸ்டிஸ் மகராஜன் முன்னுரை - உயிர்மை பதிப்பகம், முதற்பதிப்பு, 2010 - பக்கம் 400,401,417,418)

ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களின் சகோதரிக்கு 19.11.48இல் எழுதிய இக்கடிதத்தில் தத்துவம், விஞ்ஞானம், சமயம் ஆகிய மூன்று வகையிலும் கவிதையாய் டி.கே.சி. பார்க்கும் பார்வை நமக்குத் தென்படுகிறது. ஜஸ்டிஸ் மகராஜன் அவர்களுடைய சகோதரி ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு நீண்ட வால்வெள்ளியைப் பார்த்த அந்த அரிய காட்சிகளை டி.கே.சி.யிடம் தெரிவித்திருக்கிறார்கள். அதற்குப் பதில் கடிதம்தான் இது. மிகவும் நீண்ட கடிதம்தான்.

"டி.கே.சிதம்பரநாத முதலியார் தென்காசி
குற்றலாம் **19-11-48**

அருமைப் புதல்வி வேலம்மாளுக்கு,

14உக் கடிதமும் 16உக் கடிதமும் கிடைத்தன.

சாஸ்திரி அம்மாள் வந்துவிட்டார்கள். முந்தாநாள் (17உ) இரவு - ரயிலில்த்தான் வந்து சேர்ந்தார்கள். அம்பாத்துறையில் ரயில் ஏறும் போதே இரண்டு மணி நேரம் தாமதம். ஆகவே தென்காசிக்கு நள்ளிரவு 12 மணிக்கு வந்து சேர்ந்தார்கள். இங்கே வீட்டுக்கு வந்தபோது 1 மணி. மழை பெய்து கொண்டே இருந்தது. அகாலம். ஒரே அலுப்பு. அப்படியே படுக்கையில் முடக்கிப்

படுத்துக் கொண்டார்கள். சாப்பாடு வேண்டாமா என்று கேட்டதற்கு விடியட்டும் என்று விட்டார்கள். தூக்கத்தோடு எதுவும் போட்டி போட முடியாது. சாப்பாடும் பின் வாங்க வேண்டியதுதான்.

தபால்காரர்கள் சிலவேளை நம்மோடு ஒட்டித் துணை புரிகிறார்கள். சாஸ்திரி அம்மாள் குறிப்பிட்ட ரயிலில் வரவில்லை. ஒன்றரை நாள் கழித்துத்தானே வந்திருக்கிறார்கள். என் கடிதத்தின்படி, நீங்கள் ரயிலுக்குப் போயிருந்தால் வீண் அலைச்சலாகத்தானே போயிருக்கும். அம்மாளைப் பாராத ஏமாற்றம் பதினமடங்கு அதிகமாயிருக்கும். ரயில் வண்டியைச் சபிக்கத் தோன்றும்.

சாஸ்திரி அம்மாளுக்கு அலுப்பு இன்னும் போன பாடாக இல்லை. மலையாளத்து வைத்தியர் ஒருவர் இங்கு வந்தார். அவர் ஒரு தைலம் கொடுத்திருக்கிறார். இரண்டு நாளில்ச் சரியாய்ப் போய்விடும் என்றார்.

காந்திக் கிராமத்தில் ஆசிரியர்கள், டாக்டர்கள், 130 மாணவிகள் எல்லாருமாக சாஸ்திரி அம்மாளைப் போக விடமாட்டோம் என்று மறிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

“ஒருநாட் பழகினும்
        பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க
        வேர்வீழ்க் கும்மே”

ஆனால், இங்கே எங்கள் காரியம் அவ்வளவு எளிதா. அவர்கள் இல்லாதது பற்றி எல்லாம் வெறிச்சோடிப் போய்விட்டது. எல்லாருக்கும் சங்கடந்தான். ஆனால், குழந்தைகள் பாடு ரொம்ப சங்கடம். விடியற்காலம் தங்கம் எழுந்தாள். அப்படியே போய் படுத்திருந்த அம்பாள் மேல் விழுந்து அப்படிப் புரண்டு இப்படிப் புரண்டு பாடாய்ப் படுத்திவிட்டாள். குமாரசாமி அதன் பிறகு எழுந்தான்; ஓடிப்போய் அப்படியே மடியில்ப் போய்ப் படுத்துக் கொண்டான். அவனால் மேல்வலி அதிகம் ஆகவில்லை. ஆனால், அம்மாளுக்கு எழுந்திருக்க முடியவில்லை.

நான் என்ன செய்ய; குறளை எடுத்தேன்.

“பெரிதினிது பேதையார்
        கேண்மை; பிரிவின்கண்
பீழை தருவ(து) ஒன்(று)
        இல்”

என்ற குறளை வாசித்து வாசித்து அதன் உண்மையை அனுபவித்துக் கொண்டிருந்தேன்.

"Truth is Beauty" என்று ஒரு பெரிய உண்மையை Keats என்ற கவிஞர் சிறு பிராயத்திலேயே எப்படியோ கண்டுவிட்டார்; அழகாயும் அழுத்தமாயும் வெளியிட்டும் விட்டார்.

ஆனால், புரோபஸர்கள் பாடும், மாணவர்கள் பாடும், கஷ்டமாய்ப் போய்விட்டது. இன்றைக்கும் விளங்காத காரியந்தான். Truth என்பதை என்றைக்காவது கண்டிருந்தால் அல்லவா Beauty என்பதைக் காண முடியும். இரண்டையும் காணாத சௌகரியமான நிலையிலேயே இருக்கிறார்கள் அவர்கள்.

"கலிங்கத்துப் பரணி" ஆசிரியர் சிங்காரச் சுவைபடப் பாடுவதில் வெகு சமர்த்தர். ஆனாலும், பேய்களையும் அவைகளின் கோழை ஸ்வரூபங்களையும் வர்ணிப்பதில் அவரை இணை இல்லாதவர் என்றே சொல்லிவிடலாம். அவ்வளவு அழகாய் இருக்கும் கோர வர்ணனை.

**"கோம்பி பாம்பிடை**
**கோத்தணி தாலிய"**
**(கோம்பி: பச்சோந்தி)**

தாலியை எப்படி அற்புதமாக வர்ணித்து விட்டார்?

மனக் கண்ணால் பேயையும் தாலியையும் பார்த்தார். அந்த உண்மையைப் பாடி விட்டார்.

Truth is Beauty

சந்தேகமே இல்லை.

இவ்வளவு கஷ்டமான இலக்கிய நுட்பத்தைத் தங்கம்மாள் கடிதத்தின் மூலமாக நீங்கள் கண்டு அனுபவித்து எழுதியிருக்கிறீர்கள்.

எனக்கு உங்கள் விமர்சனம் அபாரமாய்ப்பட்டது.

Keats சொல்லிய வாக்கியம் காலேஜ்காரருக்கும் யூனிவர்சிட்டிகாரருக்கும் புதிர்தான் என்பது தங்களுக்குத் தெரியாது. தம்பிக்குத் தெரிந்த காரியந்தான்.

அருமைச் சுப்புபேபியைப்பற்றி உண்மைகளையே கொட்டுவாள். அவளுடைய வார்த்தைகள்தான் உண்மை பொதிந்தன. அழகு வாய்ந்தன. சந்தேகமே இல்லை. என்னுடைய வார்த்தைகளும் அப்படிப்பட்டவைதான். ஆனால், நானே எப்படிச் சொல்லிக் கொள்ளுவது. அங்கேதான் கஷ்டம்.

வால் வெள்ளியைப் பார்த்துக் கொண்டீர்கள். ரொம்ப சந்தோஷம். இங்கே மழை மேகமாய் இருப்பதால் நான் இன்னும் பார்க்கவில்லை. விபரங்கள் ஒரு வகையாய் பத்திரிகையில் வந்திருக்கின்றன. ஆனாலும், வான சாஸ்திரிகளுக்கும், இது பழையதொரு வால் வெள்ளியா அல்லது புதிதாகக் காணுவதா என்ற விபரம் தெரியவில்லை.

வால் வெள்ளிகள் எத்தனையோ இருக்கின்றன. ஆயிரக்கணக்கானவே இருக்கலாம். ஆனால், நமக்குப் புலனாவது சில வெள்ளிகளே.

1910ம் வருஷம் Halley's Comet என்ற வால் வெள்ளியைத் தெளிவாய்ப் பார்த்தோம்.

சூரியனைச் சுற்றி எத்தனையோ பிரம்மாண்டமான வஸ்துக்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன.

பூமியும் சூரியனைச் சுற்றிப் பிரதக்ஷிணம் வருகிறது. ஒரு வருஷத்தில் ஒரு பிரதக்ஷிணம். சனிக்கு 30 வருஷம் ஆகிறது. Halley's Comet என்ற வால் வெள்ளிக்கு 75 வருஷம் ஆகிறது. இப்போது தெரிகிற வெள்ளிக்கும் 75 அல்லது மேற்பட்ட வருஷங்கள் ஆகலாம். ஏன், 200 வருஷம் ஆகிறது என்று இருந்தாலும் இருக்கலாம்.

சூரியனுக்கும், பூமிக்கும் தூரம் 9 கோடி மைல். அப்படிப் பார்க்கும் போது பூமியின் பிராகாரம் 54 கோடி மைல்.

ஒரு வருஷத்தில் சுற்றி வருகிற பிராகாரம் 54 கோடி மைல் என்றால் 75 அல்லது 200 வருஷத்தில் சுற்றி வருகிற பிராகாரம் எத்தனையோ "54 கோடி" மைல் இருக்குமே.

இந்த விதமாகப் பிரம்மாண்டமான அண்டங்கள், எட்டாத தூரம் துரத்தப்பட்டு, மறுபடியும் சூரியனிடம் வருகின்றன. எல்லாம் கணக்குப் படிதான். நியதிக்கும் கணக்குக்கும் விரோதமாக அண்டத்திலும் நடப்பதில்லை. அணுவுக்குள்ளும் நடப்பதில்லை. அப்படி நடப்பதெல்லாம் நம்முடைய அண்ணாத்தைகளின் மூளைக்குள்தான். அந்த மூளைக்குள் எப்படித்தான் அந்த பிரம்மன் நியதிக்கு மாறான அசட்டுத் தனத்தைத் திணித்தானோ தெரியவில்லை. தமிழில் ஒன்றும் இல்லை என்று சொல்லும்படி ஒரு அற்புதத்தை அல்லவா திணித்து விட்டான் பிரமன். அவன் காரியம் எப்படியோ போகட்டும்.

எத்தனையோ அண்டங்கள், பிரம்மாண்டங்கள் எட்டாத வெட்ட வெளியில், ஒரு நியதியின்படி மனோவேகத்தைத் தாண்டியதாய்ச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கின்றன.

இதுதானே இறைவனது உருவம் (நியதி), நடனம், வால் வெள்ளியைக் கொண்டு ஒரு சிறு பாகத்தை நாம் தெரிசிக்கும்படி அருள் செய்கிறார். இறைவன் முழு உருவத்தை நமக்குக் காட்டவா செய்வார். ஞானிகளுக்குக் காட்டுவார்.

"அண்டர் அண்டம்
யாவும், நீ
கொண்டு நின்ற
கோல மே!
தொண்டர் கண்டு
சொரிகண் ணீர்
கண்ட நெஞ்சு
கரையு மே"

- தாயுமானவர்

"ஞானிகள் அறிந்து அனுபவித்து ஆனந்தக் கண்ணீர் விடுவார்களே, அதுதான் உன் அழகிய கோலம்" என்கிறார் தாயுமானவர். வால் வெள்ளிகளும், அவைகளைவிடக் கோடானு கோடிமடங்கு பெரிய நட்சத்திரங்களும் அவைகளின் அற்புதமான இயக்கங்களும் எல்லாம் சேர்ந்துதான் இறைவனது அழகிய உருவம்.

நடராஜப் பெருமானது உருவத்தை - "கோலத்தை" அப்படியல்லவா பார்க்கிறார்கள். நம்மவர்கள். அறியாமை இல்லை, மூடபக்தி இல்லை, இருட்டடிப்பு இல்லை. எல்லாம் காட்சி. ஒன்றாகக் காணும் காட்சி!

தம்பிக்கும் குழந்தைகளுக்கும் என் அன்பு.

அன்புள்ள
டி.கே.சிதம்பரநாதன்

குறிப்பு: என் காலிலிருந்த புண் இன்று காலை நிரந்து விட்டது. டாக்டருக்குத் திருப்தி.

நண்பர்களே! இனி வரும் கடிதம், திருவள்ளுவரின் இதயத்தில் இவர் இடம்மாறி அமர்ந்தாரோ என்பதுபோல் இருக்கிறது பாருங்கள்.

&&&&&&&&

டி.கே.சிதம்பரநாத முதலியார் சென்னை
முகாம் 16-12-49
"கல்கி"

அருமை நண்பர் மகராஜன் அவர்களுக்கு,

திருவள்ளுவர், - அன்பு உண்டாக்குவதற்கோ வளர்வதற்கோ நெருங்கிப் பழகுதலோ, உறவாடுதலோ வேண்டாம், ஒத்த உணர்ச்சி இருந்தால் போதும், என்று பேசுவார்.

"புணர்ச்சி பழகுதல்
வேண்டா, உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை
தரும்"

என்பதாகப் பேசினார்: சௌடால்த்தனமாகத்தான் பேசினார். அப்பா குதிருக்குள் இல்லை என்ற கதைதான் அப்படிச் சொன்னது.

சினேகிதர்களோடு ரொம்ப ரொம்ப உறவாடி இருக்கிறார், ஜமா, ஜமா என்று ஜமாய்த்திருக்கிறார். அல்லாத பக்ஷம்

"பெரிதினிது பேதையார்
கேண்மை, பிரிவின்கண்
பீழை தருவ(து) ஒன்(று)
இல்."

என்று சொல்லுவாரா?

ஏன், ஒத்த உணர்ச்சிதான் இருக்கிறதே, பிரிவைப் பற்றி ஏன் தொந்தரவு பண்ணிக் கொள்ள வேண்டும் என்று அமைதியாய் இருந்துவிடலாமே. அப்படி இருந்து விடவில்லையே. வண்டிபோட்டு, வண்டியிலேறி - ரயில் அடிக்கல்லவா வந்துவிடுகிறார்.

திருமலை, அம்மா, அப்பா, செல்லம்மாள், தாங்கள் எல்லாருமாக வந்தது திருவள்ளுவரே வந்த மாதிரிதான்.

திருவள்ளுவரின் சபலம் இருக்கட்டும். திருமலையின் அம்மா அப்பா அவர்களின் சபலத்தை என்ன சொல்ல. என்ன ஆர்வத்தோடு ரயில் அடிக்கு வந்தார்கள்!

அன்று ரயில் அடியில் கண்ட காட்சியை ஒரு இதிகாசக் காட்சி என்றுதான் சொல்ல வேண்டும். அன்பும் பண்பாடும் கலந்து கொண்டால் ஆட்களை என்ன பாடெல்லாமோ படுத்திவிடும் என்பதாகத் தெரிகிறது.

அவர்கள் இருவரும் வந்து நின்ற நிலையை என்ன என்று சொல்லுகிறது. அம்மாவுக்கு இலக்கணம் தெரியாது. பவணந்தி, தொல்காப்பியனார்களைப் பற்றிக் கேட்டதே கிடையாது. தமிழ் எழுத்துக்களின் மர்மம் இன்னது என்றும் தெரியாது. ஆனால், அவர்கள்தான் பாடல்களை வார்த்தை வார்த்தையாய், எழுத்து எழுத்தாய் அனுபவிக்கிறார்கள். "விஷயம் ஓகோ இதுதானா, அடுத்த பாட்டுக்குப் போவோம்" என்ற கணக்கில் அல்ல அவர்கள் பாடல்களைக் கேட்கிறதும் அனுபவிக்கிறதும். சிருஷ்டி வேகத்துடனேயே அல்லவா கலந்து அனுபவிக்கிறார். தற்காலத்துப் புஸ்தக யுகத்துக்கு ஒரு அற்புதமான மறுப்பாய் விளங்குகிறார்கள் அந்த அம்மணி.

அப்பா ரொம்ப ரொம்ப நூல்களைக் கற்றவர்கள். பல நூல்களோடும் இதயம் ஒட்டிப் பழகி வந்தவர்கள். ஆனாலும், மனசில் உண்டாக நேர்ந்த ஒரு ஏமாற்றம் அவர்களை ரொம்பவும் கஷ்டப்படுத்திவிட்டது. அவர்களுக்கும் தமிழ்ப் பாடல்களும் பண்பாடும் தெளிவைக் கொடுத்தன. அசௌகரியங்களை உதறிவிட்டு அப்படியே ரயிலுக்கு வந்துவிட்டார்கள். தமிழ் பண்பாட்டுக்கு ஒரு அரிய பாஷ்யக்காரராக விளங்குகிறார்கள் அவர்கள். எனக்கு ஒரு புதிய ஊக்கம் பிறந்துவிட்டது அவர்களால். மிக்க சந்தோஷம்.

இத்தகைய அன்பர்களை அடிக்கடி பார்த்துத் தீர வேண்டியதுதான். உணர்ச்சியோடு' நிற்க முடியாது.

&&&&&&

**அது பேசிய அழகைத் தெரிவிக்கிறது கீழ்க்கண்ட கடிதம் நண்பர்களே! கடிதம் பேசுமா! ஆம்! பேசும். பேசியது. பேசுகிறது.**

முகாம், பம்பாய்
1-3-48

அருமைப் புதல்வி ராஜேஸ்வரிக்கு,

எனக்கு எழுதிய கடிதமும், குமாரசாமிக்கு எழுதிய கடிதமும் குற்றாலத்துக்குப் போய் அங்குள்ளவர்கள் அனுபவித்துப் பிறகு

பம்பாய்க்கு வந்திருக்கிறது.

எப்படியும் நாங்கள் ஆடவர்கள்தான். குழந்தைகளையும் அவைகளின் தத்துவங்களையும் அனுபவிப்பதற்குரிய இதயம் படைத்தவர்கள் பெண்டுகள்தான்.

குமாரசாமியின் கடிதத்தை எப்படியெல்லாமோ அனுபவிக்கிறாய் நீ.

விஷயம் இதயத்தைத் தொடுகிறது. வார்த்தை அதைவிடத் தொடுகிறது. அவ்வளவையும் நானும் அனுபவிக்க முடிகிறது. இலக்கிய விளக்கமே கொடுத்து விட்டாய் கடிதத்துக்கு. Criticism என்றால் இதுதான். இதயம் ஒட்டி அனுபவிப்பதை அப்படியே எழுதவேண்டும். நீ அப்படி எழுதியிருக்கிறாய். சேமம் விசாரிக்கிற விதம் விசித்திரமாய் இருந்தாலும், அனுபவிக்க வேண்டியதாய்த்தான் இருக்கிறது. விஷயத்தைவிட பாஷைதான் ஜோர். கடிதத்தை அப்பாவுக்கும் அனுப்பி விட்டாய்.

சாமியின் கடிதத்தை ஆசிரியர் யாரிடமும் காட்டி விடாதே. Imposition எழுதச் சொல்லி விடப் போகிறார். சாமியின் கடிதம் உன் பாராட்டை எல்லாம் தாங்கும். சந்தேகம் இல்லை. ஆனால் அவனோடு சேர்த்து என்னையும் ஆகாசத்தில் வீசி விடுகிறாய்.

என் கடிதங்களும் உனக்கு ருசியாய் இருக்கிறது. உன் வார்த்தைகளைக் கொண்டுதான் என்னுடைய கடிதங்களின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. சரி ஆடவர்களுடைய கடிதங்களும் ரஸமாய் இருக்க முடியும் என்று தெரிகிறது.

என்ன ஆனாலும் உன்னுடைய கடிதங்களின் அழகே அழகே. கடிதம் பேசுமா என்று கேட்கலாம். ஆம். ராஜேஸ்வரியின் கடிதங்கள் பேசும் என்று சொல்லலாம். இருக்கட்டும்.

இன்று இரவு பம்பாயை விட்டு சென்னைக்குப் புறப்படுகிறேன். மற்ற விபரம் சென்னை போய்த்தான்.

அம்மா தம்பி தங்கை எல்லோருக்கும் என் அன்பு.

இப்படிக்கு
டி.கே.சி.

நண்பர்களே! இப்போதைய சூழலில் பின்வரும் கடிதம் கூறும் 'ராமராஜ்யம்' நாம் காணும் கனவாக வைத்துக் கொள்ளலாம்.

"ஓம் விஜய வருஷம்"
திருக்குற்றாலம்
13-4-53

அருமை நண்பர் பட்டாபி அவர்களுக்கு,
நமஸ்காரம்.

வருஷப்பிறப்பு என்றாலே ஒரு குதூகலம். இன்று முதல் எல்லாம் ஒழுங்காய் ஜோராய் இருக்க வேண்டும் என்று எண்ண ஆரம்பிக்கிறோம். நல்லதுதானே அது.

நமக்குக் கிடைத்ததெல்லாம் மூன்று வருஷப் பிறப்புகள்தான். தை மாசம் ஒன்று; சித்திரை மாசம் ஒன்று; ஜனவரி மாசத்தையும் கணக்கில் வைத்துக் கொள்ளுவோம். நல்ல காரியம் எந்தத் திசையிலிருந்து வந்தால் என்ன? நல்லதுதான்.

இன்னும் நாலைந்து வருஷப்பிறப்பு இருக்கலாகாதா என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

வருஷப்பிறப்போடு வாழ்க்கை புதிதாகிறது. புது நிர்வாகமே உண்டாகிறது. புது ராஜாவே பிறக்கிறார்.

ராமன் பிறந்தான். கம்பர் அதை அனுபவிக்கிறார்.

ராமராஜ்யம் வரப்போவதால் அக்கிரமம் எல்லாம் அடியோடு தொலையப் போகிறது. ஆம். அவ்வளவு கொடிய பாதகங்களைச் செய்திருக்கின்றன அந்த அக்கிரமங்கள். அப்படியே எட்டாத நிலையிருக்கிற தர்மங்களும் முன் ஜென்மத்தில் மேலான தர்மங்களைச் செய்திருக்கின்றன. அதனால் நல்லகாலம் அந்த தர்மங்களுக்கு.

விரிந்திடுதீ வினை செய்த
    வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையில் மறையறைந்த
    அறஞ்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்து இவ்
    எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க்
    கௌசலைஎன் பாள்பயந்தாள்.

(தீவினை: பாதகம்; இருங்கடகக் கரதலம்: சோபிதமான காப்பணிந்த கை; கருங்கடலை: அபார சக்தி வாய்ந்த ராமன்தான்;

பயந்தாள்: பெற்றாள்) ராம ராஜ்யம் வருகிறது. வரட்டும்!

தங்கள்

டி.கே.சிதம்பரநாதன்

குறிப்பு: அச்சடித்த - பல நண்பர்களுக்கு அனுப்பிய - புத்தாண்டு வாழ்த்து.

**டி.கே.சி. அவர்களின் இசை அனுபவத்தைப் பாடும் கடிதம் இது.**

&&&&&&&&

வண்ணார்பேட்டை,
திருநெல்வேலி
10-5-42

அருமை நண்பர் டி.எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்களுக்கு, நமஸ்காரம்.

இன்று காலை முற்றத்திலிருந்துகொண்டு நண்பர்களுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தேன். நடராஜனும் தங்கச்சியும் ஓடிவந்து 'தாத்தா தாத்தா! பாட்டுத் தாத்தா பாட்டுப் பாடுகிறார்கள்' என்று சொன்னார்கள். சொன்னதோடு விட்டுவிடவில்லை. கையைப் பிடித்திழுத்து ரேடியோவுக்கு முன் உட்கார்த்திவிட்டார்கள். வீரட்டானப் பதிகம், கந்தர் அலங்காரம், திருப்புகழ் இவைகளைத் தனியான அழகு வாய்ந்த ராகங்களில் குழைத்து ஊட்டிக் கொண்டிருந்தீர்கள். 'உலகம் ஏது உயிர்வைத்துக் கொண்டிருக்கத்தக்க இடமாய் அல்லவா இருக்கிறது!' என்று பட்டது.

தங்கள் பக்தியும் தமிழும் இசையும் அபூர்வமான கிளர்ச்சியை எனக்குக் கொடுத்துவிட்டன. உலகத்தில் வேறு எங்கேயாவது யாராவது இந்த விதமான உணர்ச்சியை அனுபவிப்பதுண்டா என்று வினவத் தோன்றுகிறது. நம்முடைய நண்பசிகாமணிகள் "நீ என்ன எல்லோருடைய இதயத்தையும் கண்டுவிட்டாயா?" என்று கேட்கலாம். இதயத்தைக் காணவில்லைதான். ஆனால் நம்முடைய சாவேரி போலவும், அடாணா போலவும் உயர்ந்த ரகமான தேன் எங்கும் கிடையாது.

**தன்னை மறந்து**
**தலைவாசல் தாள்போட்டு**
**உன்னை நினைந்து**
**உறங்குவ தெக்காலம்**
**போலவும்**

பாழ்வாழ் வெனும்
இப்படு மாயையி லே
வீழ்வாய் என
என்னை வித்தனை யே
தாழ்வா னவை
செய்தன தாம் உள வோ
வாழ்வாய் இனி
நீ மயில் வாகனனே!

போலவும் தமிழுண்டா? குன்று தோறாடிய முருகன் உண்டா? வேலுண்டா? தங்கள் இதயத்தைப் பிணித்து நிற்கும் பக்தி உண்டா? கிடையாதுதான் என்று சொல்லத் தோன்றுகிறது எனக்கு. 'டாங்கிகள்' நம்மிடம் இல்லைதான்; 'எயர் கிராப்ட் காரியர்கள்' நம்மிடம் இல்லைதான். 'டைவ்பாம்' போடத்தகுந்த விமானங்களும் இல்லைதான்.

கிளைபட் டெழு
சூருரமும் கிரியும்
தொளைபட் டுரு
வத்தொடு வேலவனே

இருக்கிறது. இந்தவேல் போனபோன இடமெல்லாம் நாலாபக்கமுமே நின்று காக்கிறது. இத்தகைய ஆயுதத்தை ஜப்பானியர்தான் செய்து கொண்டார்களா! "மேல்" நாட்டார்தான் செய்து கொண்டார்களா? இல்லை. நான் சொல்லுவது உபசாரமும் அல்ல, சௌடால்த்தனமும் அல்ல, வெறும் உண்மை.

காலையில் அனுபவித்த விஷயமாகத் தங்களைப் பாராட்டுவதா? தமிழ்ப் பாடல்களை ஆதரிக்க வேண்டும் என்று சொல்பவர்களைப் பாராட்டுவதா? ரேடியோ நிலையத்தாரைப் பாராட்டுவதா? கிராமபோனை சிருஷ்டித்த எடிசனைப் பாராட்டுவதா? இப்படிப் பிரிவினை செய்வதும் பாராட்டுகளை வினியோகம் செய்வதும் கஷ்டம் ஆனதால்,

ஜெனித்த பிறவியைக்
கொடுத்த திருவடி

ஜெனியா தெமைஇனி
விடுத்த திருவடி
பனித்த சடையினர்
பிடித்த திருவடி
இனித்த எமதுளம்
உடுத்த

திருவடியைப் பாராட்டி விடுவோம்.

தங்கள் கந்தர் அனுபூதி நல்ல பொக்கிஷம். அதில் கரன்ஸி நோட்டுகள் இல்லை. ஆனால் எந்த மார்க்கெட்டிலும் செல்லும்படியான பொன்னும் ரத்தினங்களுமே கிடக்கின்றன. மூன்றாவது பாட்டு.

வானோ? புனல்பார் கனல்மா ருதமோ?
ஞானோ தயமோ? நவில்நான் மறையோ?
யானோ? மனமோ? எனையாண் டஇடந்
தானோ? பொருளா வதுசண் முகனே

அருமையான பாட்டு. விஷயம் பெரிய விஷயம். பரதத்துவ லக்ஷணத்தை அழகாய் எடுத்துச் சொல்லியிருக்கிறது. தொண்ணூற்றாறு தத்துவங்களையும் சொல்லிவிட்டு (ஒதுக்கியும் விட்டுத்தான்)

எனையாண்ட இடந்தானோ
பொருள்

என்று முடித்ததின் நயம் தனி. செய்யுளுக்குத் தாங்கள் அழகாகப் பொழிப்புரை கொடுத்துவிட்டீர்கள். பொழிப்பே விளக்க உரைதான். ‘என்னை ஆட்கொண்ட இடம்தானோ!’ என்று சொல்லிவிட்டு – ‘நின் கருணைதானோ’ என்று வியாக்கியானமும் கொடுத்துவிட்டீர்கள். உண்மையை, அதாவது பரதத்துவத்தை அறிந்து அனுபவித்திருந்தால்தான் இப்படியெல்லாம் லகுவாகவும் விளக்கமாகவும் வியாக்கியானம் செய்யக்கூடும். புஸ்தகத்தை வாசிக்கும்போது தங்களையும் தங்கள் பக்தி பாவங்களையும் நேரில் காண்கிறேன். ரொம்ப திருப்தி.

தங்கள் அன்புள்ள
டி.கே.சிதம்பரநாதன்

ஒரு இசையனுபவம் எத்துணை விஷயங்கள் பாராட்டப்பெறுகிறது பாருங்கள் நண்பர்களே! இறுதியில் அந்த அனுபவத்தின் மூலப்பொருள் பாராட்டைப் பெற்று விடுகிறதே! இதுதான் டி.கே.சி.

டி.எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் அன்று பெரிய வக்கீல். பின் திருவாங்கூர் பிரதம நீதிபதி. கையில் ஜால்ராவுடன் கம்பீரமாக மேடை ஏறி முருகன் புகழைப்பாடி உளம் உருகி பஜனை செய்யும் திருப்புகழ்மணியை அறியாதவர் இருக்க மாட்டார்கள். இவர் நமது ரசிகமணியின் மதிப்பிற்குரிய பெரியவர்களில் ஒருவர். "தமிழைக் கலையாகவும் வேதமாகவும் ஓதி அனுபவிக்க உதவிபுரியும் அருமையான நண்பர் அவர். செந்தமிழ் இன்பத்தில் ஈடுபட்டுத் தமிழர்கள் தமிழை நாவிலே விளக்க வேண்டும் என்ற பெரும் கொள்கையைக் கொண்டவர் அவர்" என்று ரசிகமணியாலேயே போற்றப்பட்டவர்.

'கவிமணி' என்னில் அனேக கவிகளில் இவர் மணியானவர் என்றல்லவா பொருள் படும். இவரே கவிஞர் அல்லவா! எனவே கவிஞன் தேசிய விநாயகம் பிள்ளை என்று அழைத்தது பொருத்தம் என்று கூறிவிட்டார் இரசிகமணி. எத்துணை மதிப்பு அவர்பால் டி.கே.சி.க்கு என்று நினைத்துப் பாருங்கள் நண்பர்களே!

டி.கே.சி. அவரால் எழுதிய இரு கடிதங்களை நீங்களும் என்னுடன் படித்துச் சுவையுங்கள் நண்பர்களே!

&&&&&&&&

முகாம்<br>
போடி. பங்களா<br>
திருக்குற்றாலம்,<br>
6-9-42.

அருமை நண்பர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கு

ஆடம்பரம் இல்லாமல் அறுபதாண்டு நிறைவை ஒரு சிறு கிரியையாக நடத்த ஏற்பாடாயிருந்தது. திருக்குற்றாலநாதரை நேற்று காலை 10 மணிக்கு சேவித்து வருவதற்கு, குறிப்பிட்ட நண்பர்களையும் இங்கு சாரலுக்கு வந்திருந்த செட்டிநாட்டு நண்பர்களையும் அழைத்திருந்தேன். என் ஜாகைக்குப் பல நண்பர்களும் வந்திருந்தார்கள். கோவிலுக்குப் போவதற்காகத்தான்.

அப்போது தபால்க்காரன் வந்து வெளியே நின்றான். உள்ளேயிருந்து ஏழு வயசுப் பையன் (என் தமக்கையார் பேரன்) வெளியே போய்த் தபால்காரனிடமிருந்து தபால்களை வாங்கிக்கொண்டு வந்தான். மொத்தமாக நாலு கடிதங்களும் ஒரு பத்திரிகையும் இருந்தன. எப்படியோ பையன் மூன்று கடிதங்களையும் பத்திரிகையையும் வேறே வைத்து விட்டு

ஒரு கடிதத்தை மாத்திரம் என் கையில் கொண்டுவந்து கொடுத்தான். நான் பிரித்துப் பார்க்கவும் தங்களுடைய கடிதமும் வாழ்த்துப்பாக்களும் இருந்தன.

நண்பர்களைப் பார்த்துக் கடிதம் எங்கே இருந்து வந்திருக்கிறது தெரியுமா என்று கேட்டுவிட்டுச் சொன்னேன் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களிடமிருந்து என்று.

செய்யுள்கள் மூன்றிலும் வாழ்த்தோடு புகழ்ச்சியும் இருந்தது பற்றி நானே வாசித்துக் காட்டுவதில் கொஞ்சம் அலௌகிகம் இருந்ததை உணர்ந்தேன். ஆனாலும் அவைகள் தமிழ் மக்களுக்கு அர்ப்பணமாய் இருந்தது பற்றி நானே வாசிக்கலாம் குற்றம் இல்லை என்று எண்ணி வாசித்தேன்.

கேட்டவர்கள் அப்படியே லயித்து விட்டார்கள். அடிகளையும் வார்த்தைகளையுமே மடக்கி மடக்கி வாசித்தேன். உள்ளத்தின் ஆர்வமும் தமிழ்ப்பாஷையின் லாவகமும் மயக்கி விட்டது எல்லாரையும். வந்திருந்தவர்கள் எல்லாரும் ஏதாவது ஒரு அடி ஒரு வார்த்தையைப் பிடித்து அப்படியே சுவைத்துக் கொண்டிருந்தார்கள்.

பாட்டு முடிந்ததும் கோயிலுக்குச் சுவாமி தெரிசனத்துக்காக எல்லாருமே புறப்பட்டுப் போனோம். போகிற வழியெல்லாம், பையன் தெய்வப் பிரசாதமாகக் கடிதத்தை கொடுத்ததாகவே பாராட்டிப் பாராட்டிப் பேசிக்கொண்டு வந்தார்கள். அனேகருக்குப் பாடல்கள் பாடமாய் விட்டன. அவைகளைச் சொல்லிக் கொண்டும் தலையை அசைத்துக் கொண்டும் வந்தார்கள்.

இதெல்லாம் இயல்பான காரியம். நண்பர்களாயிருப்பதால் என்னிடம் ஆர்வம், என்னோடு ஒட்டியிருக்கிறார்கள். தாங்கள் என்னோடு ஒட்டியிருக்கும் உண்மையைப் பேசுகிறீர்கள். தங்கள் தமிழ் தொன்மையான தமிழ், கேட்டவர்களுக்குச் சொந்தமான தமிழ், உண்மையை அப்படியே பளிங்கில் வைத்துப் பரிமாறுகிறது. நண்பர்கள் கவிகளை அப்படியே விழுங்குகிறார்கள். உண்மையான தமிழ்க்கவிகள் மூன்றோடு என் பெயர் ஒட்டிக் கிடக்கும் பாக்கியம் பெற்றேன்.

முதல் கவி ஆசை பாவத்தை அழகாய்க் காட்டுகிறது. ஆசைக்கு அளவு கிடையாது. எந்தத் தாய்க்கும் தன் குழந்தை ராஜா அல்லவா! வாழ வேண்டும் நிலைத்து வாழ வேண்டும். எப்படி:

கன்னித் தமிழேபோல் கம்பன் கவியேபோல்

இவைகளுக்குமேல் – ஸ்தூலமாக,

மன்னும் பொதிகை மலையேபோல்

இரண்டாவது கவியில் அருமை பாவம் அப்படியே கிடக்கிறது.

என்னருமை நண்பா!

இனிய கலைரசிகா
தென்னர் தமிழ் வளர்க்கும்
தேசிகா!

என்று பாடும்போது தாங்கள் என்னை ஆர்வத்தோடு தழுவிக்கொள்ளுவதாகவே உணர்ச்சி வருகிறது. மூன்றாவது கவியில் - தமிழிடத்திலுள்ள ஆத்திரம் போய் முருகனது திருவடியைப் பற்றுவது வெகு அழகான பாவம்.

அன்னை தமிழ்ச் செல்விக்(கு)
அருந்தொண்டு செய்தின்னும்
மன்னுலகில்ப் பல்லாண்டு
வாழியவே

முருகன் கண்பார்த்துக் கனிந்து அருள் பாலிக்கும் காரணமாக.

இந்த உண்மைப் பண்புக்கும் எளிமைக்கும் தமிழுக்கும் எங்கே போகத் தங்களைத் தவிர்த்து! இதுவரையம் "பாடல் பெறோன்" என்ற சொல்லிலுள்ள வேகத்தை அவ்வளவாக உணர்ந்தேன் இல்லை. தங்கள் கவிகளைப் பார்த்ததும் அவைகளின் உள்ளக் கிடையைப் பார்த்ததும், - சொல்லின் வேகம் தெரிந்தது.

கவிக்குள் பொதிந்து வைத்து விட்டால் எந்தப் பொருளும் பழுதுபடாமல் இருக்கும் என்று முன் ஒரு கவிஞர் சொல்லியிருக்கிறார். ஆயிரரூபாய் கொடுத்து வாங்கிய டெக்காமஸ்லின் கொண்டு பதிந்து வைத்தாலும் பயனில்லை.

நூற்றுப்பத் தாயிரம்
பொன்பெறினும் நூற்சீலை
நாற்றிங்கள் நாளுக்குள்
நைந்து விடும் & மாற்றலரைப்
பொன்றப் பொருதடக்கைப்
போர்வேல் அகளங்கா!

என்றுங் கிழியாதென்
பாட்டு.

தமிழ் உணர்ச்சி என்று ஒன்று இருக்கும்வரை தங்கள் பாட்டு நிற்கும். அதை ஒட்டி என் பெயரும் நின்றுதானே ஆகவேணும்.

மனங்கனிந்து வந்த சொல்லுக்கு மாற்றுப் பத்தரை மாற்றா? அல்ல. ஆயிரத்தரை மாற்றல்லவா? அதற்கு விலையேது. விலைமதிக்க முடியாத கவிகள்.

நண்பர்களுக்கு எடுத்துச் சொல்ல நேர்ந்த விஷயம். Truth is Beauty உண்மையே அழகு. மற்றவை அழகல்ல. தங்கள் கவிகளைக் கொண்டு விஷயத்தை எளிதாய் விளக்கி விட்டேன். உண்மையை நான் ஒரு வகையாக எடுத்துச் சொன்னேன். தாங்கள் என்னை எவ்வளவோ உள்ளத்தில் வைத்துப் பாராட்டுகிறீர்கள் என்பதைப்பற்றி விளக்கி விளக்கி வசனத்தில் சொன்னேன். என் வார்த்தை அவ்வளவாக உண்மையை வெளிப்படுத்தி விடவில்லை. தங்கள் கவி, ஒரு கவியே, பளிங்கிற்குள் வைத்த ஜோதி மாதிரி உண்மையை & . தங்கள் இதயத்திலுள்ள உண்மையை விளக்கிவிட்டது. அழகு தென்பட்டு விட்டது எல்லாருக்கும். அழகு தென்பட்டுவிட்டால் மனசை விட்டு அகலாது: நாவை விட்டும் அகலாது. நண்பர்கள் கவிகளைப் போன போன இடமெல்லாம் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள்.

நேற்று (5-9-42) குற்றாலத்துக்கு அருகேயுள்ள இலஞ்சிகுமாரர் கோயிலில், இங்கு தங்கும் நகரத்தார் நண்பர்கள் எல்லாருமாக என் பேருக்கு முழுக்காப்பு விருந்தெல்லாம் நடத்தினார்கள். மாலையில் ஒரு சிறு பாராட்டுச் சபையும் கூட்டினார்கள். அதில் நகரத்தார் பையன், ஏழுவயசுப் பையன் ஒருவன், தங்கள் மூன்று கவிகளையும் மனப்பாடஞ்செய்து சபையில் பாடினான். பையனுக்கு ஆசை எப்படி வந்தது. தகப்பனார் பாடிக்கொண்டேயிருந்த காரணமாகத்தான். தங்கள் அருமையான பாஷையில் “கிளிகள் பாடிக்கொண்டிருந்தன“ என்றுதான் சொல்ல வேண்டும்.

என்னுடைய தனித்த முறையில் தங்களுக்கு நன்றி சொல்லி முடியாது. கவிகளை அனுபவித்தவர்கள் எல்லாருடைய சார்பாகவும் என் நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன்.

தங்களுக்கு உடம்பு சௌகரியமாய் இருக்கும் என்று நம்புகிறேன். தமிழர்களின் பிரார்த்தனைகளில் இது ஒன்று.

தங்கள்,

டி.கே.சிதம்பரநாதன்

திருக்குற்றாலம்,
4-4-43.

அருமை நண்பர் தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கு,

சமீபத்தில் திருச்சிராப்பள்ளிக்குப் போய் வந்தேன். அங்கே புதுமைப் பதிப்பகம் நடராஜ செட்டியார் அவர்களுடன் இரண்டுநாள் தங்க முடிந்தது. கம்பர் விழா நடக்காமல் போனது பற்றிக் காரைக்குடியில் எல்லாருக்கும் ஏமாற்றம்தான். ஆனால் தங்களைப் பார்த்துக் களிக்கும் பாக்கியம் இல்லாமல் போயிற்றே என்றுதான் வருத்தம். எத்தனையோ வருஷம் முயன்றதில் குறையில்லை; தாங்கள் காரைக்குடிக்கு வர இயலவில்லை. இந்த வருஷம் உடல்நிலை ஏதோ வசதியாய் இருந்தது. இருந்தாலும் தெய்வ சங்கற்பம் இடம் கொடுக்கவில்லை. பெரிய ஏமாற்றந்தானே. கண்ணாரக்காணக் கவிஞர் ஒருவர் கிடைத்தார் என்று எல்லாரும் எக்களிப்புக் கொள்ளச் சந்தர்ப்பம் கம்பர் விழா. எப்படியும் அந்த ஆனந்தத்தை ஒற்றி வைக்கும்படியாகத்தானே போய்விட்டது! இந்தவிதமாக நண்பர் நடராஜ செட்டியார் அவர்களும் அவர்களது நண்பர் ராமசாமி செட்டியார் B.A., அவர்களும் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

உண்மையில் தங்களையும் தமிழையும் மதிக்கிறதென்றால் செட்டிநாட்டில்தான். நகரத்தார்களை நாம் எல்லாவிதத்திலும் போற்ற வேண்டும். நன்றியே செலுத்த வேண்டும்.

தேவியில் வெளியான தங்கள் எது கவிதை என்னும் கவியைப் பார்த்தேன். தங்கள் கவித்திறம் அதில் நன்றாய்த் தெரிகிறது. புலவர்கள் 'ஏதோ பெரிய பெரிய விஷயந்தான் கவிக்குரிய பொருள்' என்று விஷம் தெரியாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆங்கிலேயர்களும் (Critics) முக்காலே மும்மாகாணிப் பேர்கள் அப்படியாகத்தான் சொல்லுவார்கள். அதைப் படித்துவிட்டு நம்மவர்களும் ஒத்துப் பாடுவார்கள். ஆகவே விஷயம் விஷயம் என்று ஒரே கூக்குரலாய்ப் போய்விட்டது கவியுலகம். எஞ்சினைப் பற்றிப் பாடுவார்கள், Steam, Hammer, போர்க்கப்பல், திமிங்கலம் அல்லது மனசில் எழும் பெரும் பெரும் நிகழ்ச்சிகள், கோபம், சோகம், காதல் இவைகளைப் பற்றிப் பாடினால்தான் & ஏன் பாடி விட்டாலே, பாட்டு என்கிறார்கள். தாள இயல், உருவம் இவை வேண்டாம் என்று சொல்லி வசன கவிகளைப் பாராட்டுகிறார்கள். சிலவேளை எழுதியே விடுகிறார்கள். இந்த அமாவாசைக்குள் தாங்கள் விளக்குப் போட்டு விட்டீர்கள்.

வண்டி மாடு இவைகளைவிட கீழான பூட்டாங்கயிறு

எல்லாம் கவிஞனுக்கு (தங்களுக்குத்தான்) அற்புதப் பொருள். மேலும் சென்னை யுனிவெர்சிட்டி எம்.ஏ., பி.ஏ., பி.எல்., அற்புதப் பொருள்கள் அல்ல. எந்திரசாலைகள் கடைஞ்சு தள்ளிய ஜாதிக்கா கம்புகள்தானே அவைகள். ஆனால் வண்டல் கிண்டி உழுவோன் உண்மையிலேயே அதிசயப்பொருள். அற்புதமான தானியத்தை விளைத்து அற்புதமாகவே மக்களைக் காப்பாற்றுகிறான். ஏதோ லக்ஷக்கணக்கான வருஷமாக அல்லவா காப்பாற்றி வருகிறான்!

கல் சொன்ன கதைகளைத் தாங்கள் காது கொடுத்துக் கேட்டிருக்கிறீர்கள். அல்லாத பக்ஷம் எப்படி வரும் இந்தக் கவி.

**கல்லின் கதைகள் எல்லாம் - இரு**
**காது குளிரக் கேட்பேன்**
**புல்லின் பேச்சும் அறிவேன் - அதைப்**
**புராண மாக விரிப்பேன்.**

ரொம்பவும் அற்புதம் என்கிற பாவம் புல்லின் என்ற எதுகையில் இங்கு அழகாய் அமைந்து விட்டது. கடைசிக் கவி ரொம்பவும் வாய்ப்பு. உண்மையை அப்படியே சொல்லிவிட்டீர்கள். உண்மை ஒன்று இதயத்தில் இருந்தால்தானே கவி உண்டாகும். அல்லாத பக்ஷம் காளைமாடு கன்றீன்ற கணக்குத்தான்.

உள்ளத்துள்ளது கவிதை

சித்ரவதையிலிருந்து சித்ர கவிதானே பிறக்கும். ஒரு நாளும் கவிதை பிறக்காது. சென்ற அறுபது எழுபது வருஷமாகத் திருநெல்வேலிப் புலவர்கள் சித்ரகவிகள்தானே செய்தார்கள். கவி வந்ததா அவர்களுக்கு! ஏன் கவி இன்னதென்றே தெரியாமல் போய்விட்டது. பாவி பலைமகள் அவர்களது கண்ணைக் கெடுத்துவிட்டாள்.

இன்பம் உருவெடுப்பது கவிதை

என்று தெள்ளத் தெளிந்த தமிழில் பாடிவிட்டீர்கள். ரொம்ப சந்தோஷம்.

'இயற்கை வாழ்வை'யும் பலதடவை படித்தேன். நண்பர்களுக்கும் பாடிக் காட்டினேன். அருமையான உண்மைதான், உணர்ச்சிதான். தங்கள் முத்திரை கவியில் தெளிவாய் இருக்கிறது. குமரிமலரிலிருந்து தங்கள் பாடலைக் கிழித்து மலரும் மாலையில் கடைசிப் பக்கத்தில் ஒட்டிவைத்துக் கொண்டேன். பாடல் காணாமல் போய்விட்டால் பிசகல்லவா? என் கைக்காப்பிக்கு

(மலரும் மாலையும்) தொந்தி பருத்து வருகிறது பாடல்களை ஒட்டி ஒட்டி. இதுவரை விஷயத்தை இத்தனை இயற்கையான உள்ளக் கனிவோடு யாருமே பாடவில்லை. ஆர்வம் முதலிலிருந்தே ஆரம்பித்துவிடுகிறது. கடைசிச் செய்யுள்கள் வெகு அழகாய் விஷயத்தைப் பூர்த்தி செய்கின்றன. ரொம்ப உண்மை. ஏதோ ஆயிரம் வருஷத்துக்குப்பின் காணவேண்டிய அற்புத உலகத்தைக் கண்டு விட்டீர்கள். எங்களுக்குக் காட்டியும் விட்டீர்கள். ரொம்ப சந்தோஷம்.

தாங்கள் எப்பொழுது இங்கே வரச் சௌகரியம்? சித்திரை மாசம் இங்கே சௌகரியமாயிருக்கும்.

தங்கள்
டி.கே.சிதம்பரநாதன்

தனக்கென்று ஸ்டைல் இருக்க வேண்டும் என்று தன் மொழிநடையை இயல்பாக்கி, அதையேதான் கடித நடையாகவும் கொண்டார். வாழ்வின் பல்துறையைப் பற்றி இவரது கடிதங்கள் பேசுகின்றன. விளக்கங்கள் கூறுகின்றன. அவரது கடிதங்கள் நேருக்கு நேர் நம்முன் நின்று பேசுவதுபோல் இருக்கின்றது. கற்பனை நயமும், நகைச்சுவை உணர்வும், ரசனை உணர்வும் கலந்து கடிதங்கள் இலக்கியங்களாக மாறுகின்றன. மொழி, இலக்கியம், இசை பற்றிய டி.கே.சியின் கொள்கை கடிதங்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன. அவரது கல்வியைப் பற்றிய விமர்சனங்களையும் நாம் அறிய முடிகிறது. கடிதங்களில் சொல் பேசவில்லை. அவரது இதயத்தோடு இதயம் பேசும் அற்புதம் அல்லவா நிகழ்கிறது நண்பர்களே! அது தமிழ் செய்யும், கவி செய்யும் காரியம்தானே அன்பர்களே!

அன்புடன்
தி. சுபாஷிணி.

(பி.கு. கடிதங்கள் அனைத்தும், ரசிகமணி கடிதங்கள் - முழுத்தொகுப்பு - தொகுப்பாசிரியர். தீப. நடராசன் - உயிர்மை பதிப்பகம் வெளியீடு. முதற்பதிப்பு - 2010 - என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை)

ரசிகமணி
அவர்களிடமிருந்து நாம்
பெற்ற வடிவ
விதங்களிலெல்லாம்
சிறந்து சோபிப்பது, அவர்
அமர்ந்திருக்க நாமும்
அவர்முன் உட்கார்ந்து
அவர் பேச நாம்
கேட்பதே
உலகத்தின் மகாபெரிய
மாகன்கள், குரு முனிகள்
எல்லாருமே இவ்வித
அமர்வுகளிலேயே
தங்களை
வெளியிட்டிருக்கிறார்கள்.
இந்த அமர்வு வாய்க்காத
நேரங்களில், தனிமையில்
சகமனசைத்
தேடும்போது, தூக்கம்
வராத நள்ளிரவு
நேரங்களில் அவர்
கடிதங்களில் பேசுகிறார்.
இந்தக் கடிதக் தொகுப்பு
தமிழ் உலகத்துக்கு ஒரு
அபூர்வச் செல்வம்.
தலைமாட்டில் வைத்துக்
கொண்டு நினைக்கும்
போதெல்லாம் கைக்கு
வருகிற பக்கங்களைப்
படித்து அனுபவிக்கலாம்.
பாக்கியசாலிகளே நாம்.

கீ. ராஜநாராயணன்

தமிழில் கடிதங்கள்,
இலக்கிய அந்தஸ்தைப்
பெறுவதற்கும், கடிதக்
கலை என்னும் சிறப்பை அடைவதற்கும்,
டி.கே.சி.யின் கடிதங்கள்
அடித்தளம் அமைத்தன
என்று சொல்லலாம்...
அவை வெறும் நலம்
விசாரிப்புடன்
நின்றுவிடாது. பல்வேறு
சிந்தனைகளையும்,
நிகழ்வுகளையும்,
விமர்சனங்களையும்,
விளக்கங்களையும்,
உணர்ச்சிகளையும்
வெளிக்கொணர்ந்தன
ரசிகமணி கடிதங்கள்.
அவைகளில் இலக்கிய
ரஸனை ஊடுபாவாக
ஓடிக்கொண்டிருக்கும்.

தீப. நடராஜன்

# 'இதழ்' வழங்கிய டி.கே.சி.

'ரசனை' என்னும் மாத இதழ் மரபின் மைந்தன் ம. முத்தையாவை ஆசிரியராக கொண்டு வெளிவந்து கொண்டிருக்கின்றது. அதன் பெயருக்கேற்றபடி ரசனைகள் சென்று பிறவி எடுத்த டி.கே.சி. பற்றிய செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது. "என்னைக் கவர்ந்த புஸ்தகங்கள்" - ரசிகமணி. டி.கே.சி." யின் கட்டுரையை செப்டம்பர் 2004ல் வெளியிட்டிருக்கின்றது. அதிலிருந்து சில பகுதிகளை நாம் காணலாம் நண்பர்களே!

தமிழில் மிக அரிய புஸ்தகங்கள் எத்தனையோ இருக்கின்றன. அவைகளை அனுபவித்துக் கொண்டிருக்கலாம். ஆயுள் நாள் போதவில்லையே என்ற மனப்பாங்கில் அனுபவித்துக் கொண்டிருக்கலாம். அவைகளில் சில புஸ்தகங்கள் என்னோடு ஒட்டிக் கொண்டன. எப்படியோ ஒட்டிக் கொண்டன.

தற்காலத்துப் புஸ்தகங்களில் சிலவும் ஒட்டிக் கொண்டுதான் இருக்கின்றன. அவைகளைப் பற்றி விவரிக்க வேண்டாம். நம்மவர் பலர் கையிலும் அவைகள் தங்கி நிற்கின்றன. நேர் அனுபவம் காரணமாக மாற்று இன்னதென்று தெரிந்து விடுகிறது அவர்களுக்கு.

ஆகையால் பழைய நூல்களைப் பற்றியே நம்முடைய கவனத்தைச் செலுத்தலாம்.

வெற்றி வேற்கை என்று ஒரு சிறு புஸ்தகம். பாடமாகப் படித்துக் கொஞ்சம் கஷ்டப்பட்ட காரியம்தான் அதுவும். ஆனாலும் அதன் தமிழ்ப்பண்பு நம்மை விட்டு அகன்று விடவில்லை.

சாமான்ய மனுஷனாய்ப் பிறந்தவன் ஒருவன் பெரிய பெரிய காரியங்களைச் சாதித்து ஒரு விசாலமான ராஜ்யத்துக்கு உபகாரியாய் விளங்குகிறான். அவனைப் பற்றிய பாடல்.

"தெள்ளிய ஆலின்
சிறுபழத்து ஒருவிதை"

உள்ளங்கையில் ஆல விதை ஒன்றைத் தனியாகத் தெளித்து வைத்துக் கொண்டு பேசுகிறார் ஆசிரியர்.

இந்த விதை தடாகத்தில் ஓடி ஆடுகிற சிறிய மீன் ஒன்றின் முட்டையை விட சிறியதுதான் பாட்டைப் பார்க்கலாம்.

**தெள்ளிய ஆலின்**
**சிறுபழத்து ஒருவிதை**
**தெண்ணீர்க் கயத்துச்**
**சிறுமீன் சினையினும்**
**நுண்ணிதே ஆயினும்**
**அண்ணல் யானை**
**அணிதேர்ப் புரவி**
**ஆட்பெரும் படையொடு**
**மன்னர்க்(கு) இருக்க**
**நிழலா கும்மே!**

பெரிய கொம்பன்களான யானைப் படை முதல் காலாட்படை ஈறாக முகாம் போடலாம். எங்கே? அந்த ஒரு ஆல விதையில் இருந்து உண்டான ஆல மரத்தின் நிழலில்தான்.

இந்தப் பாடல் போல சில புஸ்தகங்களில் உள்ள பாடல்கள் நம்மோடு ஒட்டிக் கொள்ளுகின்றன.

நான்மணிக்கடிகை என்று ஒரு புஸ்தகம். இது மிகப் பழைய புஸ்தகம். அதிலும் பல அரிய பாடல்கள் இருக்கின்றன.

திருக்குறளைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அதி அற்புதமான ரத்தினங்கள் பலவற்றை புஸ்தகத்தில் ஆங்காங்கு காணலாம். ஒரு குறளை எடுத்து அதன் அனுபவ உணர்ச்சியையும், ஆழத்தையும், சொல்லின் நயத்தையும் பார்த்துச் சிந்திப்போமானால் ஒரு மணி நேரம் லகுவாய் சுகமாய்க் கழிந்து கொண்டிருக்கும்.

கல்லாதவர்களைப் பற்றி ஒரு அனுபவத்தை எடுத்துச் சொல்லுகிறார் குறளாசிரியர். வெகு நீண்ட அனுபவம் அது.

அறிவாளிகளாய் உள்ள சங்கங்கள் பலவற்றோடு குறளாசிரியர் கலந்து கொள்ளுவார். பல சந்தர்ப்பங்களில் விஷயம் தெரியாத ஒருவன் பிரசங்கம் பண்ண ஆரம்பித்து விடுவான். "அடடா இவனுக்குப் பேசாமல் இருக்க முடியவில்லையே என்ன பரிதாபம்! வாயைத் திறக்காமல் சும்மா இருந்தால் நன்றாய்க் கற்றவன் என்றுகூடச் சொல்லலாமே" என்று தலையில் அடித்துக்

கொள்ளுவார் குறளாசிரியர். எத்தனை தடவை அடித்துக் கொண்டாரோ நமக்குத் தெரியாது. ஆனால் செய்யுளுக்குத் தெரிந்த மாதிரி இருக்கிறது.

"கல்லா தவரும்
நனி நல்லர்"

விஷயம் தெரியாதவர்களாய் இருந்தாலும் அவர்களைத் தெரிந்தவர்கள் என்றே சொல்லலாம் போல் அல்லவா இருக்கிறது.

"கல்லா தவரும்
நனி நல்லர் & கற்றார்முன்
சொல்லா திருக்கப்
பெறின்".

இந்த மாதிரி வெகு ஆழமான அனுபவங்களும், அந்த அனுபவங்களுக்கு ஒத்த கவி உருவங்களும் திருக்குறளில் பல இடங்களில் காண்கிறோம். புஸ்தகம் சதா கையில் இருக்க வேண்டியதுதானே.

குறள் இருக்கட்டும். பட்டினத்தார் பாடல்கள் அடங்கிய ஒரு சிறு புஸ்தகம் இருக்கிறது. அதிலும் வெகு ரஸமான பாடல்கள் இருக்கின்றன. உண்மையான கவித்துவத்தோடு மக்கள் படும் கஷ்டங்களை எடுத்துச் சொல்லுவார்.

"தீதுற்ற செல்வமென்
தேடிப் புதைத்த
திரவிய மென்"

நிலச்சுவான் படுகிற கஷ்டங்களைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம். ஒரு பாரதமே பாடலாம்.

மழை பெய்யவில்லை, வெள்ளம் பயிரை அடித்துக் கொண்டு போய்விட்டது. அடுத்த வயற்காரன் வரப்பை வெட்டி விட்டான். இப்படி எல்லாம் நிலத்தைச் சேர்ந்த துன்பங்கள் வேண்டிய மட்டும் இருக்கின்றன.

செல்வமானது ரூபாய் அணாப் பைசாவாக இருந்து விட்டாலோ இன்னும் மோசம். தூக்கம் எங்கே வரப்போகிறது.

வீட்டு முகட்டில் எலி ஓடினால் திருடன் முகட்டைப் பிரிக்கிறான் என்று தோன்றும்.

மக்கள் இப்படியெல்லாம் கஷ்டப்படுகிறார்கள். பட்டிணத்து அடிகளுக்கு நல்ல விஷயம் கிடைத்து விட்டது.

தீதுற்ற செல்வமென்
　　தேடிப் புதைத்த
திரவியம் என்
　　காதற்ற ஊசியும்
வாராது காண்நம்
　　கடைவழிக் கே.

தமிழ் பாஷை எவ்வளவு அழகாய் ஒரு விஷயத்தை எடுத்துப் பேசுகிறது பாருங்கள்.

நம்மோடு சதா உறவாடிக் கொண்டு இருக்கக்கூடிய வேறு சில ஆசிரியர்களும் இருக்கிறார்கள். கலிங்கத்துப் பரணி ஆசிரியர் நந்திக் கலம்பக ஆசிரியர், முத்தொள்ளாயிர ஆசிரியர், இவர்களோடு குற்றாலக் குறவஞ்சி ஆசிரியரையும் சேர்த்துக் கொள்ளலாம். இன்னும் பலரைச் சேர்த்துக் கொள்ளலாம். இவர்கள் எல்லாரும் எப்போது வேண்டுமானாலும் நம்மோடு பேசுவார்கள், உறவாடுவார்கள்.

ரசிகமணியின் கடிதங்களுக்குக் கால எல்லைகள் கிடையாது. அவ்வப்போது நிகழும் சில சம்பவங்களிலிருந்தும் நிலைபேறுள்ள விஷயங்களைக் கடிதங்கள் வாயிலாய் வெளிப்படுத்தியவர் அவர். கலை, பண்பாடு, மனிதம், உண்மை ஆகியவை பற்றித் தெளிந்த நீரோடைபோல் எழுதி எழுதி மேற்சென்றகை அவருடையது.

இந்தக் கடிதத்தில், குழந்தைகள் உலகிற்குள் கல்வியும் பொருந்தாத பரிசுகளும் அத்துமீறி நுழைவதில் அவருக்கிருக்கிறகோபம் நன்கு வெளிப்படுத்துகிறது.

&&&&&&&&

திருக்குற்றாலம்,
01-08-45

அருமைப் புதல்வி பாக்கியலக்ஷிமி அம்மாளுக்கு

சென்னையிலிருந்து மதுரைக்கு 28-07-45 அன்று காலை வந்து சேர்ந்தேன். மதுரையை விட்டு இரண்டு மைலுக்கு அப்பாலுள்ள டாக்டர் ராமசுப்பிரமணியம் அவர்கள் வீட்டில்த் தங்கியிருந்தேன். அங்கேயே வந்து விட்டார்கள் நண்பர் குஞ்சு ஐயர் அவர்கள். எனக்கு ஒரே அதிசயமாய் இருந்தது. திருவையாற்றில் இருப்பார்கள் என்று எண்ணியிருந்தேன் மதுரையில் எதிர்பார்க்கவே இல்லை. ஆனதால் அவர்களை பார்த்தது எவ்வளவோ சந்தோஷமாய் இருந்தது. யாரையும் எங்கு வேண்டுமானாலும் கொண்டு வந்து தள்ளிவிடும் அன்பு.

குற்றாலலிங்கத்துக்கு ஒரு பெரிய காரும், மரக்கலமும் கொண்டு வந்தார்கள். 29ம் தேதிதான் இங்கு வந்து அதை அவன் கையில் கொடுக்க முடிந்தது. அதன் அழகையும் விசித்திரத்தையும் இன்னும் பார்த்து முடியவில்லை. அவனும் அவனுடைய சகோதர சகோதரிகளும். உலகத்தில் எங்கு வேண்டுமானாலும் குற்றாலலிங்கத்துக்குத் தங்குதடை இல்லாமல் போக முடிகிறது & கற்பனா உலகத்தில்த் தான். நீரில் போகக் கப்பல், நிலத்தில் போக மோட்டர் கார்.

குழந்தைகளின் உள்ளமாகிய உலகத்தில் தாங்கள் எவ்வளவோ சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறீர்கள். தாங்கள் அளித்த பரிசுகள் அதைத் தெளிவாய்க் காட்டுகின்றன. பொதுவாகப் பள்ளிக்கூடங்களில் வருஷ விழாவையொட்டிச் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் பரிசுகள் வழங்கப் பார்த்திருக்கிறேன். நானும் கொடுத்திருக்கிறேன். பெரிய பெரிய புஸ்தகமாகக் கொடுப்பார்கள். ஷேக்ஸ்பியர் மில்டன், பிரௌனிங் முதலிய படே படே கவிஞர்களுக்குக் கீழே இறங்கமாட்டார்கள். உபயோகம் நாடிக் கொடுக்கிறார்களாம். இந்த ஜென்மத்தில் அந்தப் பிள்ளைகளுக்கு உபயோகப்படப் போவதில்லை. அடுத்த ஜென்மத்தில் இங்கிலாந்தில்ப் போய்ப் பிறந்தால் அல்லவா அந்தப் பிள்ளைகளுக்கு உபயோகப்படும். உபயோகத்தை என்ன அழகாய் நாடுகிறார்கள்! ரொம்ப பேஷ்!

குற்றாலலிங்கத்துக்கான பரிசுகள் என்னை எங்கெல்லாமோ கொண்டு போகின்றன.

தமிழ்க் கவி சம்பந்தமாக புதிய விஷயம் கிடைத்து விட்டால் அதைப் பற்றிக் கண்ட கண்ட இடமெல்லாம் பேசுவது எனக் குண்டான சபலம்.

பல இடங்களிலும் தங்கள் பிள்ளை மொழி - தொட்டில் பாடல்களைப் பற்றிப் பேச நேர்ந்தது. பாடல் என்றால் விஷயத்தோடு இதயம் ஒட்ட வேண்டும். இது பெரிய காரியமே. சாமானிய காரியம் என்று சொல்லிவிட முடியாது. கம்பரது இதயம் எத்தனையோ விஷயங்களோடு ஒட்டியுள்ளது தான். ராமனாகிய சக்கரவர்த்தி திருமகனோடு ஒட்டும்; வேடனாகிய குகனோடு ஒட்டும்; குழந்தைகளோடும் ஒட்டித்தான் இருக்கிறது. ஆனாலும் பெண்களுடைய இதயம் எப்படி உள்ளும் புறமும் ஒட்டுமோ அப்படி ஒட்டும் என்று சொல்ல முடியாது கம்பர் எப்படியும் ஆடவர்தானே, தாய் அல்லவே.

தங்கள் பாடல்கள் குழந்தைகளைக் கட்டி அணைத்த வண்ணமாக பேசுகின்றன. அது காரணமாக உண்மைத் தத்துவம் வெளியாய்விடுகிறது. அதன் பயனாய் அழகும் வாய்ந்து விடுகிறது. இப்படியெல்லாந்தானே கவியைப் பற்றிப் பேச வேண்டியிருக்கிறது.

குற்றாலத்தில் தாங்கள், குஞ்சு ஐயர் அவர்கள், கிருஷ்ணமூர்த்தி அவர்கள், குழந்தைகள் எல்லாரும் இருந்தது குற்றாலத்துக்கு ஒரு அலங்காரம். என் மனசுக்கோ அரிய விருந்து. எத்தனையோ விஷயங்களை ஆராய நேர்ந்தது ஏதோ ஒரு முடிவு கட்டவும் முடிந்தது.

பொதுவாக நம்மவர்கள் ஏதாவது ஒரு விஷயத்தை எடுத்துப் பேசினால் இவர் சொன்னார் அவர் சொன்னார் என்ற முறையில் தான் பேசுவார்கள். குற்றாலத்திலிருந்து கொண்டு பேசும் போது 'நயாகரா' அருவிதான் விஷயம். குற்றாலத்தருவியைப் பற்றிப் பேசவே முடியாது. அப்படிப் பேசினாலும் அங்குள்ள எண்ணெய் சோப்பு நெருக்கடி தான் விஷயம். வாஸ்தவந்தானே! அவர்கள் சௌகரியமாய் ஏகபோகமாய்க் குளித்த நயாகராவில் அதெல்லாம் கிடையாதல்லவா! எல்லாம் புஸ்தகத்தை கிழித்துக் காகிதத்தை நெருப்பில் போடுகிற காரியந்தான். காகிதம் எரியும் போது நல்ல வாசனையா வருகிறது இல்லையே!

அருவிகள் பாடு இப்படியென்றால் அடிப்படையான மனுஷ தத்துவங்களைப் பற்றிப் பேச நேர்ந்தால் கேட்கவா வேண்டும்?

இது போக இயற்கையானது ஆண்பாலர் என்றும் பெண்பாலர் என்றும் இரண்டாகப் பிரித்து இடையிலே கனத்த திரையையும் போட்டுவிட்டது; ஆகவே ஒருவருக்கொருவர் விஷயம் தெரியாமலே வீட்டை நடத்துகிறார்கள்; ஏன் உலகத்தையே நடத்துகிறார்கள். இந்தப் பைத்தியக்காரத்னதப் பற்றிப்

பேசுவதென்றால் முடிகிற காரியமா? ஒரு யுகமே வேண்டும். ஒரு மாசத்தில் என்னத்தைப் பேசிவிட முடியும். ஏதோ பேச நேர்ந்தது. அதுவே திருப்தியை அளித்தது. இதையெல்லாம் யோசனை பண்ணி அல்லவா பள்ளிக்கூடத்தையும் படிப்பையும் வகுக்க வேண்டும். அப்படி வகுப்பது எந்த யுகத்திலோ?

சிம்லாவில் குழந்தைகள் வெகு ஜோராய் விஷமங்கள் செய்து கொண்டிருக்கின்றன. விஷமங்கள் எல்லாம் நாடகங்கள்தான். ஒவ்வொரு நிமிஷமும் கலையைக் கற்றுக்கொண்டேயிருக்கிறார்கள். பள்ளிக்கூடத்தில் 40 பிள்ளைகளுக்கிடையே உட்கார வைத்து உபாத்தியாயரையும் முன்னே நிறுத்தி விட்டால் என்னத்தைப் படிப்பார்கள் அவர்கள். செயல் செய்து உடலின் ஒவ்வொரு அம்சமும் தொழில்பட்டதால்தான் குழந்தைகளுக்கு கல்வி வரும். அறுபத்தி மூவர் மாதிரி உட்கார்ந்திருந்து உபாத்தியாயரின் உபன்னியாசங்களைக் கேட்டால் கல்வி வரவா செய்யும். குழந்தைகளில் இயல்பான அறிவு, பண்பு ஆக்கல் இவைகளைப் பார்க்கப் பார்க்க பள்ளிக்கூடங்கள் செய்து வரும் அநியாயங்களையும் கொடுமைகளையும் சகிக்க முடியவில்லை மனசுக்கு.

இரண்டாவது பாரத்தில் முதல் நாள் போய் பையன் உட்கார்ந்திருக்கிறான். உபாத்தியாயர் முதல் கணக்காக ஆரம்பிக்கிறார்.

“அறுபத்தேழு லக்ஷத்து ஐம்பத்தோராயிரத்து நானூற்று முப்பத்தொன்பதில் a ஆயிரங்களாகவும் b பத்துகளாகவும் c ஒன்றுகளாகவும் இருக்கின்றன. a ,b, c யின் மதிப்பு என்ன?“

எப்படி இருக்கிறது காரியம்!!!

குழந்தைகள் சதாக் கல்விக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். ரொம்பப் பெரிய பள்ளிக்கூடத்தைப் போட்டிருக்கிறது இயற்கை. பாடல்களும் பாடப் புஸ்தகங்களும் எண்ணிறந்தன. தெவிட்டா விருந்து குழந்தைகளுக்கு.

“இதெல்லாம் உங்களுக்கு உதவாது. பள்ளிக்கூடத்துக்குள் வாருங்கள், பள்ளிப் புஸ்தகங்களை விரித்து முகத்தில் வைத்துக் கட்டிவிடுகிறோம். சரியான கல்வி நன்றாய் வந்தும் விடும்” என்று சொல்லிக் கொண்டிருக்கின்றனவே பள்ளிக்கூடங்கள், என்ன செய்ய அவைகளை?

‘வண்டிகள்’, ‘அதுயார்’ ‘அன்னையின் முத்தம்’ முதலிய தங்கள் பாடல்கள் தாயின் உள்ளப் பரவசங்களை அருமையாகச் சித்தரிக்கின்றன. சித்திரத்தைப் பார்த்து அனுபவிப்பதற்குப்

பக்குவம் வேணும். கொடுத்தும் வைத்திருக்க வேண்டும். தங்கள் முறையில் பெரியாழ்வாரும் ஒரு மனுஷக் குழந்தையையே பற்றிப் பாட்டு எழுதியிருக்கிறார்.

தாங்கள் நேர்முகமாக அனுபவரீதியாக எழுதிய பாடல்களில் நயத்தையே காணமுடியவில்லையாம். வானத்தையெல்லாம் சுற்றிச் சுழன்று வரும் தாயுள்ளம் அடங்கிய கவியையா காணப்போகிறார்கள். எவ்வளவு பெரிதாக நெற்றிமேல் நாமத்தைப் போட்டாலும் பிரயோஜனம் இல்லை.

The poets eye in a
tine frency rolling
doth glance from
heaven to earth
And from earth
to heaven

என்று ஷேக்ஸ்பியரையும் வேறு 'கோட்' செய்து கொள்ளுங்கள். "ரங்கநாதா! ரங்கநாதா! ரங்கநாதா! என்று ஸ்ரீரங்கத்துக் கிளிப் பிள்ளை சொல்லும் கணக்குதான். இவர்ளையெல்லாம் கொஞ்சம் மறந்துவிட்டு, பெரியாழ்வார் சொல்லுவதற்குக் காது கொடுப்போம். தொட்டிலுக்குப் பொன்னால் விளிம்பு கட்டி, இடையிடையே மாணிக்கமும் வைரமும் வைத்து அழுத்தி இருக்கிறதாம்.

மாணிக்கம் கட்டி
வயிரம் இடைகட்டி
ஆணிப் பொன்னால்ச் செய்த
வண்ணச் சிறு தொட்டில்
பேணி உனக்குப்
பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே! தாலேலோ!
வையம் அளந்தோனே! தாலேலோ!

ஆடவர்களிலும் பிள்ளைப் பாடல்கள் பாடக்கூடியவர்கள் இருக்கிறார்கள். தெரிந்துகொள்ளுங்கள்.

## டி.கே.சி.யின் தனிப்பண்பு

ரசிகமணி அவர்கள் அலசி அலசி அழகை எடுத்து, அழகான விக்கிரகமாக்கி, ஆராதனை செய்து, அந்த மகத்தான சாதனையில் மற்றவர்களையெல்லாம் ஈடுபடுத்தினார்கள். இதில் ஏற்படும் ஆனந்த உலகத்திற்கு நம் கையைப் பிடித்துக் கொண்டு படுவேகமாக அழைத்துச் சென்றார்கள். அவரது உண்மையான வார்த்தைக்கு ஒரு மாதிரி சக்தி இருந்தது. ஒவ்வொரு வார்த்தையும் தமிழ்ப் பண்பாட்டைப் பேசும். அழகான தமிழ் ஒலியைக் காட்டும். எவ்வளவு பெரிய விஷயத்தையும் தெளிவாக விளக்கி விடும். வார்த்தைகளை அவர் எடுத்தாள்கிற வனப்பும், நிறுத்தி நிறுத்திச் சொல்லும் நிதானமான பாங்கும், நண்பர்களே! கேட்கிறவர்களை அப்படியே மயக்கி விடுமாம். வேண்டாததை ஒதுக்கி விட்டு, வேண்டும் என்பதைத் தருகின்ற முறையின் அளவும் டி.கே.சியின் மேலான பண்புகள் ஆகும்.

வார்த்தைகளின் எந்தப் பகுதியில் உணர்ச்சி பூர்வமான பாவம் உண்டோ, அதைச் சுகமாகத் தீண்டியும், மற்ற பாகத்தை நழுவவிட்டு ஒதுக்கியும் கையாளுகிற லாவகம் பண்டிதர் பாமரர் எல்லோருக்கும் பிரமிப்பை உண்டாக்கி விடும்.

டி.கே.சி.யின் கண்சிமிட்டும், கைகளின் அனாயாசமான வீச்சும், 'கருகரு' என்று வளர்ந்து அடர்ந்த புருவமும், மீசையும், அதை ஒதுக்கி விடுகிற முறையும், முகமும் முகத்தில் வந்து சேருகிற பாவ உணர்ச்சிகளும், டி.கே.சி. பேசுகிற வார்த்தைகளுக்கு அற்புதமான வியாக்கியானங்களாக இருக்கும்.

அவர்கள் பேசுகிறார்கள், நாம் கேட்கிறோம் என்ற உணர்ச்சியே நமக்கு இருக்காது. நாமே பேசி நாமே கேட்பது போன்றிருக்கும். (டி.கே.சி. வரலாறு வித். ல. சண்முகசுந்தரம், ஸ்டார்பிரசுரம், பதிப்பு 1960 பக்கம் 97)

நண்பர்களே! டி.கே.சியின் 106வது பிறந்தநாளை ஒட்டி 14.9.87 அன்று சென்னைத் தொலைக்காட்சியில் பல்கலைச் செல்வர் இசைப் பேரறிஞர் மீ.ப. சோமு அவர்களை திரு. தி.வ. மெய்கண்டார் பேட்டி கண்டார். அதில் திரு. சோமு அவர்கள் டி.கே.சி. அவர்களின் தனிப்பண்புகளை அவருக்கே உரியமுறையில் மிக நுட்பமாக சித்தரித்துள்ளார்.

தி.வ. மெய்கண்டார்:

இசைப் பேரறிஞர் மீ.ப. சோமு அவர்களே! டி.கே.சி.யினுடைய தனிப்பண்பு என்று எதைச் சொல்லலாம்?

சோமு: டி.கே.சி. எந்த விஷயத்தைப் பார்த்தாலும் சரி; அனுபவித்தாலும் சரி; அணுகினாலும் சரி; அதில் ஒரு தனிப்பண்பு இருக்கும். அவருடைய எழுத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன். இப்ப எழுத்திலே என்னமோ சீர்திருத்தம் எல்லாம் சொல்கிறார்கள். அவர் த.ச. எதைப் போட்டாலும் ஒரு கோடிட்டே போடுவார். 'சி'ன்னா ஒரு கோடு கொண்டே 'சி'னாவை இழுப்பார். 'சி'னாவிலே ஒத்தைக் கோடுதான் இருக்கும். அது ஒரு தனிப்பண்பு. விருந்தோம்பலிலே ஒரு தனிப்பண்பு, மக்களோடு பழகும் போது ஒரு தனிப்பண்பு. சின்னப்பையன்களைக் கூட நீங்கள் என்றுதான் கூப்பிடுவார். இப்படி அவருடைய மீசையை எடுங்கள். அவருடைய கண்ணை எடுங்கள். அவருடைய நெற்றியைப் பாருங்கள். எல்லாத்திலேயும் ஒரு தனிப்பண்பு. இந்தத் தனிப்பண்பு அவருடைய இலக்கியப் பார்வையிலும் விளங்கிச்சு.

மெய்: இலக்கியத்தில் அந்தத் தனிப்பண்பை எப்படி வெளிப்படுத்தி இருக்கிறார்?

சோமு: ஒன்னு சொல்றேன் கேளுங்க! கவிதையை அனுபவிப்பதில் அவருடைய பார்வையே தனி ராமாயணம் என்றால் நாம் என்ன சொல்கிறோம். விபீஷணன் உயர்ந்தவனா, கும்பகர்ணன் உயர்ந்தவனா, சகோதரர்களிலே யார் உத்தமச் சகோதரர்கள், இப்படியெல்லாம்தான் ஆராய்ச்சி பண்ணுவோம்.

டி.கே.சி. என்ன சொல்வார்னா, இதெல்லாம் ராமாயணம் என்கிற கதையைப் பத்தின ஆராய்ச்சி எப்படி இருக்கணும்னா கம்பனுடைய கவிதையை ஆராயணும்.

ராமன், சுக்கிரீவன் மற்ற கதாபாத்திரங்கள் எல்லாமே ராமாயணத்தினுடைய கதைநிகழ்ச்சிகள் எல்லாமே எதற்காக வந்தன என்றால் ராமனை செலுத்துவதற்காக இல்லை. கம்பனுடைய கவிதை தோன்றுவதற்காக! பாத்திரங்கள் நிகழ்ச்சிகள் எல்லாம் கருவிகளாக உபயோகப்படுத்தப்படுகின்றன. கம்பருடைய கவிதையிலே!

ராம அவதாரம் எதற்காக ஏற்பட்டதுன்னா நாமெல்லாம் என்ன சொல்கிறோம்? ராவணனைக் கொல்வதற்காக என்று. டி.கே.சி. என்ன சொல்வார் தெரியுமா? ராமன் அவதரித்தது எதற்காக என்றால், கவிதை அவதரிப்பதற்காக! இப்படி ஒரு தனிப்பண்பு அவருக்கு.

மெய்: இந்தத் தனிப்பண்பு அவருக்கு எப்படி ஏற்பட்டது!

சோமு: நல்ல கேள்வி இது. எப்படி ஏற்பட்டதுன்னா அவர் பிறந்தது கவிஞனாகப் பிறந்தார். ஆனால் வாழும் போது ரசிகனாக வாழ்ந்தார். ரசிகமணி என்ற பட்டத்தை அவருக்குச் சூட்டியது அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்திதான். கவிஞனாக வாழ வேண்டியவர், ஏசிகனாக வாழ்ந்ததனால், அவர் கவிதையைப் பார்க்கிற போது கவிஞருடைய பார்வையிலே பார்த்தார். ஆங்கிலத்தில் சொல்வோமே Subjective ன்னு; அப்படிப் பார்த்தார், அவர். கவிஞன் கவிதையைப் பார்க்கிற முறை இருக்கிறதே அதான் டி.கே.சி. கவிதையைப் பார்த்த முறை. அனுபவிப்பதற்காகவே கவிதை தோன்றியது. ஆனந்தத்திலிருந்து கவிதை தோன்றியது. பிறருக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதற்காகக் கவிதை தோன்றியது என்பதை அடிக்கடி சொல்வார். கவிதை என்பது இலக்கண இலக்கியங்களைக் கற்கிற மாதிரி, கற்பதற்கு வேண்டிய முறையில் அதை அணுகக்கூடாது. அனுபவிப்பதற்காகவே அணுக வேண்டும் என்று, அப்படிச் சொல்வார். ஏன்னா, அவர் கவிஞனாக இருந்தார்.

மெய்: டி.கே.சி. எழுதிய கவிதைகளில் உங்களைக் கவர்ந்த கவிதை ஒன்றைச் சொல்லுங்கள்.

'டி.கே.சி. கவிஞனாகப் பிறந்தார்ன்னு சொன்னேன். அப்படியானா பல கவிதைகளை அவர் எழுதியிருக்கலாமேன்னு கேட்கலாம். ஆனால் அவர் என்ன செய்தார். கவிதை தோன்றுகிற ஊற்று இருக்கிறதே. அந்த ஊற்றுக் கண்ணை அடைத்து விட்டார். அவருடைய உணர்வுகளெல்லாம் கவிஉணர்வு இருக்கிறதே அந்த ஊற்றுக் கண்ணை அடைத்து விட்டு கவிதையை எழுதுவதை விட, கவிதையை அனுபவிப்பதே தன்னுடைய பணி என்று

தமது குறிக்கோளையே மாற்றிக் கொண்டு விட்டார். அதனால் என்ன நேர்ந்தது, என்றால் அவர் எழுதின சில கவிதைகள் மட்டும் நண்பர்களிடத்திலே பரவின. ஒரு 4,5 கவிதைகள்தான் முக்கியமாக, டி.கே.சி.யினுடைய கவிதைகள், என்று பரவின. அவற்றிலே ஒரு கவிதை.

அந்தக் கவிதை குற்றாலத்தைப் பற்றின கவிதை.

ரசிகமணி டி.கே.சி. திருநெல்வேலி வண்ணாரப்பேட்டையில்தான் ஆரம்ப நாட்களில் இருந்தார். அப்புறம் சென்னைப் பட்டணத்திலே இந்து அறநிலைய ஆணையராகவெல்லாம் இருந்தார். எம்.எல்.சியாக இருந்தார். அப்புறம் ஓய்வு பெற்ற பிறகுதான் திருநெல்வேலி வந்தார். கடைசி காலத்திலே குற்றாலத்துக்கு வந்தார். "குற்றாலத்து அண்ணல் இறைவனைப் பற்றி ஒரு பாட்டுப் பாடியுள்ளார்.

அந்தப் பாட்டைச் சொல்கிறேன் கேளுங்க

கண்ணிமைக்காது காண்தகு
வெற்பில்
கார்பல உறங்கு குற்றாலத்து
அண்ணலே
என்றன் குறையெலாம் கூவி
அரற்றியும்
நினதருள் காணோன்"

பக்தன் பாடுகிறான். குற்றாலத்து அண்ணலைப் பார்த்து நான் என்னுடைய குறையெல்லாம் சொல்கிறேன். உன்னுடைய அருள் எனக்குக் கிடைக்கவில்லை.

கண் இமைக் காது
காண்தகு வெற்பில்
கார் பல உறங்குகுற்
றாலத் து
அண்ணலே! எந்தன்
குறைஎலாம் கூறி
அரற்றியும் நினதருள்
காணே ன்!
விண்ணிடை நின்று

விரைவொடு வந்து
வெண் நகையொடுவிளை
யா டித்
திண்ணெனக் குதிக்கும்
அருவியின் ஒலிதான்
திருச்செவி அடைத்தது
கொல் லோ!

அந்த அருவியினுடைய ஓசைதான் உன் காதுல அடைத்து நான் சொல்கிற குறைகளைக் கேட்க விடாமல் பண்ணி விட்டதோ! - இது பழைய பாட்டு மாதிரியே இருக்கு பாருங்கள். இதுதான் டி.கே.சி. பாட்டு

மெய்: டி.கே.சி. மறைந்து இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு அவருடைய தனிச்சிறப்பு என்று எது தங்கள் மனத்தில் நிலைத்து நிற்கிறது?

சோமு: டி.கே.சி. மறைந்த போது என்ன நினைவிலே இருந்ததோ, அவர் இருக்கும் போதும் அதுதான் நினைவிலே இருந்தது.

அது என்ன, அப்படின்னா அவர் ஒரு பெரிய செல்வந்தர். அதே சமயத்தில் கவிஞர்; ரசிகர் இரு வேறு உலகத் தியற்கை; திருவேறு தெள்ளிய ராதலும் வேறு" என்ற திருக்குறள் தெரியும் உங்களுக்கு. இந்த இரண்டும் இணைந்ததுதான் அவருடைய தனிச்சிறப்பு.

ஒரு நண்பர் இதைப்பார்த்து வியந்து ஒரு பாட்டுப் பாடினார்.

எப்படிப் பாடினார்னா, உங்களுக்குத் தெரியும் கம்பருடைய வரலாறு. சடையப்ப வள்ளல் கம்பனை ஆதரித்தார். கம்பன் கவிதையை இயற்றினார்.

டி.கே.சி. எப்படி இருந்தார்னு சொன்னா, சடையப்ப வள்ளலும், கம்பரும் ஈருடலும் ஒருயிருமாக இருந்தார்கள். ஆனா அவர்களுக்கு என்ன ஆசை தோணிச்சுன்னா ஒரு ஜென்மத்திலே நாங்க ஒருடலும், ஒருயிருமாகவே பிறக்கணும் என்று ஆசைப்பட்டார்கள்.

திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளையென்ற டி.கே. சியினுடைய நண்பர் எழுதுகிறார். பாட்டு, பாருங்கள்!

கம்பரும் வெண்ணெய் நல்லூர் வள்ளலும்
கலந்து பேசி

**இம்பரில் பிறக்க எண்ணி**
**இருவரும் ஒருவராக**
**உம்பரின் தேவதேவை**
**ஒரு வரம் கசிந்து கேட்க**
**செம்பதுமத் தோன் செய்தான்**
**சிதம்பர நாத மாலை.**

கம்பனும் கம்பனுடைய நண்பரும் பிரம்மனைச் சேர்ந்து நாங்கள் இரண்டு பேரும் ஒரே உடல். ஒரே உயிரில் பிறக்கணும்னு பிரம்மாவைப் பார்த்து வரம் கேட்டார்கள். உடனே பிரம்மா என்ன பண்ணினான். 'கிராண்டட்' (நிக்ஷீணீஸிமீமீபி) அளித்தோம் அந்த வரத்தை என்று சொல்லி சிதம்பரநாதமால், சிதம்பரநாத வள்ளலை, சிதம்பரநாதக் கவிஞரை இந்த உலகத்துக்கனுப்பினான்". என்று பாடினார். இந்தச் சிறப்பு இருக்கிறதே: இருவேறு உலகத்தினுடைய சிறப்பு அது இணைந்துதான் டி.கே.சி.யினுடைய தனிப்பண்பு; தனிச்சிறப்பு. அது என்றென்றும் நம்முடைய மனத்தில் நிலையாக இருக்கக்கூடிய பண்பு.

மெய்: இன்று டி.கே.சி. அவர்கள் மறைந்து, 106ஆவது பிறந்தநாள்...

சோமு: ஆமாம்; ஆவணி ரோகிணி நட்சத்திரம்.

மெய்: இந்த நல்ல நாளிலே, நீங்க அவரைப் பற்றிய அரிய செய்திகளையெல்லாம் சொல்லி இருக்கிறீர்கள். அதற்காக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சோமு: இந்த வாய்ப்புக்காக நான் ரொம்ப மகிழ்ச்சி அடைகிறேன். டி.கே.சிக்கு நான் செலுத்தும் நன்றிக்கடமையென்று நினைக்கிறேன். ரொம்ப மகிழ்ச்சி.

**மெய்: நன்றி வணக்கம்.**

**சோமு: வணக்கம்; நன்றி!**

**நன்றி: சென்னைத் தொலைக்காட்சி ஒளிபரப்பு.**

# டி.கே.சி.யின் ஆங்கில மொழிபெயர்ப்பு

BIRTH IS COVETABLE

The image of Nataraja, its transcendent beauty, and the interpretative art enshrined therein are now familiar to the entire Art-world. Through the dancing pose of the Deity at Chidambaram. we have to see a vast figure, filling the very heavens, dancing and whirling in ecstatic joy : and again, through this cosmic image, one has to perceive the oneness and harmony that governs the whole universe, and thus realise the joy infinite. Here is a glimpse of suh a realisation:

Thy matted locks waving in the skies,
Thy complexion resplendent;
The milk-white ashes besmeared thereon,
The arched brow, Thy ruddy lips.
The smile mysterious,
And, above all, Thy lifted foot
dripping as though with honey,
These, O Lord| if one could have a vision of,
Even the birth, on this earth, as a human mortal is
Worth striving for.
(Found in th Hymns of Appar, 7th Century A.D.)

குனித்த சடையும்
பவளம் போல் மேனியும்
பால் வெண்ணீறும்
குனித்த புருவமும்
கொவ்வைச் செவ் வாயும்
குமிண் சிரிப்பும்
இனித்தம் கசிய
எடுத்த பொற் பாதமும்,
காணப் பெற்றால்

மனித்தப் பிறவியும்
வேண்டுவதே இந்த
மானிலத்தே.

HINGERES WEAR OUT

Here is a love-song of the twelfth century (A.D.), The lady-love expects her lover to return in the evening. She is alone in the house and is waiting till it is almost midnight. Then she goes to bed. But she is restless, walks to the door and opens it to see if her lover is coming. The lover is not seen. She closes the door and returns to her bed. Again in a few minutes she goes to the door and in despair returns to the bed. This going and returning goes on incessantly till sunrise. All this is expressed in a couplet:

Expectancy opens and Despair shuts
And thus swings the door from eve to morn
Thereby wearing out the hinges.

வருவார் கொழுநர்
எனத்திறந் தும்
வாரார் கொழு நர்
என அடைந் தும்
திருகு குடுமி
விடியளவும்
தேயும் கபாடம்
திறமி னோ.

## ரசிகமணியின் ரசனைப் பரல்கள் - சில

நாவுண்டு நீயுண்டு
நாமந் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே
பயமுண்டோ: பூவுண்டு
வண்டுறங்கும் சோலை
மதிலரங்கத் தேஉலகை
உண்டுறங்கு வான்ஒருவன்
உண்டு! -பெருந்தொகை-

•

குடதிசை முடியை வைத்து
குணதிசை பாதம்நீட்டி
வடதிசை பின்புகாட் டி
தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை
அரவணை துயிலுமா கண்டு
உடல் எனக்(கு) உருகுமா லோ
என்செய்கேன் உலகத்தீ ரே. - திருமங்கையாழ்வார்&

நாடுதும்வா நெஞ்சமே
நாரா யணன்பதிகள்;
கூடுதும்வா மெய்யடியார்
கூட்டங்கள்: சூடுதும்வா,
வீதியெங்கும் கார்அகிலின்
வீசுபுகை வாசம்எழும்
ஆதியிந்த ஒூரான்
அடி! - பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்-

கருப்பூரம் நாறுமோ
கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித்தி ருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன்
வாயமுதும் வாசமும் &
விருப்புற்று கேட்கின்றேன்
சொல்ஆழி வெண்சங்கே! -ஆண்டாள்-

உன்னோ(டு) உடனே
ஒருகடலில் வாழ்வாரை
இன்னார் இனையர்என்(று)
எண்ணுவர் இல்லைகாண்!
மன்னாகி நின்ற
மதுசூதன் வாயமுதம்
பன்னாளும் உண்கின்ற
பாஞ்ச சன்னியமே! - ஆண்டாள்.

உண்பது சொல்லில்
உலகளந்தான் வாய்அமுதம்!
கண்படை கொள்ளல்
கடல்வண்ணன் கைத்தலத்தே!
பெண்படை யார்உன்மேல்
பெரும்பூசல் சாற்றுகின்றார்
பண்பல செய்கின்ற
பாஞ்ச சன்னியமே! - ஆண்டாள்-

(ஆண்டாள் பாசுரங்கள் மூன்றும் எப்படி நம்மை கண்ணனுடைய பக்தியில் ஈடுபடுத்துகின்றன. நம்மை ஆளத்தான் செய்கிறாள் ஆண்டாள் - டி.கே.சி.)

ஒன்றும் அறியாத
ஊமர்காள் தென்னரங்கர்
இன்று திருத்தேரில்
ஏறினார் - நின்று
வடம்பிடிக்க வாருங்கள்
வைகுந்த நாட்டில்

இடம்பிடிக்க வேண்டும்
 எனில். - பிள்ளைப் பெருமாள்- ஐயங்கார்

என்னை ஏதும்
 அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும்முன்
 ஏதும்அ றிந்திலேன்
என்னைத் தன்னடி
 யான்என்(று) அறிதலும்
தன்னை நானும்பி&
 ரான்என்(று) அறிந்தேனே - அப்பர்

வடவரையை மத்தாக்கி
 வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணா பண்டொருநாள்
 கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை அசோதையார்
 கடைகயிற்றால்க் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய்
 மாயமோ மருட்கைத்தோ. - சிலப்பதிகாரம்
துளவ துளவனச்
 சொல்லுஞ்சொற் போச்சே
அளவில் நெடுமூச்சும்
 ஆச்சே & முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே
 கண்ணும்பஞ் சாச்சே
இரங்காய் அரங்கா
 இனி. - பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்-

தினையளவு போதாச்
 சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும்
 படித்தான் - மனையளகு
வள்ளைக் குறங்கும்
 வளநாட வள்ளுவனார்

வெள்ளைக் குறட்பா
வரி. - திருவள்ளுவமாலை-கபிலர்

உகந்தார்க்(கு) எஞ் ஞான்றும்
உளனா யுகவாது
இகந்தார்க்(கு)எஞ் ஞான்றும்
இலனாய்த் - திகழ்ந்திட்(டு)
அருவல்ல வாயுருவும்
அல்லன்என நின்றான்
திருவல்ல வாழ்வுறையும்
தே. - நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி

இதுவோ திருநகரி
ஈதோ பொருனை
இதுவோ பரமபதத்(து)
எல்லை - இதுவோதான்
வேதம் பகர்ந்திட்ட
மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன்
ஊர். - ரமானுஜர்-

“அன்னைபோல் என்னை
அருவியில் நீராட்டி
இன்னமுதும் பக்கத்(து)
இருந்தூட்டி - தன்னொடு
தங்குதங்கு என்று சொன்ன
தங்கக் குணத்தானை
எங்கு நான் காண்பேன்
இனி!”

-கவிமணி.

## ரசிகமணியும் ரயிலடியும்

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்றாற் போல்தான் கோயிலைச் சுற்றிக் குடியிருப்பவர்களின் வாழ்க்கையும் பெரும்பாலும் அமைந்திருக்கும். கோயிலில் திருவிழா என்னில் ஊரே எதிரொலிக்கும். கோயிலில் நடக்கும் சின்னஞ்சிறு விழாக்கள் கோயிலடியில் இருக்கும். கோயிலைச் சுற்றி இருக்கும் வீதிகளில் பிரதிபலிக்கும். சென்னையிலுள்ள பார்த்தசாரதி கோயிலை எடுத்துக் கொண்டோமானால், நாளும் திருநாள்தான். அங்கே குடிகொண்டிருக்கும் பார்த்தசாரதி மரகதவல்லித் தாயாருடன் வீதிஉலா வருவார். ஸ்வாதி நட்சத்திரத்தன்று நரசிம்மன் உலா வந்து மக்கள் நலன் விசாரிப்பார். ஆடிப்பூரம் என்றால், ஆண்டாள், ஒருகால் மடக்கி ஒருகால் நீட்டி கம்பீரமாக அமர்ந்து, தான் ரங்கநாதருடன் இருந்து மகிழ்ந்து கொண்டிருக்கும் ஆனந்தத்தைப் பாருங்கள் என்பது போல் தெருவில் இறங்கி வந்து, "அன்பின் மகிமையைக்" கூறிப் பவனி வருவாள். நீங்களும் இறைவனுடன் கலக்க வாருங்கள். நான் அருள் பாலிக்கின்றேன் என்பதாய் இருக்கும் அவள் வருகை. இதற்கிடையில் நாச்சியார் கோலம் பூண்டு தாய்மையின் கருணையைக் காட்டப் பவனி வருவார் பெருமாள். இவ்வாறு வரும் மரகதவல்லியுடன் பார்த்தசாரதியையும், வாழ்வின் நம்பிக்கை அளிக்கும் லட்சுமி நரசிம்மரையும், அன்பின் தத்துவமான ஆண்டாளையும் மக்கள் வரவேற்பார்கள். எப்படி! வீதி உலாவின் போது அவரவர் வீட்டு வாசல் பெருக்கி சுத்தம் செய்து, நீர் தெளித்து, வாசல் கொள்ளக் கோலம் போடுவர் பெண்கள். அன்றும் அப்படித்தான். ஆண்டாள் பவனி வரப்போகிறாள். மாலை நேரம். வாசல் திருத்தி நேர்த்தியாய் கோலம் போடுகிறார் ஒரு பெண். அவள் குனிவதும், இடையிடையே நிமிர்ந்து தன் ஆடையைத் திருத்தி நேர் செய்வதும், முன் விழுந்து கண் மறைக்கும் கூந்தலை பின்னால் தள்ளுவதுமாய், தன்னையும் திருத்திக் கொண்டு கோலத்தையும்

போடுகிறாள். சில புள்ளிகளில் ஆரம்பித்தக் கோலம் அழகாய் ஒரு வடிவம் பெற்றது. கோலம் போட்டு முடிந்தது என நிமிர்கிறாள். அழகான ஒரு தேர் வந்து நின்றால்போல் இருந்தது. தேரின் நடுவே ஆண்டாளும் ரங்கநாதரும் கூட அமர்ந்திருக்கிறார்கள். சரி கோலம் முடிந்தது என எண்ணி வீட்டிற்குள் போக யத்தனிக்கின்றாள். ஏதோ நினைவு வந்தால்போல் கோலத்தின் அருகே வந்து, தேரில் குஞ்சம் தொங்குவது போல் அங்காங்கே தொங்க விடுகிறாள். மனம் திருப்தியாயிற்று. வீட்டுக்குள் போய்விட்டாள். ஒரு நிமிடமாயிற்று. மீண்டும் உள்ளேயிருந்து வருகிறாள் வேகமாக. பதட்டத்துடன் வருகிறாள். இந்த முக்கியமான விஷயத்தை மறந்து விட்டோமென்று அந்த நடையில் தெரிகிறது. தேரின் உச்சிக்கு அருகே வந்து, அதையே வரைகிறாள். பின் நிமிர்கிறாள். நிமிர்ந்த அந்த முகத்தில் ஒரு பொலிவு. குனிந்து தேரில் பார்த்தால், அதில் அழகாய் ஒரு கொடி பறந்து கொண்டிருக்கிறது என்ன அழகாய் மாறிவிட்டது தேர்! முன்பைவிடப் பொலிவாகவும் நேர்த்தியாகவும் அல்லவா ஆகிவிட்டது! பேஷ்! பேஷ்! பிரமாதம்! அவளும் தன்னை மெச்சிக் கொண்ட திருப்தியில் வீட்டிற்குள் நிம்மதியாக சென்று விட்டாள்.

இவ்வருடம் இராஜராஜசோழன் தஞ்சைப் பெரியகோயிலைக் கட்டிமுடித்து ஆயிரம் ஆண்டுகள் ஆன வருடம். இந்த ஆயிரமாவது வருடத்தைக் கொண்டாடத் தொடங்கியது தமிழக அரசு. 'தஞ்சைக் கோயில்' மிகப் பெரிய சாதனை. பலப் பேர்களின் தாக்குதலையும் தாண்டி கம்பீரமாய் நிற்கின்றது. எவ்வளவு பெரிய, உயர்ந்த, கோடிக்கணக்கானப் பொருட்செலவில் கட்டிய கட்டிடங்களைக் காட்டிலும், 'கடவுள்' என்றால் கோவில் கோபுரங்களைத்தானே நினைவிற்கு வருகின்றது.

அனைத்து உதவிகளுடனும், ஆண்டவனின் அருளுடனும் இராஜராஜ சோழன் கோவில் கட்டிவிட்டான். கோவிலில் மக்களும் வந்து போய்க் கொண்டிருந்தனர். விழாக்களும் ஆராதனைகளும் நடந்து கொண்டுதான் இருந்தன. இராஜராஜன் மட்டும் எப்போதும் கோவில் பற்றிய சிந்தனையிலேயே இருந்தான். அதன் நேர்த்தியை எண்ணி ஒவ்வொன்றாய் செய்தான். அதற்கு பன்னிரண்டு ஆண்டு காலம் எடுத்துக் கொண்டான் என்று ஒரு கதை உண்டு.

ஒரு பெரிய காரியம் செய்தால் இப்படித்தான் பார்த்துப் பார்த்து, முடித்து விட்ட போதிலும், அதன் எச்சங்கள் மேலும்

மேலும் செய்யத் தூண்டுமாம் & ஒரு கோலம் போடுவதிலிருந்து கோவில் கட்டுவது வரை இப்படித்தான்.

நானும் அந்தக் கோலம் போடும் பெண்ணாய் நிற்கின்றேன் இப்பொழுது. ரசிகமணி கூறுவதுபோல், ஒரு கடிதத்தின் முக்கிய விஷயம் 'பின் குறிப்பில்' நாம் குறிப்பிடுவது போல, ரசிகமணியின் பிராயணத்தில் இரயிலடி என்பது அவர் நட்பின் உணர்வுகளை உன்னதமாக்கிய, நட்பைப் பாதுகாத்த ரயிலடி. இப்படிப்பட்ட ஆனந்தத்தால் உன்னத நிகழ்வைச் சொல்லாமல் விட்டு விட்டேனே என கோலத்தின் இறுதியில் நேர்த்தியாய், ராஜராஜனின் இறுதித் திருப்பணியால் இரயிலடிச் சந்திப்பைச் சிறப்பு பகுதியாய் அமைக்கின்றேன்.

**ஸ்ரீவில்லிபுத்தூர் இரயிலடி**

தென்காசியிலிருந்து சென்னைக்குப் புறப்படும் ரயில். கோதை பிறந்த கோவிந்தன் வாழும் ஊராகிய ஸ்ரீவில்லிப்புத்தூர் வழியாகச் செல்லும். ரயிலில் வந்து கொண்டிருக்கும் ரசிகமணிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் எப்போது வரும் என்று ஆவலாய் இருக்கும். ஸ்ரீவில்லிப்புத்தூர் பற்றிச் சொல்லவே வேண்டாம். மாலை 5 மணிக்குள் 'கோர்ட்' முடியும். அங்கிருந்து சந்தனப் பொட்டிட்டு தமிழ் ஒளி பொருந்திய முகம் கொண்ட ஜஸ்டிஸ் மகராஜன் கிளம்பி வாசலில் வர அவரது சகோதரி வேலம்மாள் வண்டியில் வந்து நிற்கவும் சரியாக இருக்கும்.

இருவர் மனதும் அவர்களிடம் தனித்திருக்காது. ரயிலடியில் இவர்களுக்கு முன் சென்று, முத்தொள்ளாயிரமாய் நின்று கொண்டிருக்கும். இதற்கிடையில் ஒரு மாட்டு வண்டி 'ஜல் ஜல்' என்று வந்து கொண்டிருக்கும். அதில் வெள்ளிக்கூஜா நிறைய அப்போதுதான் இறக்கிய டிகாஷனில் தயாரித்தக் காபி இருக்கும். காபியோடு வைஷ்ணவத் தத்துவத்தின் விளக்காய் தோத்தாத்திரி தெய்வ நாயகமும் அவர்களது நாச்சியராய் ஜானகி அம்மாளும் இருப்பார்கள். அவர்கள் நால்வரும் ரயிலடியில் வந்து காத்துக் கொண்டிருப்பார்கள். ரயில் ஸ்ரீவில்லிப்புத்தூரின் நிலையத்தில் நுழையும். அப்போது எதிர்பக்கமாய் எடுப்பான உயரமும், சிவந்த நிறமும், அழகும், கதராடைக்குள் பொத்தி வைத்த காந்தியத் தத்துவத்தின் மனிதனாய், எனது தந்தை டி.டி. திருமலை கைநிறையப் பழங்களுடன் அரக்கப் பரக்க ஓடிவந்து இவர்களுடன் நின்று கொள்வார். ரயிலும் இவர்கள் அருகே

வந்து நிற்கும்.

டி.கே.சி. அமர்ந்திருக்கும் பெட்டியில் ஏறி...... அவ்வளவுதான் காபியுடன் கம்பனும் அமர்ந்து விடுவார். சில நிமிடங்கள்தான். ஆயினும் பொக்கிஷமாய் அமைந்து விடும். அன்பின் பரிமாறலும், ஆனந்தத்தின் பங்களிப்பும்.... ரசிகமணியின் வார்த்தைகளில் கூறினால் "பேஷ்! பேஷ்! பிரமாதம்" தான். இத்தோடு முடிந்து விடாது. ஊர் சேர்ந்தவுடன் கடிதத்தில் பிரதிபலிக்கும்.

சில சமயங்களில் கோர்ட் முடிய சற்று தாமதமானால் இவரும், ஜஸ்டிஸ் அவர்களும் ஓடோடி வருவார்கள். 'நலம்' விசாரிப்பு முடிந்தவுடன் தன் தேடலின் விஷயமாய் கேட்கத் தொடங்குமுன் ரயிலில் வாய்க்குருவியை ஊதி விடுவார்கள். ஆயிரம் பல்லாயிரம் விஷயங்கள் பகிர்ந்து கொள்ளக் கொட்டிக் கிடக்கும் இருவருக்கும். என்ன செய்வது! காலத்தின் விளையாட்டு இது! கோவில் நிற்பது போல் ஜஸ்டிஸ் மகராஜனை நிறுத்தி விட்டு, ரயில் புறப்பட்டு விடும். இந்த அனுபவம் ஏக்கங்களுக்கு வள்ளுவன், கம்பன் இருவரும் வந்து ஆற்றுப் படுத்துவார்கள். சிலசமயம் யாரையும் பார்க்காது ஏக்கத்துடனே ரயில் சென்று விடும்" அப்போது ரசிகமணியுடன் ரயிலும் ஏக்கத்தில் பிரிவாற்றாமையில் பங்கு கொள்ளும்.

ஸ்ரீவில்லிபுத்தூர் கடந்தால், நான்மாக்கூடல் மதுரை. மதுரை நிலையத்தில் பட்டாபி ராமனின் சகோதரர் வருவார்கள். ரயிலடியில் காத்திருந்து டி.கே.சி தேவை எதுவாயிருப்பினும், செய்து கொடுப்பார்கள். பின் ஆண்டாள் இணைந்த இடம் ஸ்ரீரங்கம். அதற்குச் செல்லும் வழியில் திருச்சி. திருச்சி ரயில் நிலையத்தில் பட்டாபிராம் காத்திருப்பார்கள். அவரை ரசிகமணி சந்தித்ததே ரயிலில்தான். அந்த சந்திப்பு குடும்ப நட்பாக மலர்ந்துவிட்டது. பட்டாபி ராமுடன் கம்பன் வந்து, சிற்பங்களுடன் கலந்து, தமிழிசையின் பெருமையைப் போற்றுவது வரை உரையாடல், பகிர்தல் நடக்கும். இது போதாதற்குக் கடிதங்களிலும் வளரும்.

திரு. ராஜாஜி அடிக்கடி "நட்பு எளிதில் கிடைத்து விடும். அதைப் பரிபாலனம் பண்ணுவதில்தான் கஷ்டம்" என்று கூறுவார். ஆனால் ரசிகமணி நட்பை மிகவும் எளிதாகப் பாதுகாத்து விடுகிறார் என்பார்.

ஆம். ரசிகமணி அதில் மிகவும் சிறந்தவர். நட்பின் உன்னதத்தை உணர்ந்தவர். நட்பில்லா வாழ்வு வீணான வாழ்வு எனக் கொண்டவர்.

நட்பின் பரிபாலனத்தில் ஒரு சிறப்புதான் இந்த ரயிலடி

சந்திப்புக்கள்.

அப்பாடா! நண்பர்களே! இப்பொழுதுதான் எனக்கும் மனம் நிறைந்து இருக்கின்றது. அந்தக் கோலம் போட்ட பெண்ணாய், ராஜராஜ சோழனின் மனதின் நினைவாய், தன் குழந்தைக்கு அலங்காரம் செய்து முடித்தும் இறுதியில் ஒரு சிறு திருத்தம் செய்யும் தாயாய், உணர்ந்தேன். நட்பைப் பெறுவோம்! அதைப் பாதுகாத்து வளர்ப்போம்!

# டி.கே.சி. வாழ்வின் அச்சாணிகள்

டி.கே.சி.யைப் போன்ற பாக்கியசாலிகளைப் பார்க்க முடியாது. அவர் மூன்று அருமையான இதயங்களைப் பெற்றவர். அவ்விதயங்கள்தாம் அவர் பண்பாட்டில் நிலைத்து நிற்க உதவியாய் உறுதுணையாய் இணைக்கரங்களாய் இருந்து வந்தனர்.

டி.கே.சி விருந்தினரை உபசரிப்பது போல் யாராலும் முடியாது என்று உலகம் போற்றுகிறது. இதற்குப் பூரணமாய் ஒத்துழைப்புத் தந்தவர் அவருடைய இணை நலமான திருமதி. பிச்சம்மாள் அண்ணி அவர்கள்.

இலை முன் உட்கார்ந்து சாப்பிட்டு முடிய நெடுநேரம் ஆகும். சாப்பிடும் நேரத்திலும் கம்பனும் வள்ளுவனும் வந்து அமர்ந்து விடுவர். டி.கே.சி. வாழ்ந்திருந்த நேரமெல்லாம் நண்பர்களிடம் இலக்கியம் அனுபவிப்பது, மற்ற நேரமெல்லாம் தாமே . அனுபவித்துக் கொண்டிருப்பார் அல்லது எழுதிக் கொண்டிருப்பார். வீட்டு விஷயம் பேச வாய்ப்பிருக்காது. அண்ணி இது கண்டு ஒரு பாட்டை எழுதினார். எஸ்.வி.எஸ். ஸிடம் காண்பித்தார். அவர் டி.கே.சியிடம் காண்பித்தார். அப்பாடலைப் படித்து விட்டு நன்றாக இருக்கிறது என்றார் என்றால் பாருங்களேன்! - அப்பாடல் இதோ!

**வீட்டுக் கவலை யில்லை**
**வேண்டியவர் சிந்தையில்லை**
**பாட்டும் படிப்புமே**
**பாண்டியனார் உள்ளத்தே.**

வீட்டுக்கு வந்த விருந்தினர்களை முகம் கோணாது, மனம் சலிக்காது அதுவே வாழ்வின் தவமாய் அண்ணியார் நடந்து

வந்ததுதான் டி.கே.சி. விருந்தோம்பல் பண்பின் சிறப்பு.

அதனால்தான் டி.கே.சி.யைப் போன்ற பேறு பெற்றவர்கள் கிடையாது.

டி.கே.சி நிலபுலன்கள், தென்னந்தோப்புகள் முதலியவை கொண்ட பெரிய நிலச் சுவான்தார். இது சம்பந்தமான எந்தவித பிரச்னைகளும் டி.கே.சி. வரை எட்டவிடாமல் பொறுப்போடு நிர்வகித்து வந்தவர் டி.கே.சி.யின் தமக்கையார் புதல்வரான திரு. டி.கே. தீர்த்தாரப்ப முதலியார் ஆவார். அவர் பி.ஏ. பட்டதாரி. நல்ல செல்வந்தர். ரஸிகர். டி.கே.சி. செய்து வரும் அரும்பணியை உணர்ந்து நிலபுல சம்பந்தமான கவலைகளை டி.கே.சி.க்கு எட்டவிடாமல் நிர்வகித்து வந்தார். அதனால் டி.கே.சி. இலக்கியப் பணியைச் சிறப்பாக நடத்த முடிந்தது. இப்படிப்பட்ட மருமகனைப் பெற்றதில் டி.கே.சி. பேறு பெற்றவர் என்பது என் கருத்து.

மூன்றாவதாகக் குறிப்பிடப்பட்ட வேண்டியர் திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளை அவர்கள்.

சர்க்காருடன், அல்லது வேறு நிறுவனங்களுடன் ஏதாகிலும் பிரச்னையெழுந்தால் அவையெல்லாம் தலைப் பொறுப்பாக ஏற்றுத் தீர்த்து வைப்பவர் டி.கே.சி.யின் அருமை நண்பரான திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளை அவர்கள். திருநெல்வேலியில் பிரபல வக்கீல். கலெக்டர்கள், போலீஸ் உயர் அதிகாரிகள் எல்லாருடைய அன்பையும் சம்பாதித்து வைத்திருப்பார்.

நல்ல இலக்கிய ரஸிகர். டி.கே.சி.யிடம் தெய்வபக்தியே கொண்டிருந்தார் என்று சொல்லும் அளவுக்கு ஈடுபாடு கொண்டவர். தாம் சிரிக்காமல் பிறரை விழுந்து விழுந்து சிரிக்க வைக்கும் நகைச்சுவையாளர்.

(நான் கண்ட டி.கே.சி. (டி.கே.சி. நூற்றாண்டு விழா வெளியீடு, எஸ்.வி.எஸ்.) அமுத நிலையம் லிமிடெட், சென்னை - 14, முதல்பதிப்பு ஆகஸ்ட் 1981)

# முடிவின் நிழலில்

ரசிகமணியின் உடல்நிலை மிகவும் நலிவுற்ற நேரம். உடல் மிகவும் சோர்ந்து போய்விட்ட நேரம். ஆனால் உள்ளத்தில் தமிழ் உயிர்ப்பாய் இருக்கின்ற நேரம். இவரது நண்பர் ராமநாதன் செட்டியார் இவரைப் பார்க்க நண்பருடன் வருகிறார். சிறிது நேரம் அளவளாகிறார்கள். தமிழ் அந்த ஆற்றலை டி.கே.சிக்குத் தருகின்றது. இருவரும் விடைபெற அனுமதி கேட்கிறார்கள். டி.கே.சி. அவர்கள் சிறிது தாமதிக்கச் சொல்கிறார். தன் காரியதரிசியை அழைக்கிறார். இருதாம்பாளம் நிறைய பழங்கள் வருகின்றன. எழுந்து தன் கையால் அவர்களுக்கு அளித்து விடைகொடுக்கிறார். என்றும் இப்படி நடந்ததில்லை. அந்த வீடு அப்போது உணர்ந்திருக்கவில்லை. அவர் இதுமூலம் உலகத்தினின்று விடைபெறப்போகிறார் என்று. அப்போது அறிந்திருக்கவில்லை யாரும். அவர் தம் பிறவியின் இறுதிகட்டத்தில் இருக்கிறார் என்று. அவர் கையில் தாம்பூலம் பெற்ற செட்டியார் பெற்ற பேறுதான் என்னவென்று சொல்வது.

அவரது உடல்நிலை மிகவும் மோசமாகிவிட்டது. அவரைக் கவனித்துக் கொள்ளும் மருத்துவர் சேஷகிரிராவ் அழைக்கப்படுகிறார். அவரை சோதித்துக் கொண்டிருக்கும் நேரம், "டாக்டர்! மிகவும் தாகம் எடுக்கிறது. எத்தனை தடவைத் தண்ணீர் குடித்தாலும் தாகம் அடங்குவதாக இல்லை (நண்பர்களே! மரணதாகம் என்பார்களே அது இதுதானோ! அப்பவும் இத்தாகம் மரணத்தின் தாகம்தான் என்று யாரும் உணரவில்லையே நண்பர்களே! தமிழுக்குத்தான் அவ்வித தாகம் எடுத்திருக்கிறதா?) 'நாவறட்சி' என்றொரு சொல் தமிழில் இருக்கிறதே, இதற்கு இணையான வார்த்தை இங்கிலீஷில் உண்டா? என்று வினவினார்கள் டி.கே.சி. அவர்கள். ஏனெனில் அந்த மருத்துவர் லண்டனில் படித்தவர். ஆங்கிலப் புலமை

உள்ளவர். ஆனால் அவர் திணறித்தான் போய்விட்டார். இதற்கு இணையான சொல்லைத் தேடித்தேடிக் களைத்து விட்டு "அப்படி இருப்பதாகத் தெரியவில்லையே" என்று பதில் அளித்தார் டாக்டர்.

அவ்வளவுதான் டி.கே.சி. உற்சாகமாகி விட்டார். சாதாரணமாக மக்கள் பேசுகின்ற பேச்சில் கலைச்சொற்கள் எவ்வளவோ இருக்கின்றன. உழவர்களிடம் உரையாடிப் பார்த்தால் உழவுத் தொழில் சம்பந்தமான சொற்கள் தமிழில் நிறைய இருப்பது தெரியும். தச்சர்களிடம் கொல்லர்களிடம் உறவாடினால் அல்லவா பொறியியல் சம்பந்தமான கலைச்சொற்கள் இன்னவை என்பது விளங்கும்? ஆனால் அரசு என்ன செய்கிறது? கலைச் சொற்களைக் கண்டுபிடிக்க நிபுணர்குழுவை நாலாவது மாடியில் அமர்த்தி கலைச்சொல்லை உருவாக்கச் சொன்னால், எவ்வளவு கேவலமான காரியம் இது? புகையிலை, மிளகுவற்றல், வெடிகுண்டு, கப்பல், குடியரசு, பாராளுமன்ற தேர்தல், மின்சாரம், சொற்பொழிவு என்றெல்லாம் சொற்கள் நடமாடுகின்றனவே. இவையெல்லாம் நிபுணர்களால் உருவாக்கப்பட்ட சொற்களா என்ன? சமுதாய உணர்வில் தாமே பூத்துக் குலுங்கிய சொல் மலர்கள் அல்லவா!

கலையின் உண்மையை விளக்க விளக்க - மக்களுடன் கலையானது உறவாட உறவாட, கலைச்சொற்கள் தாமே உண்டாகும். அப்படி உண்டாகும் வரை, வேறு மொழியில் கலைச்சொற்களை நாம் உபயோகிக்கலாம். அதில் ஒன்றும் தப்பில்லை.

'அல்வா' வேறுமொழிச் சொல்தான். அதைக் கொடுத்தால் யாரும் சாப்பிட மாட்டேன் என்று சொல்வார்களா? டேவிட் என்பதும் வேற்றுமொழிச் சொல்தான். அதற்காக அவனுடன் பழகாமல் இருக்கின்றோமா? பழகத்தானே செய்கிறோம்.

உலகில் ஆங்கிலம் உள்ளிட்ட எல்லாமொழிகளிலும் அந்நியக் கலைச்சொற்கள் கலந்திருக்கவே செய்கின்றன. அதற்காக யாரும் சயன்ஸ் படிக்கமாட்டேன் என்று சொல்ல மாட்டார்கள். "தாய்மொழியில் வார்த்தைகளைக் கண்டுபிடித்த பிறகுதான் சயன்ஸ் படிப்போம் என்பது அபத்தம். சயன்ஸைப் படிக்கப் படிக்க சயன்ஸ் சம்பந்தமான கலைச்சொற்கள் தாமே வரும்."

"பாஷையும் மக்களின் ஆர்வமும் சேர்ந்து உண்டாக்க வேண்டும் வார்த்தையை. உத்தரவு போட்டு உண்டாக்க முடியாது வார்த்தைகளை."

மரணத்தோடு போராடிக் கொண்டிருக்கும் பொழுதும் டி.கே.சி. தமிழ் மேல் உள்ள நம்பிக்கையை வெளியிடத் தயங்கவில்லை. மரணத்தின் வாயிலிலும் இவ்வளவு தெளிவா! உறுதியா! டாக்டர் அசந்தே போனார்.

உடல் அசதியில் கொஞ்சம் கண் அயர்ந்தார். மீண்டும் கண்விழித்த போது, அவர் அருகில் வித்வான் ல. சண்முக சுந்தரமும், மேலகரத்துக் குருக்களும் நின்று கொண்டிருந்தார்கள். வித்வான் பக்கத்தில் யார் நிற்பது என வித்வானைக் கேட்கிறார் டி.கே.சி. "குருக்களையா" என்று சொல்லியும் புரியாதது போல் இருந்ததால் மேலகரத்து சன்னதிமடத்து குருக்கள்" என்கிறார் வித்வான்.

"ஓ, தேசிகர்வாளா" என்றார்கள் டி.கே.சி.

"இல்லை, குருக்களையா" என்றேன் நான்.

"இரண்டுமே ஒன்றுதான், எல்லாம் ஒரு பொருட்பன்மொழிதான். பூஜை செய்யும்போது குருக்கள். மந்திரம் சொல்லும் போது தேசிகர். தேவாரம் பாடும்போது ஓதுவார். ஆள் ஒருவர்தான். பெயர்தான் வேறு வேறு" என்றார்கள் டி.கே.சி.

அசதியில் கண்ணை மூடிக் கொண்டார்கள். அரைமணி நேரம் கழித்து மறுபடியும் விழித்து என்னைப் பார்த்தார்கள். "இலக்கண நியதி பாஷைக்கு உள்ளேயே இருக்கிறது. இலக்கணப் புத்தகத்தில் இல்லை. 'கல்லெறிந்தான்' என்னும்போது ஒற்று மிகும். காலொடிந்தான் என்னும்போது ஒற்று மறையும். 'அவன் வந்தானா' என்னும்போது ஒரு உணர்ச்சி, "அவன் வந்தானா" என்னும்போது வேறொரு உணர்ச்சி. இந்த மாற்றங்களை பாஷையே செய்கிறது. இலக்கணம் செய்வதில்லை" என்றார்கள்.

"உணர்ச்சியிலிருந்து தினுசு தினுசாக முளைக்கிற ஒவ்வொரு சாலையும்&ஒவ்வொரு நிறத்தையும் தமிழ் அப்படியே கையில் எடுத்துப் பிடித்துக் காட்டும். இதர பாஷை எதனாலும் அப்படி நிச்சயமாய்க் காட்ட முடியாது" என்று கடைசியாகச் சொல்லி முடித்தார்கள்.

வாழ்நாள் முழுவதும் தமிழின் ஆற்றலையும் அற்புதத்தையும் எடுத்து விளக்குவதையே வாழ்க்கையாக நடத்திவந்த மகான் டி.கே.சி.

உடல்க்கட்டு கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்ந்து, அங்கங்களின் பொருத்தமும் ஆற்றலும் ஒவ்வொன்றாகக் கழன்று, ஞாபகசக்தி

மெள்ள மெள்ளத் தேய்ந்து, பரம்பொருளோடு பரம்பொருளாய் கலந்து மருவுகிற வேளையிலும் தமிழின் எளிமையையும் அருமையையும் அன்பர்களுக்கு விளக்கிக் காட்டினார் அந்த மகான்.

அவரல்லவா ரசிகமணி!

மெள்ள மெள்ள ரசிகமணியை மரணம் அணைத்துக் கொண்டிருந்தது. அன்று பட்டப்பகல் & பகலவனின் வெப்பத்தில் ஊரே காய்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் டி.கே.சி. அவர்கள் "என்னமாய் நிலா காய்கிறது" எனக் கூறினார். அப்படியெனில் அவர் ஏதோ ஒரு உலகத்திற்குச் சென்று கொண்டிருப்பதாகத்தானே பொருள். அந்த நேரத்தில் நிலவின் தன்னொளியை ரசிக்கும் மலர்ச்சித் தெரிகின்றது.

ஒன்றுக்கும் உதவாது என்று கூறித்திரிந்து கொண்டிருந்த தமிழ் மக்களை எல்லாவற்றிற்கும் உகந்தது தமிழ் என்று உணர வைத்த டி.கே.சி.; பொறியில், மருத்துவம், ரசாயணம், தாவரம், உடலியல், உளவியல், வானஇயல், சமுதாய இயல், இறைஇயல் என ஒவ்வொன்றையும் தமிழில் சொல்லிக் கொடுப்பது எளிது என விளங்கச் செய்த டி.கே.சி; தம்முடைய பேச்சில், கட்டுரையில், நூல்களில் விஞ்ஞானம், மெய்ஞான உணர்ச்சி, கலை, பண்பாடு என எல்லாத்துறைகளையும் எல்லோரும் புரிந்து கொள்ளும் பழகுதமிழில் எடுத்துரைத்த டி.கே.சி; ரசனை, அதனை அனுபவிப்பது, கவியைக் கண்டுபிடிப்பது, கவிஞனின் இதயத்துள் நுழைந்து அவன் இதயமாய் மாறி கவியின் உருவம் காண்பது, தமிழிசைக்கு வழக்காடியது, வாழ்வியல் அறிஞராய் வாழ்ந்து காட்டியது, தமிழ் உரைநடையை புதுமையாய் பழகு நடையில் மாற்றியது, என பலதுறை முகங்களுடைய டி.கே.சி; மனந்திறந்து பாராட்டும் டி.கே.சி. நல்லதை மட்டுமே பாராட்டும் டி.கே.சி. இப்படைப்பில் இப்படி இருந்தால் இன்னமும் மேன்மைபெறும் எனத் திருத்திய டி.கே.சி.; தன் வாழ்வை ஆனந்த வாழ்வாய் வாழ்ந்த டி.கே.சி.; அந்த ஆனந்தத்தை அடுத்தவர்க்கும் அள்ளி அள்ளித் தந்த டி.கே.சி.; எங்கு சென்றாலும் கம்பனை அனைவருக்கும் இன்னார் என இனம் காட்டிய டி.கே.சி. கம்பருள் கம்பனாய் வாழ்ந்து அனுபவித்த டி.கே.சி.; கம்பராமாயணம் கவிகளுக்காகத்தான் எனக் கவியின் சுவை அனுபவித்த டி.கே.சி.; கவிமணியை கண்டு "கவிஞர் எனில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை" என ஒரு மூலையில் வாழ்ந்த கவிஞரை உலகுக்கு உணர்த்திய டி.கே.சி.; தமிழ்ப்பாடல்களில், குற்றாலக்குறவஞ்

சியை, கலிங்கத்துப்பரணியை, நந்திகலம்பகத்தை, நாட்டுப்புறப் பாடல்களை, பழந்தமிழ்த் தனிப்பாடல்களைக் கண்டு கண்டு படித்துப் படித்துப் பருகி, அனைவருக்கும் அளித்த டி.கே.சி. அதை எடுத்துச் சொல்வதில் தனிப்பாணியை அதன் 'பாவ'த்தோடுக் கொடுத்த டி.கே.சி. - இப்படிப்பட்ட டி.கே.சி.யை-

அவர் வாழ்ந்த ஆனந்தத்தத்துவம் அவரை மெள்ள மெள்ள அழைத்துக் கொண்டிருக்கின்றது.

"ஆனந்த...உலகத்திற்குப் போறோம்..."

கண்கள் சொருகி, முகமலர்ந்து, திருவாய் மலர்ந்த வார்த்தை மலர்கள், 'குப்'பென்று ஆனந்தம் அவ்விடத்தையே ஆக்கிரமித்துக் கொண்ட ஆனந்தத்தில் பிரகாசமாய் ஒளிர்ந்து, அறையே குலுங்கியது. ஆம். அன்று 16.02.1954. புலரும் காலையில் ரசிகமணி ஆனந்தத்துடன் ஆனந்தமாயக் கலந்து போன தருணம். ரசனைத் தடம் பதித்துவிட்டுச் சென்று விட்டார் அந்த மாமனிதர். ஆம். தடம் பார்த்து நடப்பவன் மனிதன்; தடம் பதித்து நடப்பவன் மாமனிதன்!

"அன்னைபோல் என்னை
அருவியில் நீராட்டி
இன்னமுதும் பக்கத்(து)
இருந்தூட்டி - தன்னொடு
தங்குதங்கு என்று சொன்ன
தங்கக் குணத்தானை
எங்கு நான் காண்பேன்
இனி!"

-கவிமணி.

# டி.கே.சி. எழுதிய நூல்கள்

1. அற்புத ரஸம், முதற்பதிப்பு, ஜனவரி 1944, வெளியீடு: புதுமலர் நிலையம், கோயமுத்தூர், விலை அணா 6.

2. இதய ஒலி, முதற்பதிப்பு 1941, இரண்டாம் பதிப்பு 1947, மூன்றாம் பதிப்பு 1958, நான்காம் பதிப்பு 1981, பொதிகைமலைப் பதிப்பு, திருக்குற்றாலம், தென்காசி, விலை ரூ. 9.

3. கம்பர் யார்? முதற்பதிப்பு 1941, புதுமைப் பதிப்பகம், இரண்டாம் பதிப்பு ஏப்ரல் 1981, பொதிகைமலைப் பதிப்பு, 'பஞ் சவடி', தென்காசி, விலை ரூ. 5.

## டி.கே.சி. பதிப்பித்த நூல்கள்

1. கம்பர் தரும் ராமாயணம், முதற்பதிப்பு, பால -அயோத்யா காண்டம், 1942; ஆரண்ய காண்டம் 1943; இரண்டாம் பதிப்பு - பகுதி மி பால-அயோத்யா காண்டங்கள் 1953; பகுதி மிமி, ஆரண்ய&கிஷ்கிந்தா காண்டங்கள், 1954; பகுதி மிமிமி சுந்தர காண்டம், 1955, பொதிகை மலைப்பதிப்பு, திருக்குற்றாலம், தென்காசி, விலை (ஒவ்வொரு பாகமும்) ரூ.6.

2. முத்தொள்ளாயிரம், முதற்பதிப்பு, 1943; இரண்டாம் பதிப்பு, 1946; மூன்றாம் பதிப்பு, 1957, பொதிகைமலைப் பதிப்பு, திருக்குற்றாலம், விலை ரூ. 3. நான்காம் பதிப்பு & 2010 காவ்யா வெளியீடு)

1. டி.கே.சி. கல்கி இதழில் 15&6&1952 முதல் 20&12&1953 வரை எழுதிய 41 தொடர் கட்டுரைகள்

தமிழ்க் களஞ்சியம் எனும் தலைப்பில் அமைந்துள்ளன.

2. ரசிகமணி ரசனைத்தடம் தொகுப்பாசிரியர் பேரா. முனைவர். சண்முகசுந்தரம் காவ்யா வெளியீடு முதற்பதிப்பு 2009.

3. ரசிகமணி கட்டுரைக் களஞ்சியம், தொகுப்பாசிரியர்கள் தீப. நடராஜன், காவ்யா சண்முக சுந்தரம், முதற்பதிப்பு 2006. காவ்யா, சென்னை.

# டி.கே.சி. எழுதியுள்ள கடிதங்கள்

நீலாவதி இராமசுப்பிரமணியம் வாழ்க்கை வரலாறு (1913-1982), முதற்பதிப்பு, கும்பகோணம், 1983.

பேசும் கடிதங்கள் (முதற் பதிப்பு), வட்டத்தொட்டி வெளியீடு, (தொகுப்பாசிரியர்) ராஜேஸ்வரி நடராஜன், சென்னை, 1988.

ரசனையின் ஒலி (முதற் பதிப்பு), பீக்காக் வெளியீடு, (தொகுப்பாசிரியர்) ஜி.சி. பட்டாபிராம், சென்னை, 1984.

ரசிகமணி கடிதங்கள் (முதற்பதிப்பு), வட்டத்தொட்டி, (தொகுப்பாசிரியர்), எஸ். மகாராஜன், சென்னை,, 1979.

ரசிகமணி டி.கே.சி.யின் கடிதங்கள் (முதற்பதிப்பு). (தொகுப்பாசிரியர்) தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், பொதிகை மலைப் பதிப்பு, பஞ்சவடி, தென்காசி, 1961.

ரசிகமணி டி.கே.சி. கடிதங்கள் 27 பேருக்கு எழுதியவற்றின் முழுத்தொகுப்பு தொகுப்பாசிரியர் தீப. நடராஜன், உயிர்மை பதிப்பகம், முதற்பதிப்பு 2010.

### டி.கே.சி. எழுதிய முகவுரை / பாராட்டுரை / தலைமை உரை

ஏட்டிக்குப் போட்டி, முதற்பதிப்பு 1930, (இரண்டாம் பதிப்பு), சின்ன அண்ணாமலை, தமிழ்ப்பண்ணை.

கணையாழியின் கனவு, முதற்பதிப்பு, 1937, (இரண்டாம் பதிப்பு), ஆனந்தவிகடன் காரியாலயம், சென்னை, 1938.

தமிழ் இசைப் பாட்டுக்கள், புதுமைப் பதிப்பகம், காரைக்குடி, 1943.

தமிழிசை மாநாடு நிகழ்ச்சி மலர், சென்னைத் தமிழ்ச் சங்கம், சென்னை, 1944.

திருக்குற்றாலக் குறவஞ்சி (மூன்றாம் பதிப்பு), திருக்குற்றால தேவஸ்தான வெளியீடு, திருக்குற்றாலம், 1937-1938.

திருவாசகம், தருமபுர மட வெளியீடு, 1949.

பாபநாசம் சிவன் பாடல்கள்.

மகுடபதி, கல்கி.

முக்கூடற்பள்ளு, முதற்பதிப்பு, 1940, (இரண்டாம் பதிப்பு), பதிப்பாசிரியர்: மு. அருணாசலம், தமிழ் நூலகம், சென்னை, 1949.

## டி.கே.சி. பற்றி பிறர் எழுதியுள்ள (முழு அளவிலான) நூல்கள்

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், கம்பனும் டி.கே.சி.யும், கம்பன் கழகம், காரைக்குடி.

ல. சண்முக சுந்தரம், டி.கே.சி. வரலாறு, ஸ்டார் பிரசுரம், சென்னை, 1955.

ல. சண்முக சுந்தரம், டி.கே.சி. யார்?

எஸ். வேங்கட சுப்பிரமணியம், நான் கண்ட டி.கே.சி. அமுத நிலையம் லிமிடெட், சென்னை, 1981.

கி. ராஜநாராயணன், மாந்தருள் ஒரு அன்னப் பறவை, அகரம், முதற்பதிப்பு, 1981.

திருமதி ராஜேஸ்வரி நடராஜன் (தொகுப்பாசிரியர்), ரஸிகமணி மொழிகள்.

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான், ரஸிகமணி டி.கே.சி. (முதற்பதிப்பு), ஸ்டார் பிரசுரம், திருச்சாராப்பள்ளி, 1945.

ல. சண்முகசுந்தரம், ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் (முதல் பதிப்பு), சாகித்திய அகாடமி, தில்லி, 1987.

ல. சண்முக சுந்தரம் (சிறப்பாசிரியர்), ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு விழா மலர் (முதற்பதிப்பு), உலக இதய ஒலி வெளியீடு, சென்னை, 1981.

எஸ். மகராஜன், ரஸஞ்ஞானி டி.கே.சி. (முதற்பதிப்பு), வானதி பதிப்பகம், சென்னை, 1990.

பதிப்பாசிரியர். கரு. அழ.குணசேகரன், த. பூமிநாகநாதன் - டி.கே.சி உலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் முதற்பதிப்பு 2008

## ஆய்வேடுகள்

ந. பாலமுருகன், ரசிகமணி டி.கே.சி.யின் திறனாய்வுப் போக்கு (ஒரு செயல்முறை ஆய்வு), திருமொழிப் பதிப்பகம், கரூர், முதற்பதிப்பு, 1983.

ச. குமார அழகப்பன், டி.கே.சி.யின் முத்தொள்ளாயிரப் பதிப்பு, வெ.ப.சு. தமிழ்க் கலை ஆய்வு மையம், ம.தி.தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி, 1991.

உ. கோவிந்தராசன், பாஸ்கரத் தொண்டைமானின் 'இரசிகமணி டி.கே.சி. ஓர் ஆய்வு', கரந்தைப் புலவர் கல்லூரி, 1985.

ச. ஈஸ்வரன் முனைவர் பட்ட ஆய்வு.

## நூல் எழுத உதவிய நூல்கள்

(1) அற்புத ரஸம் - டி.கே.சி.-முதற்பதிப்பு 1944 - புதுமலர் நிலையம் கோயம்புத்தூர்.

(2) இதய ஒலி - டி.கே.சி.-நான்காம் பதிப்பு - பொதிகைமலைப் பதிப்பு, பஞ்சவடி, தென்காசி.

(3) கம்பர் யார்? டி.கே.சி.-2ஆம் பதிப்பு 1981, பொதிகைமலைப் பதிப்பு, பஞ்சவடி, தென்காசி.

(4) கம்பர் தரும் இராமயணம் பதிப்பாசிரியர் - டி.கே.சி.-முதல்பாகம் - டி.கே.சி. - வானதி பதிப்பகம், சென்னை.

(5) முத்தொள்ளாயிரம் - பதிப்பாசிரியர் - டி.கே.சி.-காவ்யா வெளியீடு - நான்காம் பதிப்பு 2010 சென்னை.

(6) ரசிகமணி கட்டுரைக் களஞ்சியம்

தொகுப்பாசிரியர் தீப. நடராஜன் காவ்யா சண்முகசுந்தரம் முதல்பதிப்பு செப்டம்பர் 2006, சென்னை.

(7) ரசிகமணி ரசனைத்தடம், தொகுப்பாசிரியர் பேரா. முனைவர். சண்முக சுந்தரம், காவ்யா வெளியீடு, முதற்பதிப்பு - 2009 - சென்னை.

(8) தமிழ்க்களஞ்சியம், ரசிகமணி டி.கே.சி.-மகாகவி பாரதி அறநிலை, கோயம்புத்தூர்.

(9) ரசிகமணி டி.கே.சி. கடிதங்கள் 27 பேருக்கு எழுதியவற்றில் முழுத்தொகுப்பு

தொகுப்பாசிரியர் தீப. நடராஜன், உயிர்மை பதிப்பகம், முதற்பதிப்பு 2010.

(10) டி.கே.சி.யின் வரலாறு, வித்வான். ல. சண்முகசுந்தரம், ஸ்டார் பிரசுரம், சென்னை 5 - நான்காம் பதிப்பு-1960.

(11) ரசிகமணி டி.கே.சிதம்பரநாத முதலியார், வித்வான்.ல. சண்முகசுந்தரம், சாகித்திய அகாடமி வெளியீடு, முதற்பதிப்பு.

(12) ரசிகமணி டி.கே.சி.-தொ.மு. பாஸ்கரத்தொண்டைமான் எம்.ஏ., ஸ்டார் பிரசுரம், திருச்சி, முதற்பதிப்பு நவம்பர் 1945)

(13) நான் கண்ட டி.கே.சி. (டி.கே.சி. நூற்றாண்டு விழா) எஸ்.வி.எஸ். அமுத நிலையம் சென்னை-14. முதற்பதிப்பு ஆகஸ்ட் 1981.

(14) ரசிகமணி டி.கே.சி. கட்டுரைகள் - டி.கே.சி. பொதிகைமலைப் பதிப்பு, தென்காசி, முதற்பதிப்பு ஜூலை 2000.

(15) ரசிகமணி டி.கே.சி. கட்டுரைகள்.

(16) உலக இதயஒலி ரசிகமணி நூற்றாண்டு மலர் 1981, சிறப்பு ஆசிரியர் வித்.ல. சண்முகசுந்தரம் முதற்பதிப்பு 1981, ஜலதரங்கணிப் பதிப்பகம், சென்னை-17.

(17) உலக இதய ஒலி - காலாண்டு தமிழ் இலக்கிய இதழ், ஆசிரியர் டி.டி. திருமலை, ஜலதரங்கணி பதிப்பகம், சென்னை -17.

(18) அன்னப்பறவை - கி. ராஜநாராயணன் - அன்னம், தஞ்சாவூர், முதற்பதிப்பு 2009.

(19) டி.கே.சி. பதிப்பாசிரியர் அழ. குணசேகரன், த. பூமிநாதன் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை. முதற்பதிப்பு 2008.

(20) தமிழ் உரைநடை - வல்லிக்கண்ணன் - பாரி நிலையம் முதல்பதிப்பு 2010.

(21) ரசிகமணி ரசித்தப் பாடல்கள்-தொகுப்பு-மரபின் மைந்தன் முத்தையா-விஜயா பதிப்பகம் கோவை.

(22) அமுத கலசம், டி.டி. திருமலை-பி.ஏ.-ஜலதரங்கணி பதிப்பகம் சென்னை-17, முதற்பதிப்பு ஆகஸ்ட் 1993.

(23) கவிதையும் ஆனந்தமும் - தீப. நடராஜன் - மித்ரா ஆர்ட்ஸ் அண்ட் கிரியேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை - முதற்பதிப்பு - 2005.

(24) 'ரசனை' - தமிழ் இலக்கிய இதழ்கள்.

(25) ரஸஞ்ஞானி டி.கே.சி. முதற்பதிப்பு, வானதி பதிப்பகம்

(26) டி.கே.சி. என்னும் ஆனந்தத் தத்துவம் கல்கி, தீபாவளிமலர் - 13 இதழ் 321954.

(27) ஆடத்தெரியாத கடவுள் - முதற்பதிப்பு, பழனியப்பா பிரதர்ஸ் சென்னை, 1972.

(28) கவிதையில் விடுமுறை, முதற்பதிப்பு, வானதி பதிப்பகம் சென்னை. முதற்பதிப்பு 1982.

முற்றும்

# ரசிகமணி டி.கே.சி. வாழ்க்கை குறிப்பு

பிறந்த தேதி: 18.08.1881 ஆவணி 4ஆம் தேதி வியாழக்கிழமை
ஸ்ரீ விஷீ வருஷம்/1057
ரோகிணி நட்சத்திரம் கூடிய ஸ்ரீ ஜெயந்தி நாள்
திருமணம்: 11.05.1908 பிச்சம்மாள் அண்ணியுடன்.
ஒரே மகன் பிறந்தது. செல்லையா என்ற தீத்தாரப்பன் "தீபன்'ட
19.12.1909 சனிக்கிழமை
மணிவிழா: நண்பர்கள் கூடி திரு. இலஞ்சி குமார் கோவிலில்
13.09.1942 விழா எடுத்தனர்.
நூல் வெளியீடு: கம்பர் தரும் ராமாயணம் முதல் தொகுதி மூதறிஞர்
ராஜாஜி- முதலமைச்சர் அவர்களால் குற்றாலத்தில் பெரிய விழா
எடுத்து வெளியிடப்பட்ட நாள் 31.10.1953
அமரர் ஆன நாள்: 16.02.1954
கல்வி:
தொடக்கக் கல்வி - தென்காசி
உயர்நிலைப் பள்ளி- திருச்சிராப்பள்ளி
எஞப் ஏ - செயிண்ட் ஜோஸப் கல்லூரி திருச்சி.
பி.ஏ. (இளங்கலை) - சென்னை கிறித்துவ கல்லூரி
பி.ஏ. (இளங்கலை) - சென்னை சட்டக்கல்லூரி
தொழில்:
வழக்குரைஞர் (சில வருடங்கள் - திருநெல்வேலி)
1927 - 1930 - எம்.எல்.சி. (மெட்ராஸ் லெஜிஸ் லேடிவ் கவுன்சில்)
1930 - 1935 - ஆணையர் இந்து அறநிலையத்துறை
விருப்பம் - தமிழ் இலக்கியம்
கம்பராமாயணம்
தமிழ் இசை
பரத நாட்டியம்
1935 - 1938 வண்ணாரப்பேட்டை வாசம் (திருநெல்வேலி)
'வட்டத்தொட்டி' இலக்கிய அமைப்பு உருவாகியது.
1942 - முதல் பல ஆண்டுகள் 'கல்கி'யில் தொடர்ந்து "கம்பர்
தரும் காட்சி" எழுதினார்கள். அந்தக் கட்டுரைகளே "கம்பர் தரும்

ராமாயணம்" என்ற தலைப்பில் பின்னர் வெளிவந்தது. 1943 - முதல் தமிழ் இசை விழாவிற்குத் தலைமை ஏற்றார்கள்.

ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் சார்பில், சாந்தி நிகேதன் விஸ்வ பாரதி பல்கலைக்கழகத்துக்கு 10,000/ பெறுமான தமிழ் நூல்களை ஒப்படைத்தார்கள்.
*எது கவிதை எது கம்பன் பாடல் என்று கண்டறிதல்
*விருந்தோம்பல்
*பண்பாடு
*ரசனைக்கென்று வாழ்ந்தது.



சாந்தி நிகேதனில் கல்கி,
சின்ன அண்ணாமலை,
பலராம் ராஜாவும் பிறரும்



ராஜாஜியுடன்



கல்கியுடன்



புலவர் ல. சண்முகசுந்தரம்,
வழக்கறிஞர்
பி. எஸ்.சுப்பிரமணியம்,
தீப. நடராஜன்,
மறை.திருநாவுக்கரசு,
கி. ராஜநாராயணன்,
தீப. குற்றாலலிங்கம்,
தீ. ராமசுவாமி,
தீப. குமாரசாமி



டி.கே.சி. கவிமணி



கம்பர் தரும் இராமாயணம்
அரங்கேற்று விழா ஊர்வலம்



குற்றாலம் எட்டறை வீட்டில்
"கம்பர் தரும் ராமாயணம்"
அரங்கேறிய நாளன்று ராஜாஜி,
மு. அருணாசலம், குழந்தையன்
செட்டியார், பால் நாடார்,
கோட்டையூர் ராமநாதன்
செட்டியார்



சித்திர சபையிலிருந்து
திரும்பி வருகிறார் டி.கே.சி.
உடன் சின்ன வெங்கட்ட
ராஜா, டி.கே.தீத்தாரப்ப
முதலியார், பலராம் ராஜா,
மீ.ப. சோமு



கம்பர் தரும் இராமாயணம் அரங்கேற்று விழா ஊர்வலம்
வெங்கடாச்சாமி,
Y. G. துரைசாமி
C.V.R.M. அழகப்ப செட்டியார்,
குழந்தையன் செட்டியார்,
ராமநாதன் செட்டியார்



புதுடில்லி - கொமல் கார்டனில் சதாசிவம்,
ராஜாஜி, ராஜ்மோகன் காந்தி,
கோபாலகிருஷ்ண காந்தி



டி.கே.சி யுடன் - செயலாளர்
பலராம ராஜா,
பாலகிருஷ்ண ராஜா,
மீ.ப சோமு; (ஜஸ்டிஸ்)
முனிசீபு மகராஜன்,
லட்சுமண சுவாமி



டி.கே.சி,
P.V. ராஜமன்னார் -
Chief Justice Madras High Court,
Justice N. சோமசுந்தரம்



மத்தியில் திருப்புகழ்மணி
டி.எம். கிருஷ்ணசாமி அய்யர்,
டி.கே.சி, இயக்குநர்
கே. சுப்பிரமணியம்



புதுடில்லியில் ராதா
நடனநிகழ்ச்சிக்குப் பின்



திருக்குற்றாலநாதசுவாமி
ஆலயத்தின் பூரணகும்ப
மரியாதை



திருச்சி ஜி.ஸி. பட்டாபிராம்,
மீ.ப. சோமு, செயலாளர்
பலராமராஜா, அன்பர்
ஒருவருடன்



நண்பரும் குருவாக மதிக்கப்பெற்ற
ஈஸ்வரமூர்த்தியா பிள்ளையுடன்



டி.கே.சி - கவிமணி

பிச்சம்மாள் அண்ணியுடன் டி.கே.சி. - குற்றாலம் எட்டறை வீட்டின் முன்



டி.கே.சி. - பிச்சம்மாள்
அண்ணி, தங்கம்மாள்



ராஜேஸ்வரி மு. அருணாசலம்,
பிச்சம்மாள் அண்ணி, தங்கம்மாள்,
வேலம்மாள், செண்பகத்தம்மாள், நீலாவதி
ராமசுப்பிரமணியம், புஷ்பம்மாள்



பாரதி மண்டபம்
அமைப்புக்கூட்டம்



அண்ணா பேரர்கள் ராமலிங்கம்,
குத்தாலிங்கம், அக்காள் கோதை
அண்ணியின் மகன்கள் சண்முகசுந்தரம்,
தீத்தாரப்பன், பேரப்பிள்ளைகளின் வாத்தியார்
ராமானுஜச்சாரி, அக்காள் பேரன் ராமசுவாமி,
சிறுவர்கள் தீபகுமாரசாமி, தீபகுற்றாலலிங்கம்



டி.கே.சியுடன் பேரன்கள் குமாரசாமி, குற்றாலலிங்கம், வேலம்மாள் பேத்தி தங்கம்மாள், பிச்சம்மாள் அண்ணி



கல்கி வீட்டில் டி.கே.சி. பிறந்தாள் வலது ஓரம் இரண்டாவது தொ.மு.பாஸ்கர தொண்டைமான், இடது ஓரம் கல்கி மனைவி ருக்மணி அம்மாள், எம்.எஸ்.சதாசிவம், ஆனந்தி, ராதா, ராஜேந்திரன் - விஜயா, கல்கி



டில்லி கவர்னர் ஜெனரல் ராஜாஜி, நாமகிரி, லஷ்மி தேவதாஸ் காந்தி, எம்,எஸ் சதாசிவம், பலராம ராஜா தீப. நடராஜன் மற்றவர்கள்



முன்னால் நிற்கும் குழந்தைகள் - ராஜ்மோகன் காந்தி, கோபாலகிருஷ்ண காந்தி, மேல் வரிசையில் தேவதாஸ் காந்தி, சி.ஆர். நரசிம்மன்



நெல்லை கலைநெறி கழகம் விழா

மீபசோமு, தீபகுற்றாலலிங்கம், பாலகிருஷ்ண ராஜா, தீத்தாரப்பன், பலராமராஜா, ஆர்.ஒய். தீஷிதர், சமையல் சங்கரன், தீப. குமாரசாமி, தீப. நடராஜன், அக்காள் கோதை அண்ணி, மருமகள் முத்தம்மாள், தங்கம்மாள், உறவினர் சின்னம்மாள், பிச்சம்மாள்





திருவிலஞ்சி குமரர் கோவிலில் டி.கே.சி. மணி விழா



கோவையில் ஒரு நிகழ்ச்சி



திருச்சி கலெக்டர் வி.என். ராஜன், ஜெயா ராஜன் குடும்பத்தாருடன் பட்டாபிராமன், பலராமராஜா, சோமு



கடையநல்லூர் விழாவில் கல்கியுடன்



புதுடில்லி தமிழ்ச்சங்கம் சத்யமூர்த்தி படம் திறந்து வைத்த டி.கே.சி. இறைவணக்கம் - எம்.எஸ்



மீ.ப. சோமு



கம்பர் தரும் இராமாயணம் அரங்கேற்றுவிழா, தருமபுரம் ஆதீனம் மரியாதை - கட்டனைத் தம்பிரான், சோமசுந்தரத் தம்பிரான் (தற்போதைய தருமபுரம் ஆதீன மடாதிபதி



செயலாளர் பலராமராஜா



பிச்சம்மாள் அண்ணி, ராஜாஜி, டி.கே.சி, கல்கி இவர்களுடன் டி.கே.சி பேரக்குழந்தைகள்



Still Photographer திருச்சி அருணாசலம், பலராம் ராஜா, சோமு, சண்முக சுந்தரம், தீப. நடராஜன், தீப. குற்றாலிங்கம், தங்கம்மாள், தீப. குமாரசாமி, வேலம்மாள், பிச்சம்மாள் அண்ணி - யுடன் டி.கே.சி



கவர்னர் ஸ்ரீபிரகாச
குற்றாலம் வீட்டில்
டி.கே.சி.யைச் சந்தித்த
நிகழ்ச்சி



சாந்தி நிகேதன்



கவர்னர் பவநகர்
மகாராஜாவுடன் கல்கி மகள்
ஆனந்தி திருமணத்தன்று



கம்பர் தரும் இராமாயணம்
அரங்கேற்று விழாவில்
எஸ்.எஸ்.வாசன்



சாந்திநிகேதன்



குற்றாலத்தில்



சாதசிவம் - எம்.எஸ். வீட்டில்



கம்பர் தரும் இராமாயணம்
அரங்கேற்றம் ஊர்வலம்



டி.கே.சி.யுடன் ஜஸ்டின் N. சோமசுந்தரம், எஸ்.மகராஜன், ஜில்லா மாஜிஸ்ட்ரேட் அய்யாச்சாமி செட்டியார், வழக்கறிஞர் P.S. சுப்பிரமணியன்



நாகர்கோவிலில் கவிமணி பாராட்டு விழாவன்று தலைப்பாகையோடு இருப்பவர் ரத்னசபாபதி முதலியார், ஆர்.கே. எஸ், அருகில் சின்ன அண்ணாமலை



கவிமணியுடன் - வலது ஓரம் சா.கணேசன்



மருமகன் தீத்தாரப்பன், ராமச்சந்திரன், மீ.ப.சோமு, தீப. நடராஜன்



தென்காசி ரயில் நிலையம்



சாந்தி நிகேதனில்



குற்றாலத்தில்



சாந்தி நிகேதனில்



நாகர்கோவில் கவிமணிக்குப் பாராட்டு, என்
எஸ்.கிருஷ்ணன் வரவேற்புரை



டில்லி கவர்னர் ஜெனரல் மாளிகையில்



டில்லி - தீப. நடராஜன், பலராமராஜாவுன்



பாரதி மண்டபம் திறப்பு விழா எட்டையபுரம்



இளம் வயதில்



சட்டக்கல்லூரி மாணவர் டி.கே.சி




கம்பர் தரும் ராமாயணம் அரங்கேற்றம்,
வள்ளல் அழகப்ப செட்டியாருடன்



சர்.சிபிராமசுவாமி அய்யர், ராஜாஜி, டி.கே.சி



ஒன்றுக்கும் உதவாது என்று கூறித்திரிந்து கொண்டிருந்த தமிழ் மக்களை எல்லாவற்றிற்கும் உகந்தது தமிழ் என்று உணர வைத்த டி.கே.சி; பொறியியல், மருத்துவம், ரசாயணம், தாவரம், உடலியல், உளவியல், வானஇயல், சமுதாய இயல், இறை இயல் என ஒவ்வொன்றையும் தமிழ் சொல்லிக் கொடுப்பது எளிது என ஒவ்வொன்றையும் தமிழில் சொல்லிக் கொடுப்பது எளிது என விளங்கச் செய்த டி.கே.சி; தம்முடைய பேச்சில், கட்டுரையில், விஞ்ஞானம், மெய்ஞானம், மெய்ஞான உணர்ச்சி, கலை, பண்பாடு என எல்லாத் துறைகளையும் எல்லோரும் புரிந்து கொள்ளும் பழகுதமிழில் எடுத்துரைத்த டி.கே.சி. ரசனை, அதகை அனுபவித்து, கவியைக் கண்டுப்பிடிப்பது, கவிஞனின் இதயத்துள் நுழைந்து அவன் இதயமாய் மாறி கவியின் உருவம் காண்பது, தமிழிசைக்கு வழிகாட்டியது. வாழ்வியல் அறிஞராய் வாழ்ந்து காட்டியது, தமிழ் உரைநடையை புதுமையாய் பழகு நடையில் மாற்றியது, என பலதுறை முகங்களுடைய டி.கே.சி. மனந்திறந்து பாராட்டும் டி.கே.சி. நல்லதை மட்டுமே பாராட்டும் டி.கே.சி இப்படைய்பில் இப்படி இருந்தால் இன்னமும் மேன்மை பெறும் எனத் திருந்திய டி.கே.சி அந்த ஆனந்தத்தை அடுத்தவர்களுக்கும் அள்ளித் அள்ளித் தந்த டி.கே.சி; எங்கு சென்றாலும் கம்பனை அனைகூருக்கும் இன்னார் என இனம் காட்டிய டி.கே.சி. கம்பருள் கம்பனாய் வாழ்ந்து அனுபவித்த டி.கே.சி. கம்பராமாயணம் கவிகளுக்காகத்தான் எனக் கவியின் சுவை அனுபவித்த டி.கே.சி. கவிமணியை கண்டு "கவிஞர் எனில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை" என ஒரு மூலையில் வாழ்ந்த கவிஞரை உலகுக்கு உணர்த்தி டி.கே.சி. தமிழ்ப்பாடல்களில், குற்றாலகுறவஞ்சியை, கலிங்கரத்துப்பரணியை, நந்திகலம்பகத்தை, நாட்டுப்புறப் பாடல்களை, பழந்தமிழ்த் தனிப்பாடல்களைக் கண்டு கண்டு படித்துப் படித்துப் பருகி, அனைவருக்கும் அளித்த டி.கே.சி. அதை எடுத்து சொல்வதில் தனிப்பாணியை அதன் 'பாவ'த்தோடுக் கொடுத்த டி.கே.சி. - இப்படிப்பட்ட டி.கே.சியை-

அவர் வாழ்ந்த ஆனந்தத்துவம் அவரை மெள்ள மெள்ள அழைத்துக் கொண்டிருக்கிறது.

கண்கள் சொருகி, முகமலர்ந்து, திருவாய் மலர்ந்த வார்த்தை மலர்கள், 'குப்பென்று ஆனந்தம் அவ்விடத்தையே ஆக்கிரமித்து கொண்ட ஆனந்தத்தில் பிரகாசமாய் ஒளிர்ந்து, அறையே குலுங்கியது. ஆம். அன்று 16.02.1954 புலரும் காலையில் ரசிகமணி ஆனந்தத்துடன் ஆனந்தமாய்க் கலந்து போன அந்த மாமனிதர் ஆம். தடம் பார்த்து நடப்பவன் மனிதன்; தடம் பதித்து நடப்பவன் மாமனிதன்!

— ஆசிரியர்